தமிழ் இனத்தை
தலைநிமிரச் செய்த
தனிப் பெரும் தலைவர்,
முதல்வர், டாக்டர்.
கலைஞர் அவர்களுக்கு,

இந்தக் கவிப் படைப்பைக்
காணிக்கையாக்குகிறேன்.

ராஜேஸ்வரி தேவராஜன்.

# பாஸ்கரத் தொண்டைமானைப் பற்றி

தொண்டைமான் நம்முடைய கையைப் பிடித்துக் கொண்டு கோயிலின் கோபுர வாசலுக்கு அழைத்துக் கொண்டு போகிறார். இது பெரிய காரியமில்லை. நமது உள்ளத்தைக் கோயிலின் அடித்தலமாக, அதன் பொருளாக, அதன் சோபையாக விளங்கும் சத்திய உலகத்தின் வாசலுக்கே, அதன் கருவறைக்கே அழைத்துப் போக முயல்கிறார். அங்கே புராணமும் வரலாறும், சமயமும், கலையும், இலக்கியமும் ஒன்றாகக் கலந்து ஒரு ஞானக் காட்சியை அமைக்கின்றன. அதைத் தொண்டைமான் நமக்குக் காட்டுகிறார். இந்தக் காட்சியை அனுபவமாக மாற்றும் சித்து விளையாட்டும் தொண்டைமான் உதவியால் நமக்குக் கிடைக்கிறது. அப்போதுதான் நமது ஊமை உள்ளமும் பேசத் தலைப்படுகிறது. நண்பர் தொண்டைமான் கையில் சமயம் பெறும் சித்தாந்தமாக இல்லாமல் சுவை பொருந்திய அனுபவம் ஆகிறது. தலைவலியைத் தவறாது தரக்கூடிய தத்துவ விசாரமும் வரலாற்று ஆராய்ச்சியும் தெளிந்து எளிமையிலும் எளிமையாகித் தேனாக ஓடுகின்றன. கல்வெட்டுக்கூட கதையாகிறது. இலக்கியம் மணங்கமழும் மெல்லிய பூங்காற்றாக நம் இதயத்தை வருடுகிறது.

பேராசிரியர் அ. சீநிவாசராகவன்
14—1—61.

தொண்டைமானுடைய தமிழைப் பற்றிச் சொல்லித் தெரிய வேண்டியதில்லை. உணர்ந்ததை உணர்ந்தபடி எல்லாம் தமிழில் எடுத்துக் கூறும் 'சித்து' அவருக்குக் கை வந்திருக்கிறது. கல்கி, கிருஷ்ணமூர்த்திக்குப் பின் தமிழை இப்படி சுகமாகக் கையாளுபவர் தொண்டைமான்தான் என்று இன்று பல அன்பர்கள் கருதுகிறார்கள். அவருடைய தமிழ்நடை முதலிலிருந்து கடைசி வரை துள்ளி விளையாடிக் கொண்டே செல்கிறது. பம்முவதும் பாய்ச்சல் காட்டுவதும், கர்ணங்கள் போடுவதும், ஹாஸ்யங்களை உதிர்ப்பதும், பக்தி வெள்ளத்தில், வாசகர்களை முக்கி முக்கி எடுப்பதுமாக இந்த பாஸ்கரத் தமிழ் செய்கிற ஜால வித்தைகள் பலப்பல.

ஜஸ்டிஸ். எஸ். மகராஜன்

# முன்னுரை

## தொ. மு. பாஸ்கரத் தொண்டைமான்

'வேங்கடம் முதல் குமரி வரை' என்ற தலவரலாற்றுக் கட்டுரைத் தொடர் முடிவுறுகிற சமயத்தில், தமிழ் அன்பர் பலர் 'தமிழ்நாட்டுத் தலங்களைப்பற்றி எழுதியது போலவே வடநாட்டுத் தலங்களைப் பற்றியும் எழுத வேண்டும். அங்கெல்லாம் சென்றால், என்ன என்ன பார்க்க வேண்டும் என்பதை எல்லாம் சொல்வாரில்லை. ஆதலால் அதையும் தாங்களே எழுத வேண்டும்' என்று கேட்டுக் கொண்டார்கள். நான் இதற்குமுன் டில்லிக்கும் ஆக்ரா விற்கும் இரண்டு முறை சென்றிருக்கிறேன். சிம்லாவிற்கும் அதற்கு வடக்கேயுள்ள நார்க்கண்டாவரையும் சென்று திரும்பியிருக்கிறேன். பம்பாய், புனா முதலிய நகரங் களுக்கும் இரண்டு மூன்று தடவை சென்றதுண்டு. ஆக்ராவுக்கு கிழக்கே சென்றதில்லை. அத்தோடு கட்டுரை எழுதும் அளவிற்கு செய்திகளும் சேகரித்ததில்லை. படங் களும் எடுத்ததில்லை. ஆதலால் அன்பர்களது ஆசிபெற்று என் நெடுநாளைய ஆசையைப் பூர்த்தி செய்ய சென்ற மார்ச்சு மாதத்தில், எனது கோவை நண்பர்கள் இருவருடன் எனது வடநாட்டு யாத்திரையைக் காரிலேயே துவக்கினேன். கிட்டதட்ட இரண்டரை மாதகாலம்,

எண்ணாயிரம் மைல்களுக்கு மேல் சுற்றினேன். சுற்றி எண்ணற்ற தலங்களைப் பார்த்துவிட்டுத் திரும்பியிருக்கிறேன். காஷ்மீர், அஸ்ஸாம் ராஜ்யங்களைத்தவிர மற்ற ராஜ்யங்கள் எல்லாவற்றையுமே சுற்றினேன். புகைப் படங்கள் எடுத்தேன். தலவரலாற்றையெல்லாம் விவரமாகவே தெரிந்துகொண்டேன்.

ஒன்றே ஒன்று. வடநாட்டில் க்ஷேத்திராடனம் செய்வதைவிட தீர்த்தாடனம் செய்வதே சிறப்புடையது என்று கருதப்படுகிறது. புராணப் பிரசித்தியுடைய கோயில்கள் இல்லாவிட்டாலும், சரித்திரப்பிரசித்தியும் கலைப் பிரசித்தியும் உடைய கோயில்கள் நிறைய இருக்கின்றன. எத்தனையோ கோயில்கள் முகமதியர்களால் இடித்து தரைமட்டமாக்கப்பட்டிருந்தாலும், எஞ்சி நிற்பவையே இந்தியாவின் கலைச்சிறப்பை எடுத்துக்காட்டக் கூடியவைகளாக இருக்கின்றன. எங்குபார்த்தாலும் சைவமும் வைணவமும் கலந்து உறவாடிக் கொண்டிருக்கும் சிறப்பைச் சொல்ல முடியாது. சிவலிங்க வழிபாடு சிறந்து விளங்குவது போலவே, கண்ணன், இராமன் முதலிய அவதார மூர்த்திகளின் வரலாற்றோடு தொடர்பு கொண்ட தலங்களும் பல உண்டு. இன்னும் இந்தியாவின் கலைப்பொக்கிஷங்களை அஜந்தா, எல்லோரா, எலிபெண்டா குடைவரைகள் என்ன? கஜுராஹோ புவனேஸ்வர், கோனாரக் முதலிய கலைக்கோயில்கள் தாம் எத்தனை எத்தனை?

அத்தோடு, பௌத்தமும் சமணமும் உருவாக்கிய கலைக்கோயில்களும் எண்ணிறந்தவை சமய உணர்ச்சி மூலம் தேசிய ஒருமைப்பாட்டை எவ்வாறெல்லாம், நமது முன்னோர்கள் வளர்த்திருக்கிறார்கள் என்றெல்லாம் அறிந்தபோது விம்மிதம் உற்றேன். பெருமிதம் பெற்றேன்

நான் கண்டவற்றையும், கேட்டவற்றையும், அனுபவித்து அறிந்தவைபற்றி வாசகர்களாகிய உங்களுக்குச் சொல்லவே இந்த 'வேங்கடத்துக்கு அப்பால், என்ற கட்டுரைத் தொடரை ஆரம்பிக்கிறேன்.

ஒருசில அன்பர்கள் 'இக்கட்டுரைத் தொடர் பிரயாணக் கட்டுரையாகவே அமையலாம். தங்கள் பிரயாண அனுபவங்கள் பலருக்கும் பயன்படுவதாக இருக்குமே என்று எழுதுகின்றனர். ஆனால் இவைகளைப் பிரயாணக் கட்டுரைகளாக எழுதும் நோக்கம் எனக்கில்லை. வழக்கம்போல் தலம் தலமாகச் சென்று நின்று, நிலைத்து விளங்குவதாகவே கட்டுரைகள் இருக்கும். என் பிரயாண அனுபவங்களை' 'எண்பது நாட்களில் இந்தியாவைச் சுற்றி' என்ற தலைப்போடு ஒரு தனிப்புத்தகமாகவே எழுதத் திட்டம்.

'வேங்கடத்துக்கு அப்பால்' என்று கட்டுரைத் தொடரின் தலைப்பு அமைந்தாலும், நமது தலயாத்திரை மைசூரில் உள்ள நஞ்சன் கோட்டிலே துவங்குகிறது. காரணம் எனது தலயாத்திரை கோவையிலிருந்து தானே துவங்கியது. சரி, வாசகர்களாகிய நீங்களும் இனி என்னுடன் சேர்ந்து யாத்திரையைத் துவங்கலாம் அல்லவா? என்ன வருகிறீர்களா?

# பொருளடக்கம்


| | | பக்கம் |
|---|---|---|
| 1. | நஞ்சன்கோடு ஸ்ரீகண்டேஸ்வரர் ... | 30 |
| 2. | மைசூர் சாமுண்டி ... | 37 |
| 3. | சீரங்கப்பட்டணத்துச் சீரங்கன் ... | 45 |
| 4. | சோமநாதபுரத்துக் கேசவன் ... | 53 |
| 5. | மேல் கோட்டைத்திருநாரணன் ... | 61 |
| 6. | சிரவண பெலகோலாகோமதேஸ்வரர் ... | 69 |
| 7. | பேலூர் சென்னக் கேசவர் ... | 77 |
| 8. | ஹலபேடு ஹொய்சலேஸ்வரர் ... | 85 |
| 9. | சிருங்கேரி வித்யா சங்கரர் ... | 93 |
| 10. | விஜயநகரத்து விட்டலர் ... | 101 |
| 11. | ஹரிஹரர் ஹரிஹரேஸ்வரர் ... | 112 |
| 12. | ஹம்பி பம்பாபதி ... | 121 |
| 13. | வாதாபி மழகளிறு ... | 130 |
| 14. | பட்டடக்கல் விருபாக்ஷர் ... | 141 |
| 15. | ஐஹோளே துர்க்கை ... | 151 |
| 16. | பீஜப்பூர் கோல்கும்பஸ் ... | 160 |
| 17. | பண்டரிபுரத்துப் பாண்டுரங்கன் ... | 169 |
| 18. | புனா நகரத்துக் கார்த்திகேயன் ... | 180 |
| 19. | பம்பாய் மகாலக்ஷ்மி ... | 189 |
| 20. | எலிபெண்டா மகேசமூர்த்தி ... | 201 |
| 21. | திரயம்பக திரயம்பக நாதர் ... | 211 |
| 22. | நாசிக் பஞ்சவடி ராமர் ... | 219 |
| 23. | சீரடி சாயிபாபா ... | 230 |
| 24. | எல்லோராக் கைலாயர் ... | 238 |

25. வேறுள் குஸ்ருனேஸ்வரர் ... 247
26. அஜந்தாவின் போதிசத்துவர் ... 256
27. அஜந்தாவின் அந்தப்புரம் ... 266
28. சாஞ்சி ஸ்தூபங்கள் ... 274
29. தாக்கோர் துவாரகாநாதர் ... 282
30. சபர்மதி ஆசிரமம் ... 290
31. சோமநாதபுரத்து சோதிர்லிங்கம் ... 298
32. போர்பந்தர் கீர்த்திமந்திர் ... 305
33. ஜாம்நகர் சமணக் கோயில்கள் ... 312
34. துவராபதி மணிவண்ணன் ... 321
35. அதிசயம் கண்டோமே ... 332
36. உதயபுரி ஜகதீசர் ... 342
37. சித்தூர் கோட்டையில் மீராகோயில் ... 350
38. உஜ்ஜயினி மகாகாலர் ... 360
39. புஷ்கரத்தில் பிரம்மா ... 368
40. ஜெய்ப்பூர் கல்கிகாமந்திர் ... 376
41. பழைய டில்லியில் ஸ்ரீதிகம்பர்கோயில் ... 387
42. புதுடில்லியில் பிர்லாமந்திர் ... 393
43. சண்டிகரில் சண்டி ... 401
44. குருக்ஷேத்திரத்தில் கண்ணன் ... 407
45. அமிர்தசரஸில் தங்கக்கோயில் ... 414
46. ஸ்ரீநகர் மார்த்தாண்டர் ... 421
47. அமரநாதத்து ஈசன் ... 428
48. சிம்லாவில் சியாமளாதேவி ... 435
49. ஹரித்துவாரத்தில் கங்காதேவி ... 441
50. ரிஷிகேசத்து ரகுநாத்ஜி ... 448

# முகவுரை

அமரர் தொ. மு. பாஸ்கரத் தொண்டைமான் அவர்கள் என் குடும்பத்துடன் நெருங்கிப் பழகி என் வாழ்வில் இடம் பெற்ற ஒரு கலைச் செல்வர். அவருடன் இருபது ஆண்டுகளுக்கு மேலாக நெருங்கிப் பழகும் வாய்ப்பும், அவர்தம் கம்ப இராமாயண உரைகளையும் பட்டிமண்டபப் பேச்சுக்களையும் கேட்கும் பேறும் பெற்றவன் நான். அவர்கள் கோவை வந்தபோதெல்லாம் என் இல்லத்திலேயே தங்கியதுடன் என் மகள் நிர்மலாவின் திருமணத்தையும் முன்னின்று தமிழ் முறைப்படி நடத்திவைத்தவர்கள். அவர்கள் வடஆற்காடு மாவட்டத்தின் நாயகராக இருந்து ஓய்வு பெற்ற பின்பு, கோவையில் நடைபெற்ற நன்னெறிக் கழக விழாக்களுக்காகவும் சன்மார்க்க சங்க விழாக்களுக்காகவும் வந்தபோதெல்லாம் என்னுடனேயே தங்கி மகிழ்ந்தார்கள். அவர்கள் அரசுப்பணியில் இருந்து ஓய்வு பெற்றதும் தமிழ் நாட்டின் ஆலயங்களைப் பற்றி, ''வேங்கடம் முதல் குமரிவரை'' என்னும் தலைப்பில் எழுதித் தமிழ் மக்களை மகிழ்வித்தார்கள். இவை முடிந்த பின் வடநாட்டுக் கோயில்களைப் பற்றி எழுதத் திருவுள்ளம் பாலித்து ஹிந்தியும் தமிழும் தெரிந்த என்னையும், என் கெழுதகை நண்பர் திரு. K. R. இராதாகிருஷ்ணன் அவர்களையும் அழைத்துக் கொண்டு திரு. இராதா-கிருஷ்ணன் அவர்கள் காரிலேயே சென்று வடநாட்டுக் கோயில்கள் பலவற்றையும் நேரில் கண்டுகளிக்கும் பேற்றை நல்கினார்கள். திரு. தொண்டைமான் அவர்கள் ஆலயங்களைப்பற்றி எழுதவே பிறந்தார்கள். அந்த வேலை முடிந்தவுடன் இறைவன் அவர்களை அழைத்துக் கொண்டான்.

இந்திய நாட்டின் கலைச் செல்வங்களைக் காண்பதற்கு நாம் தவம் செய்திருக்க வேண்டும். அவற்றைக் காட்டி

விளக்குதற்குரிய ஆசிரியர் ஒருவர் கிடைப்பதும் அரிது. தொண்டைமான் அவர்களுடன் சுமார் பத்தாயிரம் மைல்கள் பயணம் செய்த போதும் அதிசய ஆலயங்களைக் கண்டு மகிழ்ந்த போதும் எனக்கு திருவாசகத்தின் கீழ்க் கண்ட பாடல் தான் ஞாபகத்துக்கு வந்தது.

கேட்டாயோ தோழி! கிறிசெய்த வாறு ஒருவன்
திட்டார் மதில் புடைசூழ் தென்னன் பெருந்
துறையான்
காட்டாதன வெல்லாம் காட்டிச் சிவம் காட்டித்
தாட்டாமரை காட்டித் தன் கருணைத் தேன்காட்டி
நாட்டார் நகைசெய்ய நாம் மேலை வீடெய்த
ஆட்டான் கொண்டாண்டவா பாடுதுங்காண்
அம்மானாய்!

திருவாசகம் - திருவம்மானை - பாட்டு-6

ஆணிப் பொன் அம்பலத்தே கண்டகாட்சிகள் அற்புதக் காட்சிகள். ஜோதிமலை ஒன்று தோன்றி அதில் வீதியும் உண்டாகிறது. அந்த வீதியில் ஒரு மேடை. அந்த மேடை மேல் ஏறி காணாத காட்சிகளைக் காணும் பேறு பெற்றோம். இந்தியா என்பது நகரங்களும் நதிகளும், மலையும் மடுவும், காடும் மேடும் மாத்திரம் அல்ல. ஆயிரம் ஆயிரம் ஆண்டுகளாக கல்வடிவில் காட்சி தரும் பேசும் விக்கிரகங்களே என்று நமக்கு உணர்த்தியவர், பெருந்தகை திரு. தொ. மு. பாஸ்கரத் தொண்டைமான் அவர்கள். அவருடன் கண்ணுற்ற அதிசய ஆலயங்களில் இராஜஸ்தானிலுள்ள தில்வாரா ஆலயங்களும் மத்தியப் பிரதேசத்திலுள்ள கஜுராஹோ மிதுனச் சிற்பங்களும் ஒரிசாவிலுள்ள சூரியனார் ஆலயமும் என்றும் அழியாத உயிர்ச் சித்திரங்களாக என் உள்ளத்தில் இடம் பெற்றுள்ளன. இவற்றையும், இவை போன்ற ஆலயங்களையும் நான் ஒரு போதும் பார்க்க

வாய்ப்பே இருந்ததில்லை. அம் மாமனிதரால் இவற்றைப் பார்க்கும் வாய்ப்பும்-இவற்றின் சிறப்பை ஹிந்தியிலிருந்து மொழி பெயர்த்துச் சொல்லும் பேறும் எனக்குக் கிடைத்தன. அவருடன் இரண்டு மாதங்கள், அவருடைய நிழல் போல் இருக்கும் அரிய சந்தர்ப்பமும் அமைந்தது. உண்மையில் நான் வாழ்ந்த நாட்கள் அவைதாம். அவருடைய அற்புதக் கட்டுரைகள் அடங்கிய இந்நூலுக்கு முகவுரை ஒன்று வேண்டும் என்று என் அருமை மகளார் இராஜேஸ்வரி நடராஜன் வேண்டிய போது எனக்கு அத்தகுதி இல்லையாயினும், மறைந்த அம் மாமனிதருக்கு நான் செலுத்தும் காணிக்கையாகக் கருதி இப்பணியை மேற்கொண்டேன். தமிழ் இனம் இருக்கும்வரை அமரர் தொ. மு. பாஸ்கரத் தொண்டைமான் அவர்களுடைய பெயரும் இருக்கும். மறைந்தும் அவர்கள் வாழ்ந்து கொண்டயிருக்கிறார்கள்.

—ந. கிரிதாரி பிரசாத்

''கீதா ஹவுஸ்''
52. தேவாங்க உயர்நிலைப் பள்ளி சாலை
கோயம்புத்தூர் - 641002.

# அணிந்துரை

திருநெல்வேலி வண்ணார்பேட்டையில் டி. கே. சி. அவர்கள் தமது வீட்டிலுள்ள வட்டமான தொட்டிக் கட்டில், ஞாயிறுதோறும் நடத்தி வந்த வட்டத் தொட்டி என்னும் இலக்கிய இயந்திரத்தின் 'மெயின் ஸ்பிரிங்' யார் என்றால், எவ்விதத் தயக்கமும் இன்றி 'பாஸ்கரன் தான்' என்று உறுதியோடு சொல்லிவிடலாம்.

''வட்டத் தொட்டி'' என்ற கவிமொழிக்குப் பொழிப்புரை, பதவுரை, கருத்துரை, விரிவுரை எல்லாமே என் அருமை நண்பர் பாஸ்கரத் தொண்டைமான்தான் என்று நான் சொல்லுவேன்.

ஆகா! எப்பேர்ப்பட்ட மனிதர்! எப்பேர்ப்பட்ட நண்பர்! எப்பேர்ப்பட்ட ரசிகர்! அவருக்கு ஈடாக வேறு ஒருவரில்லை. வேறு எவரும் அவருக்கு ஈடில்லை. எத்தனையோ பேருடன் நெருங்கிப் பழகியுள்ளவனாகிய நான் தான் சொல்லுகிறேன், 'பாஸ்கரன் ஓர் ஒப்பற்ற மனிதர்' என்று.

டி. கே. சி.யின் வீட்டில் உள்ள தாழ்வாரத்தில் நண்பர்கள் பலர் கூட்டமாகக் குழுமியிருக்கும்போது எங்கிருந்தாவது கல கலப்புக் கேட்டால், நிச்சயம் அங்கே பாஸ்கரன்தான் இருப்பார்! அதிர்வேட்டுச் சிரிப்பு கிளம்புகிறது என்றால், அது வேறு யாருமில்லை, தொண்டைமான்தான்!

எனக்கு பலரைத் தெரியும். க்ளார்க்காகப் பணியைத் தொடங்கி யிருப்பார்கள். அப்போது நம்மிடம் பழகுகிற முறை ஒருமாதிரி இருக்கும். 'ஹெட்க்ளார்க்' ஆவார்கள். சுருதி மாறும். பிறகு அதிகாரியாக ஆகும் போது, ஆளே மாறி விடுவார்! தோரணைகள், நன்றியுணர்வுகள் எல்லாமே வேறு விதமாக இருக்கும். இப்படிப்பட்ட

கயவர்கள் கூட்டத்திலே ஒரு மாணிக்கம் என் உயிர் நண்பர் பாஸ்கரன்!

ரெவினியூ இன்ஸ்பெக்டர் என்ற பதவியிலிருந்து அவரை நெருக்கமாகவே எனக்குத் தெரியும், கலெக்டர் ஆகிறவரை. அடேயப்பா! அத்தனை மாறுதல்களுக்கு நடு விலும் அதே பாஸ்கரன், அதே சிரிப்பு, அதே அன்பு, அதே நேய நெருக்கம், அதே மனிதர்! ஆகா அப்படிப் பட்ட மனிதர் இன்னொருவரை நான் கண்டதில்லையே!

எளிமை, நேசம், எந்தச் சூழ்நிலையிலும் மாறாத ஒரே நிலையான தனித் தன்மை, உற்சாகம், உல்லாசம் இத்தனையும் சேர்ந்த ஓர் அற்புத மனிதர்தான் நண்பர் பாஸ்கரன். இந்த அற்புதமாகிய "பாஸ்கரம்" என்ற பண்பை இந்த நூலின் ஒவ்வொரு பக்கத்திலும் அப்ப டியே காண்கிறேன். கண்டு களிக்கிறேன். எளிமை அருமை, இனிமை, மாறாத தனித்தன்மை.

'வேங்கடத்துக்கு அப்பால்' என்ற இந்தக் கட்டுரை கள் எதைப் பேசுகின்றன என்பதை இங்கே நான் சொல்ல வில்லை. காரணம் அதை நீங்களே நூலுக்குள் படிக்கப் போகிறீர்கள். ஆனால் நூலிலே நின்று பேசுகிற குரலின் ஒலிப்பண்பு என்ன, அந்தக் குரல் கிளம்பி வருகிற உள் ளத்தின் பண்பு என்ன என்பதையே இங்கு அடிக்கோடு போட்டுச் சொல்லுகிறேன். அணிந்துரை என்பதன் நோக்கமே அதுதான்.

ஒப்பற்ற மனிதரின், ஒப்பற்ற ரசிக உள்ளத்தின் ஒப்பற்ற கட்டுரைகள் இவை. இவற்றிலே பாஸ்கரனின் முகம் தெரிகிறது; அவருடைய வீச்சு நடை தெரிகிறது; அந்த உல்லாசம் அப்படியே பொங்கு புனலாக விம்மி வருகிறது. நல்ல இலக்கியத்துக்கு இதற்குமேல் என்ன தகுதிகள் வேண்டும்?

பாரத தேசத்தின் ஒருமைப்பாடு அதன் கலைகளிலும், இலக்கியச் சிந்தனைகளிலும், இவற்றின் பண்ணைகளாகிய

கோவில்களிலுமே பாதுகாவலோடு மூச்சு விடுகிறது. பாரத உயிர் இந்தக் கோயில்களிலே பாரத உயிராகவே உயிர்க்கிறது. பாரதம் எங்கே இருக்கிறது என்ற கேள்விக்கு ஒரே விடை வேங்கடத்துக்கு இப்பாலும் வேங்கடத்துக்கு அப்பாலும் உள்ள கோயில்களில் கொலுவிருக்கிறது என்பதே! அந்த விடை மொழிக்கு நடைமொழியிலே கட்டப் பெற்ற ஓர் அழகான சொற்கோயிலே இந்த நூல். கற்கோயிலைச் சொற்கோயிலாக நிறுத்துகிறது என் நண்பர் பாஸ்கரனின் இரசவாதத் தமிழ். அதைப் படித்துப் படித்து மகிழ்கிறேன். நீங்களும் அவ்வாறே மகிழுங்கள் என்று சொல்லி இந்தச் சொற் கோயிலுக்குள்ளே உங்களுக்கு நல்வரவு கூறுகிறேன்.

**மீ. ப. சோமசுந்தர சிவம்**

*'பச்சை'*
*ஏ ஐ/122*
*எட்டாவது நேர் சாலை*
*சென்னை-600 040*

# நன்றி

வணக்கம்.

ஒரு மனிதனது வாழ்நாளின் செம்பாதி தூக்கத்தில் கழிந்து விடுகிறது என்பார்கள். எங்கள் தந்தையார் திரு. தொ. மு. பாஸ்கரத் தொண்டைமானைப் பொறுத்தவரையில் அவர்களுடைய வாழ்நாளின் பெரும்பகுதி, கோயில்களில், அதுவும் தமிழ் நாட்டுக் கோயில்களில் கழிந்திருக்கிறது என்று சொல்வதே பொருத்தமாக இருக்கும். பக்தி ஒருபுறமிருக்க, பரம்பரையாகவே ஊறி வந்த கலை உணர்வும் தாமாக வளர்த்துக்கொண்ட கலை ஆர்வமுமே அதற்குக் காரணங்களாகும். வேங்கடம் முதல் குமரிவரை, தமிழ்கூறும் நல்லுலகமெங்கும் எழுப்பப்பட்டுள்ள கோயில்களைக் கண்டு, தாம் பெற்ற இன்பத்தை மற்றவர்களுக்கும் கட்டுரை வாயிலாக வழங்கியவர்கள் அவர்கள். விண்மறைக்கும் கோபுரங்களோடு நின்று விடாது, சின்னச் சின்ன ஊரில் கூட சிற்ப நூலின் அற்புதம் கண்டு தெளிந்தவர்கள். திருநெல்வேலி மாவட்டத்திலுள்ள கிருஷ்ணாபுரம் கோயிலின் சிற்பவடிவங்களை முதல் முதலாகக் கண்டபோது ஏற்பட்ட பரவசம்தான் அவர்களின் முதல் கலைக்கட்டுரை எழுதுவதற்குத் தூண்டுகோலாக அமைந்தது என்று சொல்லக் கேட்டிருக்கிறேன். அதன் பின்னர் அவர்களுடைய கலைக் கட்டுரைகள் அவ்வப்போது, ஆனந்தவிகடன், கல்கி, கலைமகள் முதலிய ஏடுகளில் வெளிவந்தது யாவரும் அறிந்ததே.

தொண்டைமானவர்கள் பொறுப்பான அரசுப்பணியில் இருந்தவர்கள். அரசுப்பணியிலிருந்து ஓய்வு பெற்றவுடன் தமிழகத்துக் கோயில்களைப் பற்றிய அவர்களுடைய கட்டுரைகள், கல்கியில் தொடர்ச்சியாக வெளியிடப்பட்டுக் கலையன்பர்களிடம் நல்ல வரவேற்பைப் பெற்றன. அவ்வாறு அவர்களை எழுத ஊக்குவித்தவர்கள் கல்கி அதிபர் திரு. சதாசிவம் அவர்கள்தாம்.

பாலாற்றின் மருங்கிலே, பொன்னியின் மடியிலே, காவிரிக்கரையிலே, பொருநைக் கரையிலே—என்ற தலைப்புக்களில் நான்கு தொகுப்புக்களாக அவை நூல் வடிவம் பெற்றுள்ளன. இந்தச் சீரிய பணியைப் பாராட்டி, காஞ்சிப் பெரியவர்கள் தொண்டைமான் அவர்களுக்கு 'கலைமணி' பட்டம் நல்கி அவர்களைக் கௌரவித்தது கிடைத்தற்கரிய ஒரு பெரும் பேருகும்.

தொண்டைமான் அவர்களுடைய கலைத்தாகம் தமிழ் நாட்டுக் கோயில்களை பார்த்ததோடு தணிந்துவிடவில்லை. வேங்கடத்துக்கு அப்பாலும் சென்று, இந்திய மண்ணில் ஆங்காங்கே எழுப்பப்பட்டுள்ள திருக்கோயில்களையும், அவற்றின் வரலாறு, கலையழகு, கலாசாரம் இவற்றையும் கண்டு இன்புறுவதற்கான வாய்ப்புக்காகக் காத்திருந்தார்கள். காலமும் கனிந்து வந்தது. நாங்கள் அப்போது பணியின் நிமித்தம் கோவையிலிருந்ததால், அவர்களுடைய வடநாட்டுத் தலயாத்திரை கோவையிலிருந்தே தொடங்கியது. தந்தையாரவர்களின் உற்ற நண்பர் திரு. கிரிதாரி பிரசாத் அவர்களும், மற்ருெரு நண்பர் திரு. இராதாவும், இந்த யாத்திரையில் உடன் வர ஆர்வம் காட்டவே 'மூவர் உலா' வாகவே இந்தப் பயணம் அமைந்தது. யாத்திரை முடிவடைய மொத்தம் 85 நாட்கள், ஏறத்தாழ மூன்று மாதகாலம் ஆயிற்று. காரிலேயே சென்ற காரணத்தால் வழியில் நிறைய சிரமங்கள். இருந்தாலும் யாத்திரை வெற்றிகரமாக நிறைவேறியது. பின்னர் கட்டுரைகளும் கல்கியில் தொடர்ந்து வெளிவரத் தொடங்கின. ஐம்பதுக்கும் மேற்பட்ட கட்டுரைகள். கட்டுரைகளைப் படிக்கும்போது அந்த யாத்திரையில் நாமும் பங்கு கொண்டு, அந்தந்தத் தலங்களுக்குப் போய் வந்தது போன்ற ஓர் உணர்வும், மன நிறைவும் ஏற்படுவதை உணரலாம்.

இந்த நூலில் காணப்படும் கட்டுரைகள் அனைத்தும் கல்கியில் தொடர்ச்சியாக வந்தவையே. இந்தக் கட்டு

ரைகளும், 'வேங்கடம் முதல் குமரிவரை' கட்டுரைகள் போன்றே நூல்வடிவில் வரவேண்டும் என்று தொண்டைமானவர்கள் விரும்பினார்கள். அவற்றைத் தொகுத்து நூலாக வெளிக்கொணர்வதற்கு இத்தனை ஆண்டுகள் ஆகிவிட்டன. மன்னிக்க முடியாத குற்றம்தான். என்றாலும் அதற்கு ஈடு செய்யும் வகையில் அபிராமி பதிப்பகத்தார் அதனை நல்ல முறையில் அழகாக உருவாக்கித் தந்திருக்கிறார்கள் வடவேங்கடவனும், மைசூர் நந்தியும், ஐஹோளே துர்க்கையும், அஜந்தாவின் போதி சத்துவரும் அட்டையை அலங்கரிக்கிறார்கள். கையில் எடுக்கும் போதே கலை மணக்கிறது.

கட்டுரைகளைத் தொடர்ந்து கல்கியில் வெளியிட்டு ஊக்கப் படுத்திய கல்கிப் பத்திரிகையின் உரிமையாளர் திரு. சதாசிவம் அவர்களுக்கு நன்றி கூற நான் பெரிதும் கடமைப் பட்டிருக்கிறேன். இந்த நூலுக்கு அரிய அணிந்துரை வழங்கியுள்ள திரு. மீ. ப. சோமசுந்தரம் அவர்கள் என் தந்தையின் நீண்ட நாளைய நண்பர். அகில இந்திய வானொலி நிலையத்தில் உயர்ந்த பதவி வகித்தவர். சிறந்த இலக்கியச் சித்தர். டி. கே. சி. வட்டத்தொட்டியின் இப்போதைய தலைவர். அவர்களுடைய அணிந்துரையில் தொண்டைமான் அவர்களிடத்தில் அவர்கள் கொண்டிருக்கும் பாசமும் பரிவும் வரிக்கு வரி பொங்கித் ததும்பி நிற்பதை உணர முடிகிறது. அணிந்துரை வழங்கியுள்ள அவர்களுக்கு என் நெஞ்சம் நிறைந்த நன்றி.

இந்த நூலுக்கு முகவுரை வழங்கியிருப்பவர், திரு. கிரிதாரி பிரசாத் அவர்கள். இந்த வடநாட்டுத் தலயாத்திரையில் பங்கு கொண்ட பெருமைபடைத்தவர். கிரிதாரி பிரசாத் அவர்களை ஆன்மீக உலகம் நன்கறியும். கீதைக்கு விளக்கம் சொல்லிச் சொல்லி பண்பட்ட நாவினால் வள்ளலாரின் அருட்பாக்களுக்கு விளக்கம் தந்து கொண்டிருப்பவர்கள். தென்னாட்டு விவேகானந்தர் என்று

அன்பர்களால் பாராட்டப்படுபவர்கள் அவர்கள். ஆத்மார்த்தமான அன்புடன் அருமையான முகவுரை அளித்திருக்கிறார்கள். அவர்களுக்கு நன்றி சொல்ல வார்த்தைகளைத் தேடிக் கொண்டிருக்கிறேன்.

நூலை, கட்டுரைகளுக்குரிய படங்களோடு அழகாக அச்சிட்டுத் தந்துள்ள ஜீவன் அச்சகத்தாருக்கும், சிரமம் பாராது அழகாக அதனை வெளியிட முன் வந்திருக்கும் அபிராமி பதிப்பகத்தின் உரிமையாளர் திரு. பழனியப்பன் அவர்களுக்கும் என் நன்றியும் பாராட்டும் உரியன.

தொண்டைமான் அவர்கள் தம் வாழ்நாளில் சாதித்த அரும்பெருங் காரியங்கள் இரண்டு. தஞ்சையில் படாத பாடுபட்டு அவர்கள் உருவாக்கிய கலைக்கூடம் ஒன்று. மற்றொன்று வேங்கடம் முதல் குமரி வரை, வேங்கடத்துக்கு அப்பால் என்ற இருபெரும் தலைப்புக்களின் கீழ் அவர்கள் ஆக்கித் தந்துள்ள கலைத்தொகுப்பு நூல்கள். தமிழ் மகளுக்குத் தந்துள்ள அரிய சீதனங்கள் இவை. தொண்டைமான் அவர்கள் இன்று நம்மிடையே இல்லை. என்றாலும் கட்டுரைகள் வாயிலாக நம்முடன் பேசுகிறார்கள். யாத்திரைக்கு நமக்குத் துணை வருகிறார்கள். நம் கையைப் பிடித்து அழைத்துக் கொண்டு கோயில் கோயிலாக ஏறி இறங்குகிறார்கள். அவற்றின் கலையழகை யெல்லாம் நம் கண் முன் படம் பிடித்துக் காட்டுகிறார்கள். என்றும் நாட்படாத கட்டுரைகளாக அவை என்றென்றைக்கும் நம்முடன் உறவாடிக் கொண்டேயிருக்கும் என்பது உறுதி.

**ராஜேஸ்வரி நடராஜன்**

பாஸ்கர நிலையம்
31, 7-வது குறுக்குத் தெரு
சாஸ்திரி நகர்
சென்னை-20.

# வடநாட்டுக் கோயில்களைச் சுற்றி

ஒரு நாட்டு மக்களின் உள்ளப்பாங்கை அறிய வேண்டும் என்றால் அந்த நாட்டின் இலக்கியங்களைத் தான் புரட்ட வேண்டும். இலக்கியங்களுக்கு அடுத்த படியாக அம்மக்களின் வாழ்வை அறிய அந்நாட்டில் வளர்ந்த கலைகளைப் பற்றி ஆராய வேண்டும். அதிலும் அந்த நாட்டின் கட்டிடக்கலை அம்மக்களின் இதயத்தின் போக்கை எல்லாம் தெளிவாகப் புலப்படுத்தும் என்று கூறுவர் அறிஞர். மக்களின் உணர்ச்சிப் பெருக்கு, அவர்களுடைய ஆசாபாசங்கள் எல்லாம் கல்லிலும், செம்பிலும், மண்ணிலும், மணலிலும் பொதிந்து கிடக்கக் காண்போம். இந்த அடிப்படையில்தான் நம் நாட்டுக் கோயில்களைப் பற்றி நாம் ஆராய வேண்டும். நம் இந்திய நாட்டைப் பொறுத்தவரையில் நம் நாட்டுக் கலைகள் எல்லாம் சமயச் சார்புடையவைகளாகவே வளர்ந்திருக்கின்றன. அவர்களது சமயமும் ஆங்காங்கே அமைக்கப்பட்டுள்ள ஆலயங்களோடு பின்னிப் பிணைந்தே கிடப்பதையும் நாம் அறிவோம். ஜீவாத்மா பரமாத்மாவோடு ஒன்றி நின்று இரண்டறக் கலந்து நிற்கிற நிலைமையை நம் நாட்டுக் கோயில்கள் உருவகிக்கின்றன—என்று சொன்னால் அது மிகை அன்று. உலக வாழ்விலே மயங்கித் தாழ்ந்து கிடக்கின்ற மனிதன் மேல் உலகில் உள்ள இறைவனை நோக்கி உயர எண்ணுவது போலவே, நம் நாட்டுக்கோயில் கோபுரங்கள் விண்ணை நோக்கி உயர்ந்து கொண்டே செல்கின்றன. ஆம், நம் கோயில் கோபுரங்களை 'விண் வழி காட்டும் விரல்கள்' என்று கூடக் கூறலாம்

நான் தமிழ் நாட்டுக் கோயில்களில் பலவற்றை நேரில் சென்று கண்டவன். ஆம். தமிழ் நாடு முழுவதும் எண்ணிறந்த

கோயில்கள் இருக்கின்றன. அவைகளில் பல பழம்பெருமை உடையவை. ஒரு சில அழிந்து போய்விட்டன. சில சிதைந்தும் கிடக்கின்றன. இவைகளில் பல பெரிய நகரங்களில் இருந்தாலும் சின்னஞ் சிறிய ஊர்களில் கூட பலபல கோயில்கள் இருக்கின்றன என்பதை மறுக்க முடியாது. கோயில்கள், கருவறை, மண்டபம், வாயில் என அமைந்து கலைச்சிறப்பு இல்லாமல் இருக்கும் என்றாலும், பல கோயில்கள் சிறந்த வேலைப்பாடுடைய கலைக்கோயில்களாகவும் சரித்திரப்பிரசித்தி, புராணப் பிரசித்தி உடையவைகளாகவும் இருக்கின்றன. இது தவிர இக்கோயில்கள் நாளும் வளர்ந்து தமிழர்களது கலை உணர்வுக்கு சான்று பகர்கின்றவையாகவும் அமைந்துள்ளன. தமிழ் நாட்டுக் கோயில்கள் எல்லாம் திராவிட சிற்ப முறைக்கு எடுத்துக் காட்டாக விளங்குகின்றன என்பர். பல்லவர், சோழர், பாண்டியர், நாயக்கர்கள் எல்லாம் ஒருவருக்கு ஒருவர் போட்டி போட்டுக்கொண்டு கோயில்களைக் கட்டினார்களோ என்று எண்ணும்படியாகப் பல பல கோயில்களைக் கட்டியிருக்கின்றனர்.

முன்னர் கட்டிய கோயில்களை விரிவுபடுத்தியிருக்கின்றனர். வழிபாடு இயற்றியிருக்கின்றனர். வழிபாடுகள் ஒழுங்காக நடைபெற நிவந்தங்கள் ஏற்படுத்தியிருக்கின்றனர். மாமல்லபுரத்துக் குடைவரைகளும் கற்கோயில்களும் காஞ்சி கைலாசநாதர் கோயில் வைகுண்டப் பெருமாள் கோயில்களும் பல்லவரது கலை ஆர்வத்தை விளக்கப் போதியதாகும். தஞ்சைப் பெரியகோயிலும் கங்கைகொண்ட சோழீச்சுரமும் பிறவும் சோழ மன்னர்களது புகழைப் பறைசாற்றும். நெல்வேலி நாதர் கோயிலும், தென்காசி காசி விஸ்வநாதர் கோயிலும் பாண்டியர் கலைப்பணிக்குச் சிறந்த எடுத்துக்காட்டாக மிளிரும். மதுரை மீனாட்சி கோயிலும் இராமேஸ்வரத்துப் பிரகாரங்களும், கிருஷ்ணாபுரத்துச் சிற்பங்களும் நாயக்க மன்னரது புகழை என்றும் நிலை நிறுத்தும் தன்மை

உடையவை. இவை எல்லாம் தமிழனது கலை உணர்வுக்கு சிறந்த எடுத்துக்காட்டாக விளங்குபவையல்லவா?

இப்படித் தமிழ் நாட்டுக் கோயில்களாம் கலைக்கூடங் களையே இருபது வருஷகாலமாகச் சுற்றி வந்த எனக்கு வேங்கடத்திற்கு அப்பால் உள்ள நமது வடநாட்டுக் கலைக் கோயில்களையும் காணவேண்டும் என்ற ஆசை உள்ளத்தில் நீண்ட நாளாக இருந்து வந்தது. அந்த ஆசையை நிறைவேற்றவும், அந்த ஆசை நிறைவேறுவதன் மூலம் வடநாட்டுக் கோயில்களைப் பற்றி அங்கு செல்ல வாய்ப்பில்லாத தமிழ் மக்களுக்கு எடுத்துக் கூறவும் விரும்பியே சென்ற வருஷம் நான் எனது வடநாட்டு யாத்திரையைத் தொடங்கினேன். கோவையிலிருந்து தொடங்கிய இந்த யாத்திரையில் இரண்டு கோவை அன்பர்கள் துணை வந்தனர். யாத்திரை முழுவதும் காரிலேயே சென்றோம். கிட்டதட்ட பதினாயிரம் மைல்களை மூன்றுமாத காலத்தில் முடித்து ஊர் திரும் பினோம். அது ஓர் அரிய அனுபவம்கூட. நம் நாட்டில் உள்ள சாலைகளைப் போல் வடநாட்டுச் சாலைகள் இல்லை. பல நதிகளைக் கடக்கப் பாலங்கள் இல்லை. சில இடங்களில் காரைப் படகுகளில் ஏற்றியே ஆற்றைக் கடக்க வேண்டி யிருந்தது. ஓர் இடத்தில் ரயிலின் கூட்ஸ் வண்டியில் ஏற்றியே தண்ணீர் இல்லாது மணல் மட்டும் நிறைந்திருந்த ஆற்றைக் கடக்க வேண்டி வந்தது. வடநாட்டு யாத்திரை செல்ல விரும்பும் அன்பர்கள் காரில் செல்லுதல் கூடாது. காரில் செல்வதில் பல வசதிகள் உண்டு என்றாலும் சிரமங் களும் பலப்பல. என்றாலும் தலங்களை எல்லாம் ஆற அமர இருந்து காண இப்படிச் சென்றதே துணை புரிந்தது என்பதையும் உணர்கின்றேன்.

இனி, இந்த வடநாட்டு யாத்திரையில் நான் கண்ட கலைக்கோயில்கள் ஒரு சிலவற்றை மட்டும் கூறிவிட்டு நின்று கொள்கிறேன். தமிழ் நாட்டை விட்டுக் கிளம்பியதும் நாம் முதல் முதல் செல்வது மைசூர் ராஜ்ஜியமே. அந்த

ராஜ்ஜியத்திலே உள்ள கலைக்கோயில்களில் பிரசித்த மானவை ஹோய்சலர் கோயில்களே. சிறந்த கட்டிடக் கலைக்கும், அற்புதச் சிற்பக்கலைக்கும் நிலைக்களனாக விளங்குவன, அக்கோயில்கள், மூன்று கோயில்கள் ஹோய் சலர் கோயில்கள் என்ற பிரசித்தியோடு விளங்குகின்றன. ஒன்று மைசூருக்குக் கிழக்கே உள்ள சோமநாதபுரத்திலே இருக்கிறது. மற்றவை இரண்டும் மைசூருக்கு வடமேற்கே ஐம்பது மைல் தொலைவில் உள்ள பேலூரிலும் ஹளபேடிலும் இருக்கிறது. இம்மூன்று கோயில்களையும் காணும் அவகாசம் இல்லாதவர்கள் பேலூர் சென்னக் கேசவர் கோயிலை மாத்திரமாவது கண்டுவிடவேண்டும். கோயில் சுவர்கள், தூண்கள் ஒரு இடம் விடாமல் சிற்ப வடிவங்களாலேயே நிறைத்து வைக்கப்பட்டிருக்கும். சோழ நாட்டுக் கோயில்களைப் போல பெரிய மாடக் கோயில் களாக அமையாவிட்டாலும் நட்சத்திர வடிவில் ஓர் உயர்ந்த பீடத்தின் மீதே கோயில் எழுந்திருக்கும் கோயில். வாயில்களில் எல்லாம் புலியோடு போரிடும் வீரனை-ஆம், அதுதானே ஹொய்சளர்களின் சரித்திரச் சின்னம் — உருவாக்கியிருப்பார்கள். இன்னும் யானைகள் வேறு கம்பீர மாக எழுந்து நிற்கும். அளவில் சிறியவைகளாக இருப் பதினாலேயே அவை சிற்பம் என்று தோன்றும். கொஞ்சம் பெரிய அளவில் மகாபலிபுரத்து யானை போல் நின்று விட்டால் உண்மையான யானைகள்தாமோ அவை என்றே மயங்குவோம். கோயிலை ஒரு சுற்றுச் சுற்றினால் சுவர் களில் எல்லாம் வரிசை வரிசையாக யானைகள், குதிரைகள் அன்னங்கள், மலர்கள் என்றெல்லாம் செதுக்கி வைத்திருப் பார்கள். ஆனால் இவைகளில் எல்லாம் சிறப்பானவை இச் சுவரின் மேல்தளத்தில் இருக்கும் மதனிகை வடிவங்களே. கிட்டத்தட்ட நாற்பதுக்கு மேற்பட்ட பெண்கள் அங்கே சிலை உருவில் நிற்கின்றனர். இவர்களில் சிலரே தெய்வ மகளிர். மற்றவர்கள் எல்லாம் சாதாரணப் பெண்களே. எல்லோரும் நல்ல அழகிகள் என்று சொல்லத் தேவை யில்லை. ஏதோ நடனம் ஆடும் நிலையிலேதான்

ஒவ்வொருத்தியும் காணப்படுகிறார்கள். இவர்களில் பொட்டிடும் நங்கை, கிளி ஏந்திய பெண், கொடி அடியில் நுடங்கும்மடக்கொடி, காதலன் வரவை எதிர் நோக்கி நிற்கும் நங்கை. இன்னும் ஆடையில் தேள் ஒன்றியிருக் கிறது என்று அறிந்து அந்த ஆடையையே உதறிவிட்டு நிற்கும்மங்கை. இப்படி எண்ணற்ற பெண்கள் உயிர் ஓவியங் களாக அங்கே நிற்கின்றனர். எல்லா வடிவங்களிலுமே சிற்பியின் சிற்றுளி வேலையின் நயம் தெரியும். நுணுக்க வேலைப்பாட்டோடு கூடின வடிவங்களாக அவை அமைந் திருக்கும். எத்தனைதரம் இவர்களைச் சுற்றிச் சுற்றி வந் தாலும், திரும்பத் திரும்பக் காணும் வேட்கை தீராது. ஆனால் இந்த மதனிகைகளையும் வெல்லும் அழகியர் அல்லவா கோயிலுக்குள் நிற்கிறார்கள் என்று தெரிந்த பின்னரே நம் கால்கள் கோயிலுக்குள் செல்ல விரையும். கோயிலினுள் இருப்பது நவரங்க மண்டபம். இம்மண்டபம் கட்டிடக் கலையிலே ஓர் அரிய சாதனை. பலதூண்கள் தாங்கிநிற்கும் இம்மண்டபத்தின் விதானத்திலே ஒரு விரிந்த தாமரை மலர் தொங்கும். குளத்திலே மலர்ந்த தாமரை அல்ல. கல்லிலே மலர்ந்த தாமரைதான் -இம்மண்டபத்துத் தூண் ஒன்றில் நரசிம்மரும் இன்னொரு துணில் நாட்டிய சரஸ்வதியும் இருக்கின்றனர். தூண்களில் எல்லாம் பெண்களின் வடிவங்கள். ஆனால் அக்கோயிலைக் கட்டிய சிற்பி ஜக்கண்ணாச்சாரி என்பவன் தன் கைத்திறமையில் அசாத்தியத் திறமை உடையவனாக இருந்திருக்கின் றான். அங்குள்ள தூண்களில் ஒரு தூணில் மட்டும் ஒரு சில இடத்தைக் காலியாக வைத்து விட்டு மற்ற எல்லா இடங் களையும் அலங்காரங்களாலும் சிற்பவடிவங்களாலும் நிறைத்திருக்கின்றான். எதற்காக அந்தச் சிறு இடத்தை மட்டும் ஒதுக்கினான்? 'தன்னை விட அழகாகவும் அற்புத மாகவும் சிற்ப வடிவங்களை வேறு யாராவது அமைக்க முடியுமா? முடியுமானால் செய்து காட்டட்டுமே' என்றே அந்த இடத்தை மட்டும் ஒதுக்கி, உலகத்தில் உள்ள மற்றச் சிற்பிகளுக்கு எல்லாம் சவால் விட்டிருக்கிறான் என்றே

எண்ணத் தோன்றுகிறது. இக்கோயிலில் மூலமூர்த்தியாக விளங்குபவரே சென்னக் கேசவர். அவரையே விஜய நாராயணர் என்றும் அழைக்கின்றனர். நல்ல கம்பீரமான வடிவினர். இவரது கருவறை வாயிலிலே தசாவதாரக் கோலங்கள் பலவும் உருவாகி இருக்கின்றன. இக்கோயில் பன்னிரெண்டாம் நூற்றாண்டில் விஷ்ணுவர்த்தனன் என்னும் ஹொய்சல மன்னனால் கட்டப்பட்டது என்பது வரலாறு. இம்மன்னன் முதலில் சமணராக இருந்து பின்னால் தமிழ் நாட்டிலிருந்து சென்ற ஸ்ரீமத்ராமானுஜ ரால் வைஷ்ணவனாக்கப்பட்டவன். இவன் மனைவி சாந்தலதேவி சிறந்த சங்கீத வித்வாஷியென அறிகிறோம். இருவரும் கலைஉணர்வு நிரம்பியவர்களாக இருந்த தினாலேதான், இத்தனை கலை அழகு நிரம்பிய கோயில் உருவாகியிருக்கிறது அங்கே.

இதற்கு அடுத்தபடியாக நான் கண்ட கலைக்கோயில் பாதாமி குடைவரைக் கோயில்களே. எப்படி ஹொய்சலர்கள் பன்னிரெண்டாம் நூற்றாண்டில் பேலூரிலும் ஹளேபேடிலும் கலைக்கோயில்களை உருவாக் கினார்களோ அப்படியே அதற்கும் எழுநூறு ஆண்டுகளுக்கு முன்னாலேயே சாளுக்கிய மன்னர்கள் பாதாமியில் நல்ல நல்ல குடைவரைக் கோயில்களை உருவாக்கியிருக் கிறார்கள். ஆம். நமது மாமல்லபுரத்துக்கும் முந்திய குடைவரைகள் அவை என்று சரித்திர ஏடுகள் பேசுகின்றன. வெளியிலிருந்து பார்ப்பவர்களுக்கு அக்குடைவரைகள் ஒன்றும் பிரமாதமாகத் தெரியாது. ஆனால் சில படிக் கட்டுகள் ஏறி அக்குடைவரைகளுக்குள் நுழைந்து விட்டோம் என்றால் ஓர் அதிசய உலகத்திற்கு வந்திருக் கிறோம் என்று தோன்றும். அங்குள்ள நான்கு குடைவரை களில் ஒன்று சிவனுக்கும், இரண்டு விஷ்ணுவுக்கும், மற்றொன்று சமணருக்கும் என ஒதுக்கப்பட்டிருக்கும். அங்குள்ள தூண்களும் சிற்ப வடிவங்களும் பெரிய பெரிய அளவிலேதான் இருக்கும்.

சைவக்குடைவரையில் சிவனுடைய சந்தியா தாண்டவமும், அர்த்த நாரீஸ்வரரும் மஹிஷ மர்த்தனியும் சிறந்த இடம் வகிப்பார்கள். வைஷ்ணவக் குடைவரையிலோ வைகுண்டநாதரும், நரசிம்மரும், வராகரும் கண்டோர் வியக்கும் வண்ணம் பெரியவடிவில் உருவாகி இருப்பார்கள். சமணக் குகைகள் அளவில் சிறியது என்றாலும் அங்கும் தீர்த்தங்கரர் பலர் நிர்வாணம் எய்திய நிலையில் உருப் பெற்றிருப்பார்கள். இவர்களைத் தவிர தூண்களின் பேரில் உள்ள விதானங்களில் எல்லாம் கந்தருவக் காதலர் கவின் உருவில் நின்று காட்சி தருவர். எல்லா வடிவங்களுமே கலை அழகு நிரம்பியவைகளாகவும் இருக்கும். இக்குடைவரை இன்றைய மைசூர் ராஜ்ஜியத்தில் ஒரு ஒதுக்குப்புறத்தில் இருப்பதால் நமது மாமல்லபுரம் பெற்றிருக்கும் பிரசித்தியைப் பெறவில்லை. என்றாலும் கலா ரசிகர்கள் சென்று காணவேண்டிய அற்புதமான கலைக் கோயில்கள் அவை.

இனி பம்பாய் நகரை நோக்கி நடக்கலாம். இல்லை காரிலேயே விரைந்து செல்லலாம். வியாபாரிகளுக்கு பம்பாய் நகரம் ஒரு முக்கியதலம்தான். அங்குதானே மகாலட்சுமி கோயில் கொண்டிருக்கிறாள். எல்லோருக்கும் செல்வத்தை வாரி வாரி வழங்குகின்றாள் என்றாலும் நான் சென்று காண வேண்டிய கலைக்கோயில் பம்பாய் நகரில் இல்லை. பம்பாய் நகரை ஒட்டிய கடலில் இருக்கும் ஒரு தீவில் அல்லவா இருக்கிறது. ஆகவே பம்பாயிலிருந்து 'ஸ்டீம் லாஞ்ச்' ஏற்பாடு செய்துகொண்டு ஒருமைல் கடலில் சென்றால் ஒரு சிறு தீவை அடைவோம். அதுதான் எலிபெண்டா தீவு என்பர். அங்கு ஒரு வேளை யானைகள் நிறைந்திருக்குமோ என்று அஞ்சுவோம். அங்கு அன்றிருந்ததெல்லாம் கற்சிலை உருவிலேயுள்ள யானை ஒன்றுதான். அதையும்தான் போர்ச்சுக்கீசிய வெறியர்கள் அத்தீவில் தங்கியபோது உடைத்தெறிந்து விட்டிருக்கிறார்களே! ஆதலால் இன்று அங்கே கல்லில் கூட யானை கிடையாது. இங்கும் கடற்கரையில் இறங்கி ஒரு

சில படிகள் ஏறித்தான் அங்குள்ள குடைவரைகளுக்குச் குச் செல்லவேண்டும், அங்கு இருந்தவை பல குடைவரை கள் என்றும், இன்று இருப்பவை நான்கு குடைவரைகள் என்றும் கணக்குச் சொல்லுவர். ஆம், நாம் காண வேண்டியதெல்லாம் ஒரே ஒரு குடைவரையைத்தான். இக்குடைவரை 120 அடி சதுர அளவில் இருக்கிறது. குடைவரையைத் தாங்கி நிற்பது போல் பெரிய பெரிய தூண் களையுமே வெட்டிச் செதுக்கியிருக்கிறார்கள். இக்குடைவரை மூன்று பகுதியாக இருக்கும் வடக்கே பார்த்த பிரதான வாயிலை அடுத்துப் பெரிய மண்டபத்தோடு கூடிய பகுதி ஒன்று. அதற்கு வலப்புறமும் இடப்புறமும் இருக்கும் பகுதிகள் இரண்டு. மத்திய பிரதான மண்டபத்தை இருபதுக்கு மேற்பட்ட தூண்கள் அலங்கரிக் கின்றன.

தூண்கள் எல்லாம் அடிப்பாகத்தில் சதுரமாகவும், மேல்பகுதி வட்டமாகவும், மேல்பகுதி வரிவரியாகவும் அதற்கு மேல் குடைவிரித்தாற்போல் போதிகைகளையும் தாங்கி நிற்கும். இக்குடைவரையில் பிரதான வாயிலுக்கு வடபுறம் உள்ள கற்சுவரில் பிரம்மாண்டமான தாண்டவ வடிவம் இருக்கும். அட்ட மூர்த்தியான சிவனை எட்டுத் திருக்கரங்களோடு ஆடும் பெருமானாகப் பத்தடி உயரத்தில் உருவாக்கி இருக்கின்றான் சிற்பி. ஆனால் அவனது கால் இரண்டையும்தான் இங்கு தங்கியிருந்த போர்த்துக்கீசிய வெறியர்கள் பூரணமாகச் சிதைத்து விட்டார்களே. இத்தாண்டவ வடிவத்திற்கு எதிர்த் திசையிலேதான் லகுலீசன் என்னும் சிவனது வடிவம். இந்தப் பிரதான குடைவரையில் நடுவில் ஒரு சிறு கோயிலை உருவாக்கி, அதில் ஒரு சிவலிங்கவடிவத்தையுமே நிர்மாணித்திருக்கிறார்கள் சிற்பிகள். இக்குடைவரையின் தென்கோடியிலேதான் தலைவாயிலுக்கு நேரே நடுநாயக மாக இருப்பவர்தான் மகேச மூர்த்தி. ஆம். படைத்தல், காத்தல், அழித்தல் என்ற முத்தொழிலையும் ஒரே பரம்பொருள்தான் செய்து கொண்டிருக்கிறது. அப்படிச்

செய்யும்போது, பிரம்மா, விஷ்ணு, ருத்திரன் என்று பெயரும் பெறுகிறது என்று அறிவோம். அப்படி மூன்று கூறாக முளைத்தெழுந்தாலும் எல்லாம் ஒன்றே என்னும் படி மூன்று முகம் கொண்ட மகேசனாக அவர் இருக்கிறார். இக்குடைவரையில் உள்ள சிற்பங்களில் சிதையாது இருக்கின்ற வடிவம் இது ஒன்றேதான். வான்கெட்டு, மாருதம் மாய்ந்து, அனல் நீர் மண் கெடினும் தான் கெட்டலின்றிச் சலிப்பறியாத் தன்மையன் அல்லவா அவன்! அதனால் தானோ என்னமோ, அவன் வடிவைக் கூட சிதைக்க இயலாது போயிருக்கிறது வெறியர்களுக்கு! இன்னும் குடைவரையில் சிவபார்வதி திருமணக்கோலம், அர்த்த நாரீஸ்வர வடிவம், கைலாசபதியின் வடிவம் எல்லாம் இருக்கும். எல்லாம் பத்துப் பன்னிரண்டு அடி அளவில் தான் என்றாலும் பல பகுதிகள் சிதைந்து போய்விட்டன. இப்படிச் சிதைந்திருக்கும் நிலையிலேயே இத்தனை அழகு என்றால் பூரணப் பொலிவோடு இருந்தால் எப்படி இருக்கும் என்று கற்பனை செய்து பார்க்கலாம்தானே! இக்குடைவரை நமது மாமல்லபுரத்துக் குடைவரைகள் உருவாகி ஒரு நூறு வருஷங்கள் கழிந்தபின், எட்டாம் நூற்றாண்டிலேதான்—உருவாகி இருக்க வேண்டும்—என்று சரித்திர ஆசிரியர்கள் கருதுகின்றனர்.

இப்படி பேலூர், பாதாமி, எலிபெண்டா முதலிய கலைக் கோயில்களை எல்லாம் பார்த்த பின்னரே இந்தியக் கலையின் சிறப்புக்கெல்லாம் முக்கிய காரணமாக இலங்கும் அஜந்தா எல்லோராக் குடைவரைகளைக் காணச் செல்ல வேண்டும். ஆம். முதலில் சிற்ப உலகில் சிறந்த இடம் பெற்றிருக்கும் எல்லோராவிற்கே செல்வோம். எல்லோரா ஒரு பெரிய குடைவரை. இங்கு இருப்பது ஒரு குடைவரை அல்ல. மொத்தம் முப்பத்தி நான்கு குடைவரைகள் இருக்கின்றன. இவற்றில் சரிபாதி—பதினேழு குடைவரை—இந்து சமயச் சார்பு உடையவை. பன்னிரண்டு பௌத்த மதச்சார்பும்,

ஐந்து சமணமதச் சார்பும் உடையவை. சரிதான். இங்கு இந்து சமயம், பௌத்தம், சமணம் - மூன்றும் சேர்ந்தே உறவாடுகின்றன. தேசிய ஒருமைப்பாடு என்று பலபடப் பேசும் இந்நாளில் இன்றைக்கு ஆயிரம் ஆண்டு களுக்கு முன்பே சமய ஒருமைப்பாடு, கலை ஒருமைப்பாடு களுக்கு நமது கலைஞர்கள் வித்திட்டு வைத்திருக்கிறார் களே என்று அதிசயிருக்கிறோம். பௌத்தக் குடைவரை களில் சிறப்பானது பத்தாவது குடைவரையே. அதனையே விஸ்வகர்ம சைத்தியம் என்பர். வாயிலே, மிகுந்த வேலைப் பாட்டுடன் உருவாகியிருக்கும். அது ஏதோ மரத்தினால் செய்த வேலை என்று தோன்றுமே தவிர கல்லில் செய்தது என்று எண்ணமுடியாது. அவ்வளவு நுணுக்கமான வேலைப் பாட்டோடு கலை அழகு நிரம்பியதாகவும் இருக்கும். எண்பத்து ஐந்து அடி நீளமும், முப்பத்து நான்கு அடி அகலமும் உள்ள அந்தக் குடைவரை ஐம்பது அடி உயரத்தில் கஜப்பிரஷ்ட ஆகிருதியோடு விளங்குகிறது. அங்கு பதினாறு அடி உயரத்தில் ஒரு ஸ்தூபமும், அந்த ஸ்தூபத்தின் முன்னால் பன்னிரெண்டு அடி உயரத்தில் ஒரு புத்தரும் உருவாகியிருக்கிறார்கள். போதிமரத்தடியில் ஞானோதயம் பெற்ற நிலையில் புத்த பகவான் காட்சி தருகிறார். இங்குள்ள குடைவரைகளில் மேல்கோடியில் இருப்பதுதான் சமணக் குடைவரைகள். அவைகளில் இந்திரசபா என்னும் குடைவரை இரண்டு அடுக்கு மாடி யோடு விளங்குகிறது. மாடியில் உள்ள மண்டபத்தை சிற்ப வேலைப்பாடுகள் நிறைந்த பன்னிரெண்டு தூண்கள் தாங்கி நிற்கின்றன. அங்குள்ள மகாவீரர், தீர்த்தங்கரர்கள் எல் லாம் அழகுவாய்ந்தவை. அங்குதான் இந்திரன் கொலு இருக் கிறான், ஆனால் இத்தனையும் தூக்கி அடிக்கும் வகையில் இங்கு பதினாறாவது குடைவரையாக உருவாகி இருப்பது தான் கைலாயநாதர் குடைவரை. இக்குடைவரை தான் உலகத்தில் உள்ள குடைவரைகளில்எல்லாம் சிறந்தது என்று கலைவல்லுநர்கள் கூறுகிறார்கள். This is the grandest monolithic carved out of a single rock excavation

in the world— என்பதே அவர்கள் விமரிசனம். இது மலையின் பக்கத்திலிருந்து குடைந்து செல்லப்பட்டதல்ல. வானுலகில் இருந்து விஸ்வகர்மன் ஒருமலையில் உச்சியில் இறங்கி இருக்கிறான். அவன் இறங்கிய இடத்திலிருந்தே மலையை வெட்டிச் செதுக்கி பூமியின் தளத்திற்கு வந்திருக் கிறான், அதனால் சாரம் கட்டவேண்டிய நிர்ப்பந்தம் ஒன்றும் இல்லாமலேயே, இக்குடைவரையை உருவாக்கக் குறைந்தது நூறு வருஷமாவது ஆகியிருக்க வேண்டும். முன்னூறு லட்சம் கன அடிக்கற்கள் அப்புறப்படுத்தப்பட்டிருக்க வேண்டும். இது அரிய சாதனைதான். இக்குடைவரையை உருவாக்க எவ்வளவு கற்பனை, அந்தச் சிற்பியின் சிந்தனையில் உதித்திருக்க வேண்டும். இக்குடைவரையில் 150 அடி நீளமும் 100 அடி அகலமும் உள்ள கோயில் ஒன்றே உருவாகியிருக்கிறது. இது சோழநாட்டு மாடக்கோயிலைப் போல 25 அடி உயர முள்ள ஒரு மாடத்தில் அமைக்கப்பட்டது போல் செதுக்கப் பட்டிருக்கிறது. கோயில் சுவர்களில் எல்லாம் யானைகள், யாளிகள், சிங்கங்கள் முதலிய சிற்ப வடி வங்கள். கோயிலினுள் லிங்க வடிவில் இருப்பவர் தான் கைலாசநாதர். கருவறை, அர்த்தமண்டபம், பிரகாரம் எல்லாம் அமைத்தே கோயிலைச் செதுக்கியிருக் கிறான் சிற்பி. இக்கைலாச நாதரைத்தான் கைலைமலை யோடு பெயர்த்து எறிந்துவிட முனைந்திருக்கிறான் தசகண்ட இராவணன். கைலாச பர்வதம் அசைந்து கொடுத்தபோது பார்வதி அஞ்சி அண்ணலைத் தழுவிக் கொள்கிறாள். அண்ணலோ தன் மோன நிலையைக் கலைக்காமல் பெருவிரலை ஊன்றி யிருக்கிறான். இராவணன் விழி பிதுங்கி நசுக்குண்டிருக்கிறான் என்று ஒரு கற்பனை. இந்தக் கற்பனைக்கு வடிவம் கொடுத்து இக்கோயிலின் அடித்தளத்திலே ஒரு சிற்பம் உருவாகி யிருக்கிறது. மிகச் சிறந்த முறையில் உருவாகியிருக்கும் சிற்பம் அது. 'அஞ்சாதே கயிலாயமலை எடுத்த அரக்கர்கோன் தலைகள் பத்தும் மஞ்சாடு தோள்

நெறிய அடர்த்த அந்தக் கைலாயரை' வணங்கி விட்டுக் கீழே இறங்கி கோயிலை ஒரு சுற்றுச் சுற்றினால் அங்கு இன்னும் பல சிற்பவடிவங்களைக் காணலாம். எல்லாம் காத்திரமான பெரிய பெரிய வடிவங்கள். இந்தக் கைலாசநாதர் குடைவரையைக் கண்டு இந்தியக் கட்டிடக் கலையை நன்கு அலசி ஆராய்ந்து எழுதிய பெருமகன் பெர்ஸிப்ரவன் (Percy Brown) 'மனிதனது உள்ளம் உயர்ந்திருக்கிற நிலையில் எழுந்த ஒரு அற்புதக் கலைக் கோயில் இது'—என்று எழுதியிருக்கிறான். The Kailash is an illustration of one of the rare occasions when men's minds, hearts and hands work in union towards the consummation of an ideal என்று வாயாரப் புகழ்ந்திருக்கிறார்.

எல்லோராவைப் பார்த்துவிட்ட திருப்தியிலேயே அவுரங்காபாத் நோக்கி நடந்து அங்கு ஒரு நாள் இரவு தங்கி சிரமபரிகாரம் செய்து கொண்டு மேல் நடந்தால் பிரசித்தி பெற்ற அஜந்தா குடைவரைகளைக் காணச் செல்லலாம். அங்கேயும் வாகூரா நதிக்கரையில் அர்த்த சந்திர வடிவில் அமைந்திருக்கும் மலைச்சரிவில் கிட்டத் தட்ட முப்பது குடைவரைகள் இருக்கின்றன. அஜந்தா சித்திரத்திற்குப் பேர் போனவை என்றுதான் படித்திருக்கிறோம். ஆனால் இங்கு சென்றால் சித்திரம், சிற்பம், கட்டிடக்கலை என்ற மூன்று நுண்கலைகளுமே சிறப்பாய் அமைந்திருப்பதைக் காணலாம். முதல் குடைவரையே பிரம்மாண்டமான அளவில் அமைந்த ஒன்று. அங்குதான் புத்தர், போதி சத்துவர்—இவர்கள் வாழ்க்கையோடு ஒட்டிய புத்த ஜாதகக் கதைகளை எல்லாம் சித்திரங்களாகத் தீட்டி வைத்திருக்கின்றனர். எண்ணிறந்த பெண் வடிவங்கள் ஒவ்வொரு குடைவரையிலும் சித்திரங்களாக நின்று, பார்க்கும் ஆடவர் உள்ளங்களை எல்லாம் கொள்ளை கொள்ளும். அஜந்தா பெண்கள் எல்லோருமே அழகு வாய்ந்தவர்கள். அழகுக்கு அழகு செய்யும் தலை

யலங்காரக் கலையில் வல்லவர்கள், அப்படி அலங்காரம் செய்து கொள்ளும் ஓர் அரசிளங்குமரியையும் அவள் சேடி களையும் ஒரு குடைவரையில் காண்போம். இதைத்தான், This ia a master piece of painter's brushwork என்று ஆங்கிலக் கலா விமரிசகர்கள் கூறுகிறார்கள். இப்படி எத்தனை எத்தனையோ சித்திரங்கள். சிற்ப படிவடிவத் திற்கு எடுத்துக்காட்டாக முதல் குடைவரையிலேயே ஒரு புத்தர் இருக்கிறார். ஒரே சிலைதான் என்றாலும் மூன்று கோணங்களில் இருந்து காணலாம். ஒவ்வொரு கோணத் திலும் ஒவ்வொரு உணர்ச்சியை வெளிப்படுத்துபவராக அமர்ந்திருப்பார். இங்குள்ள தூண்களும் விதானங்களும் எப்படி அமைந்தன என்று சொல்ல முடியாது. குந்தாலி செய்த வேலையோடு சிற்றுளி நயங்களும் சேர்ந்தே அங்கே கலை அழகை உருவாக்கி இருக்கின்றன. அஜந்தாவைப் பற்றி இன்னும் அதிகம் சொல்ல விரும்பவில்லை. நேரில் சென்று கண்டு மகிழவேண்டிய அற்புதமான கலைக் கோயில் அது.

அஜந்தாவையும் எல்லோராவையும் பார்த்த பின்னாலே இதற்கு மேலே என்ன இருந்து விடப்போகிறது என்று எண்ணுவோம். ஆனால் ஆபூமலை சென்று அங்குள்ள டில்வாரா என்னும் பகுதியில் பத்தாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் உருவாகி இருக்கும் சமணக் கோயில்களில் இரண்டைப் பார்க்காமல் இருத்தல் கூடாது. அற்புத மலையே ஆபூமலை எனக் குறுகி இருக்கிறது. அங்கு இருக்கும் கோயில்கள் இரண்டுமே அற்புதக் கோயில்கள்தாம். இரண்டு கோயில்களும் அடுத்தடுத்தே இருக்கின்றன. இவைகளில் ஒன்று ஆதிநாதர் கோயில் என்றாலும் அக்கோயில் ஆதிநாதர் கோயில் என்று வழங்கப் படவில்லை. அக்கோயிலைக் கட்டிய விமலாகதா என் பவன் பெயரால் விமலவாசிகி என்றே அழைக்கப்படுகிறது. கோயில் வாயிலிலேயே இக்கோயில் முதலாம் பீமதேவரது ஆஸ்தானத்தில் இருந்த அமைச்சன் விமலாக்ஷாவினால்

1032—ஆம் ஆண்டு, பதினெட்டுக் கோடி ரூபாய் செலவில் கட்டப்பட்டது என்று எழுதி வைத்திருக்கிறது. ஆம், அத்தனை கோடி ரூபாய் பெறும் என்று கோயிலுள் சென்று கண்டால் நமக்கும் தோன்றும். கோயில் முழுவதும் ஒரே சலவைக்கல் மயம். சுவர், தூண், விதானம், தளம் எல்லாமே சலவைக்கல்லால் ஆனதுதான். சலவைக்கல்லை கல் என்று எண்ணாமல் ஏதோ மெழுகு என்று நினைத்தே நுண்ணிய வேலைகள் எல்லாம் செய்திருக்கிறார்கள்—சிற்பிகள். கோயிலின் உட்புறத்தில் ஒரு சுற்றுமண்டபம். அதன் நீளம் 140 அடி. அகலம் 90 அடி. அந்த மண்டபத்தைத் தாங்கி நிற்பவை எல்லாம் சிறந்த சிற்ப வேலைப் பாடுடைய சலவைக்கல் தூண்கள். அத்தூண்களை இணைத்து நிற்கும் தோரணங்கள் வேறே. இந்த மண்டபத்தைச் சுற்றியே 52 தீர்த்தாங்கரர்களின் வடிவங்கள். அங்கும் விதானம், சுவர், தூண் தளம் எல்லாம் சலவைக் கல்தான். தீர்த்தங்கரர் எல்லாம் ஒரே அச்சில் வார்க்கப் பட்டவர்கள் போலவே இருப்பார்கள். மூலக்கோயில் முன்பு நாற்பது தூண்கள் தாங்கி நிற்கும் மண்டபம் ஒன்று. அதன் மத்திய பாகத்தை எட்டுத்தூண்கள் அலங்கரிக் கின்றன. அத்தூண்கள் தாங்கி நிற்கும் விதானத்திலிருந்து தாமரைகள், லஸ்தர் குளோபுகள் தொங்கும். எல்லாம் சலவைக் கல்லால் செய்யப்பட்டவை என்றால் நம்புவது கடினம் தஞ்சை ஜில்லாவில் தென்னங்கிடுகுகளை வைத்து அலங்காரந் பந்தல் போடுவர். அதில் தங்கள் கைத்திறனை எல்லாம் காட்டுவர் கலைஞர்கள், அக்கலைஞர்களின் முதுகுக்கு மண் காட்டுவதுபோல சலவைக் கல்லில் விதானம் அமைத்திருக்கிறார்கள்—சிற்பிகள். ஆக்ராவில் உள்ள தாஜ்மஹால் ஒரு சலவைக்கல் கனவு என்றால் இது ஒரு சலவைக்கல் நனவாகவே அமைந்திருக்கிறது. இதை அடுத்த கோயில்தான் லூன வாசிகி என்னும் நேமிநாதர் கோயில். அங்கு கோயில் கொண்டிருப்பவர் 22—வது தீர்த்தங்காரர். அக்கோயில் 1231-ல் பன்னிரண்டு கோடி ரூபாயில் கட்டப் பட்டிருக்கின்றது. இக்கோயிலும் முழுக்கமுழுக்கச் சலவைக்

கல்லால் கட்டப்பட்டதே. இதுவும் ஏறக்குறைய விமலாக்ஷி கோயில் போலத்தான். என்றாலும் இங்குள்ள தோரண வாயில்கள் இன்னும் சிறப்பானவையாக இருக்கின்றன. இப்படி இரண்டு அற்புதக் கோயில்களை அந்த ஆபூமலை தன்னுள் ஒளித்து வைத்துக்கொண்டிருக்கிறது. பெற வேண்டிய பிரசித்தியை அவைகள் பெறவில்லை. கலைக் கோயில்களைப் பார்த்தபின் தாஜ்மகால் எல்லாம் இதன் காலில் கட்டி அடிக்கக் காணாது என்றே தோன்றும் முத்து, மணி, மாணிக்கம், வைரம், பவளத்தின் முழுச் சோதியோடு கூடிய அதிசயக் கோயில்களாக அவை விளங்குகின்றன.

இன்னும் உங்களைப் பல இடங்களுக்கு இழுத்துச் செல்ல விரும்பவில்லை. என்றாலும், மத்தியப் பிரதேசத்திலுள்ள கஜுரஹோ கோயில்களுக்கும், புவனேஸ்வரத்தின் கோயில்களுக்கும் அழைத்துச் செல்லாவிட்டால் இக்கலைக் கோயில் யாத்திரை பூரணத்துவம் பெற்றதாகவும் ஆகாது. கஜுராஹோ செல்லும் வழி கரடு முரடுதான். ஆக்ராவிலிருந்து குவாலியர் போய் அங்கிருந்து ஜான்சி சென்று, அதன்பின் ஹர்பால்பூர் வழியாகச் செல்ல வேண்டும். போகிற வழியில் உள்ள ஆறுகளுக்குப் பாலம் கிடையாது. தங்க வசதியிருக்காது. ரயிலில் சென்றாலும் ஹர்பால் பூரில் இறங்கி அங்கிருந்து முப்பது மைல் டாக்சி வைத்துக் கொண்டுதான் செல்ல வேண்டும். ஆனால் டில்லியிலிருந்து ஒவ்வொரு ஞாயிற்றுக் கிழமையும் வானத்தில் பறந்து சென்று திரும்ப வசதி செய்திருக்கிறார்கள். ஆளுக்கு ரூ. 100—கட்டணம் என்பார்கள். பரவாயில்லை அதுவே எளிதான வழி; இல்லை என்றால் நேரே அலகாபாத் போய், அங்கிருந்து ரெய்ப்பூர் வழியாகச் சுற்றிக் கொண்டு முன்னூறு மைல் போனாலும் கஜுராஹோ போய்ச் சேரலாம். அங்குள்ள கோயில்கள் அன்று நூற்றுக்கு மேல் இருந்தனவாம். இன்று இருப்பவை எல்லாம் பத்துப் பன்னிரண்டு கோயில்களே. இந்தோ—

ஆரியன் கட்டிடக்கலைக்குச் சிறந்த எடுத்துக்காட்டாக அவை விளங்குகின்றன. இக்கோயில்களை எல்லாம் பத்தாம் நூற்றாண்டிலே கன்டேலா மன்னர்கள் கட்டினார்கள் என்பது வரலாறு. இம்மன்னர்களில் முந்தியவர்கள் எல்லாம் நல்ல வைஷ்ணவர்களாகவும், பிந்தியவர்கள் சைவர்களாகவும் இருந்திருக்கிறார்கள். ஆனால் இவர்களே சைவம், வைஷ்ணவம் மாத்திரம் அல்ல சமணம் பௌத்தம் முதலிய பிற மதங்களையும் பாராட்டியிருக்கிறார்கள். சொல்லப்போனால் கஜுராஹோ கோயில்களில் மிகச் சிறப்பானவை சில சமணக் கோயில்களே: இங்குள்ள பெரிய ஏரியான கஜுராவில் சௌசத்யோகினி கோயில் என்று ஒன்று இருக்கிறது. அது சோழர்கள் கட்டிய கோயிலைப் போல முழுக்க முழுக்கக் கல்லாலேயே கட்டிய கோயில். மஞ்சள் கலந்த சிவப்பு நிறக் கற்கள் (Buff coloured sand stone) அவை. நுணுக்க வேலைகளுக்கு ஈடுகொடுத்து நிற்கக் கூடியவை அக்கற்கள். சௌசத் என்றால் அறுபத்து நான்கு என்று பொருளாம். இங்குள்ள பாதாளக் கோயில்கள் எல்லாம் ஒரே இடத்தில் கட்டப்பட்டிருக்கின்றன. இக்கோயில்களுக்கு மதில்கள் ஒன்றும் கிடையாது. பிரம்மாண்டமான அளவிலும் இல்லை. இங்குள்ள பெரிய கோயில் நாதாரியா மகாதேவர் கோயிலே. 102 அடி நீளமும், 66 அடி அகலமும் உள்ள ஒரு பெரிய மேடைமீது கட்டப்பட்டிருக்கிறது. அக்கோயிலின் நீளமும் 101 அடி உயரமே. ஆனால் கோயில் ஒரு பெரிய மாடத்தின் பேரில் கட்டப்பட்டிருக்கிறது. மாடத்தின் நான்கு மூலைகளிலும் கட்டியிருந்த சிறு குடில்கள் இடிந்து போய்விட்டன என்றாலும், பிரதான கோயில் ஆசு அழியாமல் நிற்கிறது. மேலும் கோயிலின் ஒவ்வொரு அங்கமும் 'கலைக்கோயில் அது' என்று பறைசாற்றிக் கொண்டிருக்கிறது. கோயில் வாயிலிலேயே கல்லாலேயே அமைந்த ஒரு தோரண வாயில். அதில்தான் எத்தனை எத்தனை சங்கீத விற்பன்னர்கள்! அவர்கள் எத்தனை எத்தனையோ விதமான வாத்தியங்களை வாசித்துக் கொண்டிருப்பர்.

அத்துடன் ஒருவரை ஒருவர் நெருக்கமாக அணைத்துக் கொண்டிருக்கும் காதலர் வடிவங்கள்தாம் எத்தனை! இன்னும் விண்ணில் பறக்கும் கந்தருவர்கள், யக்ஷ யக்ஷினி யர்கள் வேறே. கோயில் சுவரில் எல்லாம் பட்டை பட்டை யாய் மூன்று நான்கு அடுக்குகளில் காத்திரமான சிற்ப வடிவங்கள், அவைகளில் சிறப்பானவை பெண்களின் வடிவங்களே. அப்பெண்ணின் அங்கங்கள் எல்லாம் நல்ல உயிர்த் துடிப்போடு விளங்கும். இவர்களுக்கிடையேதான் கருவறையில் லிங்க உருவில் மகாதேவர் எழுந்தருளி யிருப்பார்.

இக்கோயிலுக்கு வடபுறம் தேவி ஜகதாம்பாள் கோயில். அதற்கு அடுத்து சித்திரகுப்தர் கோயில் என்பர். ஆனால் அங்கு மூல மூர்த்தியாக நிற்பவர்சூரிய நாரா யணனே. இந்த வட்டாரத்தின் வட கிழக்கு மூலையிலே தான் விஸ்வநாதர் கோயில். அக்கோயிலுக்கு எதிரே நந்தி மண்டபம். இந்த விஸ்வநாதர் கோயில் சுவர்களிலே தான் பழக்குலையையும் கிளியையும் ஏந்தி நிற்கும் பெண் ணொருத்தி, குழந்தையுடன் கொஞ்சி மகிழும் மங்கை ஒருத்தி; வேணுகானம் செய்யும் மங்கை ஒருத்தி உருவாகி இருக்கிறார்கள். இக்கோயிலுக்கு தென்மேற்குப் பக்கத் திலே பார்வதிக்கு என்று ஒரு தனிக்கோயில். அதற்கும் தெற்கே லட்சுமணன் கோயில் என்று அழைக்கப்படும் விஷ்ணு கோயில் ஒன்று. இந்தக் கோயில்தான் கந்தேலிய மகாதேவா கோயிலுக்கு அடுத்தபடியான பெரிய கோயில். இங்கு மூலவராக நிற்பவருக்கு மூன்று முகங்கள். ஒன்று மனித முகம். மற்றவை வராக முகமும், நரசிம்ம முகமும். இப்படி ஒருவடிவம் எங்குமே காணக் கிடைக்காத ஒன்று. இன்னும் இங்கே பிரம்மாவும் சிவனும் தனித்தனி சந் நிதியில் நிற்கிறார்கள். இக்கோயிலை அடுத்து இருப்பது மதங்கேசர் கோயில். இக்கோயில் வாயிலிலே தனியாக ஒரு மண்டபத்திலே பெரிய வராகம் ஒன்றும் நிற்கும். ஒன்பதடி நீளமும் ஆறு அடி உயரமும் உள்ள இந்த

வராகத்து உடலில் எண்ணரிய தெய்வ வடிவங்கள். ஆம். அண்டங்கள் அனைத்தையும் உண்டவன் உரு அல்லவா அது.

இனி இந்த மைதானத்தை விட்டு கிழக்கு நோக்கி இரண்டு மைல் நடந்தால்தான் மற்றக் கோயில்களைக் காணலாம். அங்குதான் சமணக் கோயில்கள் இருக்கின்றன. சமணக் கோயில்களில் பிரதானமானது பார்சவநாதர் கோயில்தான். இக்கோயிலில்தான் காதல் கடிதம் எழுதும், கன்னி, காலிலே தைத்த முள்ளை எடுக்கும் மோகினி, இன்னும் குழந்தையோடு கொஞ்சும் கோகிலம், தலை வாரிப் பொட்டிட்டுக்கொள்ள முனையும் மங்கை, முதலிய பெண்ணரசிகளைக் காணலாம். ஒவ்வொருத்தியும் ஒவ்வொரு அழகுப் பெட்டகம். கஜராஉறாவில் கல்விக் கலையை விளக்கும் சிற்ப வடிவங்கள் ஏராளமாக இருக்கின்றன. அக்கலையில் அறுபத்து நான்கு முறைகள் உண்டு, என்பர். ஆனால் அங்கு நாம் காண்பதோ 640—முறைகள். இன்னும் ஒரிஸ்ஸா கோயில்களிலும் இதே போன்று சிற்பங்கள் உண்டு. நாம்தான் அங்கு விரைந்து செல்ல இருக்கிறோமே.

சரி, புவனேஸ்வரம், கோணாரக் முதலிய இடங்களுக்கும் சென்று கலிங்க நாட்டுக்கலைக் கோயில்களையும் கண்டு விடுவோம். புவனேஸ்வரம் செல்வதற்கு ரெயில் தான் வசதி, ரோட்டில் சென்றால் கட்டாக்கில் மகாநதி எல்லாம் கடக்க வேண்டும். ஒரிஸ்ஸாவின், கோனாரக்கில் பூரியில் எல்லாம் கோயில்கள் இருந்தாலும், புவனேஸ்வரம் தான் கோயில்கள் நிறைந்த நகரம். இன்று அது ஒரிஸ்ஸாவின் தலைநகரும்கூட. அங்குள்ள கோயில்களும் பிரம்மாண்டமானவையே. அங்கு அன்று 7000 கோயில்கள் இருந்தன. அவற்றில் இன்று இருப்பது 500 என்றெல்லாம் உபசாரமாகச் சொல்வர். நாம் பார்க்க வேண்டியவைகள் எல்லாம் ஒரு சிலவே. அங்குள்ள கோயில்களில் பிரதான மானது லிங்கராஜ் கோயிலே. இக்கோயில் பிரகாரம்

520—அடி நீளமும், 465—அடி அகலமும் உள்ளது. ஆம். இது தஞ்சை பெரிய கோயில் அளவிலே இருக்கிறது. இக்கோயில் பிரகாரத்தில் 65 சிறு சிறு கோயில்கள். பிரதான லிங்கராஜ் கோயில் நர்த்தன மண்டபம், மகாமண்டபம் கருவறை என்று மூன்று பகுதியாக இருக்கும். கருவறை மேலே விமானம் 127—அடி உயரம். உருண்டு திரண்டு நிற்கும் கோயிலினுள் இருப்பவர் திரிபுவனேஸ்வரர். அவரையே லிங்கராஜ் என்று அழைக்கின்றனர். கோயில் உட்புறச்சுவர்களில் சிற்ப வடிவங்களே கிடையாது. இதற்கு வட்டியும் வாசியமாக சுற்றுப்புறத்தில் எல்லாம் சிற்பங்கள். மிக்க அழகான கணபதி வடிவம் கருங்கல்லால் அழகாக உருவாகி பள பள என்றிருக்கிறது. கோயில் பிரகாரத்தில் பகவதி, பார்வதி, ஆனந்த வசுதேவர், பிர்மேஸ்வரர், பாஸரேஸ்வரர், கேதாரேஸ்வரர் கோயில்கள் எல்லாம் இருக்கின்றன. இவைகளில் பரசுராமேஸ்வரர் கோயில்தான் காலத்தால் முந்தியது என்பர். இக்கோயிலில் பல பல சிற்பவடிவங்கள். அவைகளில் சிறப்பானது சிவ பார்வதி திருமணக்கோலம்தான். லிங்கராஜ் கோயிலுக்கு அடுத்தபடியாக நாம் காண வேண்டுவது ராஜாராணி கோயில். இங்குதான் அற்புதம் அற்புதமான சலபாஞ்சிகை வடிவங்கள் இருக்கின்றன. கொடியடியில் நிற்கும் அம்மடக்கொடிகளை கண்டால் அவர்கள் அங்கமெல்லாம் அழுகு வடியும், இங்குள்ள மற்ற கோயில்கள் எல்லாம் சென்று காண அவகாசமில்லை என்றாலும், முக்தேஸ்வரர் கோயிலைக் காணாமல் திரும்புதல் கூடாது. இக்கோயில் 975—ல் கட்டப்பட்டிருக்கிறது. இக் கோயில் முகப்பிலே கல்லாலேயே அமைந்த தோரண வாயில் மிக்க அழகோடு விளங்கும். நுணுக்கமான சிற்றுளியின் நயமெல்லாம் தெரியும்படி அமைத்திருக்கிறான் சிற்பி. புவனேஸ்வரத்துக்கு நாற்பது மைல் தூரத்திலே பூரிஜகந்நாதர் கோயிலும் இன்னொரு திசையில் நாற்பது மைல் தூரத்தில் கோனாரக் சூரியன் கோயிலும் இருக்கிறது. ஜகந்நாதன் தன் சகோதரன் பலராமன் சகோதரி

சுபத்திரையுடன் எழுந்தருளியிருக்கிறான். அழகுடைய வடிவங்கள் அல்ல. மரத்தில் செய்து வர்ணம் பூசியிருக்கிறார்கள். கிட்ட நெருங்கிப்பார்த்தால் கொஞ்சம்கூட அழகாயிராது என்றாலும், வெண்மையான சிகரத்தோடு, கம்பீரமாக நிற்கும் கோயில் அது. கோயில் சுவர்களில் சிற்ப வடிவங்கள் பல இருக்கும். பூரிஜகந்நாத்தில் கோயிலைவிட தேர்தான் அழகு என்பர். அந்தத் தேரைக் காணும்வாய்ப்பு எனக்குக் கிட்டவில்லை. ஆனால் படங்களில் தேரைப் பார்த்தால் அவ்வளவு அழகாக இருக்கும் என்று சொல்வதற்கில்லை.

கோனாரக் கோயில் பிரம்மாண்டமான கோயில். கருவறை மேல் எழுந்த சிகரம் இடிந்து போய்விட்டது. மூல மூர்த்தியான சூர்ய நாராயணனும் இல்லை. இன்று போக மண்டபத்தின் வாயில்களை எல்லாம் சுவர் வைத்து அடைத்து உள்ளே சென்று காண்பதற்கு தடை செய்திருக்கிறார்கள். கோயிலே ஒரு தேர்போல இருக்கிறது. பக்கத்துக்குப் பன்னிரெண்டு சக்கரங்கள் என்று 24 சக்கரங்கள் தேரை இழுத்துச் செல்வதாக பாவனை. கருவறையைச் சுற்றிய சுவர்களிலே கோஷ்டங்கள் அமைத்து காலைச் சூரியன், மத்தியான சூரியன் மாலைச் சூரியன் என்று வடிவங்கள் அமைத்திருக்கிறார்கள். எல்லாம் நல்ல அழகிய வடிவங்கள். கைகள் எல்லாம் சிதைந்திருந்தாலும் முகத்திலே சூரியப் பிரகாசம் வீசுகிறது. இக்கோயில் வெளிச் சுவர்களில்தான் கலவிக் கலையை விளக்கும்மிதுனச் சிற்பங்கள் பெரிய பெரிய அளவில் இருக்கின்றன. இவைகளைக் காண்பதற்கே ஆடவரும் பெண்டிரும் அங்கே செல்கின்றனர் என்பர்.

கஜுராஹோவிலும், கோனாரக்கிலும் மிதுனச் சிற்பங்கள் நிறைய இருக்கின்றன. இச்சிற்ப வடிவங்களை கோயில்களில் செதுக்கி நிறுத்திடலாமா என்று கேட்பார் பலருண்டு. இதற்கு எத்தனையோ சமாதானங்களும் கூறுவர். கோயிலுக்கு வருவோர் உள்ள உறுதியைச் சோதிப்பதற்

காகவே இவை நிறுத்தப்பட்டிருக்கின்றன, என்பாரும் உண்டு. எனக்கென்னமோ இது எல்லாம் சரியென்று தோன்றவில்லை. கணவன் மனைவியர் தாம்பத்ய உறவு இருவர் உள்ளத்திலும் உருவாகும் அன்பை அடிப்படையாகக் கொண்டது. அந்த உறவை சிற்பிகள் வடிக்கும் போது யாதொரு மனோ விகற்பமும் இல்லாமல்தான் வடித்திருக்க வேண்டும். அதை விகற்பமாக எண்ணுகிறவர்கள் உள்ளத்தில்தான் கோளாறே தவிர, சிற்ப வடிவங்களிலோ அதை வடித்த சிற்பிகளிடத்திலோ கோளாறு இருக்கவில்லை. எல்லாவற்றையும் கலை அழகோடு காணும் கலை உள்ளம் படைத்தவர்களாக நாம் இருந்தாலே போதும்.

இத்தோடு என் கலைக்கோயில் யாத்திரையை முடித்துக்கொள்ள விரும்புகிறேன். இந்த யாத்திரையின் போது நான் ஆந்திர நாட்டுக் கோயில்களைக் காணவில்லை. வெப்பம்மிகுந்து விட்டதால் தமிழ்நாட்டிற்கே ஓடி வந்து விட்டேன், திரும்பவும் நல்ல அவகாசத்தோடு ஆந்திரப் பிரதேசம் சென்று திரும்பவேண்டும் என்ற எண்ணத்தோடு இந்திய நாட்டில் கோயில்களின் எண்ணிக்கைக் குறைவில்லை என்றாலும் அநேகமாக முக்கியமான கலைக் கோயில்களுக்கு எல்லாம் உங்களை அழைத்துச் சென்று விட்டேன். வடநாட்டில் சில கோயில்கள் பிரம்மாண்டமான அளவில் இருந்தாலும் பல கோயில்களில் நம் தமிழ் நாட்டுக் கோயில்களில் உள்ள சாந்நித்தியம் இல்லை என்றாலும் அங்குள்ள மக்களுடைய பக்தி நம்முடைய பக்திக்கு ஒரு சிறிதும் குறைந்ததல்ல. ஆசார அனுஷ்டானங்களிலே நாம் அவர்களை மிஞ்சி இருக்கலாம், என்றாலும் பக்தியில் நம்மைவிட அவர்களே விஞ்சி நிற்கிறார்கள் என்று தோன்றுகிறது. 'நமச்சிவாய' என்றும் 'மகாதேவ்' என்றும் உணர்ச்சியோடு அவர்கள் தொழுவதைப் பார்க்க வேண்டுமே! வைஷ்ணவர்களோ நம்மைச் சந்திக்கும் போது கூட 'ராதே ஷ்யாம்' என்றே கை கூப்புகிறார்கள். அவர்களுடைய உணர்ச்சி மயமான பக்தி நம் நெஞ்சைத் தொடுகிறது.

# 1. நஞ்சன்கோடு ஸ்ரீகண்டேஸ்வரர்

மக்களது பாவத்தையெல்லாம் துடைக்கவே இயேசு நாதர் சிலுவையில் ஏறி தன் உயிரைத் தியாகம் செய்தார் என்பர். இதைவிட அரியதொரு செயலையே இறைவன் மக்களுக்காக செய்திருக்கிறார் ஒரு காலத்தில். கதை சுவையானது. அமுதம் பெற விரும்பிய தேவர்கள் பாற் கடலைக் கடைய விரும்பினர். அரக்கர்களையும் உடன் கூட்டிக்கொண்டனர். மேருமலையையே மத்தாக நாட்டி, வாசுகியையே கயிறாகக் கொண்டு கடைந்தனர். ஆனால் அமுதம் வருமுன் ஆலகால விஷமே எழுந்தது, பாற்கடலி லிருந்து நஞ்சைக் கண்டதும் தேவர்களும் அரக்கரும் அஞ்சியோடி ஒளிந்திருக்கின்றனர். நஞ்சின் வெம்மை யைத் தாங்கமாட்டாமல். இந்த நேரத்தில் இறைவனான சிவபெருமான் அங்கு வருகிறார். எல்லோர் உயிரையும் காப்பாற்றிட நஞ்சினைத் தன் கரத்தில் ஏந்தி தானே உண்டுவிடுகிறார். நஞ்சு வயிற்றுக்குள் சென்று நாயகனையே முடித்துவிடக்கூடாதே என்று கருதி, பக்கத்தில் இருந்த உமை அத்தனின் கழுத்தை விட்டு வயிற் றுள் இறங்கு முன்பே கழுத்தைப்பிடித்து அமுக்கி நஞ்சினை அங்கேயே நிறுத்தி விடுகிறாள். அதனாலேயே இறைவனது கண்டம் கரியதாயிற்று. 'நஞ்சுண்ட கண்டன்' என்ற பெயர் ஒன்றும் இறைவனுக்கு புதியதாக சேர்ந்துவிட்டது. இப்படி இறைவன் நஞ்சுண்டு தேவர், அரக்கர், மக்கள் எல் லோரையும் காத்த சீலத்தை சுந்தரமூர்த்தி நாயனார் திருப்புன்கூர்த்தேவாரப் பதிகத்தில் பாராட்டிப்பாடினார்.

> **கோலமால்வரை மத்தென நாட்டி**
> **கோள் அரவு. சுற்றிக் கடைந்து எழுந்த**
> **ஆலநஞ்சு ண்டவர் மிக இரிய**
> **அமரர்கட்கு அருள்புரிவது கருதி**

நீலமார்கடல் விடந்தனை உண்டு
கண்டத்தே வைத்த பித்த! நீ செய்த
சீலம் கண்டு நின் திருவடி அடைந்தேன்
செழும் பொழில் திருப்புன்கூர் உளானே!

என்று. இப்படி அன்று நஞ்சை உண்டு தேவர்களையும் மற்றவர்களையும் இறைவன் காவாவிட்டால், இவ்வுலக மக்கள் எல்லாம் எப்படி உயிர்பிழைத்திருப்பார்கள் என்றே கேட்கிறார். குற்றாலத்துப் புராணம் பாடிய திரிகூட ராஜப்ப கவிராயர்.

பாரோடும் விண்ணோர்கள்
பறந்தோட, புரந்தரனார்
பதிவிட்டு ஓடத்
தேரோடும் கதிர் ஓட
மதியோட, விதியோட
திருமால் மேனி
காரோடத் தொடர்ந்தோடும்
கடல் விடத்தை பரமன் உண்டு
காவாவிட்டால்
ஆரோடு நீர் இருப்பீர்?
எங்கோடி உயிர் பிழைப்பீர்?
அறிவிலீர்காள்!

என்பதுதான் அவரது கேள்வி. ஆம், நஞ்சைக் கண்டதும் தேவர்கள் எல்லோரும் ஒருவரை ஒருவர் விஞ்சியவராய் அல்லவா ஓடிக்கொண்டிருக்கிறார்கள். அந்த நேரத்தில் அல்லவா எல்லோரையும் ஓட ஓட அடிக்கும் நஞ்சையே உண்டு உலகத்தையே காக்கிறார், நீலகண்டர். இந்த நீலகண்டரை நான் தமிழ்நாட்டுத் தலங்களில் பல இடங்களில் தேடினேன். நீலகண்டர் என்ற திருநாமத்தோடு ஒரு இடத்திலாவது அவர் என் கண்ணிற்கு அகப்படவேயில்லை. கடைசியாக ஆசாமியைக் கண்டுபிடித்தேன். அந்த அண்டை நாடான மைசூர் ராஜ்ஜியத்தில். அந்த

நீலகண்டரைக் காணவே செல்கிறோம். நஞ்சன் கோடு என்ற தலத்திற்கு நாம் இன்று.

நஞ்சன்கோடு என்ற உடனேயே நமக்கு ஞாபகம் வருவது அங்கு செய்யப்படும் பல்பொடிகள். அதனால்தான் நஞ்சன் கூடு என்று அந்த ஊரை அழைக்கின்றார்களோ, என்னவோ, மேலும் நஞ்சன்கோடு என்று அழைப்பதற்கு பக்கத்தில் மலை ஒன்றையும் காணோம். நஞ்சுண்ட கண்டனார் இருக்கும் ஊரானதால் நஞ்சன் கோடு என்று பெயர் பெற்றது போலும். இந்த ஊர் மைசூர் சாம்ராஜ் நகர் ரயில் பாதையில் மைசூருக்குத் தெற்கே பன்னிரண்டு மைல் தொலைவில் இருக்கிறது. மைசூரிலிருந்து காரிலும் போகலாம். பஸ்ஸிலும் போகலாம். கோயில் ரயில் ஸ்டேஷனிலிருந்து நாலு பர்லாங்கு தூரத்தில் இருக்கிறது. மைசூர் சாம்ராஜ் நகர் பெரும்பாறையை அடுத்து இருக்கிறது. கோயிலுக்குச் செல்பவர்கள் காலை 9 மணி முதல் 1 மணிக்குள் செல்ல வேண்டும். அதன் பின் கதவை அடைத்து மாலை 5-30 மணி அளவில்தான் திறக்கிறார்கள்.

பலத்த போலீஸ் பாரா எல்லாம் இருக்கிறது. கோயில் பிரம்மாண்டமான கோயில். மதில் சுவர்கள் எல்லாம் உயரமானவை. மதில் சுவரில் எல்லாம் சிவனது பலமூர்த்தங்கள் சுதையால் செய்யப்பட்டிருக்கின்றன. அவை மதிலுக்கே அழகை தருக்கின்றன. கோவில் வாயிலைப் பெரியதொரு கோபுரம் அழகு செய்கிறது. இந்தக் கோபுரம் மின்சார விளக்குகளால் மேலும் அழகு செய்யப்படுகிறது. அந்த கோபுரத்தையும் முந்திக்கொண்டு ஒரு மண்டபம் நல்ல சிமெண்டால் கட்டியதுபோல் இருக்கும். ஆனால் சிமெண்ட் நிறத்தில் உள்ள கல்லால் அமைந்த தூண்கள்தான். அம் மண்டபத்தை தாங்கி நிற்கின்றன. அந்த மண்டபத்தையும் வாயிலையும் கடந்து உள்ளே செல்லவேண்டும். அங்குள்ள வெளிப்பிரகாரம் அவ்வளவு விசாலமாய் இல்லை. கோயில்

மண்டபத்தின் முகப்பில் ஒரு நந்தி இறைவனை நோக்காமல், நம்மை எதிர்கொண்டழைப்பதுபோல் பிரதான சந்நிதிக்கு கொஞ்சம் வடக்குப் பக்கமாய் இருக்கும். அதனை அலங்கார நந்தி என்கின்றனர். பெயருக்கு ஏற்ப நல்ல அழகான நந்தி. கருங்கல்லில் செய்தது. இந்த நந்தியைத் தொழுதுவிட்டு நந்தியின் தென்பக்கமாகத் திரும்பி கோயிலின் தெற்குப்பிரகாரத்தில் நடக்கலாம். அங்கெல்லாம் சிறு சிறு கூடங்கள். ஒவ்வொரு கூடங்களிலும் மூன்று மூன்று விக்கிரகங்கள், அறுபத்து மூன்று நாயன்மாரையும் மற்றைய தேவர்களையும் அங்கே பிரதிஷ்டை செய்து வைத்திருக்கிறார்கள். எல்லோரையும் நாதர் நாதர் என்றே அழைக்கிறார்கள். இந்தப்பிரகாரத்திலேயே, இக் கோயிலைப் புதுப்பித்த மும்முடி கிருஷ்ண தேவராயர் தன் மனைவியர் நால்வருடன் எழுந்தருளியிருக்கிறார். அந்த மண்டபத்திற்கு எதிரேதான் அவர் பிரதிஷ்டை செய்த தண்டபாணி நிற்கிறார். இந்தத் தண்டபாணியின் வடிவில் ஒரு விசேஷம். அவர் தலையின் மேலே ஐந்து தலை நாகம் ஒன்று குடையாக விரிந்து நிற்கிறது. எட்டியிருந்து பார்த்தால் கண்ணன் வடிவுபோலவே இருக்கிறார். அருகில் போய்ப் பார்த்தால்தான் அது தண்டபாணியாம் முருகன் வடிவ என்று தெரியும். அவர் காலடியில் உள்ள பீடத்திலுமே மும்முடி கிருஷ்ண தேவராயாது வடிவம் செதுக்கப்பட்டிருப்பதையும் காணலாம். இந்தத் தண்டபாணியை தரிசித்தபின் மேலே நடந்தால் கன்னி மூலையில் வடக்கு நோக்கியவராய் ஒரு விநாயகர் இருக்கிறார். இவரைப் பிரசன்னகணபதிஎன்கிறார்கள். நல்லகாத்திரமானவடிவம் இவர் வெண்ணெய், சந்தனம் எல்லாம் சாற்றிக் கொண்டிருப்பார். மேல்ப் பிரகாரத்திலே பல லிங்க வடிவங்கள், அவர்களில் முக்கியமானவர்கள் சகஸ்ரலிங்கர், முருனேஸ்வரர் பாதாளேஸ்வரர், தீர்த்தேஸ்வரர் அக்ரேஸ்வரர் என்பவர்களே. இவர்களையும் வணங்கி விட்டு வடக்குப் பிரகாரத்தையும் கடந்து அர்த்தமண்டபத்திற்கு வரலாம். அங்கிருந்து

நஞ்சுண்டேஸ்வரரைத் தரிசிக்கலாம். இவரை ஸ்ரீ கண்டே ஸ்வரர் எனவும் அழைக்கின்றார்கள். இன்றைய நாகரீக உலகில் நடப்பதுபோல, நஞ்சுண்ட கண்டேஸ்வரர் என்ற பெயர் நீளமாக இருப்பதால் பெயரை ஸ்ரீகண்டன் என்று சுருக்கி வைத்துக்கொண்டார் போலும். இவருக்கு படைக் கும் நைவேத்தியத்தில் சிறப்பானது சுகண்டித சர்க்கரை. இது என்ன என்று பார்க்கவும் அதன் சுவையை அறியவும் ஆவலாயிருக்கும். கொஞ்சம் சலுகை உடையவர்கள் என்றால் கேட்டுப் பெறலாம். சுக்கு, சர்க்கரை. வெண்ணெய் மூன்றையும் கலந்து வைத்திருப்பதே சுகண்டித சர்க்கரை. அன்று அவர் உண்ட நஞ்சு கண்டத் திலேயே நின்றுவிட அதை ஜீரணிக்கவே இப்படி சர்க்கரை யையும் வெண்ணையையும் சுக்கையும் சேர்த்துக் கலந்து உண்டு வருகிறார் போலும்!

நஞ்சுண்ட ஸ்ரீகண்டனைத் தரிசித்து விட்டபின் அன்னையின் சந்நிதிக்குச் செல்லலாம். அன்னையைப் பார்வதி என்றே அழைக்கின்றனர். அன்னை சர்வாலங்கார பூஜிதையாகவே இருக்கின்றாள். அவள் அணிந்திருக்கும் நகைகளின்மதிப்பு ஒரு கோடிரூபாய் என்கின்றர்.அத்தனை நகைகளையும் மூல அம்பிகைக்கே சாத்தி வைத்திருக் கிறார்கள். இதனைப்பார்த்தபின்தான், இந்தக் கோவி லுக்கு இத்தனை போலீஸ் பாதுகாப்பெல்லாம் ஏன் ஏற்பாடு செய்திருக்கிறார்கள் என்று தெரிந்தது. இந்த அன்னையின் சந்நிதிக்கு வடபுறம் ஒரு சிறு கோயிலுள் ஒரு லிங்கம் பிரதிஷ்டையாகியிருக்கிறது. இதனை மரகத லிங்கம் என்றும் ஹைதர் லிங்கம் என்றும் அழைக்கின்றனர். மைசூரை ஹைதர் அலி ஆள்கிறபோது அவனுடைய பட்டத்து யானை குருடாகியிருக்கிறது. அவர் பிரார்த்தித் துக்கொண்டபடி நஞ்சுண்டேஸ்வரர் அந்த யானையின் குருட்டை நீக்கியிருக்கிறார். அதற்காக ஹைதர் பிரதிஷ்டை செய்த லிங்கம் இது என்று வரலாறு கூறுகிறது.

அன்னைக்கும் அத்தனுக்கும் இடையிலே ஒரு சந்நிதி. அந்தக் கோயிலில் நாராயணன் நிற்கிறார். இவனையே தேவ தேவன் என்கிறார்கள். தேவர்கோ அறியாத தேவ தேவன் என்ற பெயர் தான் எவ்வளவு இனிமையாக இருக்கிறது. இவர் கோயிலுக்குப் பின்னே சண்டேசர் சந்நிதி இருக்கிறது. அந்தச் சந்நிதிக்கு மேலே உள்ள மண்டபத்தில் ஒரு வில்வமரம் தழைத்து ஓங்கி வளர்ந்திருக்கிறது. அதன் மூலம் எங்கிருக்கிறது என்று அறிய முடியவில்லை.

இந்தக் கோயிலின் முக்கியமான திருவிழா ரதோத்ஸவம் தான். கோயிலின் வடபக்கத்தில் உள்ள காலி இடத்தில் தேரை நிறுத்தி வைத்திருக்கிறார்கள். ரதம் நீண்டு வளர்ந்திருக்கிறதே ஒழிய வளர்ச்சிக் கேற்ற பருமனுடையதாக இல்லை. அலங்காரம் பண்ணிப்பார்த்தாலும் காம்பீர்யம் இல்லாது ஏதோ நெட்டை நெட்டையாகத்தான் தெரியும். இந்தக் கோயில் மிகவும் புராதனமான கோயில். பழைய காலத்தில் சிறிய கோயிலாயிருந்து, பின்னால் விரிவாக்கப் பட்டிருக்க வேண்டும். காரசசூரி நந்தி ராஜா என்பவரே விரிவாக்கியவர்களில் முதல்வர் என்று வரலாறு கூறுகிறது. பின்னால் திவான் பூர்ணையா என்பவர் மேலும் விரிவாக்கியிருக்கிறார், என்றாலும், மூன்றாம் கிருஷ்ணராஜ உடையார் இன்றைக்கு இருக்கும் பெரிய கோயிலைக் கட்டியவர் என்று தெரிகிறது. இக்கோயில் பதின்மூன்று பதினான்காம் நூற்றாண்டிலேதான் விரிவடைந்திருக்க வேண்டும். இக்கோயிலில் 1529—ம் வருஷத்து கல்வெட்டு ஒன்றும் 1643—ம் வருஷத்து கல்வெட்டு ஒன்றும் இருக்கிறது. முந்தையது விஜயநகர மன்னன் கிருஷ்ணதேவராயக் காலத்தியது. பிந்தியது தளவாய் விக்ரமராஜா காலத்தியது என்று வரலாற்று ஏடுகள் கூறுகின்றன.

கோயிலுக்கு கொஞ்சம் வடபுறம் தள்ளி கபினி நதி ஓடுகிறது. இங்கேதான் குண்டுலநதி கபினியுடன் கலக்கிறது. பின்னர் இந்தக் கபினி நரசபூர்பக்தம் காவிரியுடன் கலக்கிறது. கபினி நதிக்கரையில் பரசுராமருக்கு ஓர்

ஆலயம் இருக்கிறது. தமிழ் நாட்டில் பரசுராமன் ஆலயம் நிரம்பவும் அபூர்வம்தானே. ஆதலால் அந்த கோவிலுக்குச் சென்று பரசுராமரையும் வணங்கியே திரும்பலாம். பரசு ராமன் நிரம்பக் கோபக்காரர் ஆச்சே, அதனால் அவரை வணங்காமல் திரும்பி விடக்கூடாதுதான். இக்கோயில் லிங்கம் கட்டிகள் என்ற வீர சைவர்களால் பராமரிக்கப் படுகிறது. இங்கு ஒரு பெரிய மந்திரத் தகடு ஸ்தாபனமா யிருக்கிறது என்கிறார்கள்.

இத்தலத்தில் ராகவேந்திர சுவாமிகளால் நிர்மாணிக்கப் பட்ட மாதவர்கள் மடம் ஒன்றிருக்கிறது. இந்த மடம் பதினைந்தாம் நூற்றாண்டில் ஸ்தாபிக்கப்பட்டு இன்று வரை மடாதிபதிகள் இருந்து வருகிறார்கள். துவைத தத்து வத்தை விளக்கவும் அரிய நூல்கள் பல இவர்கள் எழுதி யிருக்கிறார்கள். இங்குள்ள செப்பேடு ஒன்று 1580— ஆண்டில் எழுதப்பட்டிருக்கிறது. அதன் மூலம் மாதவர் களது குரு விஜயேந்திரர், தஞ்சை அப்பயதிஷிதர், காஞ்சி புரத்து வைஷ்ணவ மதாச்சாரியான தத்தாச்சாரியார் மூவரும் தஞ்சை நாயக்க மன்னரான சேவப்பநாயக்கர் சபையில் தங்கள் தங்கள் மதாச்சாரத்தைக் குறித்து தர்க் கித்தனர் என்று தெரிகிறது. வெற்றி யாருக்கும் கிடைத்தத தோ? நமக்கேன்அந்த விசாரனைஎல்லாம்? நாம் நஞ்சுண்ட கண்டனை வணங்கி அருள் பெற்ற மன நிறைவோடேயே திரும்பலாம்-

# 2. மைசூர் சாமுண்டி



எருமை என்று ஒரு மிருகம், மந்தம், மடமைசோம்பல், அறிவின்மை, எல்லாவற்றிற்கும் எடுத்துக்காட்டாக விளங்கும் மிருகம் அது. ஆனால் அந்த மிருகத்தை நான் பார்க்கிறபோதெல்லாம் அதன் குணாதிசயத்தைக் கண்டு அதிசயித்து நிற்பதுண்டு. எவ்வளவோ காலமாக யோகம் செய்தும் அதனால் ஒரு சித்தி கைவரப் பெற்ற தத்துவ ஞானியாகவே அது எனக்கு காட்சி அளிக்கிறது. தன் பக்கத்தில் என்ன என்ன நடந்தாலும் அதில் எல்லாம் மனதைச் சிதறவிடாமல் அவைகளை ஒதுக்கித் தள்ளி தன் மனத்தை ஒருநிலையிலே வைத்துக்கொள்ளும் ஆற்றல் பெறுவது என்றால் அது எளிதான சித்தியா என்ன? உலகம் எக்கேடு கெட்டாலும் அதனால் எல்லாம் அதன் உள்ளம் சலனம்

அடைவதில்லையே, சிலசமயங்களில் உள்ளத்தை எங் கேயோ பரவவிட்டு விட்டு நின்றுவிட்டால் அதனை யாரா வது அசைக்க முடியுமா என்ன? எத்தனை வண்டிகள். எத்தனை கார்கள் எல்லாம் ஹார்ன் அடித்துத்தான் பார்க்கட்டுமே அதன் சமாதி கலையுமா என்ன? ஆனால் அந்தச் சமாதி கலைந்து ஆனந்த அனுபவத்தையே பெற்று விட்டால் அதுபோதும், கும்மாளத்திற்கு குறைவுண்டா? துள்ளி ஓட ஆரம்பித்துவிட்டால் அதனைக் கட்டமுடியுமா; இல்லை கட்டிப் பிடிக்கத்தான் முடியுமா? இன்னும் அது குரல் எழுப்பி விட்டால் அந்த இன்னிசையில் அது பெறுகிற ஆனந்த அனுபவம் இருக்கிறதே அது ஒரு தனி வகை. தன்னை மறந்த லயந்தினில் வாழும் கவிஞனாக அல்லவா மாறிவிடுகிறது. இன்னும் தனக்கு என வாழாது பிறருக்காகவே வாழும் பிராணி அது. மக்களுக்கு வேண்டி யதை எல்லாம் நிஷ்காம்ய நிலையில் நின்று உதவும் அருமை யான கர்மயோகியாக அல்லவா அது வாழுகிறது. இந்த உலகத்தின்சந்தடி இரைச்சல் எல்லாம் அதனை ஒன்றும் செய்வதியில்லையே. இப்படி ஓர் அருமையான விமரிசனம் எருமையைப்பற்றி. இந்த விமரிசனம் என் சொந்தச் சரக் கல்ல. பேராசிரியர் பெர்னாட்ஷா எழுதும் விமரிசனம் தான் இவ்வளவு. அற்புதமான பண்பாடுடைய மிருகம் எருமைப் பசுவே ஒழிய எருமைக்கடா அல்ல. எருமைக் கடா சுமக்க முடியாதபாரத்தை ஏற்றினாலும் வண்டியை ஆடாமல் அசங்காமல் இழுத்துச் செல்லும் வலியுடையது. அதனாலேதான், அது நமது பழங்காலத்திய ஜீப் காராக இருந்திருக்கிறது. இன்று அதனை பிரேக் இன்ஸ்பெக்டர் என்றும் குறிப்பிட்டு அதன் சக்தியை கொஞ்சம் குறைவா கவே மதிக்கிறோம்.

இப்படி எருமைப் பசுவையும் எருமைக்கடாவையும் போற்றி புகழ்பவர் உண்டு என்றாலும் அந்தப் பழைய புராண காலத்திலே மந்தம், சோம்பேறித்தனம், அறி யாமை எல்லாவற்றையும் உருவகப்படுத்த எருமையைத்

தான் குறித்திருக்கிறார்கள். இல்லாவிட்டால் அறிவே வடிவமான அன்னை பராசக்தி அறிவின்மையின் பிண்டமான எருமை உருவில் அமைந்த அசுரனிடம் போரிட்டு வென்றாள், அதனைக் கொன்றே தீர்த்தாள் என்று புராணம் எழுதி வைப்பார்களா? மஹிஷமர்த்தனத்தின் தத்துவமே இதுதானோ? மனிதனுடைய அறிவின்மை, சோம்பல் எல்லாம் எருமை உருவில் எழுவதையும், அந்த அறிவின்மையை எல்லாம் அடக்கி ஆண்டு, வெற்றிகண்டு அறிவுடைமை ஓங்கி உயர்வதையும் கற்பனை பண்ணுவது தானோ மஹிஷமத்தனியின் கதை. இந்த மஹிஷமத்தனிதான் சாமுண்டி என்ற வடிவில் மைசூரில் கோவில் கொண்டிருக்கிறாள். ஆம் மஹிஷன் ஊர்தான் மைசூர் என்று குறுகியிருக்கிறது. அந்த மைசூருக்குகே செல்கிறோம் நாம் இன்று.

ரயிலில் போனால் பங்களூர் சென்று அதனை பின்னும் சென்றால் மைசூரை அடையலாம். பங்களூரில் இருந்தும், கோவை, சேலம் முதலிய தமிழ் நாட்டு நகரங்களிலிருந்தும் காரிலும் பஸ்ஸிலும் சென்று மைசூரை அடையலாம். மைசூர் மஹிஷன் ஊர் என்றாலும் அது ஒரு சௌந்தர்ய நகரம். எங்கு பார்த்தாலும் மாடமாளிகைகள், தோட்டங்கள். ஊரை அடுத்து ஒருமலை. அதுவே சாமுண்டி மலை. அந்தமலையின் மேல்தான்,மஹிஷாசுரனை வென்ற மஹிஷமர்த்தினி சாமுண்டிகோயில் கொண்டிருக்கிறார். நாம் நகரத்தை மட்டும் சுற்றிப்பார்க்க வந்தவர்கள் அல்லவே. க்ஷேத்ராடனம் அல்லவா புறப்பட்டிருக்கிறோம். ஆதலால் மலை மீது ஏறி அன்னை சாமுண்டியை முதலில் தரிசித்துவிட்டுத் திரும்புவோம். மலை பெரிய மலையல்ல. மலையின் உயரம் எல்லாம் 3500-அடி உயரமே. மலையை நோக்கி மைசூர் நகரத்திலிருந்து ஒரு பெருஞ்சாலை செல்கிறது. அந்த சாலை வழியே இரண்டு மைல் போய் படிக்கட்டுக்கள் ஏறி மலைசிகரத்தை அடையலாம். இந்தப்படிக்கட்டுகளை பதினேழாம் நூற்றாண்டில் மைசூரை ஆண்ட தொட்ட தேவராயர் கட்டினார் என்று கூறுகிறார்கள்.

இப்படிப் படி ஏறிப் போகும் வழியில் நல்ல கருங்கல் நந்தி ஒன்று படுத்திருக்கும். அதன் உயரம் 16—அடி. கால்களை மடக்கிப்படுத்திருக்கும் பாவனையில் நந்தி இருக்கிறது. அதன் கழுத்தில் அணிந்திருக்கும் மணிகள் எல்லாம் ஒலிப்பது போன்ற பிரமையை உண்டாக்கும். தஞ்சைப் பெரு உடையார் கோயில் நந்தி இதைவிடப் பெரியதுதான் என்றாலும், அழகிலே இந்த நந்தி சிறப்பானதாகவே இருக்கிறது. இந்த மலைப்படிகள் ஏற இயலாத பெருமக்கள் காரிலேயே மலை மீது செல்லாம். நான்கைந்து மைல் வளைந்துவளைந்துசெல்லும்பாதை. நந்தியைக்காணவிருப்ப முள்ளவர்கள் மேல்பக்கம் செல்லும் பாதைவழியாகச் செல்ல வேணும். கீழ்பக்கம் செல்லும் பாதைவழியாகச் சென்றால் நந்தியைப்பார்க்கமுடியாது.

மலை மீது மைசூர் மகாராஜா வந்தால் தங்குவதற்கு என ஒரு சிறு அரண்மனை கட்டியிருக்கிறார்கள். அங்கு எல்லாம் செல்ல நமக்கு அனுமதி கிடைக்காது. ஆதலால் நேரே சாமுண்டேஸ்வரி கோயிலை நோக்கியே செல்லலாம். மேற்கு நோக்கி செல்லும் பாதை கோவிலை நோக்கி தெற்கே திரும்பும் சந்திப்பில் நம்மை எதிர்கொண்டு வரவேற்க மஹிஷாசுரனே நிற்பார்; கத்தி ஒரு கையும், நாக பாசம் ஒரு கையுமாக ஓங்கி உயர்ந்த வடிவில் நிற்பான். சுதையால் செய்த வடிவில் அவன் பயங்கர தோற்றத்தில் தலையை யெல்லாம் 'பாப்' செய்து கொண்டு நிற்கும் கோலம் உள்ளத்திற்கு அச்சம் தருவதாகவே இருக்கும். நாம்தான் அவனையும் கொன்று வெற்றி மாலை சூடிய சாமுண்டியின் சந்நிதிக்கே செல்கிறவர்கள் ஆயிற்றே. ஆதலால் மஹிஷனைக் கண்டு அஞ்சாமலேயே மேல் நடக்கலாம். காரிலே போயிருந்தால் காரைகோவிலின் வடபுறம் உள்ள மைதானத்தில் நிறுத்திவிட்டு கோயிலின் கீழவாயில் வந்து சேரலாம். வாயிலை ஒரு நல்ல கோபுரம் அழகு செய்கிறது. கோபுரத்தைப் பார்த்தால் நமது தமிழ்நாட்டுக் கோபுரம் போலவே இருக்கும். கோவில் வாயிலைக் கடந்து

உள்ளே சென்றால் ஒரு திறந்த வெளிப்பிரகாரம் இருக்கும். அதனையும் கடந்து மேல் நடந்தால் மகா மண்டபம் வந்து சேருவோம். அந்த மகா மண்டபத்திலிருந்தே சாமுண் டேஸ்வரியைத் தரிசனம் செய்யவேண்டும். நான் முன்னரே குறித்தபடி சாமுண்டேஸ்வரி, மஹிஷாசுர மர்த்தனியின் வடிவினளே. விஷ்ணு தர்மோத்ரத்தில் இந்த தேவியின் வர்ணனைகள் விளக்கமாக இருக்கிறது. தங்கமயமான மேனியும், இளமையும் உடையவளாய், சிம்மத்தின் பேரிலே உக்கிரமாக அவள் காட்சி தருவாள். இருபது கைகள் கொண்ட இந்த ஈஸ்வரி சூலம், கட்கம், சங்கு, சக்கரம் கேடயம் பரசு முதலிய ஆயுதங்களை ஏந்திய வளாய் இருப்பாள். காலின் கீழ், எருமை உடலும், அசுரத் தலையும் கொண்ட மஹிஷன் விழிபிதுங்கிக்கொண்டிருப் பான். அவனைத் தன்கையில் ஏந்திய திருசூலத்தால் அழுத் திப்பிடித்துக்கொண்டிருப்பாள், என்றெல்லாம் இவள் வடிவ வர்ணனை செய்யப்பட்டிருக்கிறது. இத்தனை வர்ணனையும் சரியாய் இருக்கிறதா என்று நாம் தெரிந்து கொள்ள முடியாது. நாம் எட்ட இருந்துதானே அம்பி கையைத் தரிசிக்க முடிகிறது. தங்கக் கவசம் சாற்றி கோலாகலமாக விளக்குகள் எல்லாம் போட்டு அலங்கரிப் பார்கள். இந்த சாமுண்டேஸ்வரிதான் மைசூர் மகாராஜாக் களின் குலதெய்வம். மிகவும் பழமையான கோயிலாக இருந்ததை 1827—ல் மூன்றாம் கிருஷ்ணராஜ உடையார் புதுப்பித்திருக்கிறார். அழகான தங்கச் சிம்மவாகனம் ஒன் றையும் செய்து வைத்திருக்கின்றார். ஏராளமான நகை களையும் செய்து அன்னைக்கு அணிவித்து மகிழ்ந்திருக் கிறார். அதில் எண்பது சமஸ்கிருத தோத்திரங்கள் பொறிக் கப்பட்ட தங்க நட்சத்திர மாலிகை மிகவும் விலை உயர்ந்த தாம். இந்தச் சாமுண்டியை ஏதோ உடையார் வம்ச அரச பரம்பரையினர் மட்டுமே வணங்கி வந்தார்கள் என் றில்லை. மைசூரை ஆண்ட ஹைதர் அலியும், அவன் மகன் திப்புசுல்தானுமே ஆராதித்திருக்கிறார்கள். அவர்களின் ஆட்சியில் ஆண்டுதோறும் புதுப்புது அணிகளை செய்து

அனுப்பிக்கொண்டே இருந்திருக்கின்றார்கள். அந்தநகைகள் எல்லாம் இன்னும் பத்திரமாய் பாதுகாக்கப்பட்டு தேவிக்கு அணியப்படுகின்றன என்கிறார்கள். சாமுண்டேஸ்வரி விருத்தியான தெய்வம். ஆம். மடமையையும், சோம்பரையும் தொலைத்து அருள்புரியும் ஆற்றல் உடையவள் அல்லவா அவள்.

இந்தச் சாமுண்டிமலையிலே, சாமுண்டி கோயிலுக்குத் தென் புறம் ஒரு பழைய கோவில் இருக்கிறது. அங்கு கோயில் கொண்டிருப்பவர் மகாபலேஸ்வரர் என்னும் சிவ மூர்த்தியும். இக்கோயிலை 1128-ல் ஹொய்சல மன்னன் விஷ்ணு வர்த்தனன் கட்டினான், என்றும் பின்னர் சந்திர கிரியில் இருந்து அரசாண்ட விஜயநகர நாயக்கர் மன்னன் 1620-ல் விரிவாக்கினார் என்றும் சரித்திர ஏடுகள் கூறுகின்றன. சாமுண்டிமலையில் ஏறுவதற்கு மாலை நேரமே உகந்த நேரம். சாமுண்டேஸ்வரியையும் இரவிலே விளக்கொளியிலே கண்டு வணங்குவது தான் சிறப்பாக இருக்கும். அந்த இரவிலே அந்த மலைமேலே நின்று மின் விளக்குகளால் பிரகாசிக்கும் மைசூர் நகரைக் காண்பதும் கண் கொள்ளாக் காட்சியாக இருக்கும்.

மைசூர் நகரிலே, சாமுண்டேஸ்வரியை தரிசித்தபின் பார்க்க வேண்டியவைகள் எவ்வளவோ உண்டு என்றாலும் மைசூர் மகாராஜாவின் அரண்மனையைப் பார்க்காமல் ஊர் திரும்புதல் கூடாது. இது ஒரு பெரிய அரண்மனை. இந்த அரண்மனையின் நீளம் 145—அடி உயரம். இந்த மாளிகையை பல வர்ணக்கற்களால் கட்டி இருக்கிறார்கள். இக் கட்டிடம் கட்ட பதினான்கு வருஷம் ஆயிற்று என்றால் அதன் விஸ்தாரத்தைப்பற்றி அதிகம் விவரிப்பானேன். இந்த அரண்மனையினை மின்விளக்குகளால் அலங்கரித்திருக்கிறார்கள். இந்த மின்விளக்கு அலங்காரத்தை காண வேண்டும், என்றால் நவராத்திரி, தசரா காலத்தில் காணச் செல்ல வேண்டும். பத்து நாட்களும் விளக்கு அலங்காரம்

உண்டு என்றாலும், கடைசி நாளாகிய விஜயதசமி அன்று மகாராஜா பவனிவருகின்ற காட்சி கோலாகலமானதாக இருக்கும். ரத, கஜ, துரக பாததிகளுடன் பண்டைய மகா ராஜாக்கள் பவனி புறப்பட்டார்கள் என்பார்களே அது போல, யானை மீது அம்பாரியில் மகாராஜா வீற்றிருக்க, யானை, குதிரை, ஒட்டகம் எல்லாம் பவனியில் கலந்து கொள்ளும். அதன் பின் அரண்மனை முற்றத்தில் மகா ராஜா தர்பார் நடத்துவார். அரண்மனை உத்தியோகஸ் தர்கள் எல்லாம் கருப்புக்கலர் கோட்டும் தலைப்பாகையும் அணிந்து வந்து மகாராஜாவின் தர்பாரை அலங்கரிப்பார். இந்த தசாரப்பவனி போல வேறு எங்கும் பவனி நடப்ப தில்லை என்கின்றார்கள்.

இன்னும் ஒன்று, மைசூர் சென்று காவிரியில் கட்டி யுள்ள கண்ணம்பாடி அணையையும், பிருந்தாவனம் என்னும் பூந்தோட்டத்தையும் காணாமல் திரும்பினால், இந்த வாழ்நாளிலேயே பெறற்கரிய பேறு ஒன்றினை இழந்தவர்களாவோம். இந்த கண்ணம்பாடி அணையே கிருஷ்ணராஜசாகரம் என்று அழைக்கப்படும். இந்த அணை ஒன்றே முக்கால் மைல் நீளம். அகலம் 124—அடி உயரத் திற்கு தண்ணிர் கட்ட வசதியிருக்கிறது. ஒரு லட்சத்து இருபது ஆயிரம் ஏக்கர் நஞ்சை நிலத்திற்கு இந்த அணையி லிருந்து தண்ணீர் கிடைக்கிறது. இந்த அணைக்கட்டில் கீழ்ப் பாகத்தில் தான் புகழ் பெற்ற பூங்கா-பிருந்தாவனம் அமைக்கப்பட்டிருக்கிறது. இந்தப் பூங்கா முழுவதும் நீர் ஊற்றுக்கள் அமைக்கப்பட்டிருக்கின்றன. மின் காற்றைக் கொண்டு என்ன என்ன வர்ண வித்தைகள் செய்யலாமோ அத்தனையும் செய்யப்பட்டிருக்கிறது. இரவில் மின்விளக் கொளியில் அந்தப் பூங்கா தெய்வலோகம் போலவே இருக்கும். இந்த அணைக்கட்டில் ஒரு சிலை. காவிரித்தாய் கையில் கவசம் ஏந்தி நிற்பதுபோல அக்கலசத்திலிருந்து தண்ணீர் வழிந்தோடிக்கொண்டே இருக்கும்படி செய்திருக்

கிறார் சிற்பி. காவிரித்தாய் அழகுச்சிலைஅல்ல என்றாலும் அமைப்பு மிகவும் சிறப்பாயிருக்கிறது. மைசூர் சென்று சாமுண்டீஸ்வரியை வணங்கித் திரும்பும்போது அன்னை காவிரிக்கும் நாம் வணக்கம் செலுத்த வேண்டாமா? அவள் தானே உலகு புரக்கும் அன்னையாக இருப்பவள்.

# 3. சீரங்கப் பட்டணத்துச் சீரங்கன்

ஏன் பள்ளி கொண்டீர் ஐயா? என்று ஒரு கேள்வி. கேள்வி எந்நேரமும் தூங்கிக் கொண்டிருக்கும் உங்களையும் என்னையும் பார்த்துக் கேட்ட கேள்வியல்ல. பாற்கடலில் பாம்பணையிலே பள்ளிக் கொண்டிருக்கும் அந்தப் பரந் தாமனையே பார்த்துக் கேட்ட கேள்விதான். கேள்விகேட் பவர் அருணாசலக்கவிராயர். கேள்வியை ஏன் பள்ளி கொண்டீர் என்று மட்டும் கேட்டு நிறுத்தி விடவில்லை,

'ஆம்பல் பூத்து அசைய
பருவத மடுவிலே
அவதரித்த இரண்டு
ஆற்றின் நடுவிலே
ஏன் பள்ளி கொண்டீர்
ஐயா! சீரங்கநாதரே!'

என்று விளக்கமாகவே கேட்கிறார் கேள்வியை. கேள்வியோ அந்தக் காவிரித் திருநதியில் துயிலும் கருணை மாமுகிலைப் பார்த்துக் கேட்கப்படுகிறது. ஆனால் சீரங்கநாதரோ இந்த கேள்விக் கெல்லாம் பதில் சொல்பவராகக் காணோம். உண்மையிலே தூங்கிறவர் என்றால் தட்டி எழுப்பிக் கேட்டுவிடலாம். ஆனால் தூங்குவது போல் பாசாங்கு செய்து அறிதுயிலில் அமர்ந்திருப்பவரிடம் கேள்விக்குப் பதில் கிடைக்கவா போகிறது? ஆதலால் கேள்விக்கேட்ட அருணாசலக் கவிராயரே, கேள்விக்கு விடையும் கண்டு பிடிக்க முயல்கிறார். அவருக்குத் தெரியும், சாதாரண மாய், கொஞ்சம் நடந்து அலுத்துக் களைத்தால் தூக்கம் வரும் என்று. ஆதலால் கொஞ்சம் சிந்தனை செய்கிறார். இராமாவதாரத்தில் இந்தப் பரந்தாமன் காட்டிலும்



சீரங்கப் பட்டணத்து கோயில் கோபுரம்

மேட்டிலும், நடந்து அலுத்ததெல்லாம் ஞாபகத்துக்கு வரு கிறது. உடனே, கேள்விக்குரிய விடையையுமே கேள்வி வடிவிலேயே சீரங்கநாதரிடமே போட்டு விடை கேட்கப் பார்க்கிறார்,

மாசில்லாத மிதிலேசன் பெண்ணுடனே
வழிநடந்த இளைப்போ
தூசில்லா குகன் ஓடத்திலே
கங்கைத்துறை கடந்த இளைப்போ
மீசுரமாம் சித்ர கூடச் சிகரக்
கல்மிசை நடந்த இளைப்போ
காசினிமேல் மாரீசன் ஓடிய
கதி தொடர்ந்த இளைப்போ?

என்றெல்லாம் அடுக்கடுக்காய்க் கேள்வி கேட்டவர் மேலும் தொடர்ந்து,

ஓடிக்களைத்தோ—தேவியைத்
தேடி இளைத்தோ

நீர்பள்ளிகொண்டீர் என்று கேட்டுக்கொண்டே போகிறார். இந்தப் பாட்டை நான் படித்தபோது உண்மையிலேயே இவைதானா காரணமாக இருக்கும் சீரங்கநாதர் பள்ளி கொண்டிருப்பதற்கு என்று எண்ணினேன். இவைதான் காரணமென்றால் இராவணவதம் முடித்து பட்டாபிஷேக மும் செய்து கொண்டபின்பு, அயோத்தி அரண்மனையிலே அம்ஸதூளிகா மஞ்சத்திலே அமர்ந்து நித்திரை செய்யலா மே? அதைவிட்டு, ஆம்பல் பூத்து அசையும் பருவதமடுவிலே அவதரித்த இரண்டாற்றின் நடுவிலேதானா வந்து படுத்துக் கிடக்கவேண்டும். இதற்கு ஒவ்வொரு தலத்திலும் ஒவ் வொரு கதை சொல்கிறார்கள். அன்று பட்டாபிஷேகம் முடிந்ததும் ராமர் தான் ஆராதித்து வந்த அரங்கநாதனை விபிஷணனுக்குக் கொடுக்க, அவன் அவரை இலங்கைக்கு எடுத்துச்செல்ல, வழியில் திருச்சியை அடுத்த சீரங்கத்திலே காவிரிக்கரையிலே வைக்க அந்த இடத்தின் அழகைக்கண்டு

அதை விட்டுப்பிரிய மனம் இல்லாதவராய் அங்கே காலை நீட்டிப் படுத்துக்கொண்டார் என்பர் ஒருசாரர். இல்லை பிரம்மாவுக்கும் சரஸ்வதிக்குமே ஒருபிணக்கு; அது காரண மாக பிரம்மா செய்ய விரும்பிய வேள்வியை அழிக்க சரஸ் வதியே ஒரு பெரிய ஆறாகப் பெருக்கெடுத்து வரும்போது, பிரம்மா செய்த பிரார்த்தனையின்படி, அவரது தந்தை யாம் விஷ்ணு ஆற்றின் குறுக்கே படுத்து ஆற்றின் வெள்ளத் தைத் தடுத்தார். என்பர் ஒருசாரர். முந்திய கதை ஸ்ரீரங்கம் என்னும் தலத்தை சேர்ந்தது என்றால் பிந்தியது உத்தரங்கம் என்னும் பள்ளி கொண்டானை சோந்தது. இன்னொரு காரணமும் இருந்திருக்கிறது என்று இப்போது தெரிகிறது. அகலிகையின் கணவ ரான கௌதமர் தம் பர்ண சாலையைக் காவிரிக் கரையிலே அமைத்திருக்கிறார். ஒருநாள் காவிரி நீர்பெருக்கிலே அந்தப்பர்ணசாலை அழிந்து விடும்போல் இருந்திருக்கிறது. அப்போது கௌதமர் தன்னையும் தன் பர்ணசாலையையும் காக்கும்படி பரந்தாமனைக் கூவியழைத்திருக்கிறார். பரந்தாமனுக்குத்தான் பழைய அனுபவம் இருக்கிறதே! மண்ணையெல்லாம் வெட்டிப்போட்டு உடைப்பை அடைப் பதை விட குறுக்கே படுத்து வெள்ளத்தை தடுத்து விடலாம் கௌதமரின் பர்ண சாலையைக் காத்துவிடலாம் என்று தோன்றியிருக்கிறது. சரிஎன்று காவிரிநதியின் குறுக்கே படுத்து விடுகிறார். நதியும் இருகூறாகப் பிரிந்து சென்றுவிடு கிறது. கௌமதர் குடிலும் காப்பாற்றப்படுகிறது. இதனா லேயே அந்த இடம் கௌதமச் க்ஷேத்திரம் என்று அழைக் கப்படுகிறது. அரங்கநாதன் பள்ளிக்கொண்ட இடத்தைச் சுற்றி ஒரு பட்டணமே தோன்றுகிறது'. அதனால் அந்த நகரம் சீரங்கப் பட்டணம் என்றே பெயர் பெறுகிறது. அந்த சீரங்கப்பட்டணத்திற்கே செல்கிறோம் நாம் இன்று.

சீரங்கப்பட்டிணம், மைசூர் பங்களூர் பெரும் பாதையில் மைசூருக்கு வடகிழக்கே மைசூரிலிருந்து பத்து

மைல் தொலைவில் இருக்கிறது. ரயிலில் போய் சீரங்கப் பட்டிணம் ஸ்டேஷனிலேயே 'ஜம்' என்று இறங்கலாம். இல்லை காரிலேயோ பஸ்ஸிலேயோ போய்ச் சேரலாம். ஊர்காவிரிகரையில் இருக்கிறது. ஸ்ரீரங்கத்தைப் போலவே காவிரியின் மத்தியில் அமைந்த தீவில்தான் அந்தப் பட்டணம் இருக்கிறது. ஊர் என்றதும் முதலில் நாம் காண்பது பழைய கோட்டையைத் தான். கோட்டையின் பிரதான வாயிலை யானை வாசல் என்கின்றனர். கோட்டை இடிந்துக் கிடப்பதால் அந்த யானை வாசல் வழியாகவும் போகலாம். இல்லை இக்கோட்டையின் மற்ற வழிகள் மூலமாகவும் போகலாம். இக்கோட்டை 1454—ல் திம்மண்ண நாயக்கர் என்பவரால் கட்டப்பட்டிருக்கிறது. இந்தப் பட்டிணத்திற்கும் ஐந்து மைல் தொலைவில் உள்ள கால்வாடி என்ற இடத்தில் இருந்த ஜைனக் கோயில்களை யெல்லாம் இடித்து அங்கு புதைத்திருந்த அளவற்ற செல் வத்தைக் கொண்டு கோட்டை கட்டப்பட்டது, என்று சரித்திர ஏடுகள் பேசுகின்றன. கோட்டை விஜயநகர மன்னர்கள் கையிலிருந்து மகம்மதியர்கள் கைக்கு மாறி யிருக்கிறது. இங்கு திப்புசுல்தான் கட்டிய மசூதி ஒன்று பிரமாதமாக இருக்கிறது. திப்பு கோட்டைக்கு உள்ளேயும் வெளியேயும் பல கட்டிடங்கள் கட்டியிருக்கிறார். வெளியே இருப்பவைதான் லால்பாக் என்ற தோட்டமும். தாரியா தௌலத் என்ற வசந்த மண்டபமும். இவைகளை ஊரிலிருந்து திரும்பும்போது போய்ப்பார்த்துக் கொள்ளுவோம். நாம் முதலில் கோட்டைக்குள் சென்று அங்கு கோயில் கொண்டிருக்கும் சீரங்கநாதரை முதலில் தரிசித்து விட்டே மேல் நடக்கலாம். ஊரின் வடமேற்குக் கோடியில் சீரங்கநாதர் கோயில் இருக்கிறது. கோயில் வாசலில் ஒரு பெரிய கோபுரம் இருக்கிறது. இங்கும் கோயில் வாயிலை காலை 8 மணிக்குத்தான் திறக் கிறார்கள். பகல் ஒரு மணிக்கு, மூடி திரும்பவும் மாலை 5-30 மணிக்குத்தான் திறக்கிறார்கள். இந்தக் கோயில்

தான் மைசூரில் உள்ள கோயில்களில் எல்லாம் பெரியது என்கிறார்கள். கோயில் 894—ல் திருமலைய்யா என்பவரால் கட்டப்பட்டது என்று கூறுவர். ஆனால் கோட்டையைக் கட்டிய திம்மண்ண நாயக்கர் சீரங்கப்பட்டிணத்திலேயே ராஜப்பிரதிநிதியாக இருந்திருக்கிறார். 101 சமணர் கோயில்களை இடித்து அதன்மூலம் கிடைத்த பொருள்களைக் கொண்டே கோட்டையையும் கோயிலையும் கட்டினார் என்பர். கோயில் வாயிலில் நுழைந்து உள்ளே சென்றால் விசாலமானதொரு வெளிப்பிரகாரம் இருக்கும். அதை அடுத்தே மகாமண்டபம். அந்த மகா மண்டபத்திலே, உத்சவகாலத்தில் உபயோகிப்பதற்காக அமைத்து வைக்கப்பட்டிருக்கும் தங்கமயமான கருட வாகனம் ஒன்று இருக்கும். அக்கருடனின் அனுமதி பெற்று மேல் நடந்தால் நவரங்கமண்டபம் வந்து சேருவோம். இந்த மண்டபத்து தூண்கள் எல்லாம் கடைந்து எடுத்தவை என்று என்னும்படி உருண்டு திரண்டிருக்கும்.

இங்குள்ள இரண்டு தூண்களை சதுர்விம்சதி தூண்கள் என்கின்றனர். அவைகளில் விஷ்ணுவின் இருபத்தி நாலு மூர்த்தங்கள் செதுக்கப்பட்டிருக்கின்றன. அந்த மண்டபத்திலிருந்து அர்த்த மண்டபம் சென்று அதன் பின்னரே கருவறையில் உள்ள சீரங்கநாதரைத் தரிசிக்கவேண்டும். இந்த ரங்கநாதர் தெற்கே தலைவைத்து வடக்கே காலை நீட்டி ஆதிசேக்ஷன் மேல் படுத்திருக்கிறார். நல்ல பெரிய வடிவம். இவரது உந்தியில் தாமரை பூத்திருக்கிறது. பக்கத்திலே ஸ்ரீ தேவி பூதேவியைக் காண இயலாது. காவேரித்தாய் கையில் தாமரை ஒன்றை ஏந்திய வண்ணம் சீரங்கநாதனின் காலடியில் உட்கார்ந்திருக்கிறாள். கௌதம முனிவருக்கும் கருவறையிலே இடம் கிடைத்திருக்கிறது. சீரங்கநாதர் காவிரித்திரு நதியிலே மூன்று இடத்தில் சயனித்திருப்பதாகவும், இந்த சீரங்கப் பட்டணம்தான். ஆதிரங்கம் என்றும் இடையிலே உள்ள சிவசமுத்திரம் மத்தியரங்கம் என்றும் திருச்சியை அடுத்த ஸ்ரீரங்கமே அந்தியரங்கம் என்றும் கணக்கிட்டிருக்கின்றனர்.

இந்தக் கோயில் மைசூர் அரச பரம்பரை சரித்திரத்திலே முக்கிய இடம் பெற்றிருக்கிறது. 1574-ல் நான்காம் சாமராஜ உடையார் இக்கோயிலில் பூசை செய்து கொண்டிருக்கும் போது விஜயநகர ராஜப்பிரதிநிதியே அவரைக் கைது செய்ய முயன்றதாகவும் சீரங்கநாதர் அருளால் உடையார் தப்பித்துச் சென்றதாகவும், வரலாறு கூறுகிறது. 1610-ல் விஜய நகர மன்னனின் ராஜப்பிரதிநிதியிடமிருந்து ராஜ உடையார் கோட்டையை கைப்பற்றியிருக்கிறார். பின்னர் ஹைதர் அலி படை எடுத்தபோது 1761-ல் இம்மன்னன் கிருஷ்ணராஜ உடையார், அவரது மனைவியார் மந்திரி ஆகிய மூவரும் ஸ்ரீரங்கநாதரை வணங்கிவிட்டு ஹைதரை எதிர்த்ததாகவும் தெரிகிறது, என்றாலும் ஹைதரே வெற்றிபெற்றிருக்கிறார். கோட்டை அவன் வசமாயிருக்கிறது. 1773-ல் கோயிலில் ஒரு வெடி விபத்து நேர்ந்திருக்கிறது. அதனால் சேதமுற்ற பகுதிகளை எல்லாம் ஹைதர் அலியே திரும்பவும் கொடுத்திருக்கிறார். திப்பு சுல்தான் பல கோயில்களை இடித்தார் என்பர். ஆனால் அவர் இந்த சீரங்கநாதர் கோயிலைத் தொடவே இல்லை. மேலும் பல அணிமணிகளையும் சீரங்கநாதருக்கு வழங்கியிருக்கிறார். இப்படி முரட்டு முகம்மதிய மன்னனையும் அடிமை கொள்ளும் திறம்படைத்தவராக இருந்திருக்கிறார் இந்தச் சீரங்கநாதர்.

இச் சீரங்கப்பட்டிணத்தில் இந்த ரங்கநாதர் கோயிலைத் தவிர இன்னும் சில கோயில்கள் இருக்கின்றன. ஒன்று கங்காதரேஸ்வரர் கோயில் மற்றொன்று நரசிம்மர் கோயில், கங்காதேஸ்வரர் கோயில் உத்சவர் தக்ஷிணா மூர்த்தியாக இருக்கிறார். நல்ல அழகான வடிவம். இந்த இரண்டு கோயில்கள்தவிர, அம்பேகல் கிருஷ்ணன் கோயில் என்று ஒரு சிறு கோயிலும் உண்டு. அங்கு தவழும் வடிவில் கிருஷ்ணன் இருக்கிறார். இந்தக் கோயிலைச் சுற்றி இடிந்த மண்சுவர்கள் இருக்கின்றன. அவை முன்பே அங்கிருந்த அரண்மனைக் கட்டிடங்களின் பகுதி என்கின்றனர்.

சீரங்கநாதர் கோயிலில் இரண்டு உத்சவங்கள் சிறப்பானவை ஒன்று தைமாதம் நடக்கும் ரதோத்ஸவம், மற்றொன்று ஐப்பசியில் நடக்கும் பிருந்தாவனோத்சவம், இரண்டு உத்சவகாலங்களிலும் மக்கள் திரளாகக் கூடுகின்றனர்.

சீரங்கப்பட்டிணத்தை விட்டுக்கிளம்புமுன், கோட்டைக்கு கீழ்புரம் உள்ள லால்பாக் தோட்டம் சென்று அதனை அடுத்துள்ள தாரியாதெளலத் என்னும் வசந்த மண்டபத்தையும் பார்த்து விடலாம். தாரியா தெளலத் ஓர் அழகான கட்டிடம்—சிறந்த வேலைப்பாடுள்ள தூண்களும் விதானங்களும் அமைந்தது. சுவரில் எல்லாம் சித்திரங்கள், சித்திரங்கள் எல்லாம் எத்தனை எத்தனையோ கதைகளைக் கூறும். இந்த வசந்த மாளிகை ஒரு பெரிய அரண்மனையாகவே இருக்கும். இன்று இந்த அரண்மனையைச் சுற்றிலும் தட்டிகள் அடித்து அதன் அழகைக் கெடுத்து வைத்திருக்கின்றனர் புதைபொருள் ஆராய்ச்சி இலாகாவினர். கேட்டால் அடிக்கும் காற்றிலும் வெய்யிலிலும் சித்திரங்கள் மங்குகின்றன. அதனால் தான் இந்தப் பாதுகாப்பு என்கிறார்கள். இந்த பாதுகாப்பு இல்லாத காலத்தில் எடுத்த படமே நேயர்களுக்கு காட்சி அளிக்கிறது. தாரியா தெளலத்திற்கு தென்பக்கம் நாலு பர்லாங்கு நடந்தால் அங்கு ஹைதர் அலி, அரண்மனை, திப்பு சுல்தான் முதலியவர்கள் அடக்கம் செய்யப்பட்டுள்ள சமாதிக்கட்டிடங்களைக் காணலாம். மன்னாதி மன்னர்களும் இப்படி மண்ணோடு மண்ணாகத்தானே போய்விடுகிறார்கள் என்ற வேதாந்தத்தை நாமும் உணர்ந்து ஊர்திரும்பலாம்.

# 4. சோமநாதபுரத்துக் கேசவன்

வேங்கடம் முதல் குமரிவரை நாம் யாத்திரை செய்த போது திருப்புன்கூரில் நந்தியும், திருக்குறுங்குடியில் துவஜஸ்தம்பமும் சந்நிதியை விட்டு விலகியிருப்பதைக் கண்டிருக்கிறோம். அந்த ஹரிஜன பக்தன் நந்தனுக்காக நந்தியை விலகச் சொல்லி சிவலோக நாதன் உத்தர விட்டிருக்கிறார். திருப்புன்கூரில் திருக்குறுங்குடியிலும் அதே போல நம்பாடுவான் என்ற பரம பாகவதனுக்கு தரிசனம் தரவே அழகிய நம்பியும் துவஜஸ்தம்பத்தை ஒதுக்கியிருக்கிறார். இந்த வேங்கடத்துக்கப்பால் செல்லும் க்ஷேத்திராடனத்தில் ஒரு தலத்தில் கோவில் மதிலுக்கும் வெளியே உள்ள கருட கம்பமே சந்நிதியை விட்டு விலகி நிற்கிறது. இது எப்படி நேர்ந்தது, இங்கும் யாராவது ஹரிஜன பக்தன் வந்திருந்தானா? என்று விசாரிக்க தோன்றும். அங்கும் ஒரு சுவையான கதை கிடைக்கும். கேசவனுக்கு ஒரு கோயில் கட்டியிருக் கிறார்கள். ஜக்கனாச்சாரி என்ற சிற்பியின் மேற்பார்வையில் கோயில் கட்டும் திருப்பணி நடக்கிறது. கோயில் முழுவதும் ஒரே சிற்பவடிவங்கள். எல்லாம் அற்புதம் அற்புதமான வடிவங்களாக அமைக்கின்றார். குறை என்று சொல்லி எடுத்துக்காட்ட ஒன்றுகூட இல்லை. இவ்வளவு அழகாக குறையே இல்லாத கோயிலை தேவர்கள் பார்க்கின்றனர். அடடா! இத்தகையதொரு கோயில் இருக்க வேண்டியது தேவர் உலகத்திலே அல்லவா. இதனை எப்படியாவது எடுத்து சென்று தேவர் உலகத்தை அழகு செய்து விட வேண்டும் என்று விரும்புகின்றனர் தேவர்கள். இதற்கு பிறகுதான், அன்று வேலூர் ஜலகண்டேஸ்வரர் கோயில் கல்யாண மண்டபத்தை அப்படியே பெயர்த்து எடுத்துச் சென்று பிரைட்டன் என்ற ஊரில் கலைக்கூடம் ஒன்று

அமைத்து விடவேண்டும் என்று ஒரு ஆங்கிலேய அதிகாரி எண்ணினான், என்ற கதை ஞாபகத்திற்கு வரும். அழகுணர்ச்சி நிறைந்த ஆங்கிலேயன் ஆசையில் தவ றொன்றும் இல்லையே. ஆனால் அவன் எண்ணிய எண்ணம் ஈடேறவில்லை. காரணம் அவன் தேவர்களைப் போன்ற அதிசய சக்தி உடையவனாக இல்லாதிருந்ததுதான். அழகிய கோயிலை தேவர் உலகிற்கு எடுத்து செல்ல விரும்புகிறார்கள் தேவர்கள். உடனே கோயிலுக்கே முளைக்கிறது இறக்கை, இரண்டு. கோயில் அஸ்திவாரத் தினையே பெயர்த்து வான வீதியிலே மிதந்து செல்லப் புறப்பட்டு விடுகிறது. கோயில் உள்ளே வேலை செய்து கொண்டிருந்த சிற்பி ஜக்கனாச்சாரி ஆபத்தை உணர் கிறார். குறையே இல்லாததினால் அல்லவா இந்த தேவர்கள் இக்கோயிலை வானுலகுக்கு எடுத்துச் செல்ல நினைத்துவிட்டனர். ஒரு குறையை உண்டாக்கி விடலாம். அவர்களுக்கு இந்த ஆசை போய்விடும் குறைவுள்ள கோயில் வானவீதியில் செல்ல இயலாது பூமியிலேயே தங்கிவிடும் அல்லவா? என்று எண்ணுகிறார். தன் சிற்றுளி யால் மூலமூர்த்தியாம் கேசவனது வடிவிலேயே ஒரு ஊனத்தை உண்டாக்கி விடுகிறார். அது காரணமாக வானவீதியில் பறந்த கோயில் திரும்பவும் பூமிக்கு இறங்கி வருகிறது. இறங்கி வரும்போது முன்னிருந்த இடத்தில் இறங்காமல் கொஞ்சம் விலகியே இறங்குகிறது. அதனால் மதிலுக்கு வெளியே இருந்த கருடகம்பம் வாயிலுக்கு நேரே அமையவில்லை. இப்படி கருட கம்பம் விலகி இருக்கும் கோயில்தான் சோமநாதபுரத்துக் கேசவன் கோயில். இந்த சோமநாதபுரத்துக் கோயிலுக்கே செல்கிறோம் நாம் இன்று.

சோமநாதபுரம் மைசூருக்குக் கிழக்கே இருப்பத்தி ஐந்து மைல் தொலைவில் இருக்கிறது. கோவை மாவட்டத் திலிருந்து மைசூர் ராஜ்யத்தோடு சேர்ந்திருக்கும் கொள்ளேகாலை நோக்கிச் செல்லும் பாதையில்

டி. நரசப்பூர் வரை சென்று காவிரியைக் கடந்து அதன் வடகரை சென்றால் கோயிலுக்கு செல்லலாம். சோமநாத புரம் சென்று சேர்வதற்கு பஸ் வசதி உண்டு. சொந்தக் காரிலே சென்றால் வசதியாகச் சென்று சேரலாம். கோயிலை அணுகும்போது முன்னரே குறிப்பிட்ட கருட கம்பம்தான் முதலில் நம் கண்ணுக்குத் தோன்றும். அதனை வலம் வந்து கோயில் வாயிலை நோக்கி நடக்கலாம். கோயிலின் வெளிப்புறம் பார்வை அவ்வளவு பிரமாதமாக இராது. நடுவிலே ஒரு பெரிய மாடத்திலே கோயில் அமைத்து, அதை சுற்றியும் ஒரு வெளிப்பிரகாரமும் அமைத்து, அந்தப் பிரகாரத்தைச் சுற்றி மண்டபங்கள் அமைக்கப்பட்டிருக்கும். நாம் முதலில் நுழைவது இந்த மண்டபத்தின் வாயில் வழியாகத்தான். இந்த மண்டபத்தில் சிற்ப வேலைப்பாடுகள் நிறைந்த தூண்கள் பல இருக்கும். இந்த மண்டபத்திலிருந்து பார்த்தால் நம் கண் முன் அற்புதமான சிற்ப வேலைகள் நிறைந்த அழகிய கோயில் ஒன்று இருப்பதைக் காண்போம். வெளி முற்றத்தில் இறங்கி கோயிலுக்குள் நுழையுமுன் அந்த வெளி முற்றத்திலேயே, நடந்து கோயிலை ஒரு சுற்று சுற்றலாம் என்றும் தோன்றும் கோயில் பெரிய கோயில் தான். அதன் நீளம் 215 அடி அகலம் 177 அடி என்றால் கோயிலின் அளவை கொஞ்சம் கற்பனைப் பண்ணிக் கொள்ளலாம் அல்லவா. கோயில் கிழக்கே பார்த்தக் கோயில், கோபுரத்தில் மூன்று மூர்த்திகள் பிரதிஷ்டை ஆகியிருப்பதால் மூன்று கோண அமைப்பில் பிரதான கோயில் கட்டப்பட்டிருக்கிறது. அதனாலேயே அக் கோயிலை திரிகூடாச்சரம் என்றும் அழைக்கின்றனர். கோயிலைச் சுற்றி ஓர் உயர்ந்த பீடம் அமைக்கப்பட்டிருக்கிறது. கோயில் சுவர்களில் எல்லாம் ஓடும் யானைகள், குதிரைகள் வரிசை வரிசையாக இருக்கின்றன. மேலும் இதிகாசங்கள், புராணங்களில் உள்ள கதைகளை விளக்கும் சிற்ப வடிவங்களும் அடுக்கடுக்காய் இருக்கும்.

பிரகலாதனது கதை முழுவதுமே சிற்பவடிவில் அமைந் திருப்பதைக் காணலாம். தென் பகுதியில் இராமாயணச் சிற்பங்களும், வடக்குப் பகுதியில் மகாபாரதச் சிற்பங் களும், மேற்குப் பகுதியில் பாகவதச் சிற்பங்களும் நிறைந் திருக்கின்றன. இவற்றைத் தவிர இன்னும் எண்ணற்ற தெய்வத்திருவுருவங்கள் எல்லாம் கோயில் சுவர் முழுவதும் உருவாகியிருக்கின்றன. சுவரிலே வெற்று இடம் காண்பது அரிது. விஷ்ணுவின் பல அவதாரங்களும் நரசிம்மன், வராகர் ஹயக்கிரீவர், வேணுகோபாலன், வாசுதேவர், இன்னும் பிரம்மன், சிவன், கணபதி, இந்திரன், மன்மதன், சூரியன், கருடன், லட்சுமி, சரஸ்வதி மஹிஷமர்த்தனி முதலிய வடிவங்கள் எல்லாவற்றையுமே அங்கே காணலாம்.

இத்தனையும் பார்த்த நான் கோயிலுள் நுழைந்தால் அப்படியே அதிசயித்து நிற்கவேண்டியதுதான். ஒவ்வொரு தூணும் அத்தனை வேலைப்பாடு நிறைந்தவை. விதானங் களில் பலவகையான சிற்ப வின்யாசங்கள். பிரதான கோயிலில் நிற்பவன் கேசவன். அவனை அடுத்து வட பக்கத்து கோயிலில் தெற்கே பார்க்க நிற்பவன் ஜனார்த் தனன். தென்பக்கத்து கோயிலில் வடக்கே பார்க்க நிற்பவன் கோபாலன். கேசவன், ஜனார்த்தனன், கோபாலன் எல்லாம் விஷ்ணுவின் வடிவங்களே. இவர்களில் குழல் ஊதும் கோபாலன் கிருஷ்ணாவதாரத்தில் நமக்கு அறிமுக மானவன். கேசவனும் ஜனார்த்தனனும் எந்த அவதாரத் தைச் சேர்ந்தவர்கள் என்று கேட்கத் தோன்றும். நமக்குத் தெரியும் மகாவிஷ்ணு ஆயிரம் பேர் பேர்த் தேவர் என்று. மகாபாரதத்தில் அனுசாசன பர்வத்தில் விஷ்ணுவின் சஹஸ்ரநாமங்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றன. அவைகளில் இருபத்திநான்கு அதிமுக்கியமானவை. அந்த இருபத்தி நான்கில் இரண்டு பெயர்கள்தான் கேசவன், ஜனார்த்தனன் என்பவை. இந்த மூர்த்தியின் வடிவங்களை நாம் ஹொய் சலர் காலத்திய கோயில்களில்தான் காண்கின்றோம். இந்த இருபத்திநான்கும் கிட்டத்தட்ட ஒன்று போலவே

இருக்கும். எல்லாம் நின்ற திருக்கோலங்களே. திரிபங்க நிலைகளை எல்லாம் காண இயலாது.. எல்லா வடிவங்களுக்கும் நான்கு திருக்கரங்களும், தலையில் கிரீடமும் சாதாரணமாய் அணியும் அணிகளும் இருக்கும். அங்கு சக்கரம், கதை பத்மம் ஏந்தும் முறைகளிலேதான் கொஞ்சம் கொஞ்சம் வித்தியாசம் இருக்கும்.இதன் விவரம் எல்லாம் ரூபமந்தனமும் பத்ம புராணமும் விரிவாய்க் கூறும். நான் விவரிக்க விரும்பவில்லை.

இந்த சோமநாதபுரத்து கோவிலுள்ள ஜனார்த்தனனும் கோபாலனுமே அழகு வாய்ந்தவர்கள். கேசவன் என்று இன்று இருப்பவன் பின்னாலே செய்யப்பட்டவனாகத்தான் தெரிகிறான். அவ்வளவு அழகுடையவனாகவும் காணோம். ஆம் ஜக்கன்னாச்சாரி என்ற சிற்பி அன்று இக்கோயிலை வானுலகம் செல்லாது தடுப்பதற்கு முதலில் கேசவன் திருவுருவத்திலேயே ஊனத்தை உண்டாக்கியிருக்கிறார். ஊனம் உடைய உருவை பூஜையில் வைக்கக்கூடாது என்பதற்காக அதனை அகற்றிப் பின்னர் புதிய கேசவனை செய்து வைத்திருக்கிறார்கள். இந்தக் கேசவனைச் செய்த சிற்பி அந்தப் பிரபல ஜக்கன்னாச்சாரியாக இருத்தல் முடியாது. இந்தக் கோயிலில் கோயில் கொண்டிருக்கும் ஒவ்வொரு மூர்த்தி முன்பும் ஒரு நவரங்க மண்டபம் இருக்கிறது. இந்தக் கோயிலின் பிரதான வாயிலின் முகப்பில் லட்சுமி நாராயணனும், வேணுகோபாலனும் தனியே இருக்கிறார்கள். இக்கோயிலில் ஒரு விசேஷம், இன்னின்ன மூர்த்தியை இன்னின்ன சிற்பிகள் செய்து அமைத்துள்ளார்கள் என்ற விவரமும் ஒவ்வொரு மூர்த்தியின் அடிப்பீடத்தில் செதுக்கப்பட்டிருக்கின்றது. சரித்திர ஆராய்ச்சிக்காரர்களுக்கு இது மிக்க உபகாரமாக இருக்கும்தானே. கோயிலையும் மூர்த்திகளையும் பார்த்தப்பின் வெளியே வரவே மனமிருக்காது. அத்தனை அழகு நிறைந்த கோயில் அது. அதனால் தானே ஹொய்சல மன்னர்கள் கட்டிய கோயில்களில் எல்லாம் சிறப்புடையது இதுவே என்று பெர்குசன் குறிப்பிடுகிறார்.

இக்கோயில் 1269-ம் வருஷம் ஹொய்சல மன்னரான மூன்றாம் நரசிம்மர் காலத்தில் அவரது உறவினரும் மந்திரி பிரதானியில் ஒருவராகவும் இருந்த சோமநாதர் என்பவரால் கட்டப்பட்டிருக்கிறது. கோயிலைச் சுற்றி ஒரு நகரும் நிர்மாணிக்கப்பட்டு, அந்த ஊருக்கு அவர் பெயரையும் சேர்த்து சோமநாதபுரம் என்றும் பெயரிடப்பட்டிருக்கிறது. கி.பி. பன்னிரெண்டாம் நூற்றாண்டிலே வைஷ்ணவ மதாச்சாரியரான இராமானுஜர், மைசூர் ராஜ்ஜியத்தில் தங்கியிருந்து வைஷ்ணவத்தை பரப்பியதின் காரணமாக அங்கே எழுந்த கோயில்களில் இதுவும் ஒன்று. அது காரணமாக இக்கோயில் கேசவன் கோயிலாகக் கட்டப்பட்டிருக்கிறது.

இங்குள்ள கல்வெட்டுக்கள், இங்கு பிரதிஷ்டை செய்யப்பட்டுள்ள மூர்த்திகளைப் பற்றி எல்லாம் விவரமாக கூறுகிறது. எல்லாவற்றையும்விட, விஷ்ணுவின் வராக அவதாரமே சிறப்பாக கூறப்பட்டிருக்கிறது. மூன்றாம் நரசிம்மன் வரை அப்பிரதேசத்தை ஆண்ட ஹொய்சல மன்னர்களின் வம்சாவழியும் விளக்கமாகத் தரப்பட்டிருக்கிறது. ஒரு கல்வெட்டில் ஹளபேடு என்னும் துவாரசமுத்திரத்தில் மந்திரி பிரதானிகளுடன் மூன்றாம் நரசிம்மன் கொலுவிருந்தபோது, சோமநாதன் அந்த மன்னனை வணங்கி சோமநாதபுரம் கேசவன் கோயிலுக்கு நிவந்தம் ஏற்படுத்தும்படி வேண்டினான் என்று குறித்திருக்கிறது. 1497-ல் ஏற்பட்ட ஒரு கல்வெட்டில் வசிட்ட முனிவர் இந்தப் பக்கத்திலே பர்னசாலை அமைத்திருந்ததாகவும் அந்தப் பர்னசாலையைச் சுற்றி அக்கிரகாரம் இருந்ததாகவும் அந்த அக்கிரகாரம் காலகதியில் அழிந்து போக அதனைத் திரும்பவும் உருவாக்க சாளுவ மன்னன் இம்மடி நரசிங்கன் உத்தரவிட்டான் என்று கூறுகிறது. இந்த அக்ரகாரத்தில் வேதம் ஓதுவதில் வல்லவர்களான அந்தணர்கள் இருந்ததாகவும் அங்குள்ள கிளிகளும் நாகணவாய்ப்புட்களும்கூட மீமாம்சம், தர்க்கம், வியாகரணம்

முதலிய சாஸ்திரங்களைக் கற்றிருந்தன என்றும் தெரிகிறது.

இக்கோயிலைக் கட்டிய சோமநாதன் சகலகலா வல்லவனாக இருந்திருக்கின்றான். அவனைப் பற்றி, அவன் புகழைப் பற்றி எல்லாம் விரிவாகவே கல்வெட்டுக்கள் பேசுகின்றன. மந்திரிகளில் அவர் ஒரு மாணிக்கம் என்றும் அரசியலில் அவன் ஒரு சாணக்கியன் என்றும் வியாபாரத்தில் அவர் ஒரு யுகாந்தரன் என்றும் புகழப்பட்டிருக்கிறான். இத்தனை புகழுக்கும் உரியவன் கேசவனுக்கு ஓர் ஆலயம் எடுத்து இன்னும் தன் புகழை பெருக்கிக் கொண்டிருக்கிறான். இந்தக் கேசவன் ஆழ்வார்களால் மங்களா சாஸனம் செய்யப்பட்டவன் இல்லை. ஆழ்வார்கள் காலத்திற்கெல்லாம் பின்னால் உருவானவன் அல்லவா? என்றாலும், அழகிய மணவாளதாஸன் என்னும் பிள்ளைப் பெருமாள் ஐயங்கார், திருவரங்கக் கலம்பகம் பாடும் போது, கேசவனை நினைக்கிறார்.

> கேசவனையே செவிகள்
> கேட்க; திரு அரங்கத்து
> ஈசனையே சென்னி
> இறைஞ்சிடுக; —நேசமுடன்
> கண்ணனையே காண்க இரு
> கண், இணர்கொள் காயாம்பூ
> வண்ணனையே வாழ்த்துக என்
> வாய் !

என்று அருமையான பாடல் ஒன்றும் பாடி இருக்கின்றார். ஆதலால் நாமும் கேசவன் புகழைக் கேட்டு அவன் வண்ணத்தை வாழ்த்திக் கொண்டே திரும்பலாம்.

# 5. மேல் கோட்டைத் திருநாரணன்



அகண்ட இந்தியாவில், இந்து முஸ்லிம்கள் ஒற்றுமை யாக வாழவில்லை என்ற புகார். அது காரணமாகவே,

இந்தியா சுதந்திரம் பெற்ற போது, மகம்மதியர்கள் பிரிந்து பாகிஸ்தான் என்று ஒரு தனி ராஜ்யம் ஸ்தாபித்துக் கொண்டார்கள் என்கிறார்கள். ஆனால் சமய உலகிலே, கலை உலகிலே இந்த இந்து முஸ்லிம் வேற்றுமை இல்லாதிருந்திருக்கிறது என்று அறிகிறபோது அது எவ்வளவோ மகிழ்ச்சி தரத்தானே செய்யும். விந்திய மலைக்கு வடக்கே இந்த இந்து முஸ்லிம் வேற்றுமை பல முறைகளில் வளர்ந்திருந்தாலும், விந்திய மலைக்குத் தெற்கேயுள்ள பிரதேசத்தில் இந்துக்களும் முஸ்லீம் சகோதரர்களும் யாதொரு வேற்றுமையும் இல்லாமல் ஒன்றாக வளர்ந்திருக்கிறார்கள். அதிலும் மைசூர் பிரதேசத்தில் ஆட்சி புரிந்த ஹைதர் திப்புசுல்தான் முதலிய மகம்மதிய அரசர்கள் இந்துக் கோயில்களுக்கு பல நிவந்தங்கள் ஏற்படுத்தியிருக்கிறார்கள். மூர்த்தி நாயுடு பல ஆபரணங்கள் பரிசளித்திருக்கிறார்கள். நஞ்சன்கோடு, சாமுண்டி மலை, ஸ்ரீரங்கப்பட்டினம் முதலிய தலங்களில் உள்ள மூர்த்திகளுக்குப் பல ஆபரணங்களைப் பரிசளித்திருக்கிறார்கள். நஞ்சன்கோடு, சாமுண்டிமலை, சீரங்கப் பட்டினம் முதலிய தலங்களில் உள்ள மூர்த்திகளுக்கு அவர்கள் அளித்த பரிசுகளைப் பற்றிதான் முன்னமேயே தெரிந்து கொண்டிருக்கிறோம். இதையெல்லாம்விட சுவையான வரலாறு ஒன்றும் நமக்கு கிடைக்கிறது. ஆம் அது தான் டில்லியில் இருந்து அரசாண்ட சுல்தானின் மகள் ஒருத்தி, நாராயண மூர்த்தியிடம் காதல் கொண்டு வாழ்ந்திருந்தாள் என்று கதை வருகிறது. தென்னிந்தியக் கோயில்களில் நுழைந்து அங்குள்ள பொருட்களை எல்லாம் முகம்மதிய மன்னர்கள் கொள்ளையடித்துச் சென்ற போது, ஒரு சிறு ஊரில் உள்ள நாராயணனின் விக்கிரகம் ஒன்றையும் எடுத்துச் செல்கிறார்கள். ஆனால் அந்த மூர்த்தியின் அழகில் மயங்கி, டில்லி சுல்தானின் மகள் அதைத் தன் அந்தப் புரத்துக்கே எடுத்து செல்கிறாள். அதனுடன் கொஞ்சி விளையாடுகிறாள். தன் காதலையே அதற்கு அர்ப்பணிக்கிறாள். இப்படிப் பலநாள் கழிகிறது.

சோழ நாட்டைவிட்டு, மைசூர் ராஜ்யத்திற்குச் சென்ற ராமானுஜர் அங்கு வைணவத்தைப் பரப்புகிறபோது, அக்கோயிலில் உள்ள மூர்த்தி டில்லிசுல்தானின் அரண் மனைக்குச் சென்றுவிட்டார் என்பதை அறிகிறார். அன்பர் பலரையும் கூட்டிக் கொண்டு டில்லி செல்கிறார். சுல்தா னிடம் பேசுகிறார். பல பொருட்களை மீட்டு வருகிறார். அப்படி மீட்டு வந்த பொருட்களில் சுல்தானின் மகளது அந்தப்புரத்தில் இருந்த நாராயணனுமே வந்து விடுகிறார்- யதாஸ் தானத்திற்கு. சுல்தானின் மகள் தான் காதலித்த மூர்த்தி போய்விட்டது என்று அறிந்ததும் அந்த மூர்த்தி யைத் தேடினாள். தேடிக்கொண்டு தெற்கேயே வரு கிறாள். அம்மூர்த்தி கோயில் கொண்டிருக்கும் கோயி லுக்கே வந்து சேருகிறாள். அம்மூர்த்தியின் திருவடியி லேயே விழுந்து வணங்குகிறாள். அம்மூர்த்தியும் அவளை தன்னுடன் ஐக்கியப்படுத்திக் கொள்கிறார். இந்த மூர்த்தி யைத்தான் ராமானுஜர் செல்வப்பிள்ளை என்று அழைத்தி ருக்கிறார். சுல்தானியர் பெயர் எம்மகு(ஆம் மம்மது என்ற பெயரின் திரிபுதான்) என்றும், சுல்தானின் மகள் பெயர் வரதநந்தினி என்றும் கர்ண பரம்பரைக் கூறுகிறது. இந்த செல்வப்பிள்ளை கோயில் கொண்டிருக்கும் தலம் தான் மேல்கோட்டை என்றும் திருநாராயணபுரம். அந்த திரு நாராயணன் புரத்துக்கே செல்கிறோம் நாம் இன்று.

இந்த மேல்கோட்டைக்கு ரயிலில் செல்ல விரும்புகிற வர்கள் பங்களூர் மைசூர் ரயில் பாதையில் உள்ள பாண்டவ புரம் ஸ்டேஷனில் இறங்க வேண்டும். அங்கிருந்து இருபது மைல் வடக்கு நோக்கிச் செல்லவேண்டும். இல்லையென் றால் மைசூரிலிருந்து ஸ்ரீரங்கப்பட்டணம் வழியாக நீலமங்கலா செல்லும் பாதையில் பஸ்ஸிலே போய் இறங்கி, கொஞ்ச தூரம் நடக்கவேண்டும். இந்த ரோட்டில் போகும் போதே மலைமேல் ஒரு கோபுரம் தெரியும் அது தான் மேல் கோட்டையின் பிரதான கோயில் என்று மயங்குவோம். அது பிரதான கோயில் அல்ல. மலை அடிவாரத்திலேதான் பிரதான கோயில் இருக்கிறது.

மைசூரிலிருந்து டாக்சி, அல்லது காரில் சென்றால், நேரே கோயில் வாசலிலேயே போய் இறங்கலாம். ஆனால் கோயில் வாயிலை அடுத்து இருக்கும் கீழ வீதியில் மைசூர் மகாராஜாவின் கார்களைத் தவிர மற்றக் கார்களை அனுமதிக்க மாட்டார்கள். ஆகையால் கொஞ்சம் அப்பிரதட்சணமாகவே வடக்கு வீதி, மேற்கு வீதி, தெற்கு வீதி கடந்து கீழ வீதிக்கு வந்து கோயில் வாசல் வரவேண்டும். கோயில் கிழக்கே பார்த்த கோயில். கோயில் வாயிலை பெரிய கோபுரம் ஒன்றும் அழகு செய்யாது. கோபுரம் என்று சொல்லவே லாயக்கற்ற ஒரு சிறு கோபுரம் தான் அங்கிருக்கும். ஒன்று மட்டும் அதிசயமாக இருக்கும். அங்குள்ள அர்ச்சகர்கள் எல்லாம் நல்ல தமிழ் நாட்டு அர்ச்சகர்களாகத்தான் இருப்பார்கள் அவர்களுக்கும் அந்தப் பிரதேச மொழியான கன்னடத்திற்கும் யாதொரு தொடர்பும் கிடையாது. எல்லோரும் ஸ்ரீரங்கத்து வைஷ்ணவர்களாகவே இருப்பதால் தமிழர்களாகிய நம்மைக் கண்டதும் ஆவலோடு வரவேற்பார்கள். தமிழிலேயே பேசி மகிழ்வார்கள். நம்மையும் மகிழ்விப்பார்கள். கோயில் நிரம்பப் பெரிய கோயிலும் அல்ல. சின்னக் கோயிலும் அல்ல. நடுத்தரமான கோயில். அங்குள்ள மண்டபங்களை எல்லாம் கடந்து சென்று மூலவரான திரு நாராயணனைக் காண்போம். சங்கு சக்கரம் ஏந்திய கையனாய் கண்களை அகலவிரித்து கொண்டு கொட்டு கொட்டென்று விழித்துக் கொண்டு நிற்பான் அவன். தலையை நீண்டுயர்ந்த கிரீடம் ஒன்று அணி செய்யும். வலது கரம் அபய முத்திரையோடு இருக்கும். இடது கை தாழ்ந்து கதையை ஏந்தியிருக்கும். பொன்னும் மணியும் வைத்து இழைத்த ஆபரணங்களைப் பூண்டு கம்பீரமாக காட்சி தருவான். அரையில் உடுத்தியிருக்கும் பட்டை விரித்துப் பக்கவாட்டிலே கட்டியிருப்பார். வலது அபயகரத்தையும் திருவடிகளையும் தங்க கவசம் அணி செய்யும். சேர்த்து வைத்திருக்கும் இரண்டு திருவடிகளுக்கும் இடையே ஒரு பெண்ணின் முகம் தோன்றும். அவள்தான் டில்லி சுல்தானின் மகளான

வரதநந்தினி. அவள் ஏதோ மகம்மதிய மதத்தினைச் சேர்ந்தவள். ஆனாலும் அவளுக்குக் கிடைத்திருக்கும் பேறு பெறற்கரிய ஒன்றுதான். இந்த திரு நாராயணனையே நம்மாழ்வார் மங்களாசாஸனம் செய்திருக்கிறார். திருவாய் மொழியில் நான்காம்பத்தில் ஒரு நாயகமாய் என்று தொடங்கும் பாசுரம் திரு நாராயணனைப் பற்றியது தான். நம்மாழ்வாரும் வரதநந்தினிக்கு இடங்கொடுத்து இருக்கும் நாரணன் தாள்களை சிந்தித்து உய்வதிலே மனதைச் செலுத்தியிருக்கிறார்.

ஒரு நாயகமாய் ஓட,
    உலகுடன் ஆண்டவர்
கருநாய் கவர்ந்த காலர்
    சிதைகிய பானையா
பெருநாடு காண இம்மையிலே
    பிச்சைதாம் கொள்வர்
திரு நாரணன் தாள்காலம் பெறச்
    சிந்தித்து உய்மீனோ !

என்பதுதானே நம்மாழ்வரது பாசுரம் ! இந்தப் பாசுரத்தை ஓதி திருநாரணன் தாளை வணங்கித் திரும்பும்போது ரங்க மண்டபத்தின் தென்பகுதியிலே தனி ஆஸ்தானத்திலே உற்சவ மூர்த்தியான செல்வப்பிள்ளை ஸ்ரீதேவி பூதேவி சகிதம் ஒரு அழகிய மஞ்சத்திலே நிற்பார். இவர்தான் அன்று டில்லி வரை சென்று சுல்தான் மகம்மது அன்பிற்கும் காதலுக்கும் பாத்திரமாகி பின்னர் மேல் கோட்டைக்கு, ராமானுஜரால் கொண்டு வரப்பட்டவர். இவரை இன்று செல்வப்பிள்ளை ராயர் என்று அழைக்கிறுர்கள். ஆம் வரதநந்தினி என்னும் சுல்தான் மகளால் செல்வமாக பராமரிக்கப்பட்டவர் அல்லவா? அவர் இன்று பக்தர் களுக்கு எல்லாம் செல்வப்பிள்ளையாக இருப்பது பொருத்தம்தானே. இவரை ராமப்பிரியர் என்றும் அழைக் கிறார்கள். இராமானுஜரால் சிறைமீட்கப் பெற்றவர் ஆயிற்றே, ஆதலால் ராமப் பிரியராயிருக்கிறுர் போலும்

திருநாரணன், செல்வப்பிள்ளையை எல்லாம் வணங்கிய பின் கோயிலை வலம் வந்து வடக்குப் பிரகாரம் வந்தால் அங்கே ஒரு பெரிய முன் மண்டபத்துடன் கூடிய கோயில் இருக்கும். அதுதான் தாயார் சந்நதி. அந்த மண்டபத்தினை தூண்களில் எல்லாம் சிற்ப வேலைகள் நிறைந்ததாக இருக்கும் இந்தத் தனிக்கோயில் தாயாரையும் வணங்கி வெளிவந்தபின் பக்கத்தில் உள்ள மலைமீது ஏறுவோம். மலை ஏறுவதற்கு படிகள் இருந்தாலும், அவை செங்குத்தாய் இருப்பதால்; ஏறுவது கொஞ்சம் சிரமமாக இருக்கும். மலை உயரம் எல்லாம் அவ்வளவு அதிகம் இல்லைதான். மலைமேல் ஏறும்போது பாதி வழியில் வீர அனுமாருக்கு ஒரு கோயில் இருக்கிறது. மலை உச்சியில் கோயில் கொண்டிருப்பவர்தான் யோக நரசிம்மர். அவரது கோயில் கோபுரமே, நாம் அந்த ஊரை அணுகும்போது மலைமேல் தெரிந்த கோபுரம். வீர அனுமாரையும் யோக நரசிம்மரையும் தரிசித்து வணங்கிவிட்டு திரும்பலாம்.

இத்தலத்தை தக்ஷிணபத்ரிகாச்சிரமம் என்பர். அதற்கேற்ப இக்கோயிலில், தலவிருட்சமாக இருப்பது இலந்தை மரமே. பத்ரி என்றால் இலந்தை என்றுதானே பொருள்; இக்கோயிலில் நடைபெறும் உற்சவங்களில் எல்லாம் சிறப்பானது வைரமுடி சேவைதான். இத்தலத்தில் உள்ள செல்வப் பிள்ளைராயன் என்னும் சம்பத்குமாரனுக்கு நல்ல அழகிய வைரம் இழைத்த மகுடம் ஒன்றிருக்கிறது. அது துவாரகையிலிருந்து ஆண்ட கிருஷ்ண பரமாத்மாவே செய்து அளித்தது என்கின்றனர். அந்த வைரமுடி இன்று இருப்பது மைசூர் அரசர்களின் கஜானாவில். அதை அங்கு ஆண்டுக்கொருமுறை மைசூரிலிருந்து கோலாகலமான விருதுகளுடன் கொண்டுவருவர். அதை செல்வப் பிள்ளையாருக்கு அணிவித்து அவரை எழுந்தருளப் பண்ணுவர். இந்த வைரமுடி சேவையைக் காண பதினாயிரக் கணக்கான மக்கள் இன்றும் கூடுகின்றனர். இந்த வைரமுடி அணிந்து உலாவரும் செல்வப்பிள்ளையின் திரு உரு கண்கொள்ளாக்காட்சியாக இருக்கும்.

இம் மேல்கோட்டை திருநாராயணன் கோயிலைப் பற்றிய வரலாறுகள் அனந்தம். பன்னிரண்டாம் நூற்றாண்டில் சோழ அரசர் குலோத்துங்கன் வைணவர் களைக் கொடுமைப் படுத்தியபோது ராமானுஜர் தமிழ் நாட்டைவிட்டு ஓடி இங்கு வந்து சேர்ந்திருக்கிறார். அப்போது அவரது கனவில் திருநாரணன் தோன்றி தனக்கு ஒரு கோயில் கட்டிக்கொடுக்க வேண்டி இருக்கிறார். அதன்படியே காடாக இருந்த இடத்தையெல்லாம் வெட்டி எடுத்து கோயில் கட்டியிருக்கிறார். மேல்க் கோட்டைக்குப் பக்கத்தில் உள்ள தொண்டனூரில் பதினாறு வருஷகாலம் இந்த திருப்பணியை இருந்து முடித்திருக்கிறார். இந்த திருநாராயணன் புதையுண்டு கிடந்த இடத்திலே இருந்த வெள்ளைச் சுண்ணமே வைணவர்களது திருமண் காப்பிற் குப் பிறகு உதவியிருக்கிறது. திரிபுண்டரத்தையும் ஸ்ரீ சூர்ணத்துடன் ஸ்ரீவைஷ்ணவர்கள் தரிக்கும் பழக்கம் அன்றே ஏற்பட்டிருக்கிறது.

பதினான்காம் நூற்றாண்டில் துவார சமுத்திரத்தை பாழ்படுத்திய முகம்மதியர்கள் இவ்வூருக்கும் வந்திருக் கிறார்கள். கோயிலை இடித்திருக்கிறார்கள். 1614-ம் ஆண்டிலிருந்து இக்கோயிலின் மேற்பார்வை மைசூர் அரசர்களிடம் வந்திருக்கிறது. அதன் பின்தான் இக் கோயில் செல்வப் பெருக்குடன் விளங்கியிருக்கிறது. 1785ல் எழுதப்பட்டுள்ள சிலாசாசனம் ஒன்றின் மூலம், திப்புசுல்தான் இக்கோயிலுக்கு யானைகளை வெகுமதியாக அளித்திருக்கின்றான் என்று தெரிகிறது. மைசூர் சமஸ்தானத்தை 1578-முதல் 1617-வரை ஆண்டவர் ராஜ உடையார். இவர் திரு. நாராயணனிடம் அத்யந்த பக்தி உடையவர். அவர் திரு. நாராயணனுக்கு நவரத்தின மயமான கிரீடம் ஒன்றை அளித்திருக்கிறார். செல்வப் பிள்ளைக்கு அணிவிக்கும் வைரமுடியைப் போலவே இதனையும் ராஜமுடி என்றே அழைக்கிறார்கள். 1842-ல் கிருஷ்ணராஜ உடையார் மனைவியான ராணியார்

கிருஷ்ணவிலாச சந்நிதானம் மலைமேல் இருக்கும் நரசிம் மருக்கு தங்க நகைகள் அணிவித்திருக்கிறார். இவரும் இவரது கணவரும் மேல்கோட்டைக்கு திரு. நாராயண னைத் தரிசிக்க வந்திருக்கிறார்கள். கர்ப்பவதியாயிருந்த ராணியை மலையடிவாரத்திலேயே விட்டுவிட்டு மன்னர் மட்டும் நரசிம்மரைத் தரிசிக்க மலை ஏறி இருக்கிறார். அப்படி ஏறிச்சென்ற மன்னர் அறுபதடி அடி உயரத்தி லிருந்து கால் தவறி உருண்டிருக்கிறார் என்றாலும், அவரது உடலிலே ஒருவிதமான காயமும் ஏற்படவில்லை. இந்த அற்புத நிகழ்ச்சியின் ஞாபகார்த்தமாகவே ராணியார் நரசிம்மருக்கு உயர்ந்த அணிகளை செய்து அணிவித்தார் என்கின்றனர்.

இவ்வூரில் வசிப்பவர்களில் பெரும்பகுதியினர் தமிழ் நாட்டு வைணவர்களே. அவர்களில் நானூறுக்கு மேற் பட்டவர் கோயிலைச் சார்ந்தவர்கள். அவர்களுக்கு தினப் படி கோயிலிலிருந்து பத்தாயம் கிடைக்கிறது. கோயிலைச் சேர்ந்த ஏவலாளிகள் பலர் ஹரிஜன சகோதரர்கள். இன்னும் திருக்குலம், ஜாம்பவகுலம் என்ற பெயரோடு புலையர் கூட்டத்தாரும் இருக்கிறார்கள். இவர்களை எல்லாம் ஆண்டுக்கு ஒருமுறை திருநாராயணனை தரிசிக்க கோயிலுக்குள் விடுகின்ற பழக்கம் நீண்ட காலமாக இருந்து வருகிறது. இவர்கள் தாம் ராமானுஜர் டில்லிவரை சென்று சம்பத்குமாரனை திரும்பவும் மேல்கோட்டைக்கு கொண்டு வர உதவியவர்கள் என்று வரலாறு கூறுகிறது. நாமும் இத்திருக்குலத்தாருடன் சேர்ந்தே திரு நாராயணனையும் சம்பத்குமாரனாம் செல்வப்பிள்ளையையும் வணங்கி ஊர் திரும்பலாம்.

# 6. சிரவண பெலகோலா கோமதேஸ்வரர்



எகிப்து நாட்டு சிற்பவடிவங்கள் தொன்மையானது, சிறப்புடையது. மேன்மை மிக்கது என்பர். ஏன் நமக்குத்

தான் தெரியுமே அங்குள்ள பிரமிடுகள் உலகப் பிரசித்தி பெற்றவை என்று. அங்குள்ள சிலைகளில், தனிப்பட்ட உருவச்சிலைகளில் பெரியது சிறந்தது ரமேசஸ் என்ற அரசனின் சிலைதான் கி.மு பதின்மூன்றாம் நூற்றாண்டில் ஆண்ட அரசன் அவன். ஆம் 3300 வருஷங்களுக்கு முன் இருந்திருக்கிறான். அவன் வடிவில் அமைத்த சிலையே உருவத்தால் பெரியது, வனப்பில் சிறந்தது என்பது மேலை நாட்டு கலை விமர்சகர்களது அபிப்பிராயம். ஆனால் பெர்கூசன் என்ற விமர்சகர் சொல்கிறார், இந்த ரமேசஸ் சிலையைவிட உயரமானதும், கம்பீரமானதும், மிக்க அழகு வாய்ந்ததுமான சிலை ஒன்று இந்தியாவில் இருக்கிறது. அந்தச் சிலைதான் சிரவண பெலகோலாவில் இருக்கும் கோமதேஸ்வரர் சிலை. இந்தச் சிலை இருப்பது ஒரு மலையின் உச்சியில். சிலையின் உயரம் 58 அடி. இவ்வளவு பிரம்மாண்டமான கம்பீரமான சிலை உலகத்தில் வேறு எந்த பாகத்திலுமே இல்லையாம். இந்த சிலை வடிவை நாம் காண வேண்டாமா? அந்த வடிவினைக் காணவே நாம் சிராவண பெலகோலா என்ற தலத்திற்கு செல்கிறோம் இன்று.

சிரவண பெலகோலா மைசூர் ராஜ்ஜியத்தில் சென்னிராயப்பட்டிணத்திற்கு தெற்கே எட்டு மைல் தொலைவில் இருக்கிறது. ரயிலில் போவதானால் மைசூரிலிருந்து ஹாஸனுக்குப் போய் அங்கிருந்து 31 மைல் கிழக்கு நோக்கி வரவேண்டும். இல்லை காரிலேயே போவதானால் மைசூரிலிருந்து வடக்கு நோக்கி 62-மைல் போக வேண்டும். பங்களூரிலிருந்து 99-மைல் மேற்கே போனாலும் போய்ச் சேரலாம். சென்னராயப்பட்டணம் வரை நல்ல பஸ் வசதி உண்டு. அதன்பின் வண்டி வைத்துத்தான் செல்ல வேண்டும். இதென்ன சிரவண பெலகோலா கோமதேஸ்வரர் என்றெல்லாம் சொல்கிறீர்கள் வாயில் நுழைய மாட்டேன் என்கிறதே என்றுதானே நினைக்கிறீர்கள். ஆம் அவையெல்லாம் சமண மதத்தைச் சேர்ந்தவை, நமக்கு முன் பின் பழக்கமானவை அல்லதான். ஆனால் சிரவண

பெலகோலா என்றால் சிரவணன் என்ற ஜைன முனிவரால் அமைக்கப்பட்ட வெள்ளைக்குளம். பெல என்றால் கன்னடத்தில் வெள்ளை நிறம். கோலா என்றால் குளமாம். இதனையே சமஸ்கிருதத்தில் சொன்னால் ஸ்வேதசரோ வரம் என்றும் சொல்லலாம். இல்லை நல்ல தமிழிலேயே சொல்ல விரும்பினால், பால்குளம் என்று கூறிவிடலாம். ஒரு பழங்குடுக்கையில் கொண்டு வந்த பாலால் கோமதேஸ் வரரை ஒரு பெண்மணி அபிஷேகம் செய்ய அந்த பால் பெருகி குளமாய் நின்ற காரணத்தால்,' இதனைப் பால் குளம், ஸ்வேதசரோவரம். இல்லை, பெலகோலா என் றெல்லாம் அழைத்திருக்கிறார்கள்.

சரிதான். பெலகோலாவிற்கு விளக்கம் சொல்லி விட்டீர். இந்த கோமதேஸ்வரர் யார் என்று அறிமுகப் படுத்தவில்லையே என்கிறீர்களா? ஒரு வேளை இவர் நமது அன்னை கோமதியின் கணவரான ஈஸ்வரனே தானோ என்று சந்தேகிக்கிறீர்களா? ஒன்று சொல்ல விரும்புகிறேன். சங்கரன் கோயிலில் கோயில் கொண்டிருக் கும் கோமதிக்கும் இந்த கோமதேஸ்வரருக்கும் யாதொரு தொடர்பும் இல்லை. சைவ கோமதி வேறு. சமண கோம தேஸ்வரர் வேறு. ஜைனர்கள் வணங்கும் தீர்த்தங்கரர் களில் முதல்வர் பூருதேவர் என்பவர். அவருக்கு இரண்டு பிள்ளைகள். மூத்தவன் பரதன். இளையவன் பாகுபலி என்றும் புஜபலி என்றும் பெயர் பெற்றவன். தந்தை ஆண்ட ராஜ்யத்தை ஆளுவதற்கு அண்ணனும் தம்பியுமே போரிட்டு இருக்கிறார்கள். போரில் இளையவனான புஜபலியே வென்றிருக்கிறான். ஆனால் போரில் நடந்த உயிர்ப்பலியை எல்லாம் புஜபலி கண்டு மனம் நொந்து, தான் வெற்றி கண்டு பெற்ற ராஜ்யத்தை அண்ணன் பரதனிடமே கொடுத்துவிட்டு தான் துறவியாக மாறி இருக்கிறார். துறவிலும் வெற்றி கண்டு, உலகம் முழுவதை யுமே, ஆம், ஆடை அணிகளையும் துறந்தவனாக நின்றிருக் கிறான். இந்த புஜபலி என்ற துறவியையே கோமதேஸ் வரர் என்று அழைத்திருக்கிறார்கள். அவரது அண்ணனான

பரதன் பௌதானபுரத்தில் தம்பிக்கு—அதாவது துறவிக்கு சிலை அமைத்து வணங்கியிருக்கிறார். நாளடைவில் அந்தச் சிலை புதர் மண்டி இருந்த இடம் தெரியாமலேயே போயிருக்கிறது. பின்னர் மைசூரை ஆண்ட சாமுண்ட ராயன் என்னும் அரசன், கோமதேஸ்வரனது தியாகம், துறவு எல்லாவற்றையும் கேள்விப்பட்டு அவனுக்கு ஒரு சிலை அமைக்க எண்ணியிருக்கிறார். ஏதோ பூமியின் தளத்திலே சிலை அமைத்தால்தானே புதர் மண்டும். மலையின் உச்சியிலேயே அமைத்து விட்டால் அதற்கு அழிவேது என்று கருதியவனாய், இந்திரகிரி என்னும் மலைச் சிகரத்திலேயே மலையையே வெட்டிச் சரிசெய்து கோமதேஸ்வரனை ஓர் அற்புதமான சிலையாகச் செய்து, நிறுத்தியிருக்கிறார். இதுதான் இன்றிருக்கும் கோமதேஸ்வரரது சிலையின் கதை. இந்த கோமதேஸ்வரர் இப்படி உருவானது 978-ம் வருடத்தில்-ஆம். தமிழ் நாட்டில் ராஜராஜசோழன் பெரிய கோயிலைக் கட்டி பெரு உடையாரை ஸ்தாபித்தானே ஏறக்குறைய அதே காலத்தில்தான். இக்கோமதேஸ்வரர் இன்னும் இரண்டிடங்களில் சிலை வடிவம் பெற்றிருக்கிறார், இவரும் தென் கன்னடம் ஜில்லாவில் கர்க்கலா என்ற இடத்திலும் என்னூர் என்ற இடத்திலும் நிற்கின்றனர். இவைகளில் கர்க்கலாவில் நிற்பது 45 அடி உயரம் உடையது. என்னூரிலிருப்பது 35 அடி உயரம் மட்டுமே உடையது. ஆனால் சிரவண பெலகோலாவில் உருவாகியிருப்பது 58 அடி உயரத்தில்-ஆதலால் இந்தச் சிலையே மிக உயர்வானது என்பர், கலைஞர்கள், இதுவே சிறப்பானது என்பர் சமணர்கள். இத்தனை விஷயமும் தெரிந்து கொண்டபின் நேரே இத் தலத்திற்குச் செல்லுவது நல்லது.

காரில் சென்றால் நாம் முதலில் ஊருக்கு மத்தியில் உள்ள குளக்கரை சென்று சேரலாம். இதனையே கல்யாணி குளம் என்றழைக்கின்றனர். இக்குளத்தை சுற்றி நல்ல படிக்கட்டுகள் கட்டி வைத்திருக்கிறார்கள். வடபுறம் ஒரு மண்டபமும் அமைத்திருக்கிறார்கள். அம்மண்டபத்தில்

உள்ள தூண்களில் இக்குளத்தை வெட்டியவர் சிக்கதேவ ராஜேந்திரன் என்றும் பொறித்து வைத்திருக்கிறார்கள். இக்குளத்திற்கு வடபுறம் இருப்பது சந்திரகிரி. தென்புறம் இருப்பது இந்திரகிரி. நாம் காண வந்திருப்பது கோமதேஸ்வரரை. அவர் இருப்பது இந்திரகிரியில். இந்த மலை, அடிவாரத்திலிருந்து 470 அடி உயரம் இருக்கிறது. இதன் குறுக்களவு கால் மைல் இருக்கும். இனி மலை ஏறவேண்டியது தான். மலையில் படிகள் வெட்டியிருக்கிறார்கள். சுமார் 500 படி ஏறினால்தான் கோமதேஸ்வரரைக் காணமுடியும். ஒரேயொரு எச்சரிக்கை. மலையில் வழியில் மண்டபங்கள் ஒன்றும் கிடையாது. ஆதலால் காலை 9 மணிக்குள் ஏறி 10 மணிக்குள் திரும்பி விடவேண்டும். இல்லாவிட்டால் பாறையில் அடிக்கும் வெயிலில் காலை வைத்து ஏறவே முடியாது. மலை அடிவாரத்தில் பிரமதேவருக்கு ஒரு கோயில் இருக்கிறது. இவரை ஜருகம்பே அப்பா என்கின்றனர். மலையின் உச்சியில் கோட்டை போல ஒரு சுவர் எழுப்பியிருக்கிறார்கள். அந்தக் கோட்டைச் சுவர்க்குள்ளே தான் சில கோயில்கள் இருக்கின்றன. முதலில் நாம் சென்று சேர்வது சவுசதீர்த்தங்காபஸ்திக்குதான். அது ஒரு சிறு கோயில். கருவறையில் இருபத்தொரு தீர்த்தங்கரரது வடிவங்கள், உட்கார்ந்திருக்கும் பாவனையில் செதுக்கப் பட்டிருக்கின்றன. இக்கோயிலுக்கு மேற்கே இருப்பது சென்னானபஸ்தி இங்கு கோயில் கொண்டிருப்பவர் ஆதிநாதர். இவரது கோயில் வாயிலிலே மானஸ்தம்பம் ஒன்று நிற்கிறது. இதன் பக்கத்திலே இருப்பது ஒடேகல்பஸ்தி. இதனையே திரிகூட பஸ்தி என்கின்றனர். இங்கு மூன்று கருவறைகள் இருக்கின்றன. இது ஹொய்சல மன்னர்களால் கட்டப்பட்டிருக்கவேண்டும். இங்கு கோயில் கொண்டிருப்பவர் ஆதிநாதர், நேமிநாதர், ரிஷபநாதர் என்பவர்கள். இவர்களில் ஆதிநாதர் என்பவர்தான் பூருதேவர். அவர்தான் கோமதேஸ்வரரின் தந்தை. இனி தான் கோமதேஸ்வரர் கோயில் கொண்டிருக்கும் இடத்திற்கு படியேறிச் செல்ல வேண்டும் கோயில் வாயிலில்

தியாகட பிர்ம தேவர் தூண் ஒன்றிருக்கிறது. இதனைத் தளிர்க் கொடிகள் சுற்றியிருப்பது போல் அமைத்திருக் கிறார்கள். கலை அழகு நிரம்பிய தூண் இது. இந்தத் தூணை சுற்றிக் கொண்டு கோயில் வாயிலாம் அகண்ட துவாரத்தில் நுழைந்து மேற்செல்ல வேண்டும். கோயில் வாயிலில் மேற்கு நோக்கியவண்ணம் ஒரு சித்தரும் இதற்கு எதிர்த்திசையில் குல்லகயாஜி என்ற பெண்ணின் வடிவமும் இருக்கிறது. இந்த குல்லகயாஜி என்ற பெண்தான் ஒரு குடுவையில் பால் கொண்டு வந்து கோமதேஸ்வரருக்கு அபிஷேகம் செய்திருக்கிறாள். அந்தப் பாலே பெரிய குளமாகப் பெருகியிருக்கிறது. இவர்களை எல்லாம் வணங்கிவிட்டே உள்பிரகாரம் செல்ல வேண்டும். அங்குதான் வானம் மணிமுகடாய், 58 அடி உயரத்தில் கோமதேஸ்வரர் நிற்கிறார். அன்று மண்ணை அளக்க மால் வளர்ந்து நின்றான் என்று திரிவிக்கிரமனை நினைத் திருக்கிறோம். அந்தத் திரிவிக்கிரமன் வடிவம் எல்லாம் சிறிய வடிவமாகவே இருக்கப் பார்த்திருக்கிறோம். இங்கே வானுற நிமிர்ந்து நிற்கும் கோமதேஸ்வரரைப் பார்த்த பின்தான் எப்படித் திருவிக்கிரமன் வளர்ந்திருப்பான் என்று கற்பனை செய்து கொள்ளத் தோன்றும். உயரத் திற்கு ஏற்ற மார்பு, 24 அடி அகலம். அன்று வாணர் குலத்து வீரன் ஒருவனைப் பற்றி புலவன் ஒருவன் பாடினான்.

> பேரரசர் தேவிமார்
> பெற்ற மழலையர்தம்
> மார்பகலம கண்டு
> மகிழ்வரே—போர்புரிய
> வல்லான் அகளங்கன்
> வாணன் திருநாமம்
> எல்லாம் எழுதலாம் என்று

இதைப்போல் நாமும் இந்த கோமதேஸ்வரனது மார்பகலம் கண்டு மகிழலாம். இந்த அற்புதச் சிற்ப

வடிவில் அந்த முகத்தில் இருக்கின்ற அழகு இருக்கிறதே, அது சொல்லும் திறத்தது அன்று. ஏதோ ஆழ்ந்த சிந்தனையில் இருப்பதோடு, இந்த உலக மக்கள் படும் துயரத்தையெல்லாம் நினைந்து அதை நிவர்த்திக்க வழி வகுக்கும் முறையில் உதடுகளில் ஒரு புன்னகையை தவழவிட்டிருக்கும் நிலை இருக்கிறதே அது பிரமாதமாக இருக்கிறது. இடுப்பிற்கு மேல் உள்ள அளவிற்கு இடுப்பிற்கு கீழே உள்ள அளவு போதாது என்று அங்க நிர்மாண சாஸ்திரம் அறிந்தவர் குறை கூறலாம். ஆனால் ஒரே பாறையில் இப்படி ஒரு அற்புத சிருஷ்டியை உருவாக்கியிருக்கின்றதைக் கண்டு அதிசயிக்காமல் இருக்க முடியாது. அதிலும் தொடை வரையே பக்கபலம் அமைத்து அதன் மேல் யாதொரு பலமும் இல்லாமலேயே சிலை செதுக்கியுள்ள நேர்த்தி வியப்பையே ஊட்டும். இந்த வடிவிற்கு அபிஷேகம் நடப்பது பல ஆண்டுகளுக்கு ஒருமுறைதான் கடைசியாக நடந்தது 1953-ல் தான். இந்தப் பெரிய கோமதேஸ்வரர் காலடியில் கோமதேஸ்வரரது செப்புச் சிலை வடிவம் ஒன்றும் இருக்கிறது. பக்கத்திலே சாமரை ஏந்திய யக்ஷன் ஒருவனும், யக்ஷிணி ஒருத்தியும் 6 அடி உயரத்தில் நிற்கிறார்கள். பக்கத்திலேயே அபிஷேக நீர் தங்கும் லளித சரோவரம் என்னும் குழி ஒன்றும் இருக்கிறது. இந்த கோமதேஸ்வரரைச் சுற்றிக் கட்டியிருக்கும் மண்டபங்களில் தீர்த்தங்கரரது வடிவங்கள் இருக்கின்றன. 24 தீர்த்தங்கரர்களின் வடிவங்களும் இருக்கின்றன என்று சொல்வதற்கில்லை. இந்த கோமதேஸ்வரர், தீர்த்தங்கரர்களை எல்லாம் வணங்கிய பின் மலையிலிருந்து கீழே இறங்கலாம்.

இதன்பின் அவகாசம் இருப்பவர்கள் பக்கத்தில் உள்ள சின்ன மலையாகிய சந்திரகிரியிலும் ஏறலாம். இது 175-அடி உயரமே உள்ள சின்ன மலை. இங்கு கிட்டதட்ட எல்லாக் கோயில்களுமே ஒரு கோட்டைக்குள்ளே இருக்கின்றன. அவைகளில் சிறப்பு என்னவென்றால், அவை

எல்லாமே நம் தமிழ் நாட்டுக் கோயில்களைப் போலவே திராவிட சிற்ப முறையில் அமைந்திருக்கும். இவைகளில் முக்கியமானவை சாந்திநாத பஸ்தி, பார்சவராத பஸ்தி, சந்திரகுப்த பஸ்தி சாமுண்டாலியபஸ்தி என்பவையே. இங்குள்ள மகாநவமி மண்டபம், அதில் உள்ள தூண்கள் எல்லாம் நல்ல சிற்ப வேலைப்பாடு அமைந்தவை.

ஒன்று சொல்ல மறந்து விட்டேனே. இத் தலத்தில் உள்ள கோமதேஸ்வரர் தீர்த்தங்கரர், பரதேஸ்வரர் முதலிய வடிவங்கள் எல்லாமே திகம்பர வடிவங்கள் ஆடை ஒன்றும் அணியாது. பூரண நிர்வாண நிலையிலேயே இருப்பவர்கள். இவர்களைப் பார்க்கும்போது இரண்டு நகைச் சுவை துணுக்குகள் ஞாபகத்திற்கு வரும். தமிழ் நாட்டில் ஒரு ஏர் வைத்து உழுது விவசாயம் செய்து அதனால் பொருள் எல்லாம் இழந்து, ஒரே கோவணத்துடன் ஓடிய விவசாயி இந்த சமண விக்கிரகம் ஒன்றைப் பார்த்தபோது ஐயனே நான் ஒரு ஏர் வைத்து விவசாயம் செய்து இந்தக் கோவணத்தோட இருக்கிறேன். நீ எத்தனை ஏர் வைத்து விவசாயம் செய்து இப்படிக் கோவணமும் இல்லாமல் நிற்கிறாய் என்று கேட்டாராம். இந்த திகம்பர வடிவங்களைக் கம்பனும் கண்டிருக்கிறான். இந்திர சித்தனை இலக்குவன் கொன்று தீர்த்துவிட்டான் என்பதை அறிந்த தேவர்கள் எல்லாம், தங்கள் ஆடைகள் அவிழும் வண்ணம் ஆடிப்பாடி இருக்கிறார்கள். இதைச் சொல்கிறான் கம்பன்.

எல்லோரும் தூசு நீக்கி
ஏறிட ஆர்த்த போது
கொல்லாத விரதத் தார்தம்
கடவுளர் கூட்டம் ஒத்தார்.

என்று கொல்லா விரதம் குவலயம் எல்லாம் ஓங்க உதவி செய்த இந்த சமண முனிவர் பெருமக்களும் நகையாடுவதற்கு உரியவர்களாகவே இருந்திருக்கிறார்கள். ஆம் அப்படித்தான் இருக்கிறது உலகம்!

# 7. பேலூர் சென்னக் கேகவர்

தமிழ் நாட்டில் சமயகுரவர்களில் ஒருவரான ஞான சம்பந்தர் கதை பிரசித்தமானது. அதிலும் அவர் மதுரை சென்று சமணர்களை வென்று சமணமதத்தில் இருந்த பாண்டிய மன்னனை சைவனாக்கியதை நன்கு அறிந்திருக் கிறோம். கதை இதுதான். பாண்டிய மன்னனான மாற வர்மன் சமணனாக இருக்கிறான். அரசன் எவ்வழி குடிகளும் அவ்வழி என்பதொப்ப, குடிமக்களும் சமணமதத்தையே தழுவி நிற்கின்றனர். அதனால் ஆவலாய் அரண் கோயிலில் பூஜை புனஸ்காரங்கள் குறைகின்றன. சைவம் தலை தூக்காது தாழ்ந்து கிடக்கிறது. எனினும் மன்னன் மனைவியரும் பாண்டி மாதேவி மங்கையர்க்கரசியும், மந்திரி குலச்சிறையாரும் சிவனடி மறவாச் சிந்தையராக வாழ்கின்றனர். அவர்கள் வேண்டிக்கொண்டபடியே, ஞானசம்பந்தரும் பாண்டி நாட்டுக்கு வருகிறார். ஞான சம்பந்தரின் வரவை அறிந்த சமணர்கள் அவர் இருந்த மடத்திற்கே தீவைக்கின்றனர். அப்படி அவர்கள் வைத்த தீயை 'பையவே சென்று பாண்டியர்க்காகுக' என்று பணிக் கின்றார் சம்பந்தர். பாண்டிய மன்னன் வெப்பு நோயால் வாடுகின்றான். அவன் நோய் தீர்க்க சமணர்கள் விரை கின்றனர். அவர்களது மருத்துவத்தால் மன்னனது வெப்பு நோய் நீங்கவில்லை. மங்கையர்க்கரசியின் அழைப்பின் பேரில் ஞான சம்பந்தர் வருகிறார். "மந்திரமாவது நீறு" என்று பாடி மன்னன் உடம்பில் திருநீறு பூசுகிறார். மன்னனது நோய் நீங்குகிறது. அதன்பின் நடந்த அனல் வாதம், புனல் வாதங்களிலும் சம்பந்தரே வெல்கிறார். மன்னனும் சமணமதத்தை உதறிவிட்டு சைவனாகிறான். இவ்வரலாற்றைச் சேக்கிழார், அவர் இயற்றிய திருத் தொண்டர் புராணத்தில் விரிவாக உரைக்கிறார். இதே

முறையிலே சமணனாயிருந்த ஹொய்சல மன்னன் பிட்டி தேவராயனை வைஷ்ணவனாக்கிய பெருமை, ராமானுஜரைச் சாரும். அன்று ஹொய்சலமன்னனாக இருந்த பிட்டி தேவராயன் சமணனாக இருந்திருக்கிறான். ஆனால் அவன் மனைவியோ விஷ்ணு பக்தையாக இருக்கிறாள். இவர்களது ஒரே மகளை ஏதோ ஒரு பேய் பிடித்து ஆட்டுகிறது. இந்தப் பேயை ஓட்ட சமண முனிவர்களை முதலில் அணுகிய போது அவர்களால் ஒன்றுமே செய்ய முடியவில்லை. இந்த நிலையில் சோழ நாட்டிலிருந்து அங்கு வந்து தங்கியிருந்த ராமானுஜரை அழைக்க விருப்புகிறாள் அரசனது மனைவி. அவர் வந்திருக்கிறார். மன்னன் மகள் பூரண தேகசுகம் பெற்றிருக்கிறாள். அவ்வளவுதான் பிட்டிதேவராயன் சமணனாயிருந்தவன் வைஷ்ணவனாகி இருக்கிறான். வைஷ்ணவத்தை தழுவிய இந்த ஹொய்சல மன்னனுக்கு விஷ்ணுவர்த்தனன் என்றே புதிய பெயரைச் சூட்டியிருக்கிறார். இப்படி வைஷ்ணவனாக மாறிய ஹொய்சல மன்னனே. ராமானுஜர் விருப்பப்படி விஷ்ணு கோயில்கள் பல கட்டியிருக்கிறான். அப்படிக் கட்டிய கோயில்களில் எல்லாம் சிறப்புடையது கலைப் பிரசித்தி உடைய கோயில்தான் பேலூரில் உள்ள சென்னக் கேசவர் கோயில். அந்த சென்னக் கேசவர் கோயிலுக்கே செல்கிறோம் நாம் இன்று. இக்கோயில் கட்டப்பட்டது 1117 ஆம் ஆண்டு என்று சரித்திர ஏடுகள் பேசுகின்றன.

பேலூர் மைசூர் ராஜ்யத்தில் ஹாஸன் ஜில்லாவில் இருக்கிறது. ரயிலில் செல்பவர்கள் மைசூர் அரிசிக்கரை லயனில் ஹாஸன் ஸ்டேஷனில் இறங்கவேண்டும். அங்கிருந்து பஸ்ஸிலோ, காரிலோ 25 மைல் வடமேற்கே சென்றால் பேலூர் வந்து சேரலாம். இல்லை நேரே மைசூரிலிருந்து காரிலேயே செல்வதானால் நூறு மைல் செல்ல வேண்டும். காரிலே சென்றால், சென்னக்கேசவர் கோயில் வாசலிலேயே போய் இறங்கலாம். இக்கோயிலைச் சுற்றி நல்ல மதில் கட்டியிருக்கிறார்கள். இந்த மதில் 445—

அடி நீளமும் 396—அடி அகலமும் உள்ளது என்றால் கோயில் பிரகாரம் எத்தனை பெரிதாக இருக்க வேண்டும் என்று கற்பனை பண்ணிக் கொள்ளலாம்தானே. இந்தக் கோயிலுக்கு மூன்று வாயில்கள் இருக்கின்றன. தென்புறம் இருப்பது வெள்ளிக் கிழமை வாயில் என்பர். வடபுறம் இருப்பது தெய்வீக வாசல் என்பார். இக் கோயிலின் பிரதான வாயில் கிழக்கு நோக்கியதுதான். அந்தக் கோயிலே மகாத்வாரம் என்ற பெயரோடு ஒரு உயர்ந்த கோபுரத்தையும் ஏந்தி நிற்கிறது. இந்த கிழக்கு மதில் சுவரிலே இன்னும் ஒரு வாசல் உண்டு. அதனை ஆனே பாசிலு என்கின்றனர். யானை, கோயில் உள்ளே போக அமைந்த வாயிலாக இருக்கும் போலும், இந்த வாயிலி லேயே மன்மதன் ரதி சிற்பங்கள் அழகாக இருக்கின்றன. இன்னும் மகாபாரதம் இராமாயணம் முதலிய இதிகாசக் காட்சிகளும் செதுக்கப்பட்டிருக்கின்ற இந்த வாயிலைக் கடந்து வெளிப்பிரகாரத்தில் நுழைந்து அங்கு சென்னக் கேசவரை எதிர்நோக்கி நிற்கும் கருடனையும் வணங்கி பின்பே கோயிலுள் செல்ல வேண்டும். இங்குள்ள பிரதான கோயில் 178—அடி நீளமும் 156—அடிஅகலமுள்ள ஒரு உயர்ந்த பீடத்தின் மேல் கட்டப்பட்டிருக்கிறது. இருந் தாலும் இந்தப் பீடம் தஞ்சை ஜில்லாவில் உள்ள மாடக் கோயில்கள் போல் மிகவும் உயர்ந்ததாயிராது. இக் கோயிலைக் கட்டிய விஷ்ணுவர்த்தனன், சமணனாக இருந்து ராமானுஜரால் வைஷ்ணவனாக்கப்பட்டவர் என் பதைத்தான் முன்னமேயே அறிந்திருக்கிறோம். இவன் தன் ராஜ்யத்தில் ஐந்து இடங்களில் விஷ்ணுவுக்குக் கோயில்கள் கட்டி அங்கு பஞ்ச நாராயணனைப் பிரதிஷ்டை செய் திருக்கிறார். பேலூரைத் தவிர, தலக்காடு, மேல்கோட்டை தொண்ணு, கடக் என்ற தலங்களிலும் இவன் பிரதிஷ்டை செய்த நாராயணர் இருக்கின்றனர் என்று வரலாறு கூறு கிறது. இந்தக் கோயிலுள் சென்று அங்கு மூல மூர்த்தியாக இருக்கும் சென்னக்கேசவரை வணங்குமுன் கோயிலை ஒரு சுற்றுச்சுற்றி வரவேண்டும், என்று தோன்றும். கோயில்

சுவரெல்லாம் ஒரே சிற்ப வடிவங்கள் மயம் தான். அச்சுவரில் ஏழு எட்டு வரிசை வரிசையாக சிற்பவடிவங்கள் செதுக்கப்பட்டிருக்கின்றன. அடியில் உள்ள வரிசையில் யானைகள் ஒன்றையொன்று துரத்திக் கொண்டு ஓடிக்கொண்டிருக்கும். இன்னும் சில கொடி களும், நடனப் பெண்களும் சிறிய அளவிலும் பெரிய அள விலும் சுவர் முழுவதும் நிறைந்திருக்கும். இன்னும் இந்தச் சுவர்களிலேயே ஹரிஹரன், சிவனது மூர்த்தங்கள் பரசுராமன், வாமனன், வாசுகி, சூரிய நாராயணன், மஹிஷமர்த்தனி, அர்ச்சுனன், முதலிய வடிவங்கள் நிறைந் திருக்கும். இங்கிருப்பவைகளில் சிறப்பாயிருப்பவை எல்லாம் பெண்மையின் வடிவங்களே. கிட்டத்தட்ட நாற்பது பெண்கள் இருக்கின்றனர். இவர்களில் சிலரே தெய்வ அம்சம் பெற்றவர்கள் மற்றவர்கள் எல்லாம் சாதாரணப் பெண்களே, என்றாலும் எல்லோரும் அழகிய பெண்களே. பொட்டிடும் நங்கை, கிளி ஏந்திய பெண். ஆடையில் தேள் ஒன்றிருக்கிறது, என்று தெரிந்ததும் ஆடையை உதறிவிடும் மங்கை, காதலனை எதிர்நோக்கி நிற்கும் காதலி என்ற வகையில் எண்ணிறந்த பெண்கள் ஓவியங்களாக இருக்கின்றனர். எல்லாம் நல்ல நடனக் கோலத்தில், இச்சிற்ப வடிவங்களில் உள்ள நுணுக்க வேலைப்பாடுகள் எல்லாம் பார்த்து, இப்படியெல்லாமா கல்லில் செய்ய முடிந்திருக்கிறது ஏதோ, மெழுகில் செய்து அதை அமைத்திருக்க வேண்டும் என்றுதான் தோன்றும். நிரம்பச் சொல்வானேன், ஒவ்வொரு வடிவமும் ஒரு கவிதைதான். ரசிகமணி டி. கே. சி அவர்கள் சொல்வார் களே, கவிதைக்கு விஷயம் முக்கியமல்ல வடிவம் (Form) தான் முக்கியம் என்று அந்த வடிவத்தையே அல்லவா அற்புதமாக வடித்திருக்கிறார்கள் சிற்பிகள். இந்தச் சுவரில் உள்ள வடிவங்களைப் பார்த்துக்கொண்டே இருந் தால், கோயிலைச் சுற்றி சுற்றி வரச் சொல்லுமே தவிர உள்ளே செல்லவோ அல்லது வெளியே வரவோ தோன்றாது. அப்படியே இருந்து விடமுடியுமா நம்மால்.

சரி என்று மனதைக் கடிவாளம் போட்டு இழுத்து நம் வசம் படுத்திக் கொண்டு கோயிலுள் நுழையலாம். கோயிலுள் முதலில் இருப்பது நவரங்க மண்டபம். அடடே இது என்ன! இங்கு இந்த மண்டபத்தை தாங்கி நிற்கும் தூண்கள் ஒவ்வொன்றும் அற்புத வேலைப்பாடுகள் அமைந்ததாக அல்லவா, இருக்கிறது. இவைகளில் சிறப்பாயிருப்பது இரண்டு தூண்கள். ஒன்று நரசிம்ம வடிவம் தாங்கியது. இன்னொன்று மோகினி வடிவம் தாங்கியது. இன்னும் ஒரு கடலை அளவே உள்ள இடத்தில் ஒருநந்தியையும் செதுக்கியிருக்கிறார்கள் சிற்பி. சிற்றுளியின் நயம் எல்லாம் சிறிய வடிவிலேயும் காட்டலாம் என்று காட்டுகிறார் அவர் நமக்கு. இந்த நந்தியையே கடலை பகவான் என்கிறார்கள். தூண்களைக் கொஞ்சம் மறந்து மேலே பார்த்தால் அங்கு எண்கோண வடிவத்தில் ஒரு விதானம். பத்தடி குறுக்களவும் ஆறு அடி ஆழமும் உள்ளதாக இருக்கும். இந்த விதானத்திற்கும் தூண்களுக்கும் இடையில் ஒவ்வொரு பெண்ணின் வடிவம். இவை நல்ல காத்திரமான வடிவங்கள். இந்த மதனிகை வடிவங்கள் அற்புதமான அழகு வாய்ந்தவை. இவைகளில் ஒன்றே நடன சரஸ்வதி. இந்த வடிவங்களை அமைப்பதில், மிகுந்த அக்கறை எடுத்திருக்கிறார் சிற்பி என்பதை வடிவங்களைப் பார்த்தாலே தெரியும். இன்னும் இப்படிப்பட்ட மதனிகை சிற்பவடிவங்கள், மற்ற ஹொய்சலர் கோயில்களான சோமநாதபூரிலே ஹலபீடிலோ இல்லை என்பதும் இவ்வடிவங்களுக்கு ஒரு பெருமை தருவதாக இருக்கும்.

இப்படி சிற்பவடிவங்களிலே உள்ள பெண்களையே பார்த்துக் கொண்டிருந்தால், போதுமா, கோயிலுக்குள் வந்து சென்னக்கேசவரைத் தரிசனம் செய்ய வேண்டாமா என்று நீங்கள் முனு முனுப்பது என் காதில் கேட்கிறது. சரி இனி கருவறையை நோக்கியே நகருவோம். கருவறைக்கு முன்னேயுள்ள அந்தராளத்தை இங்குள்ள கோயில்களில் சுதநாசி என்கின்றனர். இந்த சுதநாசியின் வாயிலில்

இரண்டு துவாரபாலகர்கள் நல்ல கம்பீரமான வடிவங்கள். அவர்களைப் பார்த்தால் காணிக்கை என்ன கொணர்ந் திருக்கிறாய் என்று கேட்பவர்களைப் போலத் தோன்றும், நான் என்ன கொணர, என் அன்பைத்தான் காணிக்கை யாகக் கொண்டு வந்திருக்கிறேன் என்று கூறிக்கொண்டே கருவறை வாயிலில் வந்து சேரலாம். அங்கிருந்து மூல மூர்த்தியான சென்னக்கேசவரை தரிசிக்கலாம். இவரையே விஜய நாராயணன் என்கிறார்கள். ஆறடி உயரத்தில் உள்ள இவரைக் கண்டதும் அழகுள்ள துரை இவர் ஆறடி என்று பாடத்தோன்றும். ஒரு பெரிய பீடத்தில் கம்ரபீமாக ஏறி நிற்கிறார். அங்கு சக்கரம் ஏந்திய கையராய் இருப்ப தோடு தாமரையையும் கதையையும் ஏந்தியவராய் நிற் கின்றார். இவரை சுற்றியிருக்கும் இவரது பீடவடிவிலேயே அவரது தசாவதார வடிவங்களையும் சிற்பி செதுக்கி அமைத்திருப்பது கூர்ந்து கவனிக்கத்தக்கது. முகத்திலே கருணை ததும்பும் இந்தக் கேசவனை வணங்கிய பின் நாம் அவன் அடியார்க்கு அடியாராய் ஆகிவிடுவோம். இந்தக் கேசவன் ஆழ்வார்களால் மங்களா சாஸனம் செய்யப் பெறும் பாக்கியம் பெற்றவர் அல்ல. அவன் ஆழ் வார்களுக்கு பிற்பட்டவன். ஆனால் கேசவன் தமராகிய நம்மை மங்களாசாஸனம் செய்திருக்கிறார். வேதம் தமிழ் செய்த மாறன்சடகோபன் ஆம்.

கண்ணித்தண்ணந்துழாய் முடி
கமலத் தடம் பெருங்
கண்ணனை புகழ் நண்ணித்தென் குருகூர்
சடகோபன் மாறன் சொன்ன
எண்ணில் சோர்வில் அந்தாதி ஆயிரத்துள்
இவையும் ஓர்பத்து இசையோடும்
பண்ணில் பாடவல்லார் அவர்
கேசவன் தமரே.

என்று நம்மாழ்வார் பாசுரம். கேசவனை வணங்கிய நம்பைத் தானே மங்களாசாஸனம் செய்கின்றது.

இந்தக் கேசவனை வணங்கிவிட்டு வெளியே வந்தால் திரும்பவும் கோயிலை ஒரு சுற்று சுற்றவும் சுவரில் உள்ள மதனிகைகளை மறுபடியும் ஒரு முறை கண்டு மகிழவும் நம் மனம் விரும்பும் சரி என்று சுற்றினால், கோயில் பிரகாரத்தில் இன்னும் இரண்டு மூன்று கோயில்கள் இருப்பது தெரியும். இவைகளில் தென்கிழக்கு மூலையில் இருப்பது கப்பே சென்னகைராயர் கோயில். மேல்பக்கம் இருப்பது வீர நாராயணன் கோயில், ஆண்டாள் கோயில்கள், கப்பே சென்னகராயர் கோயில் இரண்டு கருவறையுடையது. ஒன்றில் சென்னகராயரும் மற்றொன்றில் வேணு கோபாலனும் இருக்கிறார்கள். இந்த கோயிலும் நிறைய சிற்பவடிவங்கள் உண்டு. அவைகளில் சிறப்பாயிருப்பது லக்ஷ்மி, நாராயணன், சரஸ்வதி, விநாயகர், மஹிஷ மர்த்தினி முதலியோர் தாம் சென்னகராயரை பிரதிஷ்டை செய்தவள், விஷ்ணுவர்த்தனது பட்ட மகிஷியாள் சாந்தலதேவி. இப்பட்ட மகிஷியே சிறந்ததொரு சங்கீத விதுஷியாகவும், நாட்டியத்தில் வல்லவளாகவும் இருந்திருக்கிறாள் என்று இங்குள்ள கல்வெட்டு ஒன்று கூறுகிறது. சரிதான் இக்கோயில் ஒரு அரிய கலைக் கோயிலாக விளங்குவதற்கு காரணம் இப்போதல்லவா தெரிகிறது. விஷ்ணுவர்த்தனன் ராமானுஜரால்—விஷ்ணு இடம் அத்யந்த பிரீதி உடையவனாகிறான். அவனது துணைவியோ கலைகளில் வல்லவளாகவும் இருக்கிறாள். இருவரும் சேர்ந்து அமைத்த சென்னக்கேசவர் கோயில் கலைக் கோயிலாக உருவாகாமல் வேறு எப்படி உருவாக முடியும். அப்பே சென்னகராயர் கோயிலுக்கு எதிரிலே யுள்ள ஒரு கல்ஸ்தம்பத்தில் இரண்டு வடிவங்கள் தலையில் பரமபாகவதர்கள் அணியும் குல்லாய் ஒன்று தரித்து முழுங் கால்வரை தொங்கும் அங்கியும் அணிந்து நிற்கிறான் ஆடவன். பக்கத்திலே நிற்கிறாள் ஒரு பெண். இவர்களே விஷ்ணு வர்த்தனனும் அவனது துணைவியும் என்று கருத இடமிருக்கிறது.

இக்கோயிலில் தாயார் சந்நிதி இல்லை. பக்கத்திலே உள்ள மலை மேலே தாயார் தனிக்கோயிலில் இருக்கிறாள் என்பர். அந்தத் தாயாரை நாடியே சென்னக்கேசவராயர் நடையால் நடக்கிறார். அதற்கென ஒரு ஜோடி செருப்புகள் கோயிலில் எப்போதுமே தயாராக இருக்கின்றன. இந்த செருப்பை செய்து தரும் சக்கிலியர்களும் மற்ற ஹரிஜனங்களும் கோயில் பிரகாரத்தில் தாராளமாக வரலாம் என்றும் தீர்மானித்திருக்கின்றனர், பங்குனியில் இக்கோயிலில் உற்சவம் நடக்கிறது. பதினாயிரக் கணக்கான மக்கள் வந்து கூடுகின்றனர். மற்ற நாட்களில் நம்மைப்போன்ற கலா ரசிகர்களைக் காண்பதோடு சென்ன கேசவர் திருப்தி அடைய வேண்டியதுதான். அவர்தான் துணைவியும் இல்லாத தனிக்கட்டையா யிருக்கிறாரே.

# 8. ஹலபேடு ஹொய்சலேஸ்வரர்

சமீபத்தில் ஒரு அன்பரது பேச்சைக் கேட்டேன். அவர் இவ்வுலகில் எல்லாமே காரணப் பெயர்களாகத்தான் இருத்தல் வேண்டும் என்ற எண்ணம் உடையவராக இருக்கிறார். அ. ஆ. என்னும் தமிழ் உயிர் எழுத்து வரிசையானாலும் சரி, இல்லை ஏ. பி. சி. டி. என்னும் ஆங்கில எழுத்து வரிசையானாலும் சரி, எல்லாமே ஒரு காரணத்தால் முறைப்படுத்தப்பட்டிருக்கிறது. இந்த முறையைப் பற்றி அவர் பேசும்போது எல்லாம் வின்னியாசமாகவே பட்டது எனக்கு. இன்னும் சொல்லப் போனால் நண்பர் மூளையில் ஏதோ ஒரு ஸ்குரு லூஸ் போல் இருக்கிறது என்று எண்ணவும் தோன்றியது. இதைப் போலவேதான் நம் நாட்டில் பல காரியங்கள், எல்லாவற்றிலும் காரணம் இருந்தாக வேண்டும் என்ற நியதி இல்லை. அதனால் தானே இலக்கணம் வல்லவர், காரணப் பெயர் என்று சில வற்றைக் குறிப்பிட்டார்கள். இடுகுறி என்று சிலவற்றைக் குறித்தார்கள். இன்னும் காரண இடுகுறி என்றுமே சில வற்றைக் கூறினார்கள். மைசூர் ராஜ்யத்தில் சில கோயில்களைச் சுற்றி நாம் வருகிறபோது அவை ஹொய்சலர் கோயில்கள் என்று சரித்திரம் நமக்குச் சொல்கிறது. ஹொய்சலர்கள் என்றால் என்ன? அவர்களுக்கு ஹொய்சலர் என்ற பெயர் எப்படி ஏற்பட்டது என்று தெரிய விரும்புவீர்கள். அதற்கு விடை சொல்கிறது ஒரு விந்தையான கதை. பழைய கர்நாடக ராஜ்யத்தை 11 முதல் 14-ம் நூற்றாண்டு வரை சிறப்பாக ஆண்ட மன்னர்களையே ஹொய்சலர்கள் என்று அழைக்கின்றது சரித்திர ஏடுகள். இவர்கள் ஆதியில் கிருஷ்ணன் இருந்து அரசு புரிந்த துவாரகையில் இருந்த யாதவர்கள் என்றும் கூறுகிறது. இவர்கள் மேற்குத் தொடர்ச்சி மலைச் சரிவில்



ஹொய்சலேஸ்வரர் கோயில்

உள்ள சொசாவூர் என்ற இடத்தில் முதலில் வந்து குடியேறி இருக்கின்றனர். இவர்கள் சமணசமயத்தைச் சார்ந்திருக்கின்றனர். இவர்கள் தலைவன் சாலா என்பவன் காட்டிற்கு வேட்டையாடச் சென்றிருக்கிறான். அங்குள்ள முனிவர் ஒருவரைக் கண்டு தலைவணங்கி நிற்கிறான். அந்தச் சமயத்தில் ஒரு புலி அங்கு வந்து சேருகிறது. புலியைக் கண்ட முனிவர் அவர் பக்கத்தில் கிடந்த கழி ஒன்றை எடுத்து சாலாவின் கையில் கொடுத்து 'போய் சாலா' என்கின்றார். அதாவது அவரது பாஷையில் ''சாலா என்பவனே புலியைச் சாடு'' என்று அதன் பொருளாம். அதன்படியே புலியைச் சாடி இருக்கிறார் சாலா. புலியைக் கொன்று தீர்க்க கழி மட்டுமே காணாது என்று தெரிந்த சாலா தன் உடைவாளையுமே உபயோகித்திருக்க வேண்டும். உபயோகித்து வெற்றியும் கண்டிருக்க வேண்டும். புலியைச் சாடும் வீரனான சாலாவைத்தானே நாம் அந்த பரம்பரையினரை கட்டிய கோயில்களில் சிலைவடிவில் காண்கின்றோம். இப்படி 'போய் சாலா' என்று முனிவர் சொன்னதையே தங்கள் குலப் பெயராகவும் அமைத்துக் கொண்டிருக்கிறார்கள். இந்த 'போய் சாலா' நாளடைவில் ஹொய்சலா என்று மாறி இருக்கிறது என்றும் சொல்கிறார்கள். இப்படி ஹொய்சலா என்று பெயர் அமைந்தது விசித்திரம்தானே. அந்த ஹொய்சலர் என்ற பெயர், 'பொய் சொல்லார்' என்ற நல்ல தமிழ்ப் பெயரிலிருந்தும் வந்திருக்கலாம் என்று தோன்றுகிறது. எனக்கு எது எப்படியாயினும் ஹொய்சலர்கள் கர்நாடக ராஜ்யத்தை சிலகாலம் சிறப்பாக ஆண்டிருக்கிறார்கள். அவர்கள் ஆட்சியின் சின்னமாக அற்புதமான கலைக் கோயில்களை கட்டிவைத்து விட்டுப் போயிருக்கிறார்கள். அவர்கள் கட்டிய கோயில் இரண்டையுமே நாம் நமது தல யாத்திரையில் பார்த்துவிட்டோம். ஆம் சோமநாதபுரத்தையும், பேலூரையும் தான் குறிப்பிடுகிறேன். இனி அவர்களது தலைநகரான ஹலபேடில் கட்டியிருக்கும் பெரிய கோயில் ஒன்றையே பார்க்கப் போகிறோம். அந்தக்

கோயிலே ஹொய்சலேஸ்வரர் கோயில் என்று பெயர் பெற்றிருக்கிறது. அது இருக்கும் இடமே ஹலபேடு. அந்த ஹலபேடு என்னும் தலத்திற்கே செல்கிறோம் நாம்இன்று.

இந்த ஹலபேடு செல்ல பங்களூர் பூனா செல்லும் ரயில் பாதையில் பானாவர் ஸ்டேஷனில் இறங்கி இருபது மைல் மேற்கே செல்ல வேண்டும். பஸ்வசதி உண்டு. இல்லை காரிலேயே செல்வதனால் மைசூரிலிருந்து ஹாஸன் போய் அங்கிருந்து பேலூர் சென்று அங்குள்ள சென்னக்கேசவரை வணங்கிவிட்டு கிழக்கு நோக்கிப் பத்து மைல் வந்தால் ஹலபேடு வந்து சேரலாம். ஒரு காலத்தில் ஆம், கி.பி. 11 முதல் 14—ஆம் நூற்றாண்டுவரை இது ஹொய்சல மன்னர்களின் தலைநகரமாக இருந்திருக்கிறது. இதனையே துவார சமுத்திரம், துவாரவதிபுதர் என்றெல்லாம் அழைத் திருக்கிறார்கள். ஆனால் இன்றோ பாழடைந்த ஒரு சிறு ஊராகவே காட்சி அளிக்கிறது. மன்னர் மாளிகை இருந்த இடம் என்று ஒரு சிறு குன்றினைச் சொல்கிறார்கள். அதனையே பெள்ளே குட்டா என்கிறார்கள். அந்தக் குன்றின் பக்கத்திலே ஆணைகுந்தி என்று ஒரு இடம் இருக் கிறது. அங்குதான் ஹொய்சல சாம்ராஜ்யம் உன்னத நிலையில் இருந்தபோது, யானை கட்டி வைத்திருக் கின்றார்கள். ஹலபேடில் உள்ள கோயிலுக்குச் செல்லுமுன் ஹொய்சல மன்னர் சரிதம் கொஞ்சம்தெரிந்து கொள்வது நல்லது.

ஹொய்சல மன்னர்களது சரித்திரமே 1220—முதல் 1234—வரை ஆண்டஇரண்டாம் நரசிம்மனது வீரவாழ்வில் தான் ஆரம்பிக்கிறது என்று சொல்லலாம். அவனே சோழ தேசத்தின் மீது படை எடுத்து ஸ்ரீரங்கம் வரை வந்தவன். தமிழ் நாட்டோடு நல்ல தொடர்பு கொண்டவன். சோழ மன்னனான ராஜ ராஜ தேவன் என்பவரை பல்லவ மன்னன் கோப்பெருஞ்சிங்கன் சிறை பிடித்து, சேந்த மங்கலத்துச் சிறையில் வைத்திருந்திருக்கிறான். அந்த கோப்பெருஞ்சிங்கனை இந்த வீர நரசிம்மன் போரில் வென்று ராஜ ராஜ தேவனை சிறைமீட்டிருக்கிறான்.

அவனே ஸ்ரீரங்கம் வரை வந்து அங்கு கோயில் கொண்டிருக்கும் அரங்கநாயகன் கோயிலில் ஒரு மண்டபம் கட்டி இருக்கிறான். இந்த வீர நரசிம்மன் மகனே சோமேஸ்வரன். இவன் ஸ்ரீரங்கத்தை அடுத்த சமயபுரத்தை தலை நகராகக்கொண்டு, தமிழ் நாட்டில் தான் வெற்றி பெற்ற இடங்களை ஆண்டிருக்கிறான். அந்த நகரத்திற்கு விக்கிரமபுரம் என்றும் பெயர் சூட்டியிருக்கிறான். அந்த விக்கிரமபுரமே இன்று சமயபுரம் பக்கத்தில் உள்ள கண்ணனூர் என்கின்றனர். இன்னும் இவன் திருவானைக்காவில் உள்ள ஜம்புகேஸ்வரர் கோயிலில், தனது குடும்பத்தினர் ஞாபகார்த்தமாக பல லிங்கங்களை பிரதிஷ்டை செய்திருக்கிறான். அவைகளே வல்லாள ஈஸ்வரர். பதுமானி ஈஸ்வரர், வீரநரசிங்க ஈஸ்வரர் சோமாளி ஈஸ்வரர் என்பவை என்றுசொல்லப்படுகின்றன. ஜம்புகேஸ்வரர் கோயில் வாயிலில் உள்ள ஏழுநிலை கொண்ட கோபுரம் இந்த சோமேஸ்வரனாலேயே கட்டப் பட்டிருக்கிறது. கண்ணனூரில் இவன் கட்டிய கோயிலே போஜேஸ்வரர் கோயில். இவன் சார்வபௌமன், துலாபுருஷன், ரத்னதேனு என்று பல அபிஷேகப் பெயர்களையும் சூட்டிக் கொண்டிருக்கிறான் என்று சரித்திர ஏடுகள் சொல்கின்றன. இந்த சோமேஸ்வரனின் மகனே வீரராமநாதன். இவன் காலத்திய கல்வெட்டுக்கள் மூன்று உண்டு. அவை 1267, 1270, 1271-ம் வருஷத்தில் வெட்டப் பட்டவை. அவை ஸ்ரீரங்கத்திலும் கண்ணனூரிலும், இருக்கின்றன. திருவெள்ளறையில் உள்ள நாலுமூலைக் கேணி என்ற வணிகன் கிணறு பழுது பார்க்கப்பட்ட விவரம் ஒரு கல்வெட்டில் கூறப்படுகிறது. இவனே ரங்கநாதனுக்கு ஒரு மணிமகுடத்தையும் இரண்டு கவரியையும், ஒரு காளாஞ்சியையும் கொடுத்திருக்கிறான். இந்த வீரராமநாதன் மகனே வீரவிஸ்வநாதன். இவன் 1293-முதல் 1294-வரையே ஆண்டிருக்கின்றான். இவனுக்குப் பின்னால் ஹொய்சல சாம்ராஜ்யம் விஜயநகர மன்னர்களின் ஆட்சிக்

குள் வந்திருக்கின்றது. இந்த ஹொய்சல மன்னர்களில் ஒருவனே மூன்றாம் வல்லாளன். அவன் கண்ணனூரை விட்டுத் திருவண்ணாமலைக்கே சென்றிருக்கிறான். அங்கு உண்ணாமுலைப்பட்டிணம் என்று ஒரு நகரை நிர்மாணித்து அங்கிருந்தே ஆண்டிருக்கிறான். இப்படித்தான் ஹொய்சல மன்னர்கள் சரித்திரம் வளர்ந்து தேய்ந்திருக்கிறது.

இனி நாம் வீரநரசிம்மன் கட்டிய ஹொய்சலஈஸ்வரர் கோயிலுக்கே செல்லலாம். காரில் சென்றால் கோயிலின் வடக்கு வாசலிலே போய் நிற்கும். அங்கு காரை விட்டு உள்ளே நுழைந்தால் கோயில் பிரகாரம் முழுவதும் சிதைந்த சிற்பங்கள் எண்ணிறந்தவை இருக்கும். புதை பொருள் ஆராய்ச்சியாளர் அவைகளை எடுத்து ஒழுங்குப் படுத்தி அடுக்கி வைத்திருப்பர். இந்தப் பிரகாரத்தைக் கடந்தே கோயிலுக்குச் செல்ல வேண்டும். இங்கு இரண்டு கோயில்கள் உண்டு. ஒன்று ஹொய்சலலேஸ்வரன் கோயில். மற்றொன்று கேதாரேஸ்வரர் கோயில். சோமநாதபுரத் திலும், பேலூரிலும், கேசவனுக்குக் கோயில் கட்டிய ஹொய்சலர்கள், தங்கள் தலைநகரிலே சிவபெருமானுக்கே இரண்டு கோயில்களை அடுத்தடுத்துக் கட்டியிருக்கிறார்கள். இங்கு கோயில்களுக்கு எதிரே நந்தி மண்டபங்கள் இரண் டைக் கட்டி, பெரிய நந்தியையும் கல்லில் உருவாக்கி வைத் திருக்கிறார்கள். நந்தி மண்டபத்துத் தூண்கள் எல்லாம் நல்ல சிற்பவேலைப்பாடு அமைந்தவை. ஹொய்சலேஸ்வரர் கோயிலுக்கு நான்கு வாயில்கள். கிழக்கே இரண்டு, வடக்கே ஒன்று, தெற்கே ஒன்று. கோயிலுக்கு தென்புறமே மன்னனின் மாளிகை இருக்கிறது. அதனால் மன்னன் வரும் வழியாக தெற்கு வாசல் மிகச் சிறப்பாய் அமைக்கப் பட்டிருக்கிறது. கோயில் வாயிலின் மேல் முகப்பில் சிற்ப வடிவங்கள் சிறப்பாய் இருக்கின்றன. ஆடும் பெருமானை வாயில் முகப்பில் அமைத்து, இரண்டு பக்கமும் மகர வளைவுகள் அமைத்திருக்கிறார்கள். வருணன் அவன் தன் துணைவியோடு வடிக்கப்பெற்றிருக்கிறான். நந்தி

மண்டபத்திற்கு அருகே சூரிய சந்திரர்களுக்கும் தனித்தனிக் கோயீல் அமைத்திருக்கிறார்கள். புலியைக் கொல்லும் சாலாவின் சிற்பம்தானே ஹொய்சல மன்னர்களின் முத்திரை. இந்த சிற்பவடிவம் ஒவ்வொரு வாசலிலுமே இருக்கிறது. கேதாரேஸ்வரர் கோயிலின் சுவர்கள் முழுவதுமே ஒரே சிற்பவடிவங்கள்தாம். கோயிலின் வெளிச் சுவர்களில் வரிசைவரிசையாய் யானைகள், யாளிகள், அன்னங்கள் இன்னும் எண்ணற்ற தெய்வவடிவங்கள் கோயிலின் தென்புறத்தில் அழகான நர்த்தன வினாயகர் ஒருவர் பெரிய வடிவிலே நிற்கிறார். நுணுக்க வேலைப்பாடுகள் நிறைந்த இந்த வடிவங்களை காணும்போது நாம் ஒரு அதிசய உலகத்திலே உலவுவது போன்ற பிரமையே ஏற்படும். கோயில் உள்ளேயும் எண்ணற்ற வடிவங்கள் எல்லாம் பேலூர் மாளிகை சிற்பவடிவத்தைப் போல சிறந்தவைகள் அல்ல என்றாலும், நல்ல அழகு வாய்ந்தவைகளே. இரணியனை உடல் கிழிக்கும் நரசிம்மன், கோவர்த்தன மலையை குடையாக எடுத்து ஆநிரையைக் காக்கும் கண்ணன், துவாரபாலகர் வடிவங்கள் எல்லாம் சிற்பஉலகில் பிரசித்தி பெற்றவை. ஆனால் எல்லாவற்றையும் தூக்கி அடிக்கும் வகையில் அமைந்திருக்கும் நர்த்தன சரஸ்வதி கலை உலகிலேயே ஒரு அற்புதம். இத்தனை சிற்ப வடிவங்களிடையே தான் ஹொய்சலேஸ்வரரும் கேதாரேஸ்வரரும் லிங்க வடிவில் கருவறையில் உருவின்றி நின்ற உருவாய் கருவின்றி நின்ற கருவாய் எழுந்தருளி இருக்கின்றனர். இக்கோயில்கள் கட்டுவதற்கு கல் எல்லாம் பக்கத்தில் உள்ள புஷ்பகிரி என்ற மலையில் இருந்தே கொண்டு வரப்பட்டிருக்கின்றன. அவை எல்லாம் கடினமான கருங்கல் அல்ல. சிற்றுளி வேலைக்கு ஏற்ற மெதுவான கற்களே.

ஹொய்சல மன்னர்கள் கட்டிய கேயில்களில் எல்லாம் அளவில் பெரியது இந்த ஹொய்சலஈஸ்வரர் கோயிலே. இந்த ஹொய்சல ஈஸ்வரரே கேதாரேஸ்வரும் சமய குரவர்

களால் பாடப் பெற்றவர்கள் அல்ல. என்றாலும் கேதா ரேஸ்வரனை நினைத்தால் சுந்தரர் பாடிய கேதாரப்பதிகம் ஞாபகத்திற்கு வராமல் போகாது. அதிலும் அந்த

வாழ்வாவது மாயம் இது
 மண்ணாவது திண்ணம்
பாழ்போவது பிறவிக்கடல்
 பசிநோய் செய்த பறிதான்
தாழாது அறம் செய்ம்மின்
 தடங்கண்ணான் மலரோனும்
கீழ்மேலுற நின்றான் திருக்
 கேதார மெனீரே

என்ற பாடல் படிக்கப்படிக்க சுவையுடையதாயிற்றே! மனித வாழ்வு அநித்யம்தான் என்றாலும் அந்த மனிதன் அமைத்த கலைக்கோயிலும் மூர்த்தியும் நித்யத்வம் வாய்ந் தவைகளாக அல்லவா நிலைத்து விடுகின்றன!

இந்த ஹலபேடில் இன்னும் பார்க்க வேண்டிய கோயில் கள் பல உண்டு. அவையெல்லாம் சமணக் கோயில்களே. அன்று எண்ணிறந்தவை இருந்த இடத்தில் இன்று ஒரு சில கோயில்களே சிதிலமடைந்து நிற்கின்றன. அவைகளில் முக்கியமானவை, ஆதிநாத ஈஸ்வரர், சாந்தேஸ்வரர் பார்சனுதேஸ்வரர் கோயில்களே. இவைகளில் உள்ள தூண் கள் எல்லாம் கண்ணாடிபோல் பளபளக்கும்படி செய்து அமைக்கப்பட்டிருக்கின்றன. இங்குளள ஆதிநாத பஸ்தியின் முன்புள்ள கம்பம் ஒன்றை, பிரம்மகம்பம் என்கின்றனர். இந்தக் கம்பத்தின் கீழ் பக்கத்தில் குதிபோட்டுக்கொண்டு ஓடும் குதிரை ஒன்றிருக்கிறது. அதுவே சமண சிற்பத்தில் பிரம்மனைக் குறிக்க அமைந்தது என்று அறிகிறோம். சரி. சமணம் ஆனாலும் சரி, சைவம் ஆ ன ா லு ம் ச ரி, இல்லை வைஷ்ணவம் ஆனாலும் சரி. எல்லாம் கலை அழகு நிரம்பி யவைகளாயிருப்பது ஹொய்சலரது சிற்பக்கலை என்று தெரிந்து கொண்டோமானால், அது போதும் நமக்கு.

# 9. சிருங்கேரி வித்யாசங்கரர்



இந்நில உலகில் மக்கள் மாத்திரமே அல்லாமல் மற்ற எல்லா உயிர்களுமே வாழ மழை மிகவும் இன்றியமையாதது. காலா காலத்தில் பெய்யும் மழையைப் பருவமழை என்போம். ஆனால் இந்த மாரி வளம்குன்றி, சில காலம் மழை பெய்யாது போவதும் உண்டு. அப்போதெல்லாம் மக்கள் தவிக்கின்ற தவிப்பையும் அறிவோம். ஏதோ இறை அருளினால், இறைவன் இஷ்டப்பட்டபோது பெய்விக்கும் மழையை, மனிதன் தான் விரும்பியபோது பெற முயற்சித்

திருக்கிறான்.அந்த முயற்சியே இன்று செயற்கைமழை என்கின்றோம். வானில் உலாவும் கார் மேகங்களிடையே ஐஸ்கட்டிகளைக் கொண்டு தூவி அதன் மூலமாக மழையைப் பெறுவதற்கு முயல்கிறார்கள். இந்த முயற்சியில் இன்றும் மனிதன் முழு வெற்றிப் பெற்றதாக இல்லை. இதை எல்லாம் பார்க்கும்போது இதிகாச காலத்தில் மழை வருவிப்பதற்கு ஒரு நல்ல வழியைக் கண்டுபிடித்திருக்கிறார்கள், அக்காலத்தில் உள்ளவர்கள். ஆம்அந்த ரிஷ்ய சிருங்கரை அவர் இருக்கும் இடத்தைத் தேடிப்பார்த்து கூட்டி வந்து விட்டால் அவர் வந்த இடத்தில் மழை பெய்யும் என்று தெரிந்திருக்கிறார்கள். அப்படியே அவரை அழைத்து வந்து, தமக்கு வேண்டிய மழையையும் பெற்றிருக்கிறார்கள் என்று நமது பழைய இதிகாசமான ராமாயணம் கூறுகிறது. அந்த ரிஷ்ய சிருங்கரது வரலாறு சுவையானது.

விபாண்டகர் என்று ஒரு ரிஷி, அவரது மகனாக ஒற்றைக் கொம்புடன் பிறக்கிறார், ரிஷ்ய சிருங்கர். பெண்களது கண் வீச்சில் விழாதவாறு விபாண்டகர் தம் மகனை வளர்க்கிறார். பையன் வளர்ந்து பெரியவனாகிறான். இந்த சமயத்தில் அங்க தேசத்தில் மழையே இல்லாது வறண்டு விடுகிறது. அங்க தேசத்து அதிபதியான ரோமபாதன் இதனால் மிகவும் கவலையுறுகிறான் மக்களைக் காக்க வகை சொல்லும்படி தன் குலகுருவைக் கேட்கிறான். அவரோ ரிஷ்ய சிருங்கரை உன் நாட்டிற்கு வரச்செய் என்கிறார். ரிஷ்ய சிருங்கரையோ விபாண்டகர் வெளியே அனுப்பவே மாட்டார். அவரை அழைத்து வர ஒரு பெண்கள் படையே செல்கிறது, விபாண்டகரது பர்ணசாலைக்கு. விபாண்டகர் வெளியே சென்றிருந்த நேரத்தில் இந்தப் பெண்கள், ஆசிரமத்திற்குச் சென்று ரிஷ்ய சிங்கருக்கு சிருங்காரக் கலையில் மோகம் வரும்படி செய்து அவரை அழைத்து வந்து விடுகிறார்கள். ரிஷ்ய சிருங்கரது அடி பட்டதோ இல்லையோ அங்கதேசம் முழுவதும் மழை பெய்ய ஆரம்பித்து விடுகிறது. ரோமபாதனும் தன்

மகளையே ரிஷ்ய சிருங்கருக்கு மணம் முடித்து அவரை தன் நாட்டிலேயே இருத்திக் கொள்கிறான். ஆம். நமக்குக் கூட இப்படி ஒரு ரிஷ்ய சிருங்கர் கிடைத்தால் வேண்டும் போது மழையை வரவழைக்கும் கலை கைவரப் பெறு வோம் அல்லவா. செயற்கை மழை முயற்சியில் இறங்க வேண்டாம்தானே. இந்த ரிஷ்ய சிருங்கரையே அயோத்தி மன்னனான தசரதன் தன் நாட்டிற்கு அழைத்து அவரைக் கொண்டே புத்ரகாமேஷ்டி யாகம் செய்திருக்கிறார். அதன் மூலமாகவே, ராம லட்சுமணன், பரத, சத்ருக்னர் பிறந்தார்கள் என்பது இதிகாச வரலாறு. இந்த ரிஷ்ய சிருங்கர் பின்னர் இருந்து தவம் பண்ணின இடமே ரிஷ்ய சிருங்கபுரி. அதுவே இன்று சிருங்கேரி என்று குறுகியிருக் கிறது. நாம் அந்த சிருங்கேரி என்னும் திவ்ய தலத்திற்கே செல்கிறோம்.

இத்தலத்திற்குச் செல்ல ரயிலில் சென்றால் ஷிமோகா ஸ்டேஷனில் இறங்கி 52-மைல் தெற்கு நோக்கிச் செல்லவேண் டும். காரில் செல்பவர்கள் கொப்பா என்ற இடத்திற்கு சென்று மேலும் பதினாறு மைல் சென்றால் இவ்வூர் வந்து சேரலாம். மேற்குத் தொடர்ச்சிமலைச் சரிவில் இருப்பதால், செல்லும் வழி எல்லாம் மலைத் தொடர்களும், அடர்ந்த காடுகளும் இருக்கும். மரங்கள் எல்லாம் சந்தன மரங்கள். பிரயாணம் சுகமாக மணமாகவே இருக்கும். பத்ரா வதிக்குத் தெற்கேயுள்ள தரிக்கிரே ஸ்டேஷனில் இறங்கி காரோ பஸ்ஸோ பிடித்துச் சென்றாலும் சென்று சேரலாம். இந்த ஊர் துங்கபத்ரா நதியின் இடது கரையில் இருக்கிறது. துங்கா நதியும் பத்ரா நதியும் இணைந்த பின்னரே துங்கபத்ரா என்ற பெயரோடு ஓடுகிறது என்பதை அறிந்திருப்பீர்கள். இந்த துங்கபத்ரா நதிகளைப் பற்றியும் ஒரு வரலாறு உண்டு. அன்று ஹிரண்யாட்சன் என்னும் அசுரன் பூமாதேவியையே எடுத்துச் சென்று கடலில் ஒளித்து வைத்துவிட, ஸ்ரீமந்நாராயணன் வராக வடிவில் சென்று ஹிரண்யாட்சனுடன் போர் புரிந்து

அவனை வென்று பூமாதேவியை மீட்டு வந்திருக்கிறார். வராக அவதாரம் எடுத்தபோது இடது கொம்பால் குத்தி வலது கொம்பால் பூமாதேவியை வெளிக்கொணர்ந்திருக் கிறார். அப்படி பூமாதேவியை கொண்டுவந்த இடது கொம்பே துங்கையாகவும், வலது கொம்பே பத்ரையாகவும் மாறிப் பெருக்கெடுத்தது என்பது கதை. உண்மைதானே வராக அவதாரத்தின் மூலம்தானே நிலம் உழும் முறை வழக்கத்திற்கு வந்திருக்கிறது. நிலம் உழ அதன் வளம் பெருக நீரும் ஆறாகப் பெருக வேண்டியதுதானே. அதனால்தானோ, வராக வடிவில் காத்தக் கடவுள் தன் இரு கொம்புகளால் பூமியைக் குத்திக் குடைந்து உள்ளே உள்ள தண்ணீரை வெளியே கொணர்ந்திருக்கிறார். இப்படி ஆற்றுப் பெருக்கு ஏற்படுத்தியதையே, ஒரு கதை யாக நமக்கு தந்திருக்கிறார்கள், நமது முன்னோர்கள். இப்படி உருவான துங்கையின் கரையிலே உள்ள சிறிய ஊர்தான் சிருங்கேரி.

சிருங்கேரி என்ற உடனே நமக்கு ஞாபகம் வருவது ரிஷ்யசிருங்கர் கதை அல்ல. சிருங்கேரி என்றதும் சிருங் கேரியில் உள்ள சங்கராச்சார்ய சுவாமிகளும், ஆதிசங்கர பகவத்பாதாள் நிறுவிய சாரதா பீடமும்தான். காலடியில் பிறந்து, சிறந்த அத்வைத சித்தாந்தத்தைப் பரப்பிய ஆதி சங்கரர் நிறுவிய மடங்கள் நான்கு. மைசூர் ராஜ்ஜியத்தில் உள்ள சிருங்கோரி, ஒரிஸ்ஸா ராஜ்யத்தில் உள்ள பூரி, கத்யவாரில் உள்ள துவாரகை, இமயத்தில் உள்ள பத்ரி என்ற நான்கு இடங்களிலும் மடங்கள் நிர்மாணிக்கப் பட்டிருக்கின்றன. அதில் சிருங்கேரியில் மடம் ஸ்தாபிக்க நேர்ந்த சம்பவம் இதுதான். அவரது யாத்திரையில் இந்த தலத்திற்கு வந்ததும், இங்கு பிரசவ வேதனையில் இருந்த ஒரு தவளைக்கு, அதன் ஜன்ம விரோதியான பாம்பு ஒன்று படம் விரித்து நிழல் தந்து பாதுகாத்து நின்றதும் இதைக் கண்ட சங்கரர் இதுவே சாந்தி நிலவும் அற்புதமான இடம் என்று உணர்ந்து இங்கே மடம் நிறுவியிருக்கிறார். ஆம்

பொதிகையைப் பற்றிய பாடும் குமரகுருபரரும் பாடுகிறாரே;

சிங்கமுடன் வெங்களிறும் உடன்
விளையாடும் ஒருபால், சினப்புலியும்
மட்ப்பிணையும் திளைத்திடும் அங்கொருபால்
வெங்கரடி மரையினோடும் விளையாடும்
ஒருபால், விடஅரவும் மடமயிலும்
விருந்தயரும் ஒரு பால்
அங்கானமர் நிலம் கவிக்கும் வெண்கவிகை
நிழற்கீழ் அம்பொன்முடி சூட்டும்
எங்கள் அபிடேகவல்லி
செங்கமலப்பதம் பரவும் கும்பமுனி
பயிலும் தென்பொதிய மலைகாண்
மற்று எங்கள் மலைஅம்மே

என்று மீனாட்சி அம்மை குறத்திப் பொதிகையைப் பாராட்டியது போல், வாழ்நாள் முழுவதும் பகை உணர் வோடு வாழும் இரண்டு ஜீவராசிகள் இணைந்து வாழ் வதைக் கண்டதும், அது மடம் நிறுவத் தகுந்த இடம் என்று சங்கரர் கண்டது வியப்பல்லவே. இங்கு மடம் நிறுவிய பின்பு விஜய நகர மன்னனான ஹரிஹரன் இந்த சிருங்கேரி கிராமத்திலேயே சங்கராச்சாரியாருக்கு சாஸனம் பண்ணிக் கொடுத்திருக்கிறான். அப்படி கொடுத்த 1346-வருஷம் முதல் அது சங்கரமடத்தைச் சேர்ந்த ஒரு ஜாகீராகவே இருந்து வருகிறது. விஜயநகர மன்னர்களும், பின்னர் வந்த மைசூர் அரசர்களும் சங்கராச்சாரியாரை 'ஜகத் குரு' என்று கொண்டாடி வந்திருக்கிறார்கள். ஆதிசங்கரர் பாரதியையும் தாம்வாதிட்டு வென்றமண்டணமிசிரரையும் அவரது மனைவியானபாரதியையும் அழைத்துக்கொண்டே இத் தலத்திற்கு வந்திருக்கிறார். பாரதி சரஸ்வதியின் அம்ஸமாகவே அவதரித்தவள் என்று கண்டிருக் கிறார். அந்த பாரதியின் ஞாபகார்த்தமாகவே சாரதா பீடத்தை அங்கு நிறுவியிருக்கிறார். ஆதியில்

சாரதையின் வடிவம் சந்தன மரத்தினால் ஆக்கப் பட்டிருந்திருக்கிறது. பின்னர் விஜயநகர மன்னர்களின் ஆலோசகராக வாழ்ந்த வித்யாரண்யர், சாரதையின் வடிவைத் தங்கத்தாலேயே செய்து வைத்திருக்கிறார். அவ்வடிவே அந்தப் பீடத்தை இன்றும் அலங்கரித்துக் கொண்டிருக்கிறது. இந்தச் சந்நதியில் நவராத்திரி பூஜை சிறப்பாக நடக்கிறது. இந்த சாரதா பீடத்திற்குப் பக்கத்திலேயே ஆதிசங்கரருக்கும் ஒரு கோயில் கட்டி வைத்திருக்கின்றார்கள்.

சிருங்கேரியில் கிட்டத்தட்ட நாற்பது கோயிலுக்கு மேல் இருக்கிறது என்றாலும் இங்குள்ள கோயில்களில் எல்லாம் சிறப்பாயிருப்பது வித்யாசங்கரரது கோயில்தான். இக்கோயில் கட்டிடக்கலை அமைப்பில் சாளுக்கியர் கோயில் போல் இருந்தாலும் கோயிலின் உட்புறம் எல்லாம் திராவிட சிற்ப முறையை அனுசரித்து அமைக்கப் பட்டிருக்கிறது என்பது கூர்ந்து கவனிக்கத்தக்கது. கோயில் கிழக்கே பார்த்த கோயில் கருவறையை ஒட்டி ஒரு மண்டபம். இதைச் சுற்றி ஒரு பிரகாரம். இதற்கும் முந்திக்கொண்டு ஒரு நவரங்க மண்டபம், பதினெட்டு அடி உயரத்தில் கட்டப்பட்டிருக்கிறது. அம்மண்டபத்தில் விதானத்தில் எட்டு அடிச்சதுரத்தில் பத்மம் ஒன்று அழகாகச் செதுக்கப்பட்டிருக்கிறது. அதன் இதழ்களை கொத்திக் கொண்டிருக்கும் கிளிகள் எல்லாம் அழகு வாய்ந்தவை. கருவறையைச் சுற்றியுள்ள கோபுரங்களில் பிரம்மா, சரஸ்வதி, லக்ஷ்மி நாராயணன் உமா மகேஸ்வரன் வடிவங்கள் இருக்கின்றன. கிழக்கு வாயிலுக்கும் தெற்கு வாயிலுக்கும் இடையில் உள்ள சுவரில் இந்திரன், யமன், ராமர், வியாசர், துர்க்கை, சனி முதலியவர்களின் வடிவங்கள் இருக்கின்றன. இன்னும் இக்கோயிலில், விஷ்ணுவின் தசாவதாரக் கோலங்கள் பலவும், சிவனது மூர்த்தங்களான அர்த்தநாரி, திரிபுராந்தகர் வடிவங்களும் இருக்கின்றன. இன்னும் மன்மதன், அன்னபூரணி,

ஹயக்கிரீவர் முதலிய அபூர்வ வடிவங்களையும் காணலாம். எல்லாவற்றையும் தூக்கி அடிக்கும் வகையில் நவரங்க மண்டபத் தூண்கள் இருக்கின்றன. இருக்கும் தூண்கள் பன்னிரண்டும், பன்னிரண்டு ராசியைக் குறிக்கின்றன. இதில் அதிசயம் என்னவென்றால், அந்த அந்த ராசியில் சூரியனது கிரணங்கள் அந்த அந்த ராசிக்குரிய தூண்களின் பேரில் விழுவதுதான். கட்டிடக் கலையில் அதி நுட்பமான முறையில் தூண்களும், மண்டபமும் அமைந்திருப்பது போற்றுதற்குரியதாய் இருக்கிறது. இன்னும் மகா மண்டபத்தின் வடபக்கத்தில் உருக்கால் செய்யப்பட்ட சனிபகவானின் படிமம் ஒன்றிருக்கிறது. அந்தச் சனி பகவானின் பார்வைக்குத் தப்ப விரும்புபவர்கள் எல்லாம் அவரை எண்ணெய்க் காப்பு செய்து வழிபடுகிறார்கள். இந்த சனிபகவான் பக்கத்திலேயே ஹரிஹரனும் நிற்கிறார். இக்கோயிலில் மூலவர் லிங்கவடிவில் வித்யா சங்கரர் என்ற நாமத்தோடு இருக்கிறார். வித்யாரண்யர் ஞாபகார்த்தமாக அவரது சிஷ்யர் பாரததீர்த்தர் பிரதிஷ்டை செய்திருக்கிறார்.

இந்த வித்யாசங்கரர் கோயிலுக்கு மேல்புரம் சிறு கோயில்கள் பல இருக்கின்றன. இவை எல்லாம் சங்கர மடத்து ஆச்சார்யார்களது சமாதிகளின் பேரில் கட்டப் பட்டிருக்கிறது. இவைகளையே சமாதிகுடி என்று சொல் கின்றனர். குடி என்றால் கன்னடத்தில் சிறு கோயில் என்று அர்த்தமாம். இந்த சமாதி குடிகளுக்கு மத்தியில் ஒரு குடியில் இருப்பவரை மலையாள பிரம்மா என்கின்றார் கள். ஐந்து அடி உயரத்தில் அவர் இருக்கிறார். ஆதியில் பிரம்மா ராட்சசனாக இருந்தவர் என்றும் அவர் போதும் போதும் என்று சொல்லும் வரை உணவருந்துவதாகச் சொல்லி வித்யாரண்யர் இங்கு அவரை நிறுத்தியதாகவும் கர்ணபரம்பரை கூறுகிறது. இது காரணமாகவே இங்கு நடக்கும் விழாக்களில் எல்லாம், இந்த மலையாள பிரம்மா விற்கு நைவேத்தியம் பிரமாதமாக நடக்கிறதாம். வித்யா

சங்கரர் கோயிலுக்கு வடபுறம் ஜனார்த்தனனுக்கு ஒரு கோயில். அதற்கும் கொஞ்சம் வடக்கே சக்தி கணபதிக்கும் வாகீஸ்வரிக்கும் தனித்தனியே கோயில்கள். சக்தி கணபதியையும், வாகீஸ்வரியையும் வித்யாரண்யர் உபாசனை பண்ணி வந்திருக்கிறார். மைசூரை ஆண்ட திப்புசுல்தானும் அவனது தந்தை ஹைதர் அலியும் அவர்களது காலத்திருந்த பீடாதிபதியை மிகவும் கௌரவித்து வந்திருக்கிறார்கள். தங்கள் பகைவர்களை வெல்ல, பீடாதிபதிகளைக் கொண்டு சத்கண்டிஹோமம் சஹஸ்ர சண்டி ஹோமம் எல்லாம் செய்திருக்கிறார்கள். இன்னும் வித்யாரண்யரது வரலாற்றைக் கூறும் செப்புப்பட்டயங்கள் பல இருக்கின்றன. வித்யாரண்யர் அதிசய சக்தி வாய்ந்தவராக இருந்திருக்கிறார். ஊமைகளைப் பேசச் செய்திருக்கின்றார் 1386-ல் சமாதியான இந்த வித்யாரண்யரை ஹம்பியில் விருபாக்சரது கோயிலுக்குப் பக்கமே அடக்கம் செய்து, கோயில் கட்டியிருக்கிறார். அந்தத் தலத்துக்குப் போகும் போது அதனைப் பார்த்துக் கொள்ளலாம். நீங்கள் சிருங்கேரி போகும் சமயம் ஆச்சார்ய சுவாமிகள் அங்கிருந்தால், அவரது திருவடிகளில் விழுந்து வணங்கி ஆசிபெற்றுத் திரும்பலாம். இல்லாவிட்டால் வித்யாசங்கரை வணங்கிய திருப்தியோடு திரும்பலாம்.

# 10. விஜயநகரத்து விட்டலர்

விஜய நகரம் என்ற பெயரைக் கேட்ட உடனே கலை உலகில் அதன் பிரசித்தி நமக்கு ஞாபகம் வரும். 'விஜயம்' என்ற உடனேயே அந்த நாயக்க மன்னர்கள் கண்ட வெற்றியெல்லாம் நம் கண்முன் வரத்தானே செய்யும். இன்றைய தமிழ் நாட்டுக் கோயில்களில் எல்லாம், நூற்றுக்கால் மண்டபம், ஆயிரக்கால் மண்டபம், கல்யாண மண்டபம் முதலிய மண்டபங்களை நிர்மாணித்தவர்கள் யார்? கோயில் வாயிலில் பெரிய பெரிய கோபுரங்களைக் கட்டியவர்கள் யார்? அற்புதம் அற்புதமான சிற்பவடிவங்களை அமைத்து அவைகளில் சிற்றுளியின் நயம் எல்லாம் தெரியும்படி நுணுக்க வேலைப்பாடுகள் செய்தவர்கள் யார்? என்றெல்லாம் பல கேள்விகள் கேட்டால் அதற்கெல்லாம் விஜய நகர மன்னர்களே என்ற ஒரே விடைதானே கிடைக்கும். இந்த விஜய நகர மன்னர்கள் என்பவர் யார், இவர்கள் அமைத்த சாம்ராஜ்யத்தின் சரிதம் என்ன என்று தெரிந்து கொள்ள வேண்டாமா?

கி. பி. பதின்மூன்றாம் நூற்றாண்டின் துவக்கத்தில் முகமது கோரி டில்லி முதலான பகுதிகளைக் கைப்பற்றி முகம்மதியப் பேரரசை ஏற்படுத்தியிருக்கிறார். குத்புதீன் என்பவன் அந்த அரசை மிகவும் வலிமை உடையதாகச் செய்திருக்கிறான். வட இந்தியாவில் இப்படி நிலைத்த முகம்மதியரது ஆட்சி தெற்கு நோக்கிப் பரவ ஆரம்பித்திருக்கிறது. தக்ஷிணத்தில் அப்படி ஏற்படுத்திய ஆட்சியே பாமினிராஜ்யம் எனப்படும். இந்த ராஜ்யம் தென்னிந்தியாவில் பரவாமல் இருக்க தென்னாட்டு அரசர்கள் பலர் முயன்றிருக்கின்றனர். ஆனால் அலாவுதீன் கில்ஜியின் சேனைத்தலைவனான மாலிக்காபூரின் படைஎடுப்பால்

தேவகிரியாதவர்களும் துவார சமுத்திரத்து ஹொய்சலர் களும் நலிவுற்றிருக்கின்றனர். 1338-ல் முகம்மதுபின் துக்ளக் என்பவன் தென்னாட்டின் போரில் படையெடுத்து ஆனைக் குந்தியைக்கைப்பற்றி அங்குள்ள அரசகுலத்தினரை யெல்லாம் அழித்திருக்கிறார். அரசகுலத்தை நிர்மூலம் செய்த பின்னர் அங்கிருந்த மந்திரிகளில் ஒருவரான ஹக்கா என்பவரை அந்த ராஜ்யத்தின் அதிபதியாக்கியிருக்கிறார். அவர்தான் சரித்திரத்தில் முதலாவது ஹரிஹரிதேவராயர் எனப்படுபவர். அவரது குலகுருவே வித்யாரண்யர். இந்த வித்யாரண்யர் ஆனைக் குந்தியிலிருந்து துங்கபத்திரையைக் கடந்து தென்பக்கமாக நடந்திருக்கிறார் ஒரு நாள். அந்த இடத்திலே துரத்திவரும் வேட்டை நாய்களையே ஒரு முயல் எதிர்த்துப் போராடியதைப் பார்த்திருக்கிறார். அப்படி நிகழ்ந்தது அம்மண்ணின் மகிமையே என்பதையும் உணர்ந்திருக்கிறார். அந்த இடத்தையே வீரக்ஷேத்திரம் என்று அழைத்திருக்கிறார். அங்கேயே ஒரு ராஜ்யத்தை ஹக்காவையும் அவரது சகோதரர் புக்காவையும் கொண்டு நிர்மாணித்திருக்கிறார். பாமினி சுல்தான்களிடையே இருந்த மனக்கசப்பும் குரோதமும் இந்த சின்னராஜ்யம் விரிவடைய வகை செய்திருக்கிறது. அதனால் இந்த ராஜ்யம் வெற்றிமேல் வெற்றி கண்டிருக்கிறது. வித்தியாரண்யரது ஆசியோடு ஆரம்பிக்கப்பட்ட ராஜ்யத்தை வித்யாரண்ய நகரம் என்று அழைத்திருக் கின்றனர் முதலில். அதுவே நாளடைவில் விஜய நகரம் என்று பெயர் பெற்றிருக்கிறது.

இந்த விஜயநகர மன்னர்களில் தலைசிறந்தவராக விளங்கியவர், கிருஷ்ணதேவராயர், அவர் ஆட்சியில் விஜய நகர சாம்ராஜ்யம் மிக்க புகழுடன் விளங்கியிருக்கிறது. மகம்மதியர்கள் எல்லாம் ஒடுங்கியிருந்திருக்கின்றனர். 1509-ம் ஆண்டு முதல் இருபது வருஷகாலம் இவர் ஆண்டிருக்கிறார். மைசூர் ஒரிஸ்ஸா முதலான நாடுகளை யும் வென்றிருக்கிறார். தெற்கே மதுரை வரையிலும்

அதற்கு தெற்கேயும் வந்து அந்த நாடுகளையும் தன் ஆட்சியின் கீழ்கொண்டு வந்திருக்கிறார். கல்வி அறிவும், கலை உணர்வும் நிரம்பிய இந்த கிருஷ்ணதேவராயர் மிக்க திறமையாக அரசாண்டதுடன் பல கலைக் கோயில் களையும் கூடங்களையும் நிர்மாணித்திருக்கிறார். கவிஞர் களை கலைஞர்களை எல்லாம் ஆதரித்திருக்கிறார். இந்த கிருஷ்ணதேவராயர் ஆட்சிக் காலத்தில் பாரசீகத்திலிருந்து வந்த தூதுவர் அப்துல் ரஸாக் என்பவர், விஜயநகரத்தின் சிறப்பையும் கிருஷ்ணதேவராயரது ஆட்சித் திறமையையும் பற்றி விரிவாக எழுதி வைத்திருக்கிறார்.

கிருஷ்ணதேவராயருக்குப் பின் வந்த விஜயநகர அரசர்கள் திறமையுடையவர்களாக இருக்கவில்லை. அச்சமயத்தில் பாமினி சுல்தான்கள் பலரும் ஒன்று கூடி விஜயநகர மன்னரை எதிர்த்திருக்கிறார்கள். தலைக் கோட்டை என்னுமிடத்தில் நடந்த பெரும் போரில், இந்த விஜயநகர மன்னர் தோற்கடிக்கப்பட்டிருக்கிறார். அதன் பின் அவர்கள் விஜயநகரமான தலைநகரில் புகுந்து அங்குள்ள கட்டிடங்களை இடித்து தரைமட்டமாக்கியிருக் கின்றனர். இவர்கள் கலைஉணர்வு அற்றவர்கள் என் றாலும், அங்குள்ள கோயில்களை முழுதும் அழிந்து போகுமாறு சிதைக்கவில்லை. அப்படி இவர்களது கொடுமைக்கு தப்பிய கோயில்களும், அழிக்கப்பட்ட சின்னங்களுமே இன்றும் ஹம்பியில் தலைதூக்கி நின்று விஜய சாம்ராஜ்யப் பெருமையை நமக்கு உணர்த்து கின்றன. நாம்தான் சென்ற வாரத்திலேயே விபோஷர், கோதண்டராமர், அனந்தசயனர் முதலியோருடைய கோயில்களை எல்லாம் பார்த்து விட்டோமே! இன்று நமது சுற்றுலாவை விட்டலர் கோயிலிலிருந்து துவங்கலாம்.

துங்கபத்திரை நதியின் தென்கரையில் விட்டலர் கோயில் இருக்கிறது. ஹம்பியில் உள்ள கோயில்களில் எல்லாம் பெரியதும் சிற்ப சிறப்பு வாய்ந்ததும் இந்தக் கோயில்தான். 500 அடி நீளமும் 310 அடி அகலமும்

உள்ள ஒரு திறந்த வெளியில் இக்கோயில் கட்டப்பட்டிருக்கிறது. இக்கோயிலுக்கு மூன்று பெரிய வாயில்கள் இருக்கின்றன. பிரதான கோயிலைத் தவிர ஐந்து மண்டபங்கள் இந்தக் கோயில் பிரகாரத்தில் கட்டப்பட்டிருக்கின்றன. விட்டலர் கோயில் மகாமண்டபத்து தூண்கள் எல்லாம் சிற்பங்களை ஏந்தி நிற்கின்றன. மரத்திலே செய்ய முடியாத நுணுக்க வேலைகளை



எல்லாம் கல்லிலே செய்திருக்கிறார்கள் சிற்பிகள். இக்கோயிலை கிருஷ்ணதேவராயரே கட்டியிருக்கிறார். அவர் சிறந்த விஷ்ணு பக்தர் ஆனதினால் பண்டரிபுரத்து பாண்டுரங்க விட்டலருக்கு தன்னுடைய தலைநகரில் ஒரு கோயில் இருக்கட்டும் என்று கட்டினார் என்று சொல்கிறார்கள். 1513—ல் கட்ட ஆரம்பித்த கோயில் 1564—ல் தான் கட்டி முடிந்தது என்று அங்குள்ள கல்வெட்டுக்கள்

கூறுகின்றன. அங்குள்ள தூண்கள் எல்லாம் இன்னிசை பாடும் தூண்களாகவே அமைந்திருக்கின்றன. இத்தனை பெருமையுடைய கோயில் இன்று இடிந்து சிதைந்து இருந்தாலும், அக்கோயில் கட்டிய மன்னரின் பெருமையையும் சிற்பிகளின் திறமையையும் உலகுக்கு பறை சாற்றிக் கொண்டிருக்கின்றன. இக்கோயில் இவ்வளவு பிரம்மாண்டமாகக் கட்டியபின், பண்டரிபுரத்து விட்டலர் இங்குவர மறுத்துவிட்டார் என்று



கர்ணபரம்பரை கூறுகிறது. தனக்கு என்று அமைந்த சிறு குடிலைவிட்டுக் கிளம்பி இவ்வளவு பெரிய கோயிலுக்கு வந்து குடியேற விருப்பமில்லை போலும் அவருக்கு. ஆம். அவர் ஏழைப்பங்காளன் அல்லவா. இந்தக் கோயில் பிரகாரத்தில் இக்கோயில் வாயிலிலேயே கல் தேர் ஒன்று இருக்கிறது. இருபத்து ஐந்து அடி உயரமுள்ள இந்தக்

கல்தேரின் சக்கரங்கள் எல்லாம் இன்றும் உருளுகின்றன. தேரின் மேல் விதானம் செங்கல்லில் கட்டப்பட்டு பின்னர் சிதைந்திருக்கிறது. பலகற்களைச் செதுக்கியே இந்தக் கல்தேரை அமைத்திருக்கிறார்கள் என்றாலும், ஒட்டுப் போட்ட இடங்களே தெரியாத வண்ணம் அமைத் திருப்பதால் ஒரே கல்லில் அமைத்த தேர்தானோ என்று சந்தேகிக்கும்படிச் செய்திருக்கிறார்கள் சிற்பிகள். ஹம்பி யில் எதைப் பார்த்தாலும் பார்க்கா விட்டாலும் விட்டலர் கோயிலையும் இக்கல்த் தேரையும் காணாமல் திரும்புதல் கூடாது.

இந்தக் கோயிலிருந்து கிழக்கே வந்து தெற்கே திரும்ப வேண்டும். வழியில் தாளரி கட்டு என்ற வாயிலையும் கடக்க வேண்டும். அதுதான் விஜயநகரத்தின் வடக்கு வாயில். அதற்கு கிழக்கேதான் நிம்பபுரம் இருக்கிறது. அங்குதான் வாலி சுக்கிரீவர் சண்டை நடந்திருக்கிறது. அப்பக்கத்தில் கிடக்கும் கற்களை வாலியின் எலும்புகள் என்றும் கூறுகின்றனர். இனி தெற்கே நோக்கி செல்கின்ற பாதையில் கொஞ்சம் விரைவாகவே செல்லலாம். அப்படிச் சென்று பெல்லாரி செல்லும் பாதைக்குத் தென்புறம் உள்ள கமலாபுரத்தில் உள்ள பட்டாபிராமன் கோயிலையும் பார்க்கலாம். நன்றாகக் கட்டப்பட்டுள்ள இந்தக் கோயிலைப் பார்த்தபின் கொஞ்சம் ஓய்வு வேண்டு மென்றால் பக்கத்தில் உள்ள முசாபரி பங்களாவில் தங்கி ஓய்வெடுத்துக் கொள்ளலாம். அதன்பின் திரும்பவும் வடக்கு நோக்கித் திரும்பலாம். இந்த வழியில்தான் அரசியர் தங்கும் அந்தப்புரங்கள் இருந்திருக்கின்றன. அந்தப்புரமாதர் நீராடும் நீராழி மண்டபம் மிகவும் அழகாக இருக்கிறது. அதற்குப் பக்கத்திலே சந்திர சேகருக்கு ஒரு கோயில் இருக்கிறது. இங்குதான் அந்தப் பிரபலமான கமலமஹால் இருக்கிறது. இந்த கமலமஹால், ஏதோ தாமரை மலர் விரிந்திருப்பது போல் கட்டப்பட்ட கட்டிடம்-பலப்பல கோணங்கள் கொண்டது. ஒரு மாடி

யுடன் கூடிய பெரிய கட்டிடம். மாடிக்கு ஏறுவதற்கு படிகள் எல்லாம் கட்டியிருக்கிறார்கள்.

இதை ஒட்டியே ஹஸரே ராமர் கோயில் இருக்கிறது. இக்கோயில் விஜயநகர மன்னர்களின் சொந்தக் கோயில். சுவர் எல்லாம் சிற்பவடிவங்கள் ராமாயணக் கதை முழுவதையுமே சிற்பமாக வடித்திருக்கிறார்கள். சிற்பிகள் இங்குள்ள தூண்கள் எல்லாம் நிறைந்த வேலைப்பாடு உடையவை. அவை தாங்கி நிற்கும் விதானங்களும் அழகானவை. இக் கோயிலையும் கிருஷ்ண தேவராயரே 1513-ல் கட்டினார் என்பர், சிற்ப வல்லுநர். இக்கலைக் கோயிலைக் கண்டுஅப்படியே அதிசயித்து நிற்கின்றனர் இன்னும். இக் கோயிலை அடுத்தே அந்த சாம்ராஜ்யத்தின் தங்கசாலை இருந்திருக்கிறது.

இங்கிருந்து கொஞ்சம் கிழக்கு நோக்கிச் சென்றால் ரங்கசாமி கோயிலுக்கு வருவோம். இது அவ்வளவு பெரிய கோயில் அல்ல என்றாலும், இங்கு ஒன்பதடி உயரத்திற்கு அனுமார் நின்று கொண்டிருப்பதை காணாமல் மேற் செல்லலாமா? இதற்குப் பக்கத்திலேதான் யானை கட்டும் தறி எல்லாம் இருந்திருக்கிறது இந்த வட்டாரத்தில் ஓர் இடம், மன்னர்களது கொலு இருக்கை ஒன்று இருக்கிறது. கிட்டத்தட்ட எழுபது அடி சவுக்கமாக அமைந்த இந்த கட்டிடத்தையே மகா நவமி திப்பா என்கின்றனர். இங்கு தான் மன்னர்கள் சிம்மாசனத்தில் அமர்ந்து கொலு நடத்தியிருக்கிறார்கள். மகா நவமியில் தர்பார் நடத்தியது எல்லாம் இங்கேதான். இந்த திப்பாவை கிருஷ்ண தேவராயர் தனது கலிங்க வெற்றிச் சின்னமாகக் கட்டியிருந்திருக்கிறார். அங்கேயே வெற்றி விழாவையும் கொண்டாடி இருக்கிறார். விஜய நகரத்தின் வெற்றிச் சின்னமான இந்த தசராதிப்பா இன்று மொட்டையாகச் சிதைந்து நிற்கிறது.

இவற்றை எல்லாம் பார்த்துவிட்டு இன்னும் வடக்கு நோக்கிச் சென்றால் வழியில் ஒரு சிறு கோயிலைப் பார்ப்போம். அதுவே வீரபத்திரர் கோயில். அதையும் கடந்து கொஞ்சதூரம் சென்றால் ஒரு சிறு பாதை மேற்கு நோக்கிச் செல்லும். காரிலிருந்து இறங்கி அந்த வழியில் சென்றால் அங்கு ஒரு பிரம்மாண்டமான நரசிம்மர் சிலையைக் காண்போம். பதினைந்து அடி உயரத்திற்கு மேல் அமைந்த பிரபையுடன் இருக்கும். இந்த நரசிம்மர் கூறை இல்லா வீட்டில் குடியிருக்கிறார். கால்கள் எல்லாம் உடைந்து கிடக்கின்றன என்றாலும் அவர்முகத்தின் உக்கிரம்குறைந்ததாக இல்லை. சிற்ப உலகிலே தனிப்பெருமை வாய்ந்த வடிவமாக ஒரே கல்லில் உருவான இந்த நரசிம்மரை வணங்கிவிட்டு வடக்கே திரும்பினால் குகை போன்ற ஒரு சிறு மண்டபத்தில் பெரிய சிவலிங்கம் ஒன்றிருக்கும். அவரும் அவரது ஆவுடையாரும் பாதிக்குமேல் நீருக்குள் முழுகியே இருப்பர். அவரை ஜலகண்டேஸ்வரர் என்று கூறுகிறார்கள். பெயருக்கு ஏற்ப எப்போதும் தண்ணீரில் மூழ்கியவராகவே இருப்பார் இவர். இந்த் நரசிம்மர். ஜலகண்டேஸ்வரருக்கும் கொஞ்சம் வடபுறம்தான் கிருஷ்ணன் கோயில் இருக்கிறது. பெரிய மதில்களோடு கூடிய இந்தக் கோயில் மிகவும் சிதைந்திருக்கிறது. இக்கோயிலில் நுழைய நமக்குத் தைரியம் வராது. ஏனென்றால், அக்கோயிலின் மண்டபக் கற்கள் எல்லாம், யார் தலைமீது விழுவோம் என்று இன்னும் தொங்கிக்கொண்டிருப்பதாகவே தோன்றும். ஆதலால் எட்டியிருந்தே இந்தக் கோயிலைப்பார்த்துவிட்டு அப்படியே சென்றால் நாம் முதல் முதல் ஹம்பி நகரத்திற்குள் நுழைகிறபோது நம்மை வரவேற்ற அந்த சசிவேகல்லு பிள்ளையார் சந்நிதிக்கே வந்து சேருவோம். ஆம். இதுவரை நாம் ஒன்பது சதுரமைல் பரப்பில் உள்ள விஜயநகரத்தினையே அல்லவா சுற்றி வந்திருக்கிறோம்.

விஜயநகர சாம்ராஜ்யத்தின் பெருமை எல்லாம் அந்த சாம்ராஜ்யத்தில் மன்னனாக இருந்த கிருஷ்ண

தேவராயரின் புகழாகவே இருக்கக் காண்போம். இவர் உருவாக்கிய சாம்ராஜ்யம் இன்றைய தமிழ்நாடு, ஆந்திரப் பிரதேசம், மைசூர், ஒரிஸ்ஸா ராஜ்யத்தையெல்லாம் உள்ளடக்கிய ஓர் அகண்ட சாம்ராஜ்யமாக இருக்கிறது. ஆட்சியும் சிறந்ததொரு ஆட்சியாக இருந்திருக்கிறது என்று சரித்திரம் கூறுகிறது. இன்னும் கலை உலகில் அவரது பிரசித்தியும் பெரிதாகவே இருந்திருக்கிறது. சிறந்த கட்டிடங்கள் கோயில்கள் அணைக்கட்டுகள் கட்டுவதிலேயே தன் உயரிய லட்சியமாகக் கொண்டு வாழ்ந்திருக்கிறார். ஹாஸ்பெட்டில் உள்ள ராயர் கேரி, அனந்தபூரில் உள்ள புக்கராயசமுத்திரம், நெல்லூரில் உள்ள ஆனந்தசாகரம். எல்லாம் அவரால் உருவாக்கப்பட்டவையே. இன்னும் தென்னிந்தியக் கோயில்கள் பலவற்றிலும், கோபுரங்கள், மண்டபங்கள் கட்டி விரிவாக்கியவரும் அவரே. மதுரை, ஸ்ரீரங்கம் முதலிய இடங்களில் அவர்கட்ட முனைந்த கோபுரங்கள் ராயர் கோபுரம் என்றே இன்றும் பேசப்படுகின்றன. காளத்தி அப்பர் கோயிலின் ஆயிரக்கால் மண்டபத்தை, தில்லைச் சிற்றம்பலவன் கோயிலில் வடக்கு வாயில் கோபுரத்தை, திருப்பதி வேங்கடவானனின் வாயில் கோபுரத்தை எல்லாம் கட்டியவரும் இவரே. விஜயநகர நாயக்கமன்னர்களின் வழிபடு தெய்வம் விரூபாக்ஷர் என்றாலும், கிருஷ்ணதேவராயர் சிறந்த விஷ்ணுபக்தராகவே இருந்திருக்கிறார். சூடிக்கொடுத்த சுடர்க்கொடியாம் ஆண்டாளிடம் அத்யந்த பக்திஉடையவராக இருந்த காரணத்தினால் தமிழ்நாட்டு வைணவத் திருப்பதிகளில் எல்லாம் ஆண்டாள் சந்நிதியையும் அமைத்திருக்கிறார். பிறமதங்களையும் போற்றியிருந்திருக்கிறார். வேதாந்திகள், அத்வைதிகள், துவைதிகள், லிங்காயத்துகள், சமணர்கள், ஏன் முஸ்லீம்கள் எல்லோரையும் ஆதரித்திருக்கிறார். தன்னுடைய ராஜ்ய அதிகாரிகளாக முஸ்லீம்களை நியமித்து இருக்கிறார் என்றால் அதிகம் சொல்வானேன். கலைகளை வளர்த்தது போலவே கலைஞர்களையும் ஆதரித்திருக்

கிறார். தெலுங்கு இலக்கியம் இவர் காலத்திலே சீரும் சிறப்பும் பெற்று வளர்ந்திருக்கிறது. அல்லசானி பெத்தண்ணா நந்திதிம்மன்னா, ராம ராஜபுஷ்னுடு, குமார துர்ஜதி, பிங்கள சூரண்ணா, முதலிய கலைஞர்கள் எல்லாம் இவரால் ஆதரிக்கப்பட்டவர்களே. சிறந்த விகட கவியாக இருந்த தெனாலிராமன் இவரது அரசவையில் இருந்து வாழ்ந்தவரே. இப்படி விஜய நகரத்தின் புகழை எல்லாம் தன் புகழாக்கிக் கொண்ட கிருஷ்ணதேவராயரது பெருமை எல்லாம் தெரிய வேண்டுமானால் அந்த சாம்ராஜ்யத் தலைநகரான ஹம்பிக்கு கட்டாயம் ஒரு நடை போய் வரத்தான் வேணும்.

இன்று அங்கு சிதைந்து கிடக்கும் சின்னங்களை வைத்தே, அன்று அந்தத் தலைநகரம் எவ்வளவு உயர்ந்த தாக இருந்திருக்க வேண்டும் என்று ஊகிக்கவும் முடியும். ஹம்பிக்கும் ஹாஸ்பெட்டிற்கும் வந்தது தான் வந்தோம் நடையைக் கொஞ்சம் எட்டிப் போட்டு ஹாஸ்பெட்டிற்கு மேற்கே மூன்று மைல் தூரத்தில் உள்ள துங்கபத்திரை அணையையும், பார்த்துவிட்டேதிரும்பலாம். பிரம்மாண்ட மான அணையின் இருமுனையிலும் இரண்டு பிரயாணிகள் விடுதிகளைக் கட்டியிருக்கிறார்கள், அணை கட்டிய இஞ்சினியர்கள். அவர்களில் ஒருவர் அய்யராகவும் மற்றொருவர் அய்யங்காராகவும் இருந்த காரணத்தால் ஒன்றைக் கைலாயம் என்றும் மற்றொன்றை வைகுண்டம் என்றும் பெயரிட்டிருக்கிறார்கள், ஆம்: கைலாயத்திலும் வைகுண்டத்திலும் சென்று தங்கியிருக்க வசதியும் செய் திருக்கின்றார்கள். அதைப் பயன்படுத்திக் கொண்டு நாமும், அங்குள்ள அதிகாரிகளின் தயவு பெற்று ஒரு நாளாவது தங்கி, துங்கபத்திரை அணையையும் நன்றாகப் பார்த்துவிட்டே திரும்புவோமே.

# 11. ஹரிஹரர், ஹரிஹரேஸ்வரர்



வடஆற்காடு மாவட்டத்திலே காவேரிப்பாக்கம் என்னும் ஊருக்குத் தென்புறத்திலே ஒரு ஊர். அந்த ஊர் திருப்பாற்கடல் என்று விளங்குகிறது. இந்த ஊரில் கோயில் கொண்டிருப்பவன் பிரசன்ன வேங்கடேசன் அந்தப் பிரசன்ன வேங்கடேசனைப்பற்றி ஒரு சுவையான கதை. கதை இதுதான்.

பழைய காலத்திலே புண்டரீக மகரிஷி என்று ஒரு முனிவர், அவரது வழிபடு தெய்வம் மகாவிஷ்ணு. அது

காரணமாக அந்தப் பரந்தாமனைத் தவிர வேறு தெய்வங்களை கண்ணெடுத்தும் பார்க்கமாட்டார். அந்த தெய்வங்கள் இருக்கும் திசைக்கே செல்லமாட்டார். இந்த புண்டரீகர் காஞ்சியில் உள்ள அத்திகிரி அருளாளன் சொன்ன வண்ணம் செய்த பெருமாள், அஷ்டபுயகரர், உளகளந்தார், பச்சை வண்ணர், பவள வண்ணர் முதலிய பெருமாள்களை எல்லாம் வந்தித்து வணங்கிவிட்டு, மேற்கு நோக்கி நடந்து வருகிற போது, இந்தத் திருப்பாற்கடல் பக்கமாக வந்திருக்கிறார். பெயரைக் கேட்டதும் அங்கு அரங்கநாதன் பள்ளி கொண்டிருப்பான். அவனையும் வணங்கி மேல் செல்லுவோமே என்று ஊருக்குள் நடந்திருக்கிறார். அப்போது ஒரு கோயில் அவர் கண்ணில் பட்டிருக்கிறது. அக்கோயில் வாயிலில் நந்தி இருந்திருக்கிறது. மதில் சுவரிலும் நந்தியின் வடிவங்கள் பல இருந்திருக்கின்றன. இவற்றை கண்டதும் அடடா! இது சிவன் கோயில் அல்லவா? அந்தப் பொல்லாத சிவன் ஊர்ப்பெயரை திருப்பாற்கடல் என்று வைத்துக் கொண்டல்லவா நம்மை ஏமாற்றியிருக்கிறான். நானா ஏமாறுகிறவன். இவனை ஏறெடுத்துப் பார்க்காமலேயே திரும்பிவிடுகிறேன் என்று சொல்லிக்கொண்டே வந்த வழியே திரும்பி இருக்கிறார். இதனைக் கவனித்த விஷ்ணு நினைத்திருக்கிறார். இவர் செய்வது தவறு என்பதை அவரைத் திருத்தவும், உலகிற்கு ஒரு உண்மையை எடுத்துக் காட்டவும் முனைந்திருக்கிறார். அவரே ஒரு கிழவேதியர் வடிவில் வந்து புண்டரீகவரை வழிமறித்து, ''என்ன சுவாமி தரிசனத்துக்கு வந்தவர், கோயிலுக்குள் நுழையாமலேயே திரும்பி விட்டீர்களே, காரணம் என்ன?'' என்று கேட்டிருக்கிறார். புண்டரீகரும், நான் இது பெருமாள் கோயில் என்று நினைத்து இங்கு வந்து விட்டேன். பார்த்தால் அது சிவன் கோயிலாக இருக்கிறது. நானோ பெருமாளைத் தவிர சிவனை எல்லாம் வணங்குவதில்லை என்ற வைராக்கிய முடையவன். ஆதலால் தான் திரும்புகிறேன் என்று சொல்லியிருக்கிறார். கிழவேதியரோ, ''என்ன சுவாமி இது, சிவன் கோயில்

என்று யார் சொன்னது. நான் அங்கு சென்று தரிசனம் செய்து விட்டுத்தானே திரும்பி வருகிறேன். அங்கு கோயில் கொண்டிருப்பவன் நீர் வணங்கும் பரந்தாமனே வாரும் என்னுடன்''-என்று அழைத்திருக்கிறார் புண்டரீகருக்கோ ஒன்றும் சொல்ல முடியவில்லை. கிழவேதியரை முழுதும் நம்பவும் அவர் தயாராக இல்லை. ஆதலால் கண்ணை ஒரு துண்டால் கட்டிக்கொண்டே கிழவேதியர் கையைப் பிடித்துக் கொண்டே கோயிலுக்குள் நடந்திருக்கிறார். கோயிலின் கருவறை சென்றதும், கிழவேதியராக வந்த விஷ்ணுவோ அவசரம் அவசரமாக அங்குள்ள லிங்க வடிவத்தை ஏந்தி நிற்கும் ஆவுடையார் பேரிலேயே ஏறி நின்று கொள்கிறார். புண்டரீகரும் அவர் கட்டை அவிழ்க் காமலேயே அங்குள்ள வடிவத்தைக் கையாலேயே தடவிப் பார்க்கிறார். புண்டரீகரது கரங்களுக்கு பரந்தாமன் அணிந்திருக்கும் மணிமகுடம் தெரிகிறது. கைகளிலே ஏந்தியுள்ள சங்கு சக்கரம் தெரிகிறது. கையில் பிடித் திருக்கும் கதை தெரிகிறது. இடையில் உடுத்திய பீதாம்பரம் தெரிகிறது. அதன் மேல் புரளும் பொன் அரைஞாண் தெரிகிறது.இத்தனையும் தொட்டுத்தொட்டுப் பார்த்து அங்கிருப்பவர் மகாவிஷ்ணுவே என்று உறுதிப் படுத்திக் கொண்டு கண்கட்டை அவிழ்த்திருக்கிறார். அப் போது தெரிகிறது அங்கு கோயில் கொண்டிருப்பவர் லிங்க வடிவில் உள்ள சிவனே என்றும் அவருக்குரிய பீடமாகிய ஆவுடையார் பேரிலே தான் இந்தப் பிரசன்ன வெங்கடேசன் ஏறி நிற்கிறார் என்றும். ஆம் உண்மையி லேயே அவரது கண் அன்றுதான் திறக்கப்படுகிறது. சிவன் வேறு, விஷ்ணு வேறு அல்ல இருவரும் ஒருவரே என்ற உண்மையையும் விளங்குகிறது புண்டரீகருக்கு.

இதற்கு எதிர்க்கதை ஒன்றும் இருக்கிறது. அந்தக்கதை இதுதான். பண்டரிபுரத்திலே ஒரு செல்வச்சீமான். அவருக்கு நீண்ட நாளாய் புத்திரப்பேறு இல்லை. அதற் சாகப் பாண்டுரங்கனை வழிபட்டு வந்திருக்கிறார். தனக்கு

ஒரு மகன் பிறந்தால் பாண்டுரங்கனுக்கு ஒரு தங்க அரை ஞான் பூட்டுவதாக பிரார்த்தனையே செய்திருக்கிறார். அவர் பிரார்த்தனையை நிறைவேற்றி வைத்திருக்கிறார் பாண்டுரங்கன். தன்னுடைய பிரார்த்தனையை நிறை வேற்ற அந்த செல்வரும் எண்ணியிருக்கிறார். அந்த ஊரில் தங்க வேலையில் பிரபலமாயிருந்த நரஹரி சேரனார் என் னும் பத்தரை அணுகியிருக்கிறார்: அந்தப் பத்தரோ நல்ல சிவபக்தர். சிவனை மறவாதசிந்தையர் புண்டரீகர் எப்படிப் பெருமாளைத் தவிர வேறு எந்த தெய்வங்களைப் பார்க்க மாட்டேன் என்ற வைராக்கியத்தில் இருந்தாரோ அதைப் போல இவர் சிவனைத் தவிர வேறு எந்தத் தெய்வத் தையும் கண்ணெடுத்துப் பார்க்க மாட்டேன் என்று வைராக்கியத்தில் இருக்கிறவர். ஆதலால் இவர் பாண்டு ரங்கனது இடையின் அளவை யாராவது எடுத்துக் கொணர்ந்து தந்தால்தான் அரைஞான் செய்து தருவ தாகச் சொல்கிறார். செல்வச் சீமானும் எப்படியாவது அரைஞான் செய்து தந்தால் போதும் என்று பாண்டு ரங்கனது இடையின் அளவை எடுத்து வந்து கொடுத் திருக்கிறார். நரஹரி சேரனாரும் அரைஞான் செய்து கொடுக்கிறார். அதை எடுத்துக் கொண்டு பாண்டு ரங்கன் சந்நிதிக்குச் சென்றால் அது அளவில் குறைகிறது. திரும்பவும் அளவெடுத்து திரும்பவும் அரைஞான் செய்யச் சொல்கிறார். இந்த தடவையோ அரைஞான் மிகவும் பெரியதாகி விடுகிறது. தனவந்தர் நரஹரி சேரனாரை நீர் எப்படியாவது கோயிலுக்கு வந்து நீரே அளவெடுத்துச் செய்து தர வேண்டும். என்கிறார். என்ன சங்கடம் இவரோ! பாண்டுரங்கனைக் கண்ணால் பார்க்க முடியாது என்ற வைராக் கியம் உடையவர். கடைசியில் தனவந்தர் விருப்பப்படியே தன் கண்களைக் கட்டிக்கொண்டு கோயிலுள் நுழைந்து பாண்டுரங்கனது இடையை அளவெடுக்கிறார். தடவித் தடவிப் பார்க்கிறார். என்ன அதிசயம்! நரஹரி சேரனார் கைகளுக்கு அப்போது தட்டுப்பட்டவர் ஜடாமகுடதாரி யானசிவ பெருமானே. இடையிலே அணிந்த புலித்தோலும்,

பாம்பணியும், கைகளில் ஏந்திய மான், மழு, திரிசூலம் இவைகளே தட்டுப்படுகின்றன. இவற்றைத் தெரிந்த உடன் நரஹரி சேரனார் கண்களை அவிழ்த்துப்பார்க்கிறார். அங்கு பழைய பாண்டுரங்கனே நிற்கிறார். கைகளுக்கு தட்டுப் பட்ட பரமசிவனைக் காணோம். உண்மை விளங்குகிறது நரஹரி சேரனாருக்கு, விஷ்ணு வேறு சிவன் வேறு அல்ல, இருவரும் ஒருவரே என்று.

இந்த இரு கதைகளும் விளக்கும் உண்மை நமக்கும் விளங்குகிறது. இப்போது பக்தர்களுக்குள்ளே எத்தனை தான் சண்டையிருந்தாலும், இந்த சிவனும் விஷ்ணுவும் யாதொரு பேதமும் இல்லாமல் ஒருவரில் ஒருவர் இணைந்து நிற்கும் இயல்பு பெற்றவர்களாகிறார்கள். இப்படி இணைந்து நிற்கும் திருக்கோலத்தை தானே சங்கர நாராயணர் என்னும் ஹரிஹரன் என்றும் பக்தர்கள் வணங்கி வருகிறார்கள். ஆழ்வார்கள் பாடியிருக்கிறார்.

அரன் நாரணன் நாமம் ;
ஆன் விடை புள் ஊர்தி ;
உரைநூல் மறை ; உறையும்
கோயில் ; வரை நீர்
கருமம் அழிப்பு அளிப்பு
கையது வேல் நேமி
உருவம் கார் மேனிஒன்று

என்று பொய்கை ஆழ்வார் பாடியது இந்த சங்கரநாராயண வடிவத்தைக் கண்டுதானே.இன்னும் பேயாழ்வார் தெய்வத் திருமாலை சென்று வேங்கடவாணனைக் கண் குளிரக் கண்டு தரிசித்த பின் இப்படி சிவனும் விஷ்ணுவும் இணைந்து நிற்கும் கோலத்தையே கண்டிருக்கிறார். அப்படி அவர் பெற்ற அனுபவத்தையே

தாழ்சடையும் நீள் முடியும்
ஒண்மழுவும் சக்கரமும்
சூழ் அரவும் பொன் நாணும்

தோன்றுமால்—சூழும்
திரண்டு அருவி பாயும்
திருமலை மேல் எந்தைக்கு
இரண்டுருவும் ஒன்றாய் இசைந்து

என்று ஹரிஹர வடிவத்தைப் பாடவும் தோன்றியிருக்கிறது. தமிழ் நாட்டுத் திருத்தலங்களை கண்டு வரும்போது திருநெல்வேலி மாவட்டத்தில் சங்கரன் கோவில் என்ற தலத்தில் சங்கர நாராயணர் வடிவைக் கண்டு தரிசித்து மகிழ்ந்திருக்கிறோம். வேங்கடத்திற்கு அப்பால் செல்லும் இத்தலயாத்திரையிலும் ஹரிஹரனைக் காண்கிறோம். அந்த ஹரிஹரன் கோயில் கொண்டிருக்கும் தலம் தான் ஹரிஹர். அந்த தலத்திற்கே செல்கின்றோம் நாம் இன்று.

ஹரிஹர், மைசூர் ராஜ்யத்தில் மைசூருக்கு வடக்கே இருநூறுமைல் தூரத்தில் இருக்கிறது மைசூர். அரிசிக்கரை பூனா ரயில் பாதையில் சென்றால் ஹரிஹர் என்ற ஸ்டேஷனிலேயே இறங்கலாம். காரில் சென்றால் மைசூரிலிருந்து ஷிமோகா சென்று அங்கிருந்து நாற்பது மைல் வடக்கு நோக்கிச் சென்றாலும் சென்று சேரலாம். இந்த ஊருக்குச் செல்ல ஷிமோகாவிலிருந்து பஸ் வசதியும் உண்டு. ரயில்வேஸ்டேஷனுக்குத் தெற்கேமூன்று பர்லாங்கு தூரத்தில் துங்கபத்திரை நதிக்கரையில் இந்த ஹரிஹரேஸ்வர் கோயில் இருக்கிறது. கோயிலுக்குக் கீழ்ப்புறம் கோட்டைச் சுவர் போல ஒரு மண்டபம் இருக்கிறது. அந்த மண்டபத்தினுள்ளே நுழைந்து மேற்கு நோக்கி சென்றால் ஒரு திறந்த வெளி முற்றம் வந்து சேருவோம். அங்கு கிழக்கு நோக்கிய வாயிலுடன் கோயில் அமைந்திருக்கிறது. கோயிலை கோபுரம் ஒன்றும் அழகு செய்யாது. கன்னட கல்வெட்டுக்கள் நிறைந்த குத்துக்கல்கள் பல நின்று கொண்டிருக்கும். முன் சொன்ன மதில் வாயிலை ஒட்டி ஒரே கல்லால் உருவாகிய தீபஸ்தம்பங்கள் இரண்டு

நின்று கொண்டிருக்கும் இவைகளை எல்லாம் பார்த்து விட்டே கோயில் முன் மண்டபம் வரவேணும். அந்த மண்டபம் விசாலமான மண்டபம் அதனை ஏந்தி நிற்கும் தூண்கள் எல்லாம் கடைசல் பிடித்த கருங்காலி மரத்தால் செய்யப்பட்டவையோ என்று சொல்லும்படி பள பள என்று இருக்கும். கொஞ்சம் நெருங்கி அந்தத் தூண்களைத் தட்டிப் பார்த்தால் அவை மரத்தால் செய்யப்பட்டவை அல்ல, நல்ல கருங்கல்லால் ஆனவை என்றே தோன்றும். கல்லையா இப்படி பளபளக்க வைத்திருக்கிறார்கள் சிற்பிகள் என்று அதிசயித்து நிற்போம். மண்டபத்தின் அழகையும் அந்த மண்டபத்தின் விளிம்புகளில் உள்ள கொடுங்கைகளையும் அதில் உள்ள சிற்ப வேலைகளையும் கண்டு மகிழ்ந்த பின் மேலும் நடந்தால் கருவறை வாயில் வந்து சேருவோம். அங்கிருந்து ஹரிஹரேஸ்வரனைத் தரிசிக்கலாம். அந்த ஹரிஹரன் நாலடி உயரமே உள்ள சிலா வடிவம். அரையில் ஒரு பட்டுக் கரை வேட்டியும் மேலே ஒரு ஷர்ட்டும் அணிந்து கொண்டு நவநாகரீக புருஷனாய் அவர் காட்சி தருவார். இந்த ஹரிஹர வடிவம், நமது தமிழ் நாட்டு சங்கர நாராயணனது வடிவம் போன்றதே. இடபக்கம் ஹரியாகவும், வலப்பக்கம் ஹரனாகவும் இருக்கும். கிரீடமும் சடாமகுடமும் தலையை அலங்கரிக்கும். நான்கு திருக்கரங்களில் இடப் பக்கம் உள்ள கரத்தில் சங்கு சக்கரமும், வலப்பக்கம் உள்ள கரத்தில் திரிசூலமும் உருத்திராக்கமும் இருக்கும். இரண்டு கைகள் நீண்டு உயர்ந்திருந்தால் இரண்டு கைகள் பக்க பலமாக அமைந்திருக்கும். இரண்டு பீடத்தின் மேல் தங்கியிருக்கும். அந்த பீடத்தில் ஒரு பக்கத்தில் பார்வதியும் கணபதியும் இருப்பர். மற்றொரு பக்கத்தில் லட்சுமியும் ரிஷ்ய சிருங்கரும் இருப்பர். சங்கரன் கோயிலில் உள்ள சங்கரநாராயணன் பக்கத்தில் இப்படி பார்வதி, லட்சுமி எல்லாம் இருப்ப தில்லை. இத்தனையையும் பார்த்தபின், ஹரிஹரேஸ் வரனின் திருவடி தரிசனம் காணவிழைவோம். காலையும்,

மறைத்துக் கட்டியிருக்கும் வேட்டியை கொஞ்சம் தூக்கிக் காட்டும்படி அர்ச்சகரை வேண்டினால் அவர் காட்டுவார். அப்படி காட்டினாலும், நாம் திருவடித் தரிசனம் காண இயலாது. காரணம் கால்கள் இரண்டும் பூமிக்குள்ளேயே புதைந்திருக்கும். இதற்கு காரணம் வினவினால் தலவரலாற்றுத் தகவலே கிடைக்கும். தலவரலாறு இதுதான்.

இந்த வட்டாரத்திலே அன்று குகாசுரன் என்று ஓர் அசுரன் இருந்திருக்கிறான். அவன் பிரம்மனை நோக்கிக் கடுந்தவம் செய்திருக்கிறான். தவத்தில் வெற்றி பெற்று தனக்கு தேவர்களாலும், ஏன் அரியினாலும், அரனாலுமே மரணம் ஏற்படக் கூடாது என்று வரம்பெற்றிருக்கிறான். அந்த வரபலத்தால் கர்வம் கொண்டு தேவர்களையும் மக்களையும் துன்புறுத்தி வந்திருக்கிறான். தேவரும் மற்றவர்களும் அரியிடமும் காளியிடமும் முறையிட இருவரும் தனித்தனியாய் அவனை அணுகவோ அல்லது அழிக்கவோ இயலாது என்று கருதி, இருவரும் இணைந்த ஒரு வடிவம் தாங்கி, அவ்வடிவுடனேயே அவனிடம் போரிட்டு வென்று, அவனைப் பாதாளத்தில் அழுத்தியிருக்கின்றார். மிகுந்த வரபலமுடைய அந்த குகாசுரனை பாதத்தில் அழுத்துவது என்பது என்ன எளிதான காரியமா? அழுத்தம் அதிகம் கொடுக்க வேண்டியிருந்தது. அப்படி அழுத்தியதில் ஹரனின் கால்களுமே பூமியில் புதைந்து போயிருக்கிறது. இன்னும் அந்த குகாசுரன், அழுத்திய காலை அவன் தலையிலேயே எப்போதும் வைத்திருக்கும்படி வேண்டியிருக்கிறான். இதுவும் ஒரு காரணம், திருவடி பூமியிலேயே அழுந்தியிருப்பதற்கு பின்னர் அவன் வேண்டியபடியே அந்தத்தலமும் குகாரண்யக்ஷேத்திரம் என்று பெயர் பெற்றிருக்கிறது.

அந்தக் கோயிலுக்கு வடபுறம் ஒரு சிறு கோயில் இருக்கிறது. அங்கு கோயில் கொண்டிருப்பவர் தேவியர். ஆம் அங்கு பார்வதிதான் பிரதான தேவி. அவள் பக்கத்திலே

லட்சுமியும் சரஸ்வதியும் இருக்கின்றனர். தேவியர் மூவரும் சேர்ந்திருக்கும் கோலம்தானே அன்னைபராசக்தியின் கோலம் அந்தத் தேவியரையும் வணங்கிய பின்பே திரும்பலாம்.

இந்த ஹரிஹரேஸ்வரரது கோயிலை ஹொய்சல மன்னரான இரண்டாம் நரசிம்மனின் சேனாதிபதியான போலால்வா என்பவர் 1223—ம் வருஷம் கட்டினான் என்று சரித்திர ஏடுகள் சொல்கின்றன. சரித்திர ஏடுகள் சொல்வானேன். கோயிலின் முன் மண்டபத்தில் உள்ள தூண்களே இந்தக் கோயில் ஹொய்சலர் திருப்பணிகள் என்று பறை அறைகிறதே. பின்னர் 16—ம் நூற்றாண்டில் விஜயநகர் சாம்ராஜ்யத்தை ஆண்ட நாயக்க மன்னர்கள் இக்கோயிலுக்கு பல நிபந்தங்கள் ஏற்படுத்தி கோயிலைப் பாதுகாத்து வந்திருக்கின்றனர். விஜயநகர் சாம்ராஜ்யத்தை உருவாக்கும் பணியில் முனைந்து நின்ற ஹக்கா என்ற மன்னன் இந்த ஹரிஹரனிடத்தில் அத்யந்த பிரியம் உடையவனாக இருந்திருக்கின்றார். அதனால் தான் பெயரையே ஹரிஹர நாராயணன் என்று மாற்றிக் கொண்டிருக்கிறார். அத்தனை பக்தி அந்த ஹரிஹரனிடம் அவனுக்கு. நாமும் அந்த ஹரிஹரனை வந்தித்து வணங்கி விட்டு நமது யாத்திரையைத் தொடரலாம்.

# 12. ஹம்பி பம்பாபதி

உலகம் உருண்டு கொண்டிருக்கிறது என்கின்றனர் விஞ்ஞானிகள். உலகம் உண்மையில் உருண்டு கொண்டிருக்கிறதோ என்னவோ, இந்த உலகில் தோன்றும் சாம்ராஜ்யங்கள் உருண்டு கொண்டிருக்கின்றன. சரித்திர ஏடுகளைப் புரட்டினால் எத்தனை எத்தனை சாம்ராஜ்யங்கள் தோன்றித் தோன்றி நின்று அழிந்து போயிருக்கின்றன, ஒரு சாம்ராஜ்யத்தின் அழிவிலே இன்னொரு சாம்ராஜ்யம் தோன்றியிருக்கிறது.பழங்காலத்தில் எகிப்திய சாம்ராஜ்யம்,பாரசீக சாம்ராஜ்யம் கிரேக்க சாம்ராஜ்யம், ரோம சாம்ராஜ்யம் எல்லாம் உலகில் தோன்றி,அவைகளும் காலகதியில் அழிந்து போயிருக்கின்றன. இந்திய சரித்திரத்தைப் கொஞ்சம் புரட்டினால், அங்கிருந்த அந்தப் பழைய மௌரிய சாம்ராஜ்யம், குப்த சாம்ராஜ்யம், ஏன் மொகலாய சாம்ராஜ்யம், எல்லாம் அழிந்து தானே போயிருக்கின்றன. நிரம்பச் சொல்வானேன்? நம் தமிழகத்தின் சரித்திரத்தையே நோக்கினால் இங்கிருந்த பல்லவ பேரரசு, சோழப் பேரரசு போன்ற பெரிய சாம்ராஜ்யங்களும் அழிந்து தானே போயிருக்கின்றன. எங்கள் சாம்ராஜ்யத்தில் சூரியன் அஸ்தமிப்பதில்லை என்று கட்டியம் கூறிக் கொண்டு உலகின் பெரும் பகுதியை ஆண்ட பிரிட்டிஷ் சாம்ராஜ்யமும் இன்று நிலை குலைந்து தானே நிற்கிறது. இப்படி சாம்ராஜ்யம் சாம்ராஜ்யமாக அழிந்தாலும் அந்த சாம்ராஜ்யங்களின் பெருமைகளை விளக்கும் சரித்திரச் சான்றுகள் நம் கண் முன் நின்று பழம் பெருமைகளை எல்லாம் விளக்கத்தான் செய்கின்றன. அவைகளை வைத்துத்தானே அந்த அந்த சாம்ராஜ்ய சரித்திரத்தையே உருவாக்கவும் முடிகின்றன. இப்படிப்பட்ட சாம்ராஜ்யம் ஒன்றுதான் விஜயநகர சாம்ராஜ்யம். அந்த சாம்ராஜ்யம்

அகன்று பரந்திருக்கிறது. அந்த சாம்ராஜ்யம் நீண்டநாள் நிலைக்காமல் அழிந்துதான் போயிருக்கிறது. ஆனால் அந்த சாம்ராஜ்யத்தின் பெருமையை அறிய நாம் தென்னிந்தியா முழுவதையும் சுற்ற வேண்டாம். ஹம்பி என்ற தலத்திற்குப் போய் அங்கு அழிந்து கிடக்கும் சின்னங்கள் பலவற்றை மட்டும் பார்த்தால் போதும், அந்த சாம்ராஜ்யம் எவ்வளவு மகோன்னதமாக இருந்திருக்க வேண்டும். அத்தகைய சாம்ராஜ்யமும் அழிந்து தானே போயிருக்கிறது. என்று நாம் அறிகிறபோது நமக்கு இந்த உலகின் நிலையாமையைப் பற்றிய உண்மை தெளிவாக விளங்கும். ஆம் அன்றே சொல்கிறாளே அவ்வைப்பாட்டி.

ஆற்றங்கரையின்
மரமும், அரசு அறிய
வீற்றிருந்த வாழ்வும்
விழும் அன்றே

என்று இன்னும்,

சொலல் முறைகண்தோன்றி
சுடர்மணித்தேர் ஊர்ந்து
நிலமுறையில் ஆண்ட
நிகரிலார் மாட்டும்
சிலமுறை அல்லது
செல்வங்கள் நில்லா
விலங்கும் எறிபடையும்
ஆற்றலும் மாண்பும்
கலந்த தங்கல்வியும்
தோற்றமும் ஏனைப்
பொலஞ்செய் புனைகலனோடு
இவ்வாறு ஆனாலும்
விலங்கிவரும் கூற்றை
விலக்கலும் ஆகா

என்ற அந்தப் பழம் பாட்டில் சொல்லியபடி, எவ்வளவு பெரிய பேரரசு என்றாலும் அதுவும் அழிந்துதானே

போயிருக்கிறது. எப்படி ஒரு பெரிய சாம்ராஜ்யத்தின் பெருமை எல்லாம் ஒரு தலைநகரிலே அடங்கிக் கிடந்திருக் கிறது. அது எப்படி அழிந்துப் போயிருக்கிறது என்று தெரிய நாம் அந்த மறைந்த மாநகரமாகிய ஹம்பி என்ற இடத்திற்குச் செல்ல வேணும். அந்த ஹம்பிக்கே செல்கிறோம் நாம் இன்று.

ஹம்பி செல்ல, சென்னையிலிருந்து பம்பாய் செல்லும் ரயிலில் ஏறவேண்டும். குண்டக்கல் ஜங்ஷனில் இறங்கி அங்கிருந்து ஹுப்ளி செல்லும் ரயில் ஏறி ஹாஸ்பெட் என்ற ஸ்டேஷனில் இறங்கவேண்டும். அந்த ஹாஸ்பெட் ஸ்டேஷனிலிருந்து பெல்லாரி செல்லும் பாதையில் காரிலோ, பஸ்ஸிலோ இல்லை ஜட்கா வண்டியிலோ எட்டு மைல் கிழக்கு நோக்கிச் செல்ல வேண்டும். அப்படிச் சென்றால் ஹம்பி என்று வழங்கும் அந்த பழைய விஜய நகர சாம்ராஜ்யத்தின் தலைநகருக்கு வந்து சேருவோம். ஹம்பி சென்று அங்குள்ள பிரதான கோயிலில் இருக்கும் விருபாக்ஷரை வணங்கும் முன் வழியில் உள்ளதை எல்லாம் பார்த்துவிட வேண்டாமா. சரி, நானும் உங்களை மெல்ல மெல்ல இட்டுச் சென்று எல்லா இடங்களையும் காட்டி விடுகிறது என்ற சங்கல்பத்துடனே தானே புறப்பட்டிருக் கிறேன். அவசரம் இல்லாமல் கொஞ்சம் மெதுவாகவே போகலாம். இதற்கெல்லாம் சொந்தக் கார் இருந்தால் மிக மிக நல்லது. இல்லாவிட்டால் ஹாஸ்பெட்டில் நல்லதொரு டாக்சியை ஏற்பாடு செய்து கொள்ளலாம். ஹாஸ்பெட் என்றாலே கன்னடத்தில் புதிய பட்டணம் என்றுதான் பொருள். ஹாஸ்பெட் அப்படி ஒன்றும் புதியதொரு பட்டணமாக இல்லை. அந்தக்காலத்தில் அதற்கு திருமலை தேவியர் பட்டணம் என்றுதான் பெயர் இருந்திருக்கிறது. விஜயநகர் மன்னர்களில் தலை சிறந்தவராகவும், அந்த சாம்ராஜ்யத்தை மகோன்னத நிலைக்குக் கொண்டு வந்த வருமான கிருஷ்ணதேவராயர் நிர்மாணித்தப் பட்டணம் அது. தன்னுடைய இரண்டாவது மனைவியான திருமலை

தேவியரின் ஞாபகார்த்தமாக இந்த நகரை முதலில் நிர்மாணித்திருக்கிறார். அந்தப் பழைய நகரத்தைச் சுற்றி ஒரு புதிய பட்டணம் தோன்றியிருக்கிறது. அதுவே ஹாஸ்பெட் என்று பெயர் பெற்றிருக்கிறது. ஹாஸ் பெட்டில் பார்க்க வேண்டியவை ஒன்றும் இல்லை. ஆதலால் விரைவாகவே காரை ஓட்டலாம் கிழக்கே இரண்டு மைலில் நாகனஹல்லி என்று இன்று வழங்கும் நாகலாபுரம் இருக்கிறது. இந்த நாகலாபுரமும் கிருஷ்ணதேவராயர் தன் தாயார் நாகலாதேவியின் ஞாபகார்த்தமாக நிர்மாணித்ததே. இந்த நாகலாபுரம்தான் மேற்கிலிருந்து வரும் யாத்திரிகர்களுக்கு ஹம்பியில் நுழைவதற்கு ஒரு வாயிலாக அமைந்திருக்கிறது. இந்த வழியில் செல்லும் போதுதான் ஹாஸ்பெட் ஸ்டேஷனுக்கு ஒரு மைல் தூரத்தில் அனந்தசயனரது கோயில் ஒன்றிருக்கிறது. அங்குள்ளவர்களிடம் அனந்தசயனரது கோயில் எங்கிருக் கிறது என்று கேட்டால் அவர்களுக்குத் தெரியாது. அஞ்சன குடி எங்கிருக்கிறது என்றால் கோயிலைக் காட்டுவார்கள். கோயில் பெரிய கோயில்தான். அங்குதான் நீண்டதொரு சயனமேடையில் அனந்தர் சயனக்கோலத்தில் இருப்பார். இக்கோயிலின் விதானம் செங்கல்லும் சுண்ணாம்பும் கொண்டு அமைக்கப்பட்டிருக்கிறது. கட்டிடக்கலையில் ஒரு அதிசயம் என்று கருதப்படுகிறது இக்கோயிலை கிருஷ்ணதேவராயர் 1524-ல் கட்டி முடித்தார் என்று அங்குள்ளவர்கள் கூறுகிறார்கள். இங்குள்ள அனந்த சயனரைவிடப் பெரியதொரு அனந்த சயனரை சிற்பி ஒருவன் உருவாக்கியிருக்கிறான். அதனை உருவாக்கிய இடமான ஹோலாலு என்ற இடத்திலிருந்து எடுத்து வர முடியாது போயிருக்கிறது என்று தெரிகிறது. வராதவரைப் பற்றிக் கவலைப்படாமல் வந்து படுத்திருப்பவரைத் தரிசித்து விட்டு மேல் நடக்கலாம். நடக்கும் சாலையில் நாலாவது மைல் கடந்ததும் இடது கைப் பக்கம் ஒரு பெரிய கிணறு இருக்கிறது. எண்கோண வடிவில் கல்லாலேயே கட்டிய பெரிய கிணறு அது. உள்ளே இறங்க வசதியானப்

படிகள் கட்டியிருக்கிறது. இதனை சூளைபாவி என்கின்றனர். இக்கிணற்றை வெட்டிக்கட்டியவர் ஒரு நடனமாது என்கின்றனர். இக்கிணற்றின் பக்கத்தில் மல்லப்பன் குடி என்று ஒரு கோவில். இக்கோயிலையும் கிருஷ்ண தேவராயரே 1510-ல் கட்டியிருக்கிறார். நாலரைமைல் கடந்ததும் கதிராம்புரம் திரும்பும்பாதை ஒன்றிருக்கிறது. அந்தப் பாதையின் பக்கத்தில் மூன்று சமாதிகள் இருக்கின்றன. அவை முஸ்லீம்களின் சமாதிகள். யார் யாருடைய சமாதி என்று தெரியவில்லை. இந்த சமாதிகளுக்குக் கிழக்கே அரைமைல் தூரத்திலே ஹேமகூடம் என்னும் சிறிய மலைச் சிகரம் ஆரம்பிக்கிறது. அங்கு அந்த ஹேம கூடத்தின் சிகரத்தில் இரண்டு பாதங்கள் செதுக்கப்பட்டிருக்கின்றன. அவைகளைச் சுற்றி ஒரு பாம்பையும் செதுக்கியிருக்கிறுன் சிற்பி. பாதங்கள் நாராயணனது பாதங்கள் என்றும், அப்பாதங்களைச் சுற்றிக் கிடக்கும் பாம்பு ஆதிசேஷன் என்றும் தெரிகிறது. ஆதலால் அந்த விஷ்ணு பாதத்தை வணங்கிவிட்டு மேற்செல்லலாம். இந்த ஹேமகூடத்தின் வழியாகத்தான் நாம் ஹம்பி நகரில் நுழையவேணும்.

இனி ஹம்பியில் நுழையும்போது நம்மை வரவேற்பவர் இரண்டு பெரிய பிள்ளையார்கள் தாம். சாலைக்கு மேல்புறம் நான்கு பக்கம் திறந்திருக்கும் ஒரு பெரிய மண்டபத்திலே விக்னேஸ்வரர். அவரைத்தான் சசிவேகல் கணேசர் என்கின்றனர். அவரை கடுகு விநாயகர் என்று தமிழில் சொல்லலாம். ஆனுல் கடுகைப் போல் சிறிய வடிவினர் அல்ல. நல்ல பெரிய வடிவம். ஒருவேளை கடுகு நிறத்து கணேசர் என்பதற்காகத்தான் சசிவேகல் கணேசர் என்கிறுர்களோ என்னவோ. அடுத்தாற் போல் ஊள்ஊ பெரிய கோயிலில் உள்ள பெரியவிநாயகரைக் கடலைக் கல் விநாயகர் என்று அழைக்கிறுர்கள். இவரது வடிவமும் பெரிதே. இவ்வடிவத்தின் பல பாகங்கள் சிதைந்திருக்கின்றன. இந்த இரண்டு விநாயகரையும் வணங்கி விட்டு

வடக்கே சென்றால் கார் ஒரு பெரிய பள்ளத்தில் இறங்கி ஏறும். அதன் பின் ஹம்பியின் பஜார் வீதியில் மேற்கு நோக்கிச் சென்றால் அங்குள்ள பிரதான கோயிலான விருபாக்ஷர் கோயில் வாயிலுக்கு வந்து சேருவோம். அந்தக் கோயில் வாயிலுக்குக் கிழக்கே தமிழ் நாட்டுக் கோயில்களில் உள்ளது போன்று மரத்தாலாகிய தேர் இரண்டு நிற்கும். இந்தக் கோயிலின் விழாவே சித்திரா பவுர்ணமியில் நடக்கும் ரதோத்சவம்தான். அதைக் காண ஆயிரக்கணக்கான தமிழர்களும் ஆந்திரர்களும் வருவதாகச் சொல்கின்றனர். கோயில் வாயிலை 165 அடி உயரமுள்ள கோபுரம். ஒன்று அணி செய்யும். அக்கோபுரத்தில் பதினொரு மாடங்கள் இருக்கின்றன. கோயில் சுவர்களில் எல்லாம் சிற்ப வடிவங்கள் செதுக்கப்பட்டிருக்கும். இக்கோயில் வாயிலைக் கடந்ததும் ஒரு பெரிய திறந்த வெளி முற்றம் வந்து சேருவோம். அங்கெல்லாம் பல குடில்கள் இருக்கும். அதில் கோயில் ஊழியர்களும் யாத்திரீகர்களும் தங்கியிருப்பர். இவற்றையும் இடை நிலை கோபுரத்தையும் கடந்துதான் அடுத்தபிரகாரத் துக்கு வரவேண்டும். அங்கு ஒரு மண்டபம். அதுவே ரங்க மண்டபம். சிறந்த வேலைப்பாடுடைய தூண்கள் அந்தரங்க மண்டபத்தைத் தாங்கி நிற்கும். அதையும் கடந்து மூலக் கோயிலுக்குச் செல்ல வேண்டும். கீழ்ப்பக்கத்து வாயில் வழி யாக உள்ளே செல்ல அனுமதிக்கமாட்டார்கள். ஆதலால் வடபக்கத்து வாயில் வழியாகத்தான் செல்லவேண்டும். கோயிலின் கருவறையிலே விருபாக்ஷர் சிவலிங்க வடிவிலே இருக்கிறார். அவரையே பம்பாபதி என்கிறார்கள். பம்பை என்பது துங்க பத்ரையின் பழைய பெயர். கம்பன் பாடு கிறானே பம்பைப் பொய்கையைப்பற்றி. துங்கபத்ரையின் கரையில் இக்கோயில் இருப்பதால் பம்பாபதி என்ற பெயர் பொருத்தமானதுதான். இந்தப் பம்பாபதியைப் பற்றி ஒரு கதையும் வழங்குகிறது. பக்கத்தில் உள்ள ஹேமகூடம் என்னும் பர்வதத்தில் உள்ள முனிபுங்கவர்களுக்கு கன்னிப் பெண்ணொருத்தி புஷ்பப் பணிவிடை செய்து வந்திருக்

கிறாள். அவளது சேவையை மெச்சிய முனிவர்கள் அவளுக்கு என்ன வேண்டும் என்று கேட்டிருக்கிறார்கள். அவள் விருபாக்ஷனாம் இறைவனையே மணக்க விரும்பியிருக்கிறாள். முனிவர்களும் அவளுக்கு மந்திரோபதேசம் செய்து தவம் செய்யச் சொல்லியிருக்கிறார்கள். அவள் செய்த தவம்பலித்து விருபாக்ஷனே தரிசனம் கொடுத்து அவளை மணந்திருக்கிறார். அக்கன்னியின் பெயர் பம்பை என்றும், அந்தப் பம்பையின் பதியோ பம்பாபதியானார் என்றும் ஒரு வரலாறு.இந்த பம்பாபதியின் துணைவியை புவனேஸ்வரி என்கின்றனர். அவளுக்கும் ஒரு தனி சந்நிதி இருக்கிறது. பம்பாபதியின் கோயிலை கட்டியவன் விஜய நகர மன்னர்களால் முதல்வனான ஹரிஹரராயன் என்று சரித்திர ஏடுகள் பேசுகின்றன. விஜய நகர வம்சத்தையே மன்னர்களாக்கிய முனிவர் வித்யாரண்யர் ஞாபகார்த்தமாகக் இக்கோயில் கட்டினான் என்று ஒரு கல்வெட்டுக்கூறும். ஆனால் இக்கோயிலில் ரங்க மண்டபத்தையும், கிழக்கு வடக்கு கோபுரங்களையும் கட்டியவர் அந்தப் புகழ் பெற்ற கிருஷ்ணதேவராயரே என்று 1509-ம் வருஷத்துக் கல்வெட்டு ஒன்று கூறுகிறது. ஹரிஹரராயன் கட்டிய கோயிலே பின்னர் விரிவடைந்து பெரிய கோயிலாக விரிவாகியிருக்கிறது. அந்தத் தலைநகரில் சாம்ராஜ்யத் தலைநகரின் பிரதான கோயில் இதுதான் என்றாலும், இங்கு நாம் விஜயநகரத்துச் சிற்ப வடிவங்களைக் காண முடியாது. ஆதலால் நாம் விருபாக்ஷனையும், புவனேஸ்வரியையும்வணங்கிய திருப்தியோடு வெளியே வந்து விடலாம்.

ஹம்பி பஜாரில் காரை நிறுத்திவிட்டு இனி கிழக்கு நோக்கி நடக்க வேண்டும். கொஞ்சம் பாறைகளிலும் ஏறிச் செல்ல வேண்டும். அப்படிச் செல்லும் போது கோயில் வாயிலில் நாற்சந்நிதியில் இருக்கும் நந்திஒன்றையும் காணலாம். தஞ்சையிலும் மைசூரிலும் நாம் கண்ட நந்தியைப் போல் சரித்திரமோ அழகோ இந்த நந்தியின் வடிவில்

இல்லை. இந்த நந்திக்கு தென்கீழ் பக்கம் இருப்பதே மதங்கபருவதம். இந்தப் பெயரை எங்கேயோ கேட்டிருக்கிறோமே என்று நினைவு வரும். ஆம். இராமாயணத்தில் கிஷ்கிந்தையில் சுக்ரீவனும் அநுமனும் ஒளிந்திருந்த மலையை வான்மீகர் மதங்க பருவதம் என்றுதானே குறிப்பிட்டிருக்கின்றார். ஒன்று சொல்ல மறந்து விட்டேனே இந்தப் பிராந்தியமே அந்த இதிகாச கிஷ்கிந்தை என்றும், இங்குதான் வாலி, சுக்ரீவன் இருந்து அரசுசெய்திருக்கிறார்கள் என்றும் வரலாறு கூறுகிறது. வாலி ஒரு ராக்ஷசனைக் கொன்று அவன் குருதியை மதங்க ரிஷியிருந்து தவம் செய்த இடத்தில் படிய விட்டதனால் மதங்கர் கோபம் கொண்டு இம்மலைப் பக்கம் வாலி வந்தால் அவன் தலை சிதறக் கடவது என்று சாபமிட்டிருக்கிறார். அதனாலேயே ராமன் வரும் வரை, சுக்ரீவன் இங்கு பத்திரமாக வாழ முடிந்திருக்கிறது. நமக்கெல்லாம்தான் மதங்கரது சாபம் இல்லையே! நாம் அந்த மதங்க மலை மீதே ஏறலாம். மலைசிகரத்தில் இருப்பது அச்சுதராயர் கோயில். அங்கு கோயில் கெண்டிருப்பவர் மகாவிஷ்ணு. நல்ல கருங்கல்லிலே உருவான பரசுராமராக இவர் இருக்கிறார். இக்கோயிலை 1539-ல் அச்சுதராயன் கட்டியிருக்கிறார். அதனாலே தான் இக்கோயில் அச்சுதராயர் கோயில் என்று பெயர் பெற்றிருக்கிறது. இங்கிருந்து வடக்கு நோக்கி நடந்து ஆற்றை நோக்கிச் செல்லும் படிகளில் ஏறி நடந்தால் இங்கொரு கோதண்டராமன் கோயிலேயும் அனந்த சயனர் கோயிலையும், வராகர் கோயிலையும் காணலாம். இங்குதான் துங்கபத்திரை உத்தரவாகினியாக ஓடுகிறது. அந்தத் தீர்த்தத்தையே சக்கர தீர்த்தம் என்கின்றனர். அவகாசம் இருந்தால் நாமும் அங்கு அத்தீர்த்தத்தில் மூழ்கி நம் வினைகளைக் கலையலாம். இவற்றையெல்லாம் கடந்து மேலே சென்றால் ஒரு குகை தென்படும். அந்தக் குகையிலேயேதான் சுக்ரீவன் ஒளிந்து வாழ்ந்திருக்கிறான். அதனையே சுக்ரீவன் குகை என்கின்றனர். இங்கிருந்து தான் துங்கைபத்திரையைக் கடக்க ஒரு கல்பாலம் கட்டி

யிருக்கின்றனர், அந்தக்காலத்தில் இன்று அங்கு இருப்பவை ஒரு சில கற்பாறைகள்.

கிட்டத்தட்ட ஏழு எட்டு மைல் இழுத்து அடித்து விட்டீரோ இன்னும் எவ்வளவு தூரம் தான் இழுத்தடிக்கப் போகிறீர் என்று நீங்கள் இப்போது முணுமுணுப்பது என் காதில் கேட்கிறது. நான் என்ன செய்ய ஹம்பியில் கால் வாசிதானே பார்த்திருக்கிறோம் இனித்தானே விட்டலர் கோயில் ஹஸரே ராமர் கோயில் தசாரதிப்பா, உக்ர நரசிம்மர் போன்ற இடங்களுக்குப் போக வேண்டும். அவைகளுக்கு இன்று உங்களை இழுத்தடிக்க விரும்பவில்லை. கட்டுச்சோறோ அல்லது ஹாஸ்பட்டிலிருந்து ஏதாவது சிற்றுண்டி மூட்டையோ கொண்டு வந்திருந்தால் அவற்றை இந்த துங்கபத்ரை ஆற்றின் கரையிலேயோ பாறைகளிலோ உட்கார்ந்து அருந்திவிட்டு, கொஞ்சம் சிரமப் பரிகாரம் செய்து கொண்டு வாதாபி மழகளிறு கோயிலுக்குஅடுத்துப் போவோம். என்ன சரிதானே.

# 13. வாதாபி மழகளிறு



நாம் வணங்கும் தெய்வங்களிடையே அக்ர ஸ்தானம் வகிப்பவர் விநாயகர். அவர் இன்று நம் கோயில்களில் மாத்திரம் அல்ல, ஆற்றங்கரைகளில் குளக்கரைகளில், ஏன், நாற்சந்திகளில் எல்லாம் இருந்து எல்லோருக்கும் எளியவராக, இனியவராக விளங்குகிறார். ஆனால் இவர் நம் தமிழ் நாட்டிற்கு எப்போது வந்தார்? தமிழர் இதயங்களில் எப்போது இடம்பிடித்தார் என்று தெரிய வேண்டாமா? சங்கத்துச் சான்றோர் இயற்றியுள்ள பாடல்களில் விநாயகரைப்பற்றிய குறிப்பு இல்லாதிருப்பது அவ்வழிபாடு அந்தப் பழைய சங்க காலத்தில் நம் தமிழ் நாட்டில் இல்லை என்று தெளிவுபடுத்தும், தேவாரங்களில் கணபதி வழிபாடு சொல்லப்பட்டிருக்கிறது என்பதை அறிவோம். இன்னும்

சோழவள நாட்டிலே தஞ்சை மாவட்டத்திலே நன்னிலத்திற்கு கிழக்கே ஏழு எட்டு மைல் தூரத்திலே உள்ள திருச்செங்காட்டங்குடியில் உள்ள கோயில் கணபதீச்சுவரம் என்ற பெயருடன் நிலவி வருகிறது.

பாலினால் நறு நெய்யால்
பழத்தினால் பயின்றாட்டி
நூலினால் மணமாலை
கொணர்ந்தடியார் புரிந்தேத்த
சேலினார் வயல்புடைசூழ்
செங்காட்டங்குடி அதனுள்
காலினால் கூற்று உதைத்தான்
கணபதி ஈச்சுரத்தானே.

என்பது ஞானசம்பந்தர் தேவாரம், அந்த கோயிலில் பிரதான விநாயகராக இருப்பவர் வாதாபி கணபதி. தமிழ் நாட்டில் உள்ள விநாயகரது சிலை வடிவங்களில் இந்த வாதாபி கணபதியே மிகப்பழையவர். அதனால்தானோ நம் சங்கீத வித்வான்களும் கச்சேரி ஆரம்பத்திலேயே இந்த வாதாபி கணபதி வணக்கத்தோடே ஆரம்பிக்கின்றனர். இந்த வாதாபி கணபதி திருச்செங்காட்டங்குடிக்கு, எப்படி வந்திருக்கிறார் என்று அறிய சரித்திர ஏடுகளைப்புரட்ட வேண்டும். வாதாபி மேலைசாளுக்கியரது தலைநகரம் அங்கிருந்து அரசாண்ட இரண்டாம்புலிகேசி காஞ்சியிலிருந்து அரசாண்ட பல்லவ மன்னனான மகேந்திர வர்மனோடு போர் தொடுத்திருக்கிறான். காஞ்சிநகரையே முற்றுகை இட்டிருக்கிறான். பின்னர் மகேந்திரனுடன் சமாதானம் செய்து கொண்டவன் போல் நடித்து அவன் செய்த உபசாரங்களை எல்லாம் ஏற்றுத் தன் தலைநகர் திரும்பும் போது காஞ்சிக்கு வெளியில் உள்ள கிராமங்களைச் சூறையாடி இருக்கிறான். பெண்களை சிறைப்பிடித்திருக்கிறான். இதற்கெல்லாம் பழிவாங்க மகேந்திரவர்மன் நீண்டகாலம் வாழ்ந்திருக்கவில்லை. ஆனால் அவனது மகனான நரசிம்மவர்மன், ஆம்.

மாமல்லபுரத்தை உருவாக்கிய மாமல்லன்தான் பின்னர் ஒரு பெரும் படைகொண்டு சென்று சாளுக்கியரை வென்று வாதாபிக்குள் நுழைந்து அந்த நகரையே தீக்கிரையாக்கி இருக்கிறான். இது நடந்தது கி. பி. 640-ல், இந்த வரலாற்றை எல்லாம், பேராசிரியர் கல்கி எழுதிய அந்த அற்புத நவீனமான சிவகாமியின் சபதத்தில் நாம் படித்திருக்கிறோம். அப்படி நரசிம்மவர்மன் படை எடுத்த போது அப்படையை நடத்திச் சென்ற சேனாதிபதி பரஞ்சோதியார் என்பதையும் அறிவோம். அந்தப் பரஞ்சோதியார் இந்தத் திருச்செங்காட்டங் குடிக்காரர் என்பதும் அவரே பின்னர் சிறுத் தொண்டர் என்ற பெயரோடு அறுபத்திமூன்று நாயன்மார்களில் ஒருவராக வாழ்ந்தவர் என்றும் வரலாறு கூறுகிறது. அவரது வாதாபிப் படை எடுப்பை திருத்தொண்டர் பெரிய புராணம் பாடிய சேக்கிழாரும் மறக்காமல் சொல்கிறார்.

மன்னவர்க்குத் தண்டு போய்
வடபுலத்து வாதாபித்
தென்னகரம் துகளாகத்
துணைநெடுங்கை வரையுகைத்து
பன்மணியும் நிதிக்குவையும்
பகட்டினமும் பரித்தொகையும்
இன்னன எண்ணில கவர்ந்தே
இகல் அரசன்முன் கொணர்ந்தார்.

என்பது பாடல். அப்படி பல்பொருளையும் கொண்டு வந்து வாதாபி நரசிம்ம போத்தரையன் காலடியில் கொட்டியவர், தனக்கென்று ஒரு பொருளையும் கேட்டு எடுத்துக் கொண்டிருக்கிறார். அதுதான் வாதாபிக் கோட்டை வாயிலில் இருந்த கணபதியை பெயர்த்து எடுத்து வந்து, அதைத் தன் சொந்த ஊராகிய திருசெங்காட்டங்குடியில் பிரதிஷ்டை பண்ண மன்னனின் அனுமதியையும் பெற்றிருக்கிறார். அப்படித் தமிழ் நாட்டிற்குள் வந்தவரே வாதாபி கணபதி, அவர் தமிழ்நாட்டிற்கு வருமுன் கோயில்

கொண்டிருந்த வாதாபிக்கு நாம் போக வேண்டாமா? அன்று நரசிம்மவர்மனோடோ இல்லை பரஞ்சோதியோடோ நாம் போகவில்லை. அப்படிப் போயிருந்தாலும் போர்ப்படை வீரராகத்தான் சென்றிருப்போம். இன்றோ நாம் கலைத்தூதுவராக அந்த வாதாபிக்கே செல்லலாம். ஆம், அந்த வாதாபிக்கே செல்கிறோம் நாம் இன்று.

முன்னரே ஹம்பி செல்ல ஹாஸ்பெட் வரை போயிருக்கின்றோம். அங்கிருந்து கடக் போய் அங்கிருந்து ஜோலாபூர் செல்லும் பாதையில் ரயில்மாறி பாதாமி என்னும் ஸ்டேஷனில் இறங்க வேண்டும். அது என்ன பாதாமி என்கிறீர்களா? அந்தப் பழைய வாதாபி தான் இன்று பாதாமி என்று திரிந்திருக்கிறது. இது ரயிலில் செல்லும் வழி. ரோடு வழியே போக வேண்டுமென்றால் ஹாஸ்பெட்டிலிருந்து கடக் போய் அங்கிருந்து பாதாமி செல்லலாம். அந்த வழியில் ரோடுகள் சரியாக இல்லை. இடையில் வரும் ஆற்றைக் கடக்க பாலமும் இல்லை. ஆதலால் ஹாஸ்பெட்டிலிருந்து வடக்கு நோக்கி பாகல்கோட் வரை போய் பின்னர் தெற்கு நோக்கி பாதாமி வரவேண்டும். இப்படிச் செல்லுவது சுற்றி வளைத்து செல்வதுதான் என்றாலும் இதுவே வசதியான வழி. பாதாமி செல்ல பஸ் வசதிகள் எல்லாம் இருக்கின்றன. சொந்தக் காராகயிருந்தால் மிக்க வசதியோடு செல்லலாம்.

ஊரை அடுத்து மலைச் சிகரங்கள் இருக்கின்றன. இரண்டு மலைகளுக்கு இடையே ஒரு பெரிய குளம் இருக்கிறது. அதை அகஸ்தியர் குண்டம் என்கின்றனர். அடடே, இந்தத் தமிழ் முனிவர் அகஸ்தியர் அந்த நரசிம்மனையும் பரஞ்சோதியையும் ஏன் நம்மையும் முந்திக் கொண்டு இங்கு வந்து இடம் பிடித்திருக்கிறாரோ என்று எண்ணத்தோன்றும். அவரைப்பற்றி விசாரித்தால் இந்த ஊருக்கு வாதாபி என்ற பெயர் எப்படி வந்தது என்பதும் தெரியும். பண்டைய நாளிலே தாரகாசுரன் என்று ஒரு

அசுரன் இருந்திருக்கிறான். அவனுக்கு ஒரு தங்கை அசமுகி என்று. அவள் எப்படியோ துர்வாசமுனிவரை மயக்கி அவரை மணந்திருக்கிறாள். துர்வாசருக்கும் அசமுகிக்கும் பிறந்தவர்கள் இரண்டு பேர். ஒருவன் வாதாபி மற்றொருவன் வில்வலன். இந்த அண்ணன் தம்பியர் இருவரும் முனிவர்களை அழிக்க ஒருவழி கண்டு பிடித்திருக்கின்றனர். முதலில் வாதாபி ஆடாக மாறுவான். வில்வலன் அந்த ஆட்டைக் கறி சமைத்து முனிவர் ஒருவரை விருந்தினராக அழைத்து அவருக்கு விருந்து அருத்துவான். பின்னர் வில்வலன் மிருத சஞ்சீவினி என்ற மந்திரத்தை ஜபித்து வாதாபியை அழைப்பான். வாதாபியும் தன் சுய உருவம் பெற்று முனிவரது வயிற்றைக் கிழித்துக்கொண்டு வெளியே வந்து விடுவான். அகஸ்தியர் அந்த வாதாபி வில்வலன் இருந்த இடத்திற்கு வந்திருக்கிறார். வில்வலன் அவரிடமும் அந்தப் பழைய கைவரிசையைக் காட்டியிருக்கிறான். ஆனால் வயிற்றினுள் சென்ற வாதாபியை வில்வலன் அழைக்கவும் விஷயம் உணர்ந்த அகத்தியர் வயிற்றைத் தடவி அந்த வாதாபியை அப்படியே ஜீரணித்து விடுகிறார். பின்னர் அவன் வேண்டிக் கொண்ட படியே அந்தப் பிரதேசத்தில் வாதாபியின் பெயராலேயே அழைத்திருக்கிறார்.

வாதாபி இன்று சிறிய ஊராகவே இருக்கிறது. அது ஒரு காலத்தில் சாளுக்கிய சாம்ராஜ்யத்தின் தலைநகராம் என்று சொல்லக்கூடிய சின்னங்கள் ஒன்றுமே இல்லை. அகஸ்தியர் குண்டத்திற்கு வடக்கிலும் தெற்கிலும் இரண்டு மலைகள். வடபக்கம் உள்ள மலைமேலே ஒரு கோயில். அந்த மலைமேலே ஏறுவது மிகச் சிரமமாக இருக்கும். நல்ல படிக்கட்டுக்கள் இல்லை. அங்குள்ள கோயிலை மலிகட்டி சிவாலயம் என்கின்றனர். இது பெரிய கோயில் அல்ல. கோயிலின் நீளமே ஐம்பது அடி தான். கோயிலில் கருவறை, சபாமண்டபம், முன் மண்டபம் என்று மூன்று பகுதியாக இருக்கிறது. மண்டபத்து

தூண்கள் எல்லாம் சாதாரணமானவை, சிற்ப வடிவங்கள் நிறைந்ததல்ல. ஆதலால் சிரமப்பட்டு இந்த மலை ஏற வேண்டாம் என்றே சொல்வேன். அங்கிருக்கும் சிவபெருமானுக்கு கீழிருந்தே வணக்கம் செய்துவிட்டு தென் பக்கமுள்ள மலைப் பக்கம் திரும்பலாம். ஊருக்குள்ளே பாதை வளைந்து வளைந்து செல்லும். பாதைக் குறுகலாக இருக்கும். அவைகளை எல்லாம் கடந்து மலையடிவாரத்திற்கு வந்தால் ஒரு படிக்கட்டு தோன்றும். படி ஏறுமுன்னே அண்ணாந்து பார்த்தால் அங்குள்ள குடவரை ஒன்று தோன்றும். கரடுமுரடான ஒரு பெரிய மலையின் ஒரு பக்கத்தை வெட்டிச் செதுக்கி அந்த பக்கத்திலே தலையிலிருந்து முப்பது அடி உயரத்திற்கு மேலே மலையைக் குடைந்து ஒரு குடைவரை அமைத்திருக்கிறார்கள். இப்படி, குடைவரை ஒன்றல்ல, நான்கு குடைவரைகளை அந்த மலைச்சரிவிலே செதுக்கியிருக்கிறார்கள். இந்த நான்கில் முதல் குடைவரைத்தான் நாம் வந்து சேர்ந்திருக்கிறோம். சிவனுக்கு என்று அமைந்த குடைவரைக் கோயில். அதற்கு கீழ்புறம் அமைந்துள்ள இரண்டு பெரிய குடை வரைகளும் விஷ்ணுவிற்கு என்று ஒதுக்கப்பட்டவை. கடைசியாக ஒரு சிறுகுடைவரையை சமணர்களுக்கு என்று ஒதுக்கியிருக்கிறார்கள். ஒவ்வொரு குடைவரையின் முகப்பிலும் மலையினையே வெட்டிச் செதுக்கிய தூண்கள், அதற்கடுத்து ஒரு பெரிய முன்மண்டபம். அதன்பின்தான் உள் மண்டபம், கருவறை எல்லாம். இக்குடைவரைகள் எல்லாம் மாமல்லபுரத்துக் குடைவரைகளின் பாணியில்தான் அமைந்திருக்கும். ஆனால் மாமல்லபுரம் உருவாவதற்கு முன்னரே உருவானவை என்று சரித்திர ஏடுகள் பேசுகின்றன. பாதாமிக் குடைவரைகள் ஆறாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் உருவானவை என்று சரித்திர ஆசிரியர்கள் கருதுகின்றனர்.

இனி, குடைவரைகள் இருக்கும் இடத்திற்கு படிக்கட்டுகளின் வழியாக ஏறிச் செல்லலாம். முதல் குடைவரை

யையும் முந்திக்கொண்டு ஒரு கற்பாறை மேல்பக்கம் நீண்டு கொண்டிருக்கும், அந்தச் சுவரை சமன் செய்து அதில் ஒரு சந்தியா தாண்டவமூர்த்தியை ஐந்துஅடிச் சவுக்கத்தில் உப்புச உருவில் செதுக்கியிருக்கிறார். காஞ்சி கைலாச நாதர் கோயிலின் மேல் பிரகாரத்தில் உள்ள சந்தியா



தாண்டவமூர்த்தியைப் போலவே இவ்வடிவமும் அமைந் திருக்கக் காண்போம். இக்குடைவரை வாயிலிலே பூதகணங்கள் பலபல வடிவங்களில் உருவாகி இருப்பார்கள். கோயிலின் கருவறையை நோக்கி நந்தியம்பெருமான் படுத்துக் கிடப்பார். இருகுடைவரையின் முன் மண்டபம் நம் வீடுகளில் உள்ள வராந்தாவைப் போல இருக்கும்.

அந்த மண்டபத்தின் மேல் கோடியிலே கிழக்கு நோக்கிய வண்ணத்தில் அர்த்தநாரீஸ்வரர் வடிவம் இருக்கும்.



வாதாபி அர்த்தநாரி

தோலும் துகிலும்
குழையும் சுருள்தோடும்
பால் வெள்ளை நீறும்
பசுஞ்சாந்தும்—
சூலமும் தொக்கவளையும்
உடைத் தொன்மைக்
கோலமே நோக்கிக்
குளிர்ந்தூதாய் கோத்தும்பி

என்று அன்று மணிவாசகர் பாடினாரே, அந்தப் பாடலுக்கு கேற்ப அம்மையப்பனாக இறைவன் அங்கு சேவை சாதிப்பான். இங்குள்ள அர்த்தநாரி வீணை ஏந்திய கையனாய் நிற்பது புதுமையானது. வடபுறம் நந்தி, பிருங்கி முனிவரும் நிற்பர். இடப்புறம் அன்னை பார்வதியின் தோழி ஒருத்தி நிற்பாள். மிக்க அழகான இந்த மாதிருக்கும் பாதியனை வணங்கிவிட்டு கிழக்கே திரும்பினால் மேற்கு நோக்கிய வராய் ஹரிஹரமூர்த்தி நிற்பார். வலதுகையில் மழுவும் இடது கையில் சங்கும் ஏந்தியவராய் பார்வதி, லக்ஷ்மி சகிதம் எழுந்தருளியிருக்கும் இச்சங்கர நாராயணன் மிகவும் கம்பீரமான வடிவினர். இன்னும் இக் குடைவரையில் மகிஷமர்த்தனியும், உருண்டு திரண்ட வடிவோடு சூலம் ஏந்திய கையளாய் நிற்பாள். எல்லோரும் அர்த்த சித்திர வடிவிலே (Bas relief) இருப்பவர்தாம். கருவறையிலே லிங்க வடிவிலே இறைவன் இருக்கிறான். இங்குள்ள உள் மண்டப வாயிலின் தூண்கள் எல்லாம் அடிப்பாகம் சமசதுரம் உடையவையாகவும் மேல்பாகம் வரிவரியாய் வடித்தெடுத்த கமலம் போலவும் அமைந்திருக்கும். வேறுவடிவங்கள் இத் தூண்களில் செதுக்கப்படவில்லை.

இக்குடைவரையிலிருந்து வெளியே வந்து கீழ்புறம் உள்ள ஐந்தாறுபடிகள் ஏறிச் சென்றால், இரண்டாவது குடைவரை வந்து சேருவோம். இது முதல் குடைவரையை விடப் பெரியது. இங்கு வாயிலில் இரண்டு துவார பாலகர்கள் நிற்கின்றனர். இங்கு திரிவிக்கிரமனும், வராகரும் பெரிய பெரிய உருவில் இருக்கின்றனர். உள் மண்டபத்தின் விதானத்தில் கருடன் மேல் ஆரோகணித்து வரும் விஷ்ணுவை பார்ப்பதுடன் ஒரு மலர்ந்த தாமரையையுமே பார்க்கலாம். உற்று நோக்கினால், அது தாமரை அல்ல என்றும், பதினாறு மீன்களைச் செதுக்கித் தாமரை போல அமைத்திருக்கிறார்கள் என்றும் தெரியும். இங்குள்ள குடைவரையில் எல்லாம் அளவில் பெரியது மூன்றாவது குடைவரைதான். இக்குடைவரை மலையில்

ஆழமாக வெட்டப்பட்டிருக்கிறது. ஒரு பக்கத்தில் அனந்த நாராயணரும் ஒரு பக்கத்தில் நரசிம்மரும் மிகப் பெரிய



வாதாபி : மகிஷ மர்த்தனி

அளவில் செதுக்கப்பட்டிருக்கின்றனர். ஒவ்வொன்றும் கிட்டத்தட்ட பத்துப்பன்னிரண்டு அடி உயரம் உடையவை. கம்பீரமான வடிவங்கள் அவை. இங்குள்ள கல்வெட்டு

ஒன்று இக்குடைவரைகள் கி. பி. 573—ல் வெட்டப் பட்டவை என்று தெரிவிக்கின்றன.

இக்குடைவரைகளைக் கண்டபின் இன்னும் சில படிக் கட்டுகள் ஏறி ஒருவாயிலில் நுழைந்து மறுபடியும் கீழே இறங்கினால் நான்காவது குடைவரைக்கு வந்து சேரு வோம். இதுதான் இங்குள்ள குடைவரைகளில் சிறியது. ஜைன தீர்த்தங்கரர் பலரது வடிவங்கள் அங்கே உருவாகி இருக்கின்றன. பார்சவநாதரது வடிவம் ஒன்றும் இங்கிருக் கிறது. இக்குடைவரையில் நடுநாயகமாக நிற்பவர் மகா வீரர்தான். இங்குள்ள தூண்கள் மற்றவைகளைப் போன்ற வைதான் என்றாலும் அந்தத் தூண்களின் போதிகை களிலே யக்ஷனும் யக்ஷிணியும் இணைந்து இணைந்து பல வடிவங்களில் நிற்பதைக் காணலாம். இவைகளையே Bracket figures என்று ஆங்கில விமர்சகர்கள் கூறுகிறார்கள். உலகத்தையும், அங்குள்ள பந்தபாசங்களையும் முற்றும் துறந்த சமண தீர்த்தங்கரர்களிடையே இணைந்து நிற்கும் காதலர் வடிவங்களையும் அமைத்த சிற்பிகளின் மனப் பக்குவம்தான் என்னே என்று அதிசயத்து நிற்போம்.

பாதாமி என்னும் இவ்வாதாபியில், இந்நான்கு குடைவரைகளையும் அங்குள்ள சிற்பவடிவங்களையும் தவிர வேறு ஒன்றும் இல்லை. தமிழ் நாட்டிற்கே விநாயகர் வழிபாட்டை உதவிய நகரமாயிற்றே, ஏதோ தப்பித் தவறி அங்கொரு விநாயகர் அகப்படமாட்டாரா என்று ஊர் முழுதும் தேடினேன். முன்னர் சொன்ன தாண்டவ மூர்த்தியின் காலடியில் நிற்கும் விநாயகனைத்தவிர வேறு விநாயகர் என் கண்ணுக்கு அகப்படவில்லை என்றாலும் அந்தப் பழைய வாதாபி கணபதியை நினைந்து நினைந்து

ஓது ஆவி அனைத்தும் இனிது
உவந்து ஏத்த உவந்து உதவும்
வாதாபி மழ களிற்றை
மலர் தூவி இறைஞ்சுவோம்

என்று பாடிக் கொண்டே திரும்பலாம் அல்லவா.

# 14. பட்டடக்கல் விரூபாக்ஷர்

தேசிய ஒருமைப்பாடு என்று எங்கு பார்த்தாலும் பேச்சுக் கேட்கிறது. இன்று பேசுகிறவர்கள் எல்லாம் அரசியல் வாதிகளாக இருக்கக் காண்கிறோம். மொழிவாரியாக ராஜ்யப்பிரிவினை செய்ததன் காரணமாக மக்கள் உள்ளத்தில் மொழி வெறி வளர்ந்திருக்கிறதே ஒழிய, மொழி வளர்ச்சிக்குரிய ஆர்வம் வளரக் காணோம். ஒருமைப்பாடு உருவாக வேண்டுமென்றால் அது இலக்கியம் மூலமாக சமயம் மூலமாக, கலை மூலமாகத்தான் உருவாக வேண்டும். வேங்கடத்துக்கு அப்பால் நாம் துவங்கிய இந்தத் தல யாத்திரையில் கலை மூலமாகத்தான் எத்தனையோ நூற்றாண்டுகளுக்கு முன்பாகவே இந்த தேசிய ஒருமைப் பாடு எவ்வாறெல்லாம் வளர்ந்திருக்கிறது என்பதைக் காண்போம். தேசிய ஒருமைப்பாடு வளர அந்தக் காலத்தில் கலைஞர்கள் பரிவர்த்தனை நடத்தியிருக்கிறார்கள், மன்னர்கள்.

> கங்கைப் நதிப்புறத்து
> கோதுமைப்பண்டம்
> காவிரி வெற்றிலைக்கு
> மாறு கொள்ளுவோம்.

என்று கங்கை பாயும் நாட்டையும், காவிரி பாயும் நாட்டையும் வியாபாரம் மூலம் இணைக்கலாம் என்று எண்ணிய கவிஞர் பாரதி, அது அந்த வியாபாரப் பொருள் பரிவர்த்தனை மூலம் இணைக்க முடியாமல் போனாலும் போகலாம் என்றும் எண்ணியிருக்கிறார். அதனாலேயே கலைப் பொருள் பரிவர்த்தனையை நினைத்திருக்கிறான். உடனே

சிங்க மராட்டியர்தம்
கவிதைகொண்டு
சேரத்துத் தந்தங்கள்
பரிசளிப்போம்.

என்றும் பாடியிருக்கிறார். ஆனால் இவனுக்கு ஆயிரம் வருஷங்களுக்கு முன்னாலேயே கலைப் பொருட்களை விட கலைஞர்களையே பரிவர்த்தனை செய்வதன் மூலம் தான் தேசிய ஒருமைப்பாட்டை உருவாக்க முடியும் என்று எண்ணியிருக்கிறார்கள், நம்நாட்டில் கலை வளர்த்த காவலர்கள். அந்த வரிசையில் வருகிறவர்கள் தான் சாளுக்கிய மன்னர்கள்.

பாதாமி சாளுக்கிய மன்னர்களது காலம் இந்திய வரலாற்றிலேயே பொன்னெழுத்துக்களால் பொறிக்கப்பட வேண்டிய ஒன்று என்பதை நாம் அந்த வாதாபிக்குப் போயிருக்கும் போதே தெரிந்திருக்கிறோம். விந்திய மலைக்குத் தெற்கே ஆண்ட மூன்று பெரிய வல்லரசுகளில் சாளுக்கியப் பேரரசும் ஒன்று என்பதை சரித்திரம் படித்தவர்கள் அறிவார்கள் பிரிதிவி வல்லபன், பரமேஸ்வரன் என்ற பட்டங்களை இச்சாளுக்கிய மன்னர்கள் சூடிக்கொள்வதிலிருந்தே அவர்கள் வீரம், பராக்கிரமம் எல்லாம் அறிதல் கூடும். இந்த சாளுக்கிய மன்னர்கள் காலத்தில் சமண சமயம் சிறப்புற்று விளங்கி வந்திருக்கிறது. என்றாலும், சைவத்தையும் வைணவத்தையும் அவர்கள் வெறுக்கவில்லை. சமணக் கோயில்களை உருவாக்குவதில் காட்டிய சிரத்தையையே சைவக் கோயில்களைக் கட்டுவதிலும் காட்டியிருக்கிறார்கள். இந்த சாளுக்கியர் காலத்தில்தான் கலைமூலமாக வடக்கும், தெற்கும், யாதொரு பிணக்குமும் இல்லாமல் இணைந்திருக்கிறது. சாளுக்கிய மன்னர்களில் ஒருவனான இரண்டாம் விக்ரமாதித்தன் 733-முதல் 745-வரை பாதாமியை தலைநகராகக் கொண்டு வாழ்ந்திருக்கிறான். அவனே அன்று காஞ்சியிலிருந்த பல்லவர்கள் மேல் படையெடுத்து தலைநகர் திரும்பிய மன்னன் காஞ்சியிலிருந்து குண்டன் என்னும் ஒரு பிரபல சிற்பியையும் உடன் அழைத்துச் சென்றிருக்

கிறான். அவனைக் கொண்டு விருபாக்ஷருக்கு ஒரு கோயிலையும் பட்டடக்கல் என்னும் இடத்தில் கட்டியிருக்கிறான். அந்த சிற்பியின் வேலைத்திறனையெல்லாம் பாராட்டி அவனுக்கு திரிபுவனாச்சாரியார் என்ற விருதுப் பெயரைச் சூட்டி அழைத்திருக்கிறார். இவனே கங்கைக்கும் வடக்கே உள்ள நாட்டிலிருந்து ஞானசிவாச்சாரியார் என்ற புலவரையும் அழைத்துப் பட்டடக்கல்லில் இருத்தி கௌரவத்திருக்கிறான். இன்னும் இவரது சபையிலே சர்வ சித்தி ஆச்சாரி, ரேவதி ஓவ ஜீவா, செங்கம்மா வல்லதேவா, தேவஆர்யா போன்ற கலைஞர்கள் மற்றப் பிரதேசங்களிலிருந்து வந்து அலங்கரித்திருக்கிறார்கள். இத்தனை விவரமும் பட்டடக்கல்லில் உள்ள விருபாக்ஷர் கோயிலிலுள்ள கல்வெட்டு ஒன்று கூறுகிறது. இப்போது தெரிகிறதல்லவா, தேசிய ஒருமைப்பாட்டிற்கு அன்றே பட்டடக்கல் என்னும் தலத்தில் வித்திடப்பட்டிருக்கிறது என்று, அந்தப் பட்டடக்கல் என்னும் தலத்திற்கே செல்கிறோம் நாம் இன்று.

பட்டடக்கல் செல்ல விரும்புபவர்கள் ரயிலில் சென்று பாதாமி ஸ்டேஷனில் இறங்க வேண்டும். அங்கிருந்து வடகிழக்கே எட்டு ஒன்பது மைல் செல்ல வேண்டும். ஆனால் பாதாமியிலிருந்து பட்டடக்கல் செல்ல டாக்சி எல்லாம் கிடைப்பது அருமை. ஆதலால் பாகல்கோட் ஸ்டேஷனிலிருந்தே கார்வைத்துக் கொண்டு இருபது மைல் தெற்கே வந்தால் பட்டடக்கல் வந்து சேரலாம். பாதாமி பட்டடக்கல், ஐகோளே என்னும் மூன்று இடங்களையும் பார்ப்பதற்கு ரயிலில் சென்றாலும் காரில் சென்றாலும் பாகல்கோட் வழியாகச் செல்வதுதான் நல்லது. பட்டடக்கல் பாதாமி குடைவரைகளில் இருந்து பத்து மைல் தூரத்தில் இருக்கிறது. அங்கு செல்ல நல்ல ரோடிருக்கிறது. பட்டடக்கல் ஊரை அடுத்து மல்லபிரபா நதி ஓடுகிறது. பட்டடக்கல், ஐகோளேயில் எல்லாம் தங்கும் வசதி கிடைக்காது. ஆதலால் பாதாமியில் உள்ள பிரயாணிகளின்

விடுதியில் தங்கியிருந்துக் கொண்டே இத்தலத்திற்கு எல்லாம் சென்று வரவேண்டும்.

பட்டடக்கி சுரோலே என்று அன்று இன்றையப் பட்டடக்கல் வழங்கப்பட்டிருக்கிறது. பட்டடக்கல் அல்லது பட்டடக்கி சுரோலே என்றெல்லாம் ஏன் இந்த இடம் பெயர் பெற்றது என்று தெரியவில்லை. அந்த ஆராய்ச்சியில் எல்லாம் ஈடுபடாமல் நாம் நேரே அந்த புகழ் பெற்ற விருபாக்ஷர் கோயிலுக்கே போய்விடுவோம். பட்டடக்கல் ஊர் மிகச் சிறிய ஊர். அங்குள்ளவர்கள் சின்னஞ்சிறு குடிசைகளிலேயே வசிக்கின்றனர். பெரிய வீதிகள் ஒன்றும் கிடையாது. ஊருக்குள் சென்றாலும் அங்கு ஒரு மரத்தடியில் நான்கைந்து பேர் நிற்பர். அந்த இடம்தான் அந்த ஊரிலேயே விஸ்தாரமான இடம். அங்கேயே காரைவிட்டு இறங்கி கோயிலுக்குச் செல்லலாம். கோயில் மதில் சுவரெல்லாம் இடிந்து கிடக்கும். வாயில்களும் சிறியதாகவே இருக்கும். அந்த வாயில் வழியாக எல்லாம் நுழைந்து சென்றால் முதலில் ஒரு பெரிய கோவிலண்டை வந்து சேருவோம். அந்தக் கோயில் கிட்டத்தட்ட காஞ்சி கைலாசநாதர் கோயில் போலவே இருக்கும். ஆனால் காஞ்சியில் இருப்பதைப் போல ஒரு பெரிய திறந்த வெளியில் பல்லவர் மேட்டில் இந்தக் கோயில் இராது. இந்தக் கோயில்தான் இரண்டாம் விக்கிரமாதித்தன் காலத்தில், காஞ்சியிலிருந்து சென்ற சிற்பி குண்டன் என்ற திரிபுவனாச்சாரியார் மேற் பார்வையில் கட்டப்பட்டிருக்கிறது. இக்கோயில் கட்டியது 740-ம் வருடத்தில் என்று சரித்திர ஏடுகள்பேசுகின்றன. இக்கோயிலைக்கட்டி அங்கு 'விருபாக்ஷர் என்ற சிவலிங்க வடிவை பிரதிஷ்டை பண்ணுவதற்கே தனைக்கு பக்கபலமாக இருந்த தன்னுடைய பட்டமிகிஷி லோகமகாதேவியின் ஞாபகார்த்தமாக லோகேஸ்வரர் கோயில் என்றே பெயர் சூட்டியிருக்கிறான். இக்கோயில் நல்ல தமிழ் நாட்டுப் பாணியிலேயே கட்டப்பட்டிருக்கிறது. கோயிலை சுற்றிக் கொண்டு கீழ்புறம்

வந்து அதன் பின்தான் கோயிலுக்குள் நுழைய வேண்டும். பிரதான கோயில் கிழக்கு நோக்கியிருக்கிறது. அந்தக்



ராவணன் கைலை மலையை எடுத்தல்

கோயிலுக்கு கீழ்புறம் நந்தி மண்டபம் ஒன்றும் பெரிதாகக் கட்டப்பட்டிருக்கிறது. அங்கு ஒரு பெரிய நந்தியும் விருபாக்ஷர் சந்நிதியைநோக்கி படுத்துக்கொண்டிருக்கிறது.

கோயில் மாடக் கோயில் போல் கொஞ்சம் உயரமாகவே கட்டப்பட்டிருக்கும். படிகளில் ஏறி உள்ளே நுழைந்தால் மகாமண்டபம் வந்து சேருவோம். அம்மண்டபத்தை 18 தூண்கள் தாங்கி நிற்கின்றன. தூண் ஒவ்வொன்றும் மூன்றுக்கு மூன்று அடி சதுரமானவை. இந்த தூண்களில் எல்லாம் மகாபாரதம் ராமாயணம் முதலிய இதிகாச சிற்பங்கள் செதுக்கப்பட்டிருக்கும். கருவறையில் விரூபாக்ஷர் லிங்க உருவில் இருப்பார். கோயிலில் பூசை நடக்கிறது என்பார்கள். ஆனால் கோயிலில் உள்ள குப்பையையும் இருட்டடிப்பையும் பார்த்தால், இக்கோயிலுக்கு அர்ச்சகர் வந்து எத்தனை வருஷம் ஆயிற்றோ என்று எண்ணவே தோன்றும். கோயிலை விட்டு வெளியே வந்து கோயிலைச் சுற்றினால் கோயில் சுவர்களில் எண்ணற்ற சிற்பவடிவங்கள் செதுக்கப்பட்டிருப்பதைக் காண்போம். சந்தியா தாண்டவர், லிங்கோத்பவர், லகுலீசர், அர்த்தநாரீஸ்வரர் சிவபார்வதி முதலிய வடிவங்கள் எல்லாம் அழகானவை. ஒரு சில சிதைந்திருந்தாலும் சிற்ப அழகு நிறைந்தவை. கோயில் பிரகாரத்திலே பரிவார தேவதைகளுக்குச் சிறு சிறு கோயில்கள் இருக்கும். ஆனால் அவைகளில் மூர்த்திகள் இருக்க மாட்டார்கள்.

இந்தப் பட்டடக்கல்லில் மொத்தம் பத்துக் கோயில்கள் உண்டு என்றும், இங்கு இருபத்து ஐந்து கல்வெட்டுக்கள் உண்டு என்றும், நூற்றுக்கு மேற்பட்ட சிற்ப வடிவங்கள் உண்டு என்றும் படித்திருக்கிறோமே. ஆதலால் மற்ற கோயில்களையும் பார்க்க வேண்டாமா என்று எண்ணத் தோன்றும். மற்றக் கோயில்களைக் காண நாம் நெடுந்தூரம் ஒன்றும் அலைய வேண்டியதில்லை. எல்லாம் அடுத்தடுத்தே இருக்கும். ஆனால் ஊர் மக்கள் தான் கோயில் பிரகாரங்களில் எல்லாம் வீடுகட்டிக் கொண்டிருக்கிறார்கள். அதனால் ஒரு கோயிலிலிருந்து மற்றொரு கோயிலுக்குச் செல்ல வழிதான் சிரமமாகவும் குறுகலாக

வும் இருக்கும். குடியிருக்கும் மக்கள் வீடுகளுக்குள்ளேயே நுழைந்து செல்ல வேண்டியிருக்கும் என்றாலும் இந்த



பட்டடக்கல் விருபாக்ஷர் பாபநாதர் கோயில்

வட்டாரத்தில் உள்ள ஒரு சில கோயில்களையும் பார்த்து விட்டே திரும்பலாம்.

விருபாக்ஷர் கோயிலை ஒட்டி அதற்கு வடபுறம் இருப்பது மல்லிகார்ஜுனர் கோயில். இந்தக் கோயிலையும் இரண்டாம் விக்கிரமாதித்தனே 740—ம் ஆண்டில் கட்டியிருக்கிறார். இக்கோயில் அக்காலத்தில் திரிலோகேஸ்வர் கோயில் என்று பெயர் பெற்றிருக்கிறது. விக்கிரமாதித்தன் தனது இரண்டாவது பட்ட மகிஷி திரிலோக மகாதேவியின் பெயரால் இக்கோயிலை கட்டியிருக்கிறான். இக்கோயிலும் வீருபாக்ஷர் கோயில் போலவே தமிழ் நாட்டுக் கோயில்களின் பாணியில் கட்டப்பட்டிருக்கிறது. இக்கோயிலிலும் நிறைய சிற்ப வடிவங்கள் இருக்கின்றன. அமிர்தமத்தனம், சிவபார்வதி திருமணம், நடராஜர் அர்த்தநாரி, வாமனர் முதலிய வடிவங்கள் அற்புதச் சிற்பங்களாய் உருவாகி இருக்கின்றன.

விருபாக்ஷர் கோயிலுக்குத் தெற்கே 150 அடி தூரத்தில் பாபநாதர் கோயில் இருக்கிறது. இக்கோயிலின் விமானம் வடநாட்டுப்பாணியில் கட்டப்பட்டிருக்கிறது. ஆதியில் இக்கோயிலில்சூரிய நாராயணன் பிரதிஷ்டை செய்யப்பட்டிருக்கிறார். பின்னரே சூரியன் வடிவினை எடுத்துவிட்டு சிவலிங்கப் பிரதிஷ்டை செய்திருக்கிறார்கள். இக்கோயிலில் உள்ள மூர்த்தியையே பாபநாதர் என்னும் அழைத்திருக்கிறார்கள். சிவன், விஷ்ணு, கணபதி கிருஷ்ணன், சூரியன் முதலிய சிற்ப வடிவங்கள் இக்கோயில் சுவர்களில் செதுக்கப்பட்டிருக்கின்றன. ராமாயண சித்திரங்களும் பல இங்கு இருக்கின்றன. இக்கோயில் 680-ஆண்டில் கட்டப்பட்டது என்று சரித்திர ஏடுகள் கூறுகின்றன.

மல்லிகார்ஜுனர் கோயிலை அடுத்து அதன் வடபுறம் இருப்பது காசி விஸ்வேஸ்வரன் கோயில். இக்கோயிலில் விமானமும் வடநாட்டுப்பாணியில் தான் கட்டப்பட்டிருக்கின்றன. ஒன்றை விளக்க மறந்து விட்டேனே. இந்திய நாட்டின் கட்டிடக்கலை மூன்று பெரும்

பிரிவுகளுக்குள் அடங்கும். அவை நாகரம், வேசரம், திராவிடம் என்பன. இவற்றில் நாகரம் என்பதுதான் வட இந்தியக் கட்டிடக் கலை. இவை பெரும்பாலும் நருமதைக்கு வடக்கேதான் காணப்படுகின்றன. அடிமுதல் முடிவரையில் நான்கு பட்டை சதுரமாக அமைக்கப் படுவது. வேசரம் என்னும் கட்டிட வகை தரை அமைப் பிலும், கட்டிட அமைப்பிலும் விமான அமைப்பிலும் வட்ட வடிவமாக அல்லது நீண்ட அரைவட்ட வடிவமாக இருக்கும். தமிழ் நாட்டுக் கட்டிட முறைதான் திராவிட முறையாகும். தமிழ் நாட்டில் வேசர முறையில் கட்டப் பட்ட கோயில்கள் ஒரு சில உண்டு என்றாலும் நாகர முறையில் கட்டப்பட்ட கோயில்கள் இல்லை என்று ஆராய்ச்சியாளர்கள் கூறுகிறார்கள். ஆனால் இந்தப் பட்டடக்கல் கோயில்களில் சில நாகரமுறை கட்டிடக் கலை அமைப்பில் இருப்பது கூர்ந்து கவனிக்கத்தக்கது. இங்குதான் திராவிட முறையும், நாகர முறையும் கலந்து உறவாடி தேசிய ஒருமைப்பாட்டை உருவாக்கியிருக்கிறது. இந்த காசி விஸ்வேசர் கோயில் மூலவர் நல்ல கருங்கல் வடிவினர். லிங்க உருவில் இருப்பவர். முன் மண்டபத்தில் தூண்களில் எல்லாம் சிறந்த சிற்ப வேலைப்பாடுகள் இருக்கிறது. இக்கோயிலை அடுத்தே கமலநாதர் கோயில் இருக்கிறது. இக்கோயில் நாகர பாணியில் கட்டப்பட்ட பெரியதொரு கோயில். இங்கும் சிவலிங்கமே கமலநாதர் என்ற பெயரில் பிரதிஷ்டை ஆகி இருக்கிறார். கோயில் வாயிலும், மண்டபங்கள் சிற்ப வடிவங்கள் பலவற்றைத் தாங்கி நிற்கின்றன.

இன்னும் இங்கு காண வேண்டியவை சங்கமேஸ்வரர் கோயில், சந்திரசேகரர் கோயில், ஐம்புலிங்கர் கோயில் காட சித்தேஸ்வரர் கோயில்கள்தாம். எல்லாம் ஒன்று போல் ஒன்றாக அமைக்கப்பட்டவையே. தனிச் சிறப்பு உடையன அல்ல. சங்கமேஸ்வரர் கோயில் விமானம் மூன்றடுக்கு மாடி உடையது. நல்ல திராவிட சிற்ப பாணி.

இக்கோயிலில் உள்ள லிங்கத் திருவுருவிற்கு ஆவுடையார் கிடையாது. லிங்கத் திருவுருவம் சிதைந்திருக்கிறது. இங்கு ஒரு சமணக் கோயிலும் இருக்கிறது. சிறப்பாகச் சொல்வதற்கு ஒன்றும் இல்லை.

இத்தனை கோயில்களையும் சுற்றிப் பார்த்து வரும் போது, நம் நெஞ்சை ஏதோ ஒன்று அழுத்தும். கிட்டத் தட்ட ஆயிரத்து இருநூறு வருஷங்களுக்கு முன்னர் சாளுக்கிய சாம்ராஜ்யம் உன்னத நிலையில் இருந்தபோது கட்டப்பட்ட இக்கோயில்கள் இன்று கவனிப்பாரற்று, புதர் மண்டியும், இடிந்தும் கிடக்கின்றனவே. இக்கோயில்கள் எல்லாம் புதைபொருள் இலாக்காவின் மேற்பார்வையில் இருப்பதாக விளம்பரப்படுத்தியிருந்தாலும், அப்படி மேற்பார்வை மிகவும் மேல் எழுந்த பார்வையாகத்தான் இருக்கும் போலிருக்கிறது என்றுதான் எண்ணத் தோன்றும். அதே சமயம் நம் தமிழ் நாட்டுச் சிற்பி ஒருவன் வந்து இக்கோயில்களில் பிரதான கோயிலான விரூபாஷர் கோயிலை உருவாக்கியிருக்கிறானே, அந்தச் சிற்பி திரிபுவனாச்சாரியாருக்கு வணக்கம் செலுத்துவதற்காகவே ஒரு நடை நடக்கலாமே என்றும் எண்ணுவோம். ஆம் அந்தத் திரிபுவனாச்சாரியருக்கு வணக்கம் செலுத்தி விட்டே திரும்புவோம்.

# 15. ஐஹோளே துர்க்கை

நானும் ஒரு நண்பரும் சில வருஷங்களுக்கு முன் கம்பன் பிறந்த தேரெழுந்தூருக்குச் சென்றிருந்தோம். அங்குள்ள கம்பன் மேடு, ஆமருவியப்பன் கோயில் எல்லாம் செல்லுமுன் அங்குள்ள வேதபுரீசர் கோயிலுக்குச் சென்றோம். அங்குள்ள இறைவன் சம்பந்தரால் பாடப் பெற்றவன் ஆயிற்றே. அலையார் புனல் சூழ் அழுந்தைப் பெருமானை நினைந்து அவன் புகழைப் பாடிக் கொண்டே கோயிலுள் சென்றோம். கோயில் தருமகர்த்தர் ஒருவரும் அர்ச்சகர் இருவரும் எங்களை வரவேற்று உள்ளே அழைத்துச் சென்றனர். நாங்கள் மகா மண்டபம் சென்றதும் அங்குள்ள ஒரு பீடத்தில் சமய குரவர் நால்வரையும் செப்புச் சிலையாக நிறுத்தியிருப்பதைப் பார்த்தோம். அங்கு சமய குரவர்களை வரிசைப்படுத்தி இருந்த முறை நண்பருக்கு கோபமூட்டிற்று. அங்கு முதலில் மணிவாசகரையும் பின்னர் சம்பந்தரையும் அதன் பின் நாவுக்கரசரையும் சுந்தரரையும் வரிசைப்படுத்தி வைத்தார்கள். நண்பர் சொன்னார் இந்த முறைவைப்பு தப்பு. காலத்தால் மற்ற மூவருக்கும் பிந்திய மணிவாசகரை முதலில் வைத்திருக்கக் கூடாது. அவரை எடுத்து கடைசியில் வையுங்கள் என்றார். அர்ச்சகர்கரும் தருமகர்த்தரும் அப்படிச் செய்து விடவேண்டியதுதானே என்று என் முகத்தைப் பார்த்தார்கள். நான் சொன்னேன், அப்படி ஒன்றும் செய்ய வேண்டாம், காலத்தால் மணிவாசகர் மூவருக்கும் முந்தியவரா, பிந்தியவரா என்று விவாதமே இன்னும் தீர்ந்தபாடாக இல்லை. காலத்தால் அவர் பிந்தியவராக இருந்தாலும் சீலத்தால் அவர் மூவருக்கும் முந்தியவர் என்று காட்டத்தானோ என்னவோ அந்த அழுந்தை மறையோர், அந்தக் காலத்திலேயே இந்த

முறைவைப்பைச் செய்திருக்கிறார்கள். அந்த முறைவைப்பை மாற்ற நாம் யார்? என்றேன். அப்பாடா, எவ்வளவோ காலமாக இருக்கும் முறை வைப்பை மாற்றாது பழைய படியே இருக்கும்படி செய்த என்னை அர்ச்சகர்களும், தருமகருத்தரும் வாழ்த்தினார்கள்.

இந்த சம்பவம் நான் அந்தப் பழைய சாளுக்கிய சாம் ராஜ்யத்தில் பிரபல நகரமாக இருந்த ஐஹோளே என்ற ஊருக்குப்போகும் போது என் ஞாபகத்திற்கு வந்தது. ஆம் பாதாமி சாளுக்கியர் என்னும் அந்த முந்தைய சாளுக்கிய மன்னர்கள், பாதாமி, பட்டடக்கல், ஐஹோளேயிலிருந்து அரசு புரிந்திருக்கிறார்கள் என்று சரித்திரத்தில் படித்திருக் கிறேன். இவற்றில் பாதாமிக்கும் பட்டடக்கல்லுக்கும் போய் அங்குள்ள கலைக்கோயில்களை, சிற்பவடிவங்களை எல்லாம் கண்டு விட்டோம். ஐஹோளே இவற்றிற்கெல் லாம் பிந்தியதாகத் தானே இருக்கும். அதைப் பார்க்க வேண்டியது அவசியம்தானா என்று கூட எண்ணினேன். ஆனால் இதைப் பற்றி விசாரித்தால் காலத்தால் ஐஹோளே பாதாமிக்கும் முந்தியது மாத்திரம் அல்ல சீலமிக்க சிறப்பால் கூட அது முன்னனியில் நிற்கக் கூடியதே என்று தெரிந்துகொண்டேன். அதனால்தான் செல்லும்வழி கொஞ்சம் சிரமம் என்றாலும் ஐஹோளே என்னும் ஊருக்கும் உங்களை இழுத்தடிக்கிறேன். சிரமம் கருதாது என் பின் வரவும் வேண்டிக் கொள்கிறேன்.

நமது இந்திய நாட்டின் வடபகுதியிலும் மத்திய பகுதி யிலும் கி. பி. 320—முதல் 530—வரை குப்தர்கள் இருந்து அரசாண்டு வந்தார்கள் என்று சரித்திரம் கூறுகிறது. அவர்கள் தங்கள் ஆட்சிக் காலத்தில் பல கோயில்களைக் கட்டியிருக்கிறார்கள். கிட்டத்தட்ட அதே காலத்தில் தென்னாட்டிலும் நல்ல கலைக் கோயில்களை அமைத்த பெருமையை இந்த சாளுக்கிய மன்னர்கள் தட்டிக் கொண்டு போகிறார்கள். ஆம் மாமல்லபுரத்தை உரு

வாக்கிய நரசிம்மவர்மன், அவன் தந்தை மகேந்திரவர்மன், அவன் தந்தை சிம்மவிஷ்ணு, முதலிய பல்லவ மன்னர்கள் எல்லாம் கலை வளர்ப்பதற்கு முன்னாலேயே இந்த சாளுக்கியர்கள் கலைவளர்க்க முனைந்திருக்கிறார்கள். அவ்வாறு அவர்கள் உருவாக்கிய பாதாமி, பட்டடக்கல் என்னும் தலங்களையும் முந்திக் கொண்டு இந்த ஐஹோளே கோயில்கள், குடைவரைகள் உருவாகியிருக்கின்றது. இங்குள்ள கோயில்கள் எல்லாம் கி. பி. ஐந்து ஆறாம் நூற்றாண்டுகளில் உருவானது என்று சரித்திர ஆசிரியர்கள் பேசும் போது நாம் வாயடைத்துத்தான் நிற்க வேண்டியிருக்கிறது.

ஐஹோளே பாதாமிக்கு வடகிழக்கே பதினாறு மைல் தூரத்தில் இருக்கிறது என்றாலும், அங்கு செல்ல நல்ல வசதியான ரோடு கிடையாது. முன்னரே சொன்னபடி ரயிலிலே பாகல்கோடு போய் அங்கிருந்து பட்டடக்கல் வந்து, மல்ல பிரபா நதியையும் கடந்துதான் ஐஹோளே செல்ல வேண்டும். ஐஹோளேதான் சாளுக்கிய மன்னர்கள் அமைத்த முதல் தலைநகரம். பின்னால்தான் தங்கள் தலைநகரை பாதாமிக்கு மாற்றியிருக்கிறார்கள். பாதாமியிலிருந்து அரசாண்ட சாளுக்கிய மன்னர்கள் சத்தியாச்சிரய புலிகேசி பெற்றிருந்த புகழ் காரணமாக சரித்திர ஆசிரியர்கள் எல்லா சாளுக்கியரையும் பாதாமி சாளுக்கியர் என்று அழைக்க ஆரம்பித்திருக்கிறார்கள். நாம் அந்த சரித்திர வரலாற்றை எல்லாம் ஆராய வந்தவர்கள் அல்லவே. ஆதலால் ஐஹோளேயில் உள்ள கோயில்கள், குடைவரைகளைக் காண கொஞ்சம் விரைந்தே செல்லலாம்.

இந்த ஐஹோளேயில், கிட்டத்தட்ட எழுபது கோயில்கள் இருக்கின்றன. அவைகளில் முப்பது கோயில்கள் ஒரு கோட்டைக்குள்ளே இருக்கின்றன. மற்றவை கோட்டைச் சுவருக்கு வெளியே சிதறிக்கிடக்கின்றன. இங்குள்ள கோயில்களில் எல்லாம் பழமையானது லட்க்கான் கோயில்

என்பதுதான். எதற்காக அக்கோயில் அந்தப் பெயர் பெற்றது என்று தெரியவில்லை. ஐஹோளே என்ற பெயருக்கே காரணம் கண்டுபிடிக்க முடியவில்லையே, சாளுக்கிய மன்னர்கள் ஆரம்பத்தில் ஆர்யபுரம் என்றே இவ்வூரை அழைத்திருக்கின்றனர். பின்னர் ஐயாவோள் என்று வழங்கி இன்று ஐஹோளே என்று குறுகி இருக்கிறது, என்று மட்டும் தெரிகிறது. லட்க்கான் கோயில் ஐந்தாம் நூற்றாண்டின் மத்திய காலத்தில் உருவானது முன்னால் முகமண்டபத்துடன் கூடிய சிறிய கோயில்தான் அது. சாய்வான கூரையுடன் கூடிய கல் கட்டிடம் சிகரம் ஒன்றிருக்கிறது. ஆனால், கோயில் கட்டிப் பல வருஷங்களுக்குப் பின்தான் அது கட்டப் பட்டிருக்க வேண்டும் என்று கட்டிடக்கலை நிபுணர்கள் அபிப்பிராயப்படுகிறார்கள் என்றாலும் கோயில் புராணப் பொலிவோடு ஐந்தாம் நூற்றாண்டிலேயே ஆம் ஆயிரத்து ஐநூறு வருஷங்களுக்கு முன்பே கட்டப்பட்டுள்ளது என்றால் அது ஓர் அதிசயம்தானே. இதற்குப் பக்கத்திலே உள்ள கோயிலைத்தான் கோண்டிகுடி என்கின்றனர். அதற்குப் பக்கத்தில் இன்னும் இரண்டு கோயில்கள் இருக்கின்றன. எல்லாம் ஒன்றைப்போல் ஒன்றாகத்தான் இருக்கின்றன. எல்லாம் ஐம்பது அடிநீளத்திற்கும் உட்பட்டவைதான். மூன்று பக்கமும் அடைத்து இருக்கும். முன்பக்கத்தில் மட்டும் தூண்களோடு கூடிய திறந்த முகமண்டபம் இருக்கும். இங்கெல்லாம் நந்தி பெரிய வடிவில் அமைக்கப் பட்டிருக்கின்றது. இக்கோயில்களில் சிறப்பான மண்டபம் சாந்தகாரம் எனப்படும். மக்கள் கூடும் இடம்தான், இந்த சாந்தகாரமண்டபங்கள் நான்கு பக்கமும் திறப்பு உடைய மண்டபங்களாகத்தான் அமைந்திருக்கின்றன. கிராமத் தலைவர்கள் பலர் கூடவும், மற்றவர்கள் சுற்றியிருந்து பார்க்கவும் வசதியாக அமைந்திருக்கிறது. இங்கு தலைவருக்கு ஆசனமாக ஒரு பீடம் இருக்கிறது, லட்க்கான் கோயிலேயே இந்த மண்டபத்தைப் பார்க்கலாம். ஆனால் தூண்களுக்கு இடையில் உள்ள வெளியை இன்று சுவர்

வைத்து மூடியிருக்கிறார்கள். கொண்டிகுடிகளுக்குப் பக்கத்தில் உள்ள கோயில் ஒன்றில் இரண்டு சிற்பவடிவங்கள். ஒன்று பிரம்மா, மற்றொன்று அனந்தநாரணர். பிரம்மாவின் மூன்று முகங்கள் தெரிகின்றன. ஒருமுகம் பின்புறம் இருப்பதாகக் கற்பனை. தாமரை மலரில் ஒரு காலை மடக்கி, மற்றொரு காலை தொங்க விட்டிருக்கும் அழகு பிரமாதமாக இருக்கிறது. நான்கு திருக்கரங்களுடன் இந்த நாரணர் திருமகன் நான் முகனைப் பார்த்தபோது இவன்தான், பின்னர் சோழமன்னர்கள் உருவாக்கிய பிரம்மாவிற்கு எல்லாம் அச்சாக இருந்திருப்பாரோ என்று எண்ண இடம் இருக்கிறது. திருவையாற்றை அடுத்த கண்டியூரில் உள்ள பிரம்மாவோ அல்லது தஞ்சைக் கலைக்கூடத்தின் நடுநாயகமாய் அமைந்திருக்கும் பிரம்மாவோ இங்கு எழுந்தருளி வந்திருக்கிறாரோ என்ற பிரமைதான் ஏற்பட்டது. அனந்த நாராயணர் அவ்வளவு அழகாக இல்லைதான்.

இங்குள்ள கோயில்களில் எல்லாம் அழகான கோயில் துர்க்கை கோயில்தான். அதுதான் பெரிய கோயிலும் கூட, கோயில் எண்பது அடிநீளமும் முப்பது அடி அகலமும் உடையது. இக்கோயிலை அசப்பில் பார்த்தால் தாராசுரம் ஐராவதேஸ்வர் கோயில் போலவே இருக்கும். மாடக் கோயில் போல பத்தடி உயரத்திற்கு மேல்தான் கோயிலின் தளமே இருக்கிறது. முன்மண்டபம் நல்ல ராஜகம்பீரன் மண்டபம் போலவே இருக்கிறது. அது 24 அடி நீளம் இருக்கிறது. மண்டபத்தின் தூண்களில் எல்லாம் எண்ணிறந்த சிற்பவடிவங்கள் ரிஷபாந்திகரான சிவன், கருடவாகன விஷ்ணு, மகிஷமர்த்தினி, வராக மூர்த்தி எல்லாம் உருவாயிருக்கிறார்கள். எல்லாம் பெரிய வடிவங்கள், சிறந்த வடிவங்களும் கூட, வழக்கம்போல தூண்களில் பல ஆடவரும் பெண்டிரும் ஆக்ரமித்துக் கொண்டிருக்கிறார்கள். உள் கோயிலைச் சுற்றி வெளியே நல்ல வராந்தா போட்டது போல் கோயிலை அமைத்திருக்கிறார்கள். இக்கோயில் சிகரம் சிறியதுதான். அதுவும் சிதைந்திருக்கிறது.

இந்த துர்க்கை கோயிலுக்கு அடுத்தபடி நாம் காண வேண்டியது ஹச்சப்பையா கோயில். இது துர்க்கை கோயிலைப் போல் பெரிய கோயில் அல்ல. இக் கோயிலிலும் ஒரு சிறு முன் மண்டபம் இருக்கிறது. சிகரம், கலசம் இல்லாது மொட்டையாகவே நிற்கிறது. இங்கு பிரம்மா ஒருவரும் கஜலக்ஷ்மியும் சிற்ப வடிவங்களாக இருக்கிறார்கள். இருவரில் கஜலக்ஷ்மி தான் கொஞ்சம் கலை அழகு உடையவளாக இருக்கிறாள். கோயில் விதானத்தில் மயில்மேல் ஆரோகணித்து வரும் கார்த்தி கேயனது போர்க்கோலம் உருவாகியிருக்கிறது. எல்லாமே அர்த்தசித்திர (Bas Relief) வடிவங்கள்தாம். சின்ன ஹச்சிமல்லிகுடி என்று ஒரு கோயில் அதுவும் பெரிய கோயில் அல்ல. முன் மண்டபத்திற்கு ஏறவே பத்துப் பன்னிரண்டு படிகள் ஏறவேண்டும். இங்குள்ள தூண்கள், சுவர்களில் சிற்ப வடிவங்கள் இல்லை. இக்கோயிலின் சிகரம் பிந்திய காலத்தில்தான் கட்டப்பட்டிருக்க வேண்டும் போலும், அதுவும் இன்று மொட்டையாகவே இருக்கிறது.

இத்தனை கோயில்களோடு கோயிலாக ஒரு சமணக் கோயிலும் உருவாகி இருக்கிறது. அதனையே மேற்குடி சமணக் கோயில் என்கின்றனர். இவ்வட்டாரத்தில் உருவான கடைசி கோயில் இதுதானாம். இது 634-ல் கட்டி இருக்கிறார்கள். சில பகுதிகள் முற்று பெறாமலே நின்றிருக்கின்றன, என்றாலும் மற்ற கோயில்களை விட திறமையான முறையில் கட்டப்பட்ட கோயில் இதுதான். ஆம். ஆண்டுகள் செல்லச் செல்ல அனுபவம் வளர வளர திறமையும் அதிகரிக்கத்தானே செய்யும்.

இனி, இந்தக் கோயில்களையே சுற்றிக் கொண்டிருக்க வேண்டாம். இங்குள்ள குடைவரைக் கோயில்கள் இரண்டு பிரசித்தமானவை ஆயிற்றே. அவற்றையும் பார்த்து விட்டுத் திரும்புவோம். அவற்றில் ஒன்றுதான் ராவண

படிக்குகை. இக்குடைவரை ஊருக்கு வடமேற்கு மூலையில் இருக்கிறது. குடைவரை என்பதினாலே மலையைக் குடைந்து அமைத்த கோயில் என்பதை தெரிந்து கொள்ளலாம் தானே. இக்குடைவரையில் முன்னே ஒரு மண்டபம் இருக்கிறது. அதை அடுத்து ஒரு கருவறை. முகமண்டபத்திற்கு முன்னால் இருப்பது இரண்டு தூண்கள். எல்லாம் மலையைக் குடைந்து செதுக்கி அமைக்கப் பட்டவை. இந்த மண்டபத்தின் இரு முனைகளிலும் இரண்டு அறைகள். அங்குதான் அழகழகான சிற்ப வடிவங்கள். இடப்பக்கத்தில் பத்து திருக்கரங்களோடு கூடிய நடராஜர். இதுபோன்ற சந்தியாதாண்டவமூர்த்தியை நான் தமிழ் நாட்டில் பார்க்கவே இல்லை. இவர் அளவில் பெரியவர் என்பது மட்டும் அல்ல அழகிலுமே உயர்ந்தவர்தான். தாண்டவருக்கு இடப்புறம் பார்வதி. அவளை ஒட்டி குதிரைத் தலையுடன் ஒரு பெண். இது யாரென்று அறிந்து கொள்ள முடியவில்லை. வலப்புறம் மோதகம் ஏந்திய கைகளுடன் விநாயகர். சுவரை ஒட்டிய தூண் ஒன்றில் அர்த்தநாரியின் வடிவம். இதற்கு எதிர்ப்புறம் பாம்பொன் றின் வாலைத் தூக்கிப் பிடித்து நிற்கும் சூலபாணி. அடுத்த பக்கத்தில் ஹரிஹர வடிவம். இன்னும் இங்குள்ள வராகர் நல்ல காத்திரம் உள்ளவராகவும், கம்பீரம் நிறைந்தவராகவும் இருக்கிறார். நமக்குத்தான் தெரியுமே. சாளுக்கியர் கொடியிலே வராகம்தான் எழுதப்பட் டிருக்கும் என்று. சொல்லப் போனால் வராகரே சாளுக்கிய மன்னர்களின் வழிபடு கடவுளர் போலும். வராகருக்கு அடுத்தபடியாக துர்க்கை வழிபாடு சாளுக்கியரிடையே சிறந் திருக்கிறது. அதனாலேயே துர்க்கைக்கு என்று ஒரு தனிக் கோயில். இன்னும் இந்தக் குடைவரையிலும் ஒரு மகிஷ மர்த்தினியின் சிற்ப வடிவம். அவள் ஏந்தியுள்ள திரிசூலம் மஹிஷாசுரன் உடலில் பாய்ந்து வெளி வந்திருக்கிறது. இன்னும் ஒரு அதிசய வடிவம். அது சிவபெருமானு டையது. பக்கத்தில் பார்வதியும் பிருங்கி முனிவரும் இருக்கின்றார்கள். இவரது சடாமகுடத்திற்கும் மேலே

மூன்று பெண்களின் தலை தெரிகிறது: அவர்களே கங்கை, யமுனை, சரஸ்வதி என்கின்றனர். ஆம் கங்காதரனான சிவன், கங்கையை தலையில் ஏற்றபோது யமுனையையும் சரஸ்வதியையும் சேர்த்துத்தானே ஏற்றிருக்க வேண்டும் என்று எண்ணியிருக்கிறார்கள் சிற்பி. அந்தக் கற்பனை இப்படி வடிவெடுத்திருக்கிறது.

இன்னும் ஒரு குடைவரை, மலையின் அடுத்தப்பக்கத்தில் அதையே மீனாபஸ்தி என்கின்றனர். இது சமணக் குடைவரை இங்குள்ள பிரதான மூர்த்தி பார்சவநாத சேஷபாணி. நாகநாகினியருடன் உருவாகியிருக்கிறார்கள். இங்கு விதானத்தில் ஒரு பெரிய தாமரை நடுவிலும். நான்கு மூலைகளில் நான்கு சிறு தாமரைகளும் செதுக்கப்பட்டிருக்கின்றன. இருக்கின்ற இடைவெளியில் எல்லாம் மீன்கள். இப்படி ஒரு சிற்பக்கோலம் இக்குடைவரை வாயிலில் இரண்டு துவாரபாலகர்கள் கம்பீரமாக மணி மகுடம் அணிந்து நிற்கின்றனர். முன்னர் கோயிலில் கண்ட சிற்ப வடிவங்களை விட இக்குடைவரையில் காணும் சிற்பங்கள் அழகானவை. இச்சிற்பவடிவங்கள்தாம், பின்னர் தமிழ் நாட்டில் பல்லவ மன்னர்கள் உருவாக்கிய சிற்பங்களுக்கு எல்லாம் ஆதர்சமாக இருந்திருக்க வேண்டும். ஆம், தமிழன் நல்லது எங்கே இருந்தாலும் அதை எடுத்து அதற்கு ஒரு தனித்தன்மையையும் அளித்து அதனைத் தன்னதாக்கிக் கொள்வானே. ஐஹோளே குடைவரையில் இருக்கும் போது, ஏதோ தமிழ்நாட்டின் குடைவரை ஒன்றில் தானிருக்கிறோம் என்ற பிரமையே தோன்றும்.

# 16. பீஜப்பூர் கோல்கும்பஸ்

சமீபத்தில் ஒரு ஊரில் உள்ள கோயில் வாயிலில் ஒரு பெரிய கோபுரம் கட்டியிருந்தனர். (ஆம்! பேரைச் சொன்னாலும் ஊரைச் சொல்லக் கூடாதல்லவா) அந்தக் கோபுரத் திறப்பு விழாவிற்கு ஒரு மந்திரியையும் அழைத் திருந்தனர். என்னையும் அந்த விழாவிற்குத் தலைமை தாங்கும்படி கேட்டிருந்தனர். விழா ஆரம்பத்தில் உரை நிகழ்த்திய அமைச்சர் சொன்னார், நமது கோயில்களில் எல்லாம் மேளமும், தாளமும், கும்பலும் கூச்சலும் நிறைந் திருக்கிறது. ஆதலால் அங்கு சென்றால் மன அமைதி கிடைப்பதில்லை. ஆனால் முஸ்லீம்களின் மசூதிகளுக்கோ, கிருஸ்தவர்களின் சர்ச்சுக்கோ சென்றால் எல்லாம் அமைதி யாக நடக்கிறது. அதனால் மனதிற்குமே ஒரு சாந்தி கிடைக்கிறது. ஏன் நமது கோயில்களிலும் அந்த அமைதியை உருவாக்கக் கூடாது என்பது அமைச்சரது கேள்வி. இதனைக் கேட்ட கூடியிருந்த ஆஸ்திகப் பெரு மக்கள் மனம் வருந்தினர். அவர்களது வருத்தத்தைப் போக்க வேண்டியது தலைவனான எனது கடமையாக இருந்தது. நான் தலைமையுரையில் சொன்னேன். நமது கோயில்களில் எல்லாம் பூசனைக் கிரமங்கள், ஆசார நியமங்கள் எல்லாம் உண்டு. அவைகளை எல்லாம் நடத்த இன்னிசையும் தோத்திரங்களும் உதவுகின்றன. அதனுல் தானே நம் நாட்டுக் கோயில்களையும் அங்கு நடக்கும் ஆசார நியமங்களையும் நன்கறிந்த மணிவாசகப் பெருமான், இறைவனைத் துயில் எழுப்பும் பாணியில் திருப்பள்ளி எழுச்சி பாடுகிறார். அதில் அவர்,

> இன்னிசை வீணையர் யாழினர்
> ஒருபால் இருக்கொடு தோத்திரம்
> இயம்பினர் ஒருபால்
> துன்னிய பிணை மலர்க்கையினர்

ஒருபால், தொழுகையர் அழுகையர்
துவள்கையர் ஒருபால்
சென்னியில் அஞ்சலி கூப்பினர்
ஒருபால் திருப்பெருந்துறை உறை
சிவபெருமானே !
என்னையும் ஆண்டுகொண்டு இன்னருள்
புரியும் எம்பெருமான் பள்ளி
எழுந்தருளாயே !

என்று தானே பாடுகிறார் நமது கோயிலில் நாம் எப்படி வணங்க வேண்டும் என்பதையும் இவர் எளிதாக சொல்லியிருக்கிறாரே. இதைக் குறைகூறவோ அல்லது ஏளனம் செய்வதோ சரியல்ல. அமைச்சரவர்கள் செய்த சிறு தவறு என்னவென்றால், நமது கோயில்களையும் மசூதிகளையும் சர்ச்சுகளையும் ஒரே நிலையில் வைத்து நோக்கியதுதான். மசூதிகளும், சர்ச்சுகளும் வெறும் பிரார்த்தனைக் கூடங்களாகத்தான் அமைகின்றன. அங்கு மூர்த்திகள் இல்லை. பூசனை கிரமங்கள் இல்லை. ஆதலால் வழிபாட்டு முறையில் வேறுபட்டிருக்கிறது. இரண்டையும் இணைத்துப் பேசியிருத்தல் கூடாதுதான் என்று பணிவாகவே தெரிவித்துக் கொண்டேன். உண்மைதானே? முஸ்லீம்களின் மசூதிகள் எல்லாம் நல்ல பிரார்த்தனைக் கூடங்கள். நமது வடநாட்டு யாத்திரையில் நாம் எத்தனை எத்தனை இந்து கோயில்களைப் பார்க்கிறோமே, அத்தனை அத்தனை மசூதிகளையுமே பார்க்கப் போகிறோம்.

பன்னிரண்டாம் நூற்றாண்டிலிருந்து பதினேழாம் நூற்றாண்டு வரை முஸ்லீம்களின் ஆட்சி இந்தியாவில் நிலைத்திருக்கிறது. அவர்களது கலாச்சாரத்தை சார்சானிக் என்று கலை விமர்சகர்கள் கூறுகிறார்கள். கட்டிடக் கலையில், எகிப்தியகலை, கிரேக்கர் கலை, ரோமர்கலை, கோதிக்கலை என்பதுபோல

சார்சானிக்கலை என்னும் ஒரு தனித்துவம் இருக்கிறது. பின்னர் இந்த சார்சானிக் கட்டிடக்கலை இந்தியக் கட்டிடக்கலையோடு இணைந்து ஸ்தூபிகளாகவும், மினாரட்டுகளாகவும் உருப்பெற்று இந்திய சார்சானிக் கலை என்றே பெயர் பெற்றிருக்கிறது. அதனால்தானே பிரபல கலை விமர்சகர்களில் ஒருவரான பெர்சி ப்ரௌன் என்பவரும் இந்தியக் கட்டிடக்கலையைப் பற்றி எவ்வளவு விரிவாக எழுதினாரோ அப்படியே இஸ்லாமியக் கட்டிடக் கலையைப் பற்றியும் விரிவாகவே எழுதியிருக்கிறார். அத்தகைய இஸ்லாமியக் கட்டிடக் கலையின் விளக்கம் ஒன்றைக் காண நாம் நர்மதைக்கு வடக்கேதான் போக வேண்டும் என்றில்லை. நர்மதைக்குத் தெற்கேயும் இன்றைய மைசூர் ராஜ்யத்தில் உள்ள பீஜப்பூரிலுமே பார்க்கலாம். முன்னமேயே சீரங்கப் பட்டணத்தில் திப்பு சுல்தானின் வசந்த மாளிகைகள் தரியா தௌலத்தைப் பார்த்திருக்கின்றோம். அதன் அழகைக் கண்டு வியந்திருக்கின்றோம். இப்போதே பீஜப்பூர் சென்று அங்குள்ள முஸ்லிம் கட்டிடக் கலையின் சிறப்பைக் கண்டு வியந்து நிற்கப் போகிறோம். ஆம் இன்று அந்த பீஜப்பூர் என்னும் விஜயபுரிக்கே செல்கிறோம்.

பாதாமியிலிருந்து பாகல்கோட் சென்று அங்கிருந்து ஹோலஸ்பூர் என்னும் வழியில் பீஜப்பூர் இருக்கிறது. சென்னையிலிருந்து பம்பாய் செல்லும் ரயிலில் ஏறி ஹோட்கி ஸ்டேஷனில் இறங்கி அங்கிருந்து கடக் செல்லும் ரயிலில் ஏறி பீஜப்பூர் ஸ்டேஷனில் இறங்கலாம். இந்த பீஜப்பூர் ஹோட்கிக்கு 56 மைல் தெற்கிலும் கடக்குக்கு 134-மைலுக்கு வடக்கிலும் இருக்கிறது. ஆதிகாலத்தில் இந்த ஊரை விஜயபுரி என்றே அழைத்திருக்கின்றனர். இதிலிருந்தே இது சரித்திரப் பிரசித்தி பெற்ற ஊர் என்பதை நாம் அறிதல் கூடும். விஜயபுரிதான் பின்னர் பீஜப்பூர் என்று திரிந்திருக்கிறது. ஊருக்குள் செல்லும் முன் இந்த ஊரின் சரித்திரத்தையும் கொஞ்சம் தெரிந்து

கொள்ளலாம்தானே. கி. பி. பதினோராம் நூற்றாண்டில் இந்தப் பிரதேசத்தை சாளுக்கிய மன்னர்கள் ஆண்டு வந்திருக்கிறார்கள். அப்போது இந்த விஜயபுரி பிரசித்தி பெற்றிருந்திருக்கிறது. அதன் பின்னர் 12-ம் நூற்றாண்டின் பிற்பகுதியிலும் 13-ம் நூற்றாண்டின் முற் பகுதியிலும் தேவகிரியை ஆண்டு வந்த யாதவர்கள் கைக்கு இந்த விஜயபுரி மாறியிருக்கிறது. அலாவுதீன் கில்ஜி டில்லியில் இருந்து அரசாண்டபோது அவரது படைத்தலைவன் மாலிக்காபூர் தென்னாடு நோக்கிப்படை எடுத்திருக்கிறார். 1310-ல் நடந்த அந்தப்படை எடுப்பில் வெற்றியும் கண்டிருக்கிறார்கள். அவர் அங்கு ஒரு ராஜ்யத்தை நிறுவியிருக்கிறார். அதுவே பாமினி ராஜ்யம் என்று சரித்திர ஏடுகளில் பிரசித்தி பெற்றிருக்கிறது மாலிக்காபூரின் மகனான கரிமுத்தீன் இந்த பிரதேசத்தில் கவர்னராக இருந்து ஆண்டிருக்கிறார். அவனே பீஜப்பூரைத் தன்னுடைய தலைநகராக ஆக்கிக் கொண்டிருக்கிறான். பின்னர் பாமினி ராஜ்யத்தில் இருந்த ராணுவத்தின் தலைவர்களுள் பிளவுகள் ஏற்பட்டு ஒவ்வொருவரும் தாங்கள் இருந்த பகுதியை தங்களுடைய ராஜ்யம் எனப் பிரகடனப்படுத்திக் கொண்டு ஆண்டிருக்கிறார்கள். அப்போது பீஜப்பூரில் இருந்தவன் அடில்ஷா. அடில்ஷாவை போலவே நைஜாம்ஷா அகமத் நகரிலும், குலி குதுப்ஷா என்பவன் கோல் கொண்டாவிலும் தனியரசு செலுத்தி வந்திருக்கின்றனர். இவர்களில் அடில்ஷா நைஜாம்ஷாவின் மகளாகிய சாந்த்பீபியை மணந்து, பரால்கோட் என்ற இடத்தையும் சீதனமாகப் பெற்றிருக்கிறார். இதன்பின் கிட்டத்தட்ட இருநூறு வருஷம் அடில்ஷாவின் வம்சத்தினர் பீஜப்பூரிலிருந்து அரசாண்டிருக்கின்றனர். பின்னர் மொகலாய சக்கரவர்த்தியான ஔரங்கசீப் பீஜப்பூர் சுல்தானான சிக்கந்தரை வென்று பீஜப்பூரை தன் ராஜ்யத்திற்கு கொண்டு வந்திருக்கிறார். இது நடந்தது 1686-ல், மொகலாய சாம்ராஜ்யத்தின் கீழிருந்த பீஜப்பூரைத் தான் 1724-ல் ஹைதராபாத் நைஜாம் கைப்பற்றியிருக்

கிறார். பிறகு அது மகராஷ்டிராவின் கைக்கு மாறி இருக்கிறது. 1818-ல் இந்த பீஜப்பூர் வெள்ளைக்காரர் ஆளுகைக்குள் வந்திருக்கிறது. பம்பாய் மாகாணத்தில் ஒரு ஜில்லாவாக இருந்த பீஜப்பூர் மொழிவாரி ராஜ்யங்கள் அமைத்தபோது மைசூர் ராஜ்யத்தோடு இணைந்திருக்கிறது.

இந்த நகரில் உள்ள பிரபலமான கட்டிடங்கள் எல்லாம் அடில்ஷா வம்சத்தினர் கட்டியவைகளே. அடில்ஷா வம்சத்தினர் ஒவ்வொருவரும் தங்கள் தங்கள் ஆட்சியின் ஞாபகார்த்தமாக ஒவ்வொரு பெரிய மசூதியைக் கட்டியிருக்கின்றனர். முந்திய சுல்தான் கட்டியதை விட தான் கட்டுவது சிறப்பாக இருக்க வேண்டும் என்று போட்டி போட்டுக் கொண்டு ஒவ்வொருவரும் கட்டியிருப்பதால் ஒன்றைவிட ஒன்று சிறந்ததாக இருக்கிறது. எல்லா மசூதிகளையும் ஒரே இடத்தில் கட்டியிருக்கிறார்கள். இந்த மசூதிகளையெல்லாம் சுற்றி ஒரு பெரிய கோட்டையையும் கட்டியிருக்கிறார்கள். இந்தக் கோட்டைச் சுவரின் கீழ் மேல் நீளம் 19000 அடி தென்வடல் அகலம் 1600 அடி. கோட்டைச் சுவரின் நான்கு பக்கத்திலும் நான்கு வாயில்கள் அமைத்திருக்கிறார்கள். தென்பக்கத்து வாயில் தான் பிரதான வாயில் இதனையே பட்டேகேட் என்கின்றனர். ஔரங்கசீப் இந்த வாயில் வழியாகத்தான் கோட்டைக்குள் புகுந்திருக்கிறான். நாமும் இன்று காரிலேயே இந்த வாசல் வழியாக உள்ளே நுழையலாம். கோட்டைக்குள் இருக்கும் மசூதிகளில் முக்கியமானது கோல்கும்பஸ் என்பதுதான். இது கட்டிடக் கலையிலே ஓர் அரிய சாதனை. 17-ம் நூற்றாண்டின் முற்பகுதியில் பீஜப்பூரில் இருந்து ஆண்ட அடில்ஷா அதனைக் கட்டியிருக்கிறார். இது ஒரு சதுரமான கட்டிடம். 18000 சதுர அடியில் இது கட்டப்பட்டிருக்கிறது. நான்கு மூலைகளிலும் எட்டுப் பட்டையுடன் கூடிய ஒரு மாடத்தூபி இருக்கிறது. இதில் எல்லாம் மேலே ஏறிப்போக படிக்கட்டுகள் உண்டு. இக்கட்டிடத்

தின் அழகு, அதிசயம் எல்லாம் அக்கட்டிடத்தின் மேல் 125 அடி குறுக்களவு உள்ள ஒரு வட்ட வடிவமான 'டோம்' தான். இந்த டோம் மாத்திரம் 30 அடி உயரம், கட்டிடத்தின் மொத்த உயரம் 200 அடி. இந்த டோமே உலகத்தில் உள்ள டோம்களில் எல்லாம் பெரியது என்கிறார். இதற்கு அடுத்ததாக நிற்பதுதான் ரோமாபுரியில் உள்ள பாந்தியன் மண்டபத்து டோம் என்றும் கணக்கிட்டிருக்கிறார்கள். இந்த டோமில் இன்னும் ஓர் அதிசயம். டோமின் அடிப்பாகத்தில் 11 அடி அகலத்தில் டோமைச் சுற்றி வரப் பாதை அமைத்திருக்கிறார்கள். அந்தப் பாதையில் ஒரு பக்கத்தில் நின்று கொண்டு மெதுவாகப் பேசினாலும் 125 அடிக்கு அப்பாலுள்ள எதிர்ப் பக்கத்தில் தெளிவாகக் கேட்கிறது. இன்னும் இங்கு ஒரு இடத்திலிருந்து உரக்கக் கத்தினால் எட்டு இடங்களில் அதன் எதிரொலி கேட்கிறது. இதனையே குசுகுசு சுற்றுச் சாலை (Whispering Gallery) என்கின்றனர். இந்த கோல்கும்பஸ் கட்டிடத்தின் மத்தியில் ஒரு பீடம். பீடத்தின் கீழே பூமிக்குள்ளே பல நிலவறைகள். இந்த கோல்கும்பஸ் என்ற கட்டிடத்தை காண்பதற்காகவே ஒரு நடைபோகலாம். இந்த ஊருக்கு கோல்கும்பஸ் மண்டபத்திற்கு எதிரேயுள்ள கட்டிடத்தை ஒரு கலைக் காட்சியாக இன்று வைத்திருக்கிறார்கள். அங்கு பழைய காலத்து நாணயங்கள், கத்திகள், கேடயங்கள் முதலிய போர்க் கருவிகள் எல்லாம் வைத்து இருக்கிறார்கள். இன்னும் எத்தனை எத்தனையோ பழங்காலத்துப் பொருட்கள் எல்லாம் இருக்கின்றன. அவகாசம் உடையவர்கள் எல்லாம் ஆற அமர இருந்து இவைகளைப் பார்த்து ஆராய்ச்சி செய்யலாம்.

கோல்கும்பஸ் மண்டபத்திற்கு அடுத்த படியான பெரிய கட்டிடம் ஜும்மா மசூதிதான். இதைக் கட்டியவர் முதலாம் அலி என்பவன். விஜகநகர மன்னனான ராம்ராஜ் என்பவனை முறியடித்து வெற்றி கண்டதின் ஞாபகார்த்த

மாக கட்டினார் என்பர். இதன் தரை நன்றாக பூசப்பட்டுப் பளபளப்பாக இருக்கும். குறுக்கும் நெடுக்கும் கோடுகள் போட்டு பிரார்த்தனைக்கு வரும் அனைவருக்கும் இடம் வகுத்திருக்கிறார்கள். ஒரே தடவையில் 2000 பேர்கள் இருந்து பிரார்த்தனை செய்யக்கூடும் என்றால் அது எவ்வளவு விசாலமானதாக இருக்கும் என்பதைத் தெரிந்து கொள்ளலாம்தானே.

இன்னும் இங்கு காண வேண்டியவை கான்மஹல், சாத்மன்சீல் முதலியன. அடில்ஷா வம்சத்தினர் இருந்து தர்பார் நடத்திய இடம். இந்த தர்பார் மண்டபத்தில் சிக்கந்தர் முகலாய சக்கரவர்த்தி ஔரங்கசீபினிடம் சரணா கதியடைந்திருக்கிறார். சாத்மன்சீல் என்பது ஏழுமாடிக் கட்டிடம். ஏழுநிலை மாடம் என்றெல்லாம் சரித்திரங்களில் கேட்கிறோமே அந்த ஏழுநிலை மாடம் இதுதான். இந்த ஏழுநிலை மாடத்தில் மட்டும் ஏறி நின்று பார்த்தால் பீஜப்பூர் முழுவதையுமே பார்த்து விடலாம். இன்னும் இங்கேயே இரண்டு பழைய பீடங்கள் ஒன்று 22 அடிநீளம், மற்றொன்று 14 அடி நீளம். ஆனால் இந்த அணு யுகத்தில் இந்த பீரங்கிகள் என்ன பிரமாதம் என்றுதான் தோன்றும் இன்று.

இந்த ஊரை விட்டுக் கிளம்புமுன் நாம் பார்க்க வேண்டிய கட்டிடம் தான் இப்ராஹிம் ரூசா என்பது. இது ஊருக்கு மேல் கோடியில் இருக்கிறது. அங்கு இரண்டு கட்டிடங்கள் உண்டு. ஒன்று மசூதி. மற்றொன்று சமாதி. இந்த சமாதிக் கட்டிடத்தில் தான் முதலாம் இப்ராஹிம் அவரது மனைவி, மக்கள் எல்லோரும் சமாதியாயிருக் கின்றனர். இங்கு சுவர்களில் எல்லாம் குரானிலிருந்து பல வாக்கியங்கள் எழுதியிருக்கிறார்கள். இதனையே தக்ஷிணத்து தாஜ்மஹால் என்று அழைக்கின்றனர். அசப்பில் தாஜ்மஹாலைப் போலவே கட்டப்பட்டிருப்பதாகத்

தோன்றும். இந்த சமாதிக்கும் மசூதிக்கும் இடையே ஒரு குளம் வெட்டியிருக்கிறார்கள்.

இந்த பீஜப்பூர் ஜில்லாவிலே நான்கு நதிகள் பாய்கின்றன. கிருஷ்ணா, பீமா, கடப்பிரபா, மல்லப் பிரபா என்பவை அவை. இப்படி நீர்வளம் இருந்தாலும்,



இப்ராஹிம் ரூசா

நிலவளம் அதிகம் உடைய நாடு அல்ல இது. இங்குள்ள மண் நல்ல கருத்த கரிசல் மண்தான். ஆதலால் பருத்தியே இங்கு விளையும் பொருள்களில் முக்கியமானது. பீஜப்பூர், பருத்தி மார்க்கெட்டிற்கு ஒரு சிறந்த இடம் என்கின்றனர்.

பீஜப்பூரிலிருந்து நான்கு மைல் தூரத்தில் தராவி என்று ஒரு கிராமம் இருக்கிறது. இங்கேதான் குமார வால்மீகி அவதரித்திருக்கிறார் அவரே கன்னடத்தில் ராமாயணம் எழுதியவர். இக்கிராமத்தில் அழகிய நரசிம்மரது கோயில் இருக்கிறது. இக்கிராமத்திற்குச் சென்றால்,ஏதோ மசூதிகளையும் சமாதிகளையும்மாத்திரம் பார்த்தோம் என்றில்லாமல் ஒரு கோயிலையும் பார்த்தோம் என்ற திருப்தியுடனேயே திரும்பலாம்.

இந்திய நாட்டின் ஏழு அதிசயங்கள் என்று கணக்கிடுபவர்கள் பீஜப்பூர் கோல்கும்பஸையும் ஒன்றாகக் கணக்கிட்டிருக்கிறார்கள் என்றால், அந்த கட்டிடத்தினை நாம் காண வேண்டாமா? அதற்காகவே இவ்வூருக்கும் நமது விஜயம்.

# 17. பண்டரிபுரத்துப் பாண்டுரங்கன்



விட்டலர் கோயில்

'தந்தை தாய்ப்பேண்' என்று மக்களுக்கு அறிவுறுத்தினார்கள் பெரியவர்கள். அப்படிப் பேணுவார்களோ மாட்டார்களோ என்று சந்தேகம் இருந்தது அவர்களுக்கு.

அதனால் பின்னர் 'அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்' என்று தெய்வமாகவே பெற்றோரை உயர்த்திக் கூறினார்கள். இப்படி எல்லாம் சொல்லியிருந்தும் மக்களில் பெரும்பாலோர் தாய் தந்தையரை மதிக்கிறதில்லை. அதிலும் ஆடவர் எல்லாம் தத்தம் மனைவியருக்கு அடங்கியவராய் தந்தை தாயாரைப் பேணுவதையே நிறுத்தி விடுகிறார்கள் ஆனால் தந்தையையும் தாயையும் தெய்வமென மதிப்பவர்களை தெய்வமுமே மதிக்கும், அவர் சொற்படி கேட்கும் என்பதை விளக்கவே ஒரு கதை மராத்திய நாட்டில் வழங்கிவருகிறது.

ஜானு தேவர் என்று ஒரு மராத்திப் பிராமணர். அவருக்கு சந்தியாதேவி என்று ஒரு மனைவி இருவரும் சிறந்த விஷ்ணு பக்தர்கள். இருவரும் தவமிருந்து பெறுகின்றனர், ஒரு மகனை. புண்டரீகன் என்று அவனுக்குப் பெயரிடுகின்றனர். அவனை வளர்த்து வாலிபமாக்கினர். தக்கதொரு பெண்ணையும் அவனுக்கு மணம் முடித்து வைக்கின்றனர். அவ்வளவுதான். மனைவி கீறிய கோட்டைத் தாண்டாதவனாக புண்டரீகன் வளர்கிறான். தாய் தந்தையரை உதாசீனம் செய்கிறான். அதனால் மனம் உடைந்த பெற்றோர் இருவரும் காசியாத்திரை புறப்படுகிறார்கள். புண்டரீகனும் மனைவியும் உடன் சென்று வழியிலும் பெற்றோரைத் துன்புறுத்துகிறார்கள். காசி சென்று அங்குள்ள குக்குட முனிவர் ஆசிரமத்தில் தங்குகிறார்கள். அம்முனிவரின் ஆசிரமத்திற்கு ஒவ்வொரு நாளும் அதிகாலையில் மூன்று பெண்கள் வந்து திரும்புகின்றனர். அழுக்கான உடையோடு வரும் அவர்கள், முனிவருக்கு வேண்டிய பணிவிடைகள் செய்துவிட்டு திரும்பும்போது புனிதமான உடையோடும் காந்தி பொருந்திய முகத்துடனும் திரும்புகின்றனர். இதைப் பார்க்கிறான் புண்டரீகன். பெண்களை நெருங்கி அவர்கள் யாரென விசாரிக்கிறான். விசாரித்ததில் அவர்களே கங்கை, யமுனை, சரஸ்வதி என்றும், பலரும் தங்களிடம் மூழ்கிப் பாபச்சுமையைக் கழிப்ப

தால்தாங்கள் அழுக்கடைவதாகவும், அந்தமாசுகள் எல்லாம் குக்குட முனிவருக்குப் பணிவிடை செய்வதால் அகல்கிறது என்றும் தெரிவிக்கிறார்கள். குக்குட முனிவரிடம் எப்படி அவ்வளவு புனிதத்தன்மை இருக்கிறது என்று விசாரித்த போது, அவர் தம் பெற்றோருக்குச் செய்யும் கைங்கரி யத்தை ஒழுங்காகச் செய்வதால் பெரியபேறு உடையவர் என்று தெரிகிறது. அன்றைய தினத்திலிருந்து புண்டரீ கனும் அவன் மனைவியும் தந்தை தாயாரைப் பணிந்து அவர்களுக்கு வேண்டும் பணிவிடைகளைச் செய்வதில் முனைகிறார்கள், திரும்பித் தங்கள் ஊருக்கு வந்து வாழ்வில் ஒரு புதிய அத்யாத்தையே ஆரம்பிக்கிறார்கள்.

இதே சமயத்தில் துவாரகையில் இருந்த பராந்தா மனுக்கும் ருக்மணிக்கும் ஒரு பிணக்கு ஏற்படுகிறது. ருக்மணி தன் கணவனைப் பிரிந்து புண்டரீகன் வசிக்கும் பகுதிக்கு வந்து தவம் புரிகிறாள் அவளைத் தேடிக் கொண்டு வைகுண்டபதியும் அங்கு வருகிறார். இருவரும் இணைந்து புண்டரீகன் இருந்த குடிலுக்கு வருகிறார்கள். வந்து தங்களை இன்னார் என்று அவனிடம் அறிமுகப் படுத்திக் கொள்கிறார்கள். அவனோ தாய் தந்தை யருக்குப் பணிவிடை செய்து கொண்டிருக்கிறான். ஆதலால் ஒரு செங்கல்லை எடுத்துப் போட்டு, ''இதில் கொஞ்சம் நின்று கொண்டிரும், நான் என் பெற்றோருக்குச் செய்யும் பணிவிடைகளை எல்லாம் முடித்துவிட்டு வருகிறேன்'' என்று சொல்லி விடுகிறான். அந்தப் பக்தன் சொற்படியே பரந்தாமனும் அந்தச் செங்கல்லின் மேலேயே நின்று கொண்டிருக்கிறான். தாய் தந்தையருக்கு செய்யும் பணிவிடைகளை எல்லாம் முடித்துவிட்டே புண்டரீகன் வந்து பரந்தாமனை வணங்கி உபசரணை செய்கிறான். பின்னர் அவன் விரும்பியபடியே அவன் எடுத்துப் போட்ட செங்கல்லின் பேரிலேயே நின்று இன்றும் சேவை சாதித்துக் கொண்டிருக்கிறார். அவரே விட்டோபா. மராத்தியில் 'விட்' என்றால் செங்கல்.

உபா என்றால் நிற்றல் என்று பொருளாம். இந்த விட்டோபாவையே புண்டரீக வரதன் என்கிறார்கள், புண்டரீகன் இருந்த ஊர்தான் பண்டரிபுரம். அங்கு கோயில் கொண்டிருப்பவர்தான் பாண்டுரங்கன். அந்த பாண்டுரங்க விட்டலனைக் காணவே நாம் இன்று பண்டரிபுரம் செல்கிறோம்.

இந்த பண்டரிபுரம் செல்ல சென்னையிலிருந்து பம்பாய் செல்லும் மார்க்கத்தில் குருதுவாடி ஜங்ஷனில் இறங்க வேண்டும். அங்கிருந்து ஜிராஜ் செல்லும் வண்டியில் ஏறவேண்டும். இப்படிச் சென்றால் பண்டரி புரம் ஸ்டேஷனிலேயே இறங்கலாம். காரிலே செல்வதா னால் பீஜப்பூரிலிருந்து ஷோலாப்பூர் போய், அங்கிருந்து பூனா செல்லும் பாதையில் முப்பது மைல் போனால் தெற்கு நோக்கி ஒரு பாதை பிரியும். அந்தப் பாதை நல்ல சிமெண்ட் ரோடாகவும் இருக்கும். அந்த ரோட்டில் முப்பது முப்பத்திரண்டு மைல் சென்றாலும் பண்டரிபுரம் சென்று சேரலாம். பண்டரிபுரம் செல்லுமுன் ஒரு நதியைக் கடக்க வேண்டும். அந்த நதியையே பீமா நதி என்கின்றனர். இந்த நதி பண்டரிபுரத்தைச் சுற்றிக் கொண்டு அர்த்தசந்திர வடிவில் போவதால் இதனை சந்திரபாகாநதி என்றும் அழைக்கின்றனர். நதியைக் கடக்க பாலம் ஒன்றும் கட்டியிருக்கின்றனர். தெளிந்த தண்ணீர் ஓடுவதை கண்டால் அங்கு ஒரு முழுக்குப் போடலாம் என்றும் தோன்றும். அதிலும் பாண்டுரங்கன் கோயிலுக்கு செல்லும் நாம், நன்றாகக் குளித்து விட்டே செல்லலாம்தானே.

நதிக்கரையில் நிற்கும் போதே கோயிலின் சிகரங்கள் தெரியும் அதைக்குறியாகவைத்துக்கொண்டே தெருக்களில் வளைந்து வளைந்து சென்றால் கோயில் வாசல்போய்ச் சேரலாம். கோயிலை அடுத்த தெருக்கள் எல்லாம் குறுகிய தெருக்கள். பல கடைகள் இருக்கும். அதில் பலகாரக் கடைகளே அதிகம். பாண்டுரங்க விட்டலின் ஆராதனைக்கு

நம் தமிழ் நாட்டில் செல்வதுபோல தேங்காய் பழம் வெற்றிலைபாக்கு எல்லாம் எடுத்துப்போக வேண்டாம். கொஞ்சம் மிட்டாய் மாத்திரம் வாங்கி எடுத்துப் போய் ஆராதனை செய்து பிரசாதமாகக் கொண்டு வரலாம். மிட்டாய் எல்லாம் நல்ல சர்க்கரை மிட்டாயாகத்தான் இருக்கும். பாண்டுரங்கன் கோயில் பெரிய கோயில். இதன் மேல் 300 அடிநீளமும் தென்வடர் 170—அடி அகலமும் உள்ளது. இக்கோயிலுக்கு கிழக்கிலும் மேற்கிலும் மூன்று மூன்று வாயில்கள். வடக்கும் தெற்கும் ஒவ்வொரு வாயில் தான். இப்படி எட்டுவாயில்கள் இருந்தாலும் கீழ்புறம் உள்ள பிரதான வாயில்வழியாகத்தான் உள்ளே நுழைய வேண்டும். அதைத்தான் நாம தேவர் வாயில் என்பர். நாம தேவர் என்னும் மராட்டிய பக்தர் பாண்டுரங்கனிடம் யாசித்த பேறு இதுதான், 'எப்போதும் உமது திருவடியி லேயே இருக்க வேண்டும், உம்மைத் தரிசிக்க வரும் பக்தர் களது பாததூளி எல்லாம் என் சிரமேல்படிய வேண்டும்' என்று வேண்டிக் கொண்டாராம். அதன்படியே அவர் அமர ரான பின்னும் அவரை இந்த வாயிலிலேயே அடக்கம்செய் திருக்கிறார்கள் என்கின்றனர். இந்த வரலாற்றைக் கேட் டதும், நமக்கு குலசேகராழ்வார் வேங்கடவனிடம் செய்து கொண்ட பிரார்த்தனைத் தான் ஞாபகத்துக்கு வரும்.

> செடியாய வல்வினைகள்
> தீர்க்கும் திருமாலே
> நெடியானே வேங்கடவா !
> நின்கோயிலின் வாசல்
> அடியாரும் வானவரும்
> அரம்பையரும் கிடந்தியங்கும்
> படியாய்க் கிடந்து உன்
> பவளவாய் காண்பேனே !

என்றுதானே பெரிய திருமொழியில் அவர் பாடி இருக் கிறார். ஆனால் நாமதேவர் விருப்பம் பரிபூரணமாக நிறை வேறிவிட்டது என்று சொல்லமுடியாது. இன்றைய பண்

டாக்கள் நாமதேவர் தலையை மட்டும் சிலையாக செய்து, அதற்கு செப்புக்கவசம் அணிந்து வாயிலில் வைத்து, அத் தலையினைக்காட்டி காசுபறிக்கின்றனர். செல்லும் பக்தர் களோ நாமதேவரை நினைந்து அந்தப் படியை மிதியா மலே அடுத்த படியில் எட்டிக் காலடி வைத்து கோயிலுள் சென்று விடுகின்றனர். இந்தப் படிகளைக் கடந்து சென் றால் ஒரு சிறுமண்டபம். அதனையே முக்தி மண்டபம் என் கின்றனர். அதனை அடுத்தே 120-அடி நீளமும் 60-அடி அகலமும் உள்ள கூடம், அதற்கும் அப்பால் மரத்தால் கட்டப்பட்ட சபாமண்டபம். அதில் கருடாழ்வார், ஆஞ்ச னேயர் கோயில்கள் இருக்கின்றன. இங்கே ராமபக்தியில் சிறந்தவரான சமர்த்த ராமதாஸரை பிரதிஷ்டை செய்து இருக்கிறார்கள். பெரிய ஹனுமார்விக்கிரகம் ஒன்றும் இருக்கிறது.

இம்மண்டபத்திலிருந்து கோயிலுள் செல்ல மூன்று வாயில்கள். நடுவாயிலில் துவாரபாலகர்கள், இருவர். அவர்களை அடுத்து விநாயகரும் சரஸ்வதியும் தரிசனம் கொடுப்பர், இந்த வாயில் கடந்தால் உள்ளேயுள்ள பதினாறு கால் மண்டபம். அந்த மண்டபத்தின் ஒரு தூணையே வெள்ளித் தகட்டில் பொதிந்து வைத்திருக்கிறார்கள். அதில் உள்ள புண்டரீக வரதனை பக்தர்கள் ஆலிங்கனம் செய்தே அருள் பெறலாம். இதற்கடுத்து ஒரு சிறு மண்டபம். அதை யும் கடந்தே கருவறை செல்ல வேண்டும். அதில் நுழைய அமைத்திருக்கும் வாயில் மூன்றடி உயரமே. ஆதலால் நன்றாகத் தலை வணங்கியே செல்ல வேண்டும். கருவறை எட்டுச் சதுர அடி விஸ்தீரணமே உடைய சிறு அறை. அதில் மேல் கோடியில் வெள்ளியால் செய்யப்பட்ட செங்கல்லின் பேரில் ஏறி நின்று கொண்டிருக்கிறார் விட்டலர். மூர்த்தி நல்ல கருங்கல் வடிவினர். இடுப்பில் இரண்டு கையையும் வைத்து மிடுக்காகவே நிற்பார். கொஞ்சம் கூர்ந்து கவனித்தால் இந்த விட்டலர் சிரசின் மீது சிறிய சிவலிங்கம் ஒன்று இருக்கக் காண்போம். நாம்

முன்னமேயே நரஹரி சோனார் என்ற தங்க வேலைப் பத்தர் கதையைத் தெரிந்திருக்கிறோம். சிவனைத் தவிர வேறு தெய்வத்தைக் காணவும் மாட்டேன் என்றிருந்த அந்த பத்தரைக் கொண்டே, விட்டலருக்கு ஒரு தங்க அரைஞாண் செய்ய விரும்புகிறார் ஒரு பக்தர். கண்ணைக் கட்டிக் கொண்டே வந்து விட்டலரது இடையை அள வெடுக்க வந்த நரஹரி சோனார், தடவிப் பார்க்கும்போது அவரது கைகளுக்கு சிவபெருமானே தட்டுப்பட்டிருக்கிறார். கண்கட்டை அவிழ்த்துப் பார்த்தபோதுதான் அங்கு நிற்பவர் விட்டலனாகவே நின்றிருக்கிறார். தான் வேறு சிவன் வேறு அல்ல என்று சோனாருக்கு மாத்திரம் அல்ல உலகத்திற்கே காட்ட சிவலிங்கத்தை விட்டலர் தலைமீது வைத்தே காட்டினார் என்கிறார்கள். இந்த விட்டலர் திருவடிகளில் நம் தலை வைத்து வணங்கலாம். வணங்கும் போது,

அண்டர்களும் முனிவர்களும்,
அடியார் தாமும், அரன் அயனும்
யோகிகளும் அகிலம் தன்னில்
எண்டிசையுள் எதியர்களும்
இறைஞ்சி ஏத்தும் எம்பெருமான்
நின்னடிக்கு ஏழையான் உன்
தொண்டர்கள் தம் திருவடிக்குத்
தொண்டு செய்ய தூயனே
கருணை வைத்து அருளும் இந்தப்
பண்டரியில் பக்தர்கட்காய்
வந்தமர்ந்த பாண்டுரங்கா
நின் பதத்திற்கு அபயம்தானே

என்று பாண்டுரங்கனைத் துதிக்கவும் செய்யலாம்.

பாண்டுரங்கனைத் தரிசித்தபின் திரும்பவும் பதினாறு கால்மண்டபத்திற்கு வந்து தெற்குப் பிரகாரம் சென்றால் அங்கு ஒரு பெரிய மரம் இருக்கிறது. அதைத் தாட்டி மரம் என்கின்றனர். அந்த மரத்தைப் பற்றி ஒரு கதையும் இருக்

கிறது. பண்டரிபுரத்திற்கு பக்கத்திலே மங்கல்பேடே என்னும் ஒரு சிறிய ஊர், அங்கே கானுபத்ரா என்று ஒரு பெண். நல்ல அழகுவாய்ந்தவள். அவள் பாண்டுரங்கனிடம் அத்யந்த பக்தி உடையவள். அந்த வட்டாரத்தை ஆண்டு வந்த மகம்மதிய அரசன் ஒருவன் அவள் அழகைக் கண்டு மோகிக்கிறான். தன் சேவகர்களை அனுப்பி அவளை அழைத்து வரச் சொல்கிறான். அவன் ஆணைக்குப் பயந் தாலும், கானுபத்ரா பாண்டுரங்கனைத் தரிசித்து விட்டு வந்து விடுவதாகச் சொல்கிறாள். அப்படியே பாண்டுரங்கன் சந்நிதி வந்து தன்னைக் காப்பாற்ற வேண்டிக் கொள் கிறாள். சூடிக்கொடுத்த சுடர்க்கொடியாம் ஆண்டாளை போல்,

> ஊனிடை ஆழி சங்கு
> உத்தமர்க்கென்று உன்னித்தெழுந்த
> என் தடமுலைகள்
> மானிடவர்க்கென்று
> பேச்சுப்படில் வாழகில்லேன்
> கண்டாய்

என்றே விண்ணப்பித்திக் கொள்கிறாள். பாண்ரங்கனும், அவளது காதலை ஏற்று தன்னுள் ஐக்கியப்படுத்திக் கொள் கிறான். அவள் பூத உடல் மறைந்த இடத்திலே தான் இந்த மரம் தோன்றி வளர்ந்திருக்கிறது. அந்தப் பக்கத்து வாயிலையும் கானுபத்ரா வாயில் என்றே அழைக்கின்றனர். இன்னும் இந்தத் தாட்டி மரத்திற்குப் பக்கத்திலேயே வேங்கடாசலபதியின் சந்நிதி ஒன்றும் இருக்கிறது. இந்த சந்நிதிக்கு சற்று மேற்கே மகாலக்ஷ்மியின் கோயிலும் அதற் குப் பின்புறத்தில் ராமேஸ்வரர் சந்நிதியும் இருக்கின்றன.

பாண்டுரங்கன் கோயிலில் வடக்குப் பிரகாரத்தில் ருக்மணிக்கென்று ஒரு தனிக்கோயில் இருக்கிறது. இதனை அடுத்தே சத்யபாமைக்கும் ஒரு சந்நிதி. சத்தியபாமையை ராஹி அம்மை என்று அழைக்கின்றனர், மராத்திய மக்கள்.

இந்த ருக்மணி கோயிலுக்கு எதிரில்தான் சுவர்ண பிம்பன் என்ற பெயரோடு ஒரு பெரிய அரசமரம் இருக்கிறது. இதனை ஒட்டிய பிரகாரத்தில் ஆறு அறைகள். ஒவ்வொன்றிலும் ஒரு மூர்த்தி. காசிவிஸ்வநாதர், ராம லக்ஷ்மணர் காலபைரவர் முதலியோர் இருக்கின்றனர். இந்த சந்நிதிக்கு எதிரில் உள்ள சுவரில் 'சௌர்யா அய்ன்சி' என்னும் தேவியின் சிலை ஒன்றிருக்கிறது. சௌர்யா அய்ன்சி என்றால் மராத்திய மொழியில் எண்பத்தி நான்கு என்று பொருளாம். அச்சிலையின் பேரில் மராத்திய மக்கள் தங்கள் முதுகைத் தேய்க்கின்றனர். அப்படித் தேய்ப்பவர்கள் எண்பத்து நான்கு ஆயிரம் ஜன்மங்களில் முக்தி அடைகின்றனராம். ஆனால் ஒன்று நாம்தான் இந்தப் பிறவியிலேயே முக்தி பெற விழைகின்றவர்கள் ஆயிற்றே. எண்பத்து நான்கு ஆயிரம் பிறவி எடுத்து முடிவதற்குள் முக்தி பெறுவதிலேயே வெறுப்புத் தோன்றி விடுமே! ஆதலால் நாம் முதுகைத் தேய்க்காமலேயே திரும்பி விடலாம்.

இப்படி கோயில் முழுவதையும் சுற்றியபின் திரும்பவும் பதினாறு கால்மண்டபம் வந்து, அங்கு வைத்திருக்கும் பாண்டுரங்கனின் பாதுகைகளையும் தரிசித்துவிட்டு வெளியே வரலாம். இந்தப் பண்டரிபுரத்தில் இந்தப் பாண்டுரங்கன் கோயிலைத் தவிர இன்னும் பல கோயில்கள் உண்டு. அவைகளில் மூன்று முக்கியமானவை. அதில் ஒன்று மல்லிகார்ச்சுனர் கோயில். இது பாண்டுரங்கன் கோயிலுக்கு மேற்கே சிறிது தூரத்தில் இருக்கிறது. சிவபெருமான்தான் லிங்க வடிவினராக மல்லிகார்ச்சுனர் என்ற திருநாமத்தோடு எழுந்தருளியிருக்கிறார். பாண்டுரங்கபக்தரான நாமதேவர் இவர் கோயில் வாசலில் வந்து பாண்டுரங்க பஜனை செய்திருக்கிறார். இக்கோயிலை நிர்வகித்த சிவாச்சாரியார்கள் நாமதேவரை விரட்டியிருக்கின்றனர். அவர் கோயிலுக்கு மேல்புறம் சென்று பஜனையைத் தொடர்ந்திருக்கிறார். நாமதேவர் பாடலைக்

கேட்க விரும்பிய மல்லிகார்ச்சுனர் மேற்கேயே திரும்பி யிருக்கிறார். ஆதலால் கோயிலே இன்று மேற்கு நோக்கிய சந்நிதியோடுதான் இருக்கிறது.

பாண்டுரங்கன், விட்டலனாக எழுந்தருளுவதற்குக் காரணமாயிருந்த புண்டரீகருக்கும் ஒரு கோயிலிருக்கிறது. இது பாண்டுரங்கன் சந்நிதிக்கு நேராக சந்திரபாகா நதியின் மத்தியில் கட்டப்பட்டிருக்கிறது. ஆற்றில் வெள்ளம் வரும்போது தோணியில் ஏறிச்சென்றே பூஜை செய்து வருவார்கள் அர்ச்சகர்கள்.

பண்டரிபுரத்திற்கு தெற்கே சந்திரபாகா நதியின் மேல் கரையில் கோபால்பூர் என்னும் சிறிய ஊர் இருக்கிறது. இங்கு கோபால கிருஷ்ணன் கோயில் ஒன்று பெரிய மாடக் கோயிலாக இருக்கிறது. பலபடிகள் ஏறிச் சென்றுதான் வேணு கோபாலனாக நிற்கும் கிருஷ்ணனை வணங்க வேண்டும். அன்று துவாரகையில் இருந்து புறப்பட்டு வந்த ருக்மணி தங்குவதற்குத் தேடி எடுத்த இடம் இதுதான் என்றும் இங்கேயே யசோதை, நந்தகோபன் முதலிய எல்லோருமே வந்து சேர்ந்து விட்டார்கள் என்றும் கதை சொல்கிறார்கள். பாண்டுரங்கனிடத்துப் பக்தி கொண்டிருந்தவர்களில் சக்குபாய் என்பவள் ஒருத்தி. அவளை மாமன் மாமியார் மிகவும் துன்புறுத்தியிருக் கின்றனர். அவள் பண்டரிபுரம் சென்று வரும்வரை பாண்டுரங்கனே சக்குபாயின் வடிவம் தாங்கி, மாமன் மாமியார் இடும் கட்டளைகளையெல்லாம் செய்திருக் கிறார். சக்குபாய் ஆட்டிய ஆட்டுரல், அரைத்த அம்மி என்றெல்லாம் இக்கோயில் பிரகாரத்தில் பலவற்றைக் காட்டுவர். பக்தையின் துயரம் துடைக்க விரைந்த பாண்டுரங்கனின் பெருமையை என்னென்பது?

இந்த பண்டரிபுரத்திலே நல்ல குங்குமம் கிடைக்கின் றது. நைவேத்தியத்திற்கு மிட்டாய் வாங்கும்போதேஅர்ச்ச கர்களிடம் நல்ல குங்குமம் வாங்கிக் கொள்ளலாம். ஒரே

யொரு அசௌகரியம் இங்குள்ள பண்டாக்கள் எல்லாம் வரும் யாத்திரிகர்களிடம் பணம் பறிப்பதையே குறியாகக் கொண்டவர்கள். ஆதலால் மிகுந்த எச்சரிக்கையாய் அவர்களுடன் பழக வேண்டும். இவர்களது உதவியில்லாமலேயே பாண்டுரங்கனைத் தரிசிக்க கோயில் நிர்வாகிகள் ஏற்பாடு செய்வார்கள். அதற்கு அவர்கள் வாங்கும் கட்டணம் ரூ. 1.25/-இதனைக் கொடுத்துவிட்டால் தொல்லையில்லாது அமைதியாகவே பாண்டுரங்கனை தரிசிக்கலாம்.

# 18. பூனா நகரத்து கார்த்திகேயன்



பாதாளேஸ்வரர் கோயில்

இந்திய நாட்டின் சரித்திரத்திலே சத்ரபதி சிவாஜிக்கு ஒரு நிரந்தரமான இடம் உண்டு. கி. பி. 17-ம் நூற்றாண்டில் மொகலாய மன்னனான ஔரங்கசீப் இஸ்லாமிய மதப்பற்று மிக்கவனாக இருந்திருக்கிறான். அது காரணமாக இந்துக்கள் பலரையும் துன்புறுத்தியிருக்கிறான். அச்சமயத்தில் மராத்திய தலைவனாக இருந்த சிவாஜி ஔரங்கசீப்பை எதிர்த்து பலமுறை வெற்றி கண்டிருக்கிறான். முகலாய மன்னன் அவனைச் சிறை வைத்த போது அந்தச் சிறையிலிருந்து தப்பி ராய்க்கர் என்னும் இடத்தைத் தலைநகராக வைத்து ஒரு மகாராஷ்டிர

ராஜ்யத்தையே நிறுவியிருக்கிறார். அவன், அன்னை பவானியை ஆராதித்து, பூனா என்னும் இடத்தையே தன்னுடைய கேந்திர ஸ்தானமாக அமைத்து வாழ்ந்திருக்கிறான். கருநாடக ராஜ்ஜியத்தையும் வென்று தன் ராஜ்யத்தை விஸ்தரித்திருக்கிறான். இந்த சத்ரபதி சிவாஜியால் புகழ் பெற்ற நாட்டையும் அவன் வணங்கிய அன்னை பவானியையும் காண வேண்டும் என்றால் நாம் பூனா என்னும் நகரத்திற்கே செல்ல வேண்டும். இன்றைய மகாராஷ்டிர ராஜ்யத்திற்கு தலைநகர் பம்பாய்தான் என்றாலும், மராத்திய மக்கள் நிரம்பிய நகராகவும், பாலகங்காதர திலகர் போன்ற பெரிய தேசத் தலைவர்கள் வாழ்ந்த நகரமாகவும் இருப்பது பூனா பட்டணமே. அந்த பூனா என்னும் புண்ணிய நகரத்திற்கே செல்கிறோம் நாம் இன்று.

பூனா செல்ல மதராஸிலிருந்து பம்பாய் செல்லும் ரயிலில் ஏறி பூனா ஸ்டேஷனிலேயே இறங்கலாம். பம்பாய்க்குத் தெற்கே 120-மைல் தொலைவில் இந்த நகரம் இருக்கிறது. பூனா நகரத்தின் ஆதிப்பெயர் புண்ணிய நகரம் என்பதேயாகும். அன்னை பவானி, சத்ரபதி சிவாஜி, லோகமான்ய திலகர் போன்றவர்களை தன்னகத்தே கொண்ட நகரம், நாளடைவில் புண்யா என்றே அழைக்கப்பட்டிருக்கின்றது. அதிலும் வாரத்தில் உள்ள கிழமைகளின் பெயரால் சனிவார் பேட், ரவிவார் பேட், சோமவார்பேட், மங்களவார்பேட், புதவார்பேட், சுக்கிரவார்பேட் என்றெல்லாம் பல பகுதிகள் இருப்பது உடன் இன்னும் சதாசிவபேட், கணேசபேட், ராஸ்தா பேட், பவானிபேட் என்னும் பெயரோடும் பல பகுதிகள் இருக்கின்றன. நாம் இங்குள்ள பேட்டைகளையும் அங்குள்ள கடைகளையும் பார்க்க வந்தவர்கள் அல்லவே! நாம் க்ஷேத்திராடனம் அல்லவா துவங்கியிருக்கிறோம். அதனால் விறுவிறு என்று சுற்றி அங்குள்ள கோயில்களை எல்லாம் தரிசித்து விடலாம். நாம் முதலி

லேயே பவானிபேட் சென்று அன்னை பவானியை வணங்கி விடுவோம். இந்தப் பகுதிக்கு ஆதியில் போர்பன் என்ற பெயரே இருந்திருக்கிறது. பவானியின் கோயில் கட்டப்பட்டப் பின்னரே பவானிபேட் என்ற பெயர் நிலைத்திருக்கிறது. அன்னை பவானியின் கோயில் ஒரு குறுகிய சந்தில் சிறிய கோயிலாகவே இருக்கிறது. அங்கு கோபுரமோ, கோபுர வாயிலோ ஒன்றுமில்லை. கோயில் எல்லாம் ஓட்டுக்கூரை வேய்ந்ததே. ஒரு சிறு கருவறை, அதற்கு முன்னால் பக்தர்கள் நின்று தொழ மரத்தூண்கள் தாங்கும் கூரையோடுகூடிய ஒரு மண்டபம். அன்னை பவானி நல்ல கருநிறம் உடையவளாக இருக்கிறாள். அவள் கருவறையைச் சுற்றிவர ஒருவழி வகுத்திருக்கிறார்கள். அந்த வழியில் ஒரு கல்நடப்பட்டிருக்கிறது. பவானியிடம் பிரார்த்தனை செய்து கொள்பவர் அக்கல்லைத் தழுவி தங்கள் தங்கள் பிரார்த்தனையைச் செய்து கொண்டிருக்கிறார்கள். இக்கோயிலில் வந்து வணங்கி அன்னை பவானியின் அருள்பெற்றுத்தான் சத்ரபதி சிவாஜி அரிய பெரிய காரியங்களை எல்லாம் செய்திருக்கிறார். அவனுடைய புகழுக்கும் கீர்த்திக்கும் ஏற்ற வண்ணம் இக்கோயிலில் இன்றளவும் ஒரு பெரிய கோயிலாக உருவாகவில்லைதான்.

பவானிபேட் அன்னை பவானியைத் தரிசித்தபின் கஸ்பாபேட் சென்று அங்கு சிவாஜியின் தாயான ஜீஜாபாய் அம்மையாரால் கட்டப்பட்ட மகா கணபதி கோயிலிலும் நம்வணக்கத்தைச் செலுத்தலாம். மராத்தியர்களுக்கு மகா கணபதியிடம் அளவுகடந்த பக்தி. செவ்விய வண்ணத்திலே சிறியதும் பெரியதுமான கணபதி வடிவங்கள் பலவற்றை உருவாக்கி வழிபட்டு வருகின்றனர். ஒவ்வொரு கோயில் வாயில் கவுதத்திலுமே சிறிய மகாகணபதி வடிவம் இருக்கும். கஸ்பாபேட்டில் உள்ள கணபதி சுயம்பமூர்த்தி என்கின்றனர். ஆதியில் மாடுமேய்க்கும் சிறுவர்கள் கற்பாறை ஒன்று கணபதியின் வடிவில் இருப்பதைக்கண்டு

அதற்கு பால் சொரிந்து வழிபாடு செய்திருக்கின்றனர். பின்னர்தான் ஜீஜபாய் கோயில் கட்டி பிரபலப் படுத்தி இருக்கிறார். இன்று மகாராஷ்டிரர்களுக்கு அன்னை பவானியைவிட ஆதி உத்கிருஷ்டமான தெய்வம் இக் கணபதியே, கல்யாணம் முதலிய எல்லாச் சுபகாரியங்களில் எல்லாம் முதல் தாம்பூலம் இந்த கணபதிக்குத்தான். இங்கு வந்து பூஜித்து மணவோலையை வாசித்தப்பின்னரே மற்ற காரியங்களைச் செய்வதை வழக்கமாக கொண்டிருக் கின்றனர். விநாயக சதுர்த்தி விழா இக்கோயிலில் சிறப் பாகக் கொண்டாடப்படுகிறது. இந்த கஸ்பாபேட்டையி லேயே முதலாவது உலகயுத்தத்தில் மகாராஷ்டிர வீரர்கள் செய்த அரிய வீரச்செயல்களின் ஞாபகார்த்தமாக ஒரு பெரிய கட்டிடம் ஒன்றைக் கட்டி அங்கு சிவாஜியின் உருவச் சிலையையும் நிறுத்தியிருக்கின்றனர்.

பூனா நகரத்தில் உள்ள கோயில்களில் எல்லாம் பழமை யான கோயில் பாதாளேஸ்வரர் கோயில்தான். பெயரிலி ருந்தே அது பூமியின் மட்டத்திற்கு அடியில் உள்ள கோயில் என்று அறியலாம், அந்தக் கோயில், நமது மாமல்ல புரத் தைப் போன்று மலையை வெட்டிச் செதுக்கப்பட்ட தன்று. கி. பி. எட்டாம் நூற்றாண்டில் வெட்டப்பட்டதென அறி கிறோம். கோயில் பூமிமட்டத்திற்கு அடியிலே இருப்பதால் படிகள் இறங்கி உள்ளே செல்ல வேண்டும். நல்ல சதுரமான தூண்கள் அமைந்த முன்மண்டபத்துடன் கோயில் இருக் கும். அங்கு இறைவன் லிங்கத்திருவுருவில் இருப்பார். முன் மண்டபத்தையும் முந்திக்கொண்டு நந்தி ஒன்று படுத்துக் கிடக்கும். இந்த நகரத்தில் உள்ள குடை வரை இது ஒன்றுதான் என்று அறிகிறபோது, அதன் பெருமையும் விளங்கும். இந்தப் பாதாளேஸ்வரர் கோயிலை அடுத்து ஒரு சிறு கோயில். அதை ஜங்கிலி மகராஜ் கோயில் என்கின்றனர். யாரோ ஒரு மகான் காடுமேடெல்லாம் சுற்றியலைந்திருக்கிறார். கடைசியில் இங்கு வந்து தங்கி அமரர் ஆகியிருக்கிறார். அவரை சமாதி

வைத்த இடத்திலே கோயிலைக் கட்டியிருக்கின்றனர். இந்தக் கோயில் வாயிலில் ஒரு மணிவிளக்கு தொங்கிக் கொண்டிருக்கிறது. அதை நந்தா விளக்காக நிர்வாகிகள் காத்து வருகின்றனர். இந்த ஐங்கிலி மகராஜ் சந்நிதியில் இந்துக்களும் முஸ்லீம்களும் சேர்ந்தே வழிபாடு செய்கின்றனர்.

பூனா நகரத்தில் மிக சிறப்பாகக் கூறப் படுவது சனிவார்வாடா என்னும் பழைய அரண்மனை ஒன்று. சத்ரபதி சிவாஜியின் பரம்பரைக்குப் பின்னால் மகாராஷ்டிரா நாட்டை பீஷ்வாக்கள் உன்னத நிலைக்குக் கொண்டு வந்திருக்கின்றனர், அப்போது இந்த நகரமே அவர்களது தலைநகராக இருந்திருக்கிறது. பீஷ்வாக்களில் பிரசித்தி பெற்றவரான முதலாவது பாஜிராவ் இந்த அரண்மனையைக் கட்டியிருக்கிறார். இந்த அரண்மனையின் பல பகுதிகள் இடிந்து விட்டன. எஞ்சிய இடத்தில் ஒரு பொருட்காட்சி சாலை வைத்து அதில் மகாராஷ்டிர மன்னர்களது ஆயுதங்கள் பீரங்கிகள் முதலியவற்றை சேகரித்து வைத்திருக்கின்றனர்.

இந்நகரின் மத்தியிலே குஜராத்தி துணி வியாபாரிகள் கட்டிய லக்ஷ்மி நாராயணன் கோயில் ஒன்றும் இருக்கிறது. இதற்கு செல்ல ஒரு குறுகிய சந்து வழியாகப் போக வேண்டும். போனால் அங்கு ஒரு பெரிய கோயில் இருக்கும். முழுவதும் கல்லாலேயே கட்டியிருக்கிறார்கள். வண்ணங்களை அள்ளி இறைத்திருக்கிறார்கள். இங்குள்ள வைஷ்ணவர்கள் ராமானுஜ சித்தாந்த சபை என்று ஒன்ன றஅழைத்து அதில் திவ்யப் பிரபந்தப் பாடல்களை எல்லாம் பாடுகிறார்கள். ஏதோ நாமதேவர், துக்காராம் முதலியவர்களது பாடல்கள்தாம் , அங்கு பிரசித்தம் என்பதில்லை. ஆயிரம் மைலுக்கு அப்பாலும் நமது ஆழ்வார்களது பாசுரங்கள் பாடப்படுகின்றன, என்று அறிகிறோம். நமது உள்ளத்திற்கு எவ்வளவோ மகிழ்ச்சி. இன்னும் இந்த நகரைச் சுற்றி சுற்றி வந்தால் கணபதி

கோயில்களையும் அனுமார் கோயில்களையும் காணலாம். மகாராஷ்டிர மக்களிடையே கணபதிக்கு அடுத்தபடி பிரா தான்யம் பெற்றிருப்பவர் ஆஞ்சனேயர்தாம்.

இப்படியே உங்களை சுற்றி சுற்றியடிக்க விரும்ப வில்லை. இவ்வூருக்குத் தென்மேற்குப்பக்கத்திலேயே உள்ள ஒருசிறுமலைக்கு அழைத்துச் செல்ல விரும்புகிறேன். அந்த மலை கடல்மட்டத்திற்கு மேல் 260 அடி உயரமே உள்ள சின்னமலைதான். அந்த மலை ஏற நல்ல வசதி யானபடிக்கட்டுக்கள் கட்டியிருக்கிறார்கள். மொத்தம் ஏறவேண்டியதெல்லாம் 108-படிகளே. இந்த மலையை பார்வதிமலை என்கின்றனர். பர்வதத்தின் மேல் உறைபவர்தானே பார்வதி. ஆதியில் இம்மலையில் பார்வதி என்னும் பேர் கொண்ட தேவியின் கோயில் இருந்திருக்கிறது. அதைக் அக்காட்டிலுள்ள வேடர்கள் ஆராதித்து வந்திருக்கிறார்கள். பின்னர் அக் கோயிலுக்கு ஒரு பூசாரி ஏற்பட்டிருக்கிறான். அவன் தினமும் மலை ஏறி தேவியின் பூஜையை முடித்துவிட்டு திரும்பியிருக்கிறான். அச்சமயத்தில் அம்மலையின் பக்கத் தில் வாழ்ந்து வந்த நாநா சாகிப் பீஷ்வாவின் தாயார் காசிபாய் அம்மையார் ஒரு கடும் வியாதியால் கஷ்டப் பட்டுக்கொண்டு இருந்திருக்கின்றாள். நாநா சாகிப் பீஷ்வாவின் மனைவி தன் மாமியாருக்காக பார்வதி தேவியிடம் பிரார்த்தனை செய்திருக்கிறார். காசிபாய் அம்மையாரும் நோய் நீங்கி குணம் பெற்றிருக்கிறார். இதன் பின்னர் நாநா சாகிப் பீஷ்வாவே, 10 லட்சம் ரூபாய் செலவில் மலையின் மீது கோயில்கள் எல்லாம் கட்டியிருக் கிறார். நாமும் மலை ஏறி அக்கோயில்களுக்குச் சென்று வருவோமே. மலைமீது ஏறியவுடன் ஒரு சிறு மண்டபத்தில் பாண்டுரங்க விட்டலனும் ருக்மிணி தேவியும் நமக்குத் தரிசனம் தருவர். அவர்களை வணங்கிவிட்டு வடபக்கம் உள்ள படிகளை ஏறிக்கடந்து சென்றால் ஒரு பெரிய கோயில் முற்றத்திற்கு வந்து சேருவோம். அங்கே இருப்பவர்தான் தேவதேவன். லிங்க உருவினர் அவர்.

தேவர் கோ அறியாத
தேவ தேவன்
செழும் பொழில்கள் பயந்துகாத்து
அழிக்கும்மற்றை
மூவர் கோனாய் நின்ற
முதல்வன் மூர்த்தி.

என்று மணிவாசகர் பாடினாரே, அந்த தேவதேவனை எங்கெல்லாமோ தேடினோமே. அவன் இங்கேயல்லவா வந்து ஒளிந்து கொண்டிருக்கிறான் என்று காண்போம். இக்கோயிலை சுற்றிவர நல்ல வெளிப்பிரகாரம் அமைத்திருக்கின்றனர். அங்கு சுற்றி வந்து தேவதேவனுக்கு வணக்கம் செலுத்திவிட்டு வெளியில் வந்து தென்பக்கமாக நடந்து சென்றால் சிகரத்தோடு கூடிய பெரிய கோயில் ஒன்றையும் காண்போம். அது மகாவிஷ்ணுவின் கோயிலாக இருக்கும். தேவதேவனுக்கு வணக்கம் செலுத்தியது போல் மகாவிஷ்ணுவுக்கும் வணக்கம் செலுத்திவிட்டுத் திரும்பும் போது இரண்டு கோயில்களுக்கும் இடையே ஒரு சிறு கோயில் தெரியும். இந்தக் கோயிலை விட்டு விட்டோமே என்று ஆதங்கத்துடன் அக்கோயிலுள் நுழைய விரும்பினால் கோயில் வாயிலில் உள்ள பலகை ஒன்று நம்மை எச்சரிக்கும். மராத்தியில், ''இக்கோயிலுள் பெண்களும் பாதரட்சைகளும் வருதல் கூடாது'' என்று எழுதியிருக்கும் இது என்ன? பாதரட்சைகள் வரக்கூடாது என்றால் அர்த்தம் இருக்கிறது. பெண்கள் ஏன் வருதல் கூடாது என்று விசாரித்தால் அங்குள்ள அர்ச்சகர், அது கார்த்திகேயன் கோயில் என்றும் அங்குள்ள கார்த்திகேயன் பிரம்மச்சாரி என்றும் அதனால் அவன் பெண்கள் முகத்திலேயே விழிக்கிறதில்லை என்றும் கூறுவர். சரி என்று உடன் வந்திருக்கும் சகோதரிகளை வெளியே நிறுத்தி விட்டு உள்ளே நுழைந்தால் அங்கு பளிங்குக் கல்லில் உருவாகியிருப்பவன் நமது அறுமாமுகனே என்று காண்போம், சிறிய வடிவில் மயில் மேல் ஆரோகணித்த

வனாகவே அவன் இருப்பான். இது என்ன, நம் ஊரில் ஒன்றுக்கு இரண்டாக தேவசேனையையும், வள்ளியையும் மணந்து கொண்டிருக்கும் இந்த கார்த்திகேயன் இங்கே மட்டும் பிரம்மச்சாரி என்று வேடம் போடுவானேன் என்று கேட்கத் தோன்றும். நாம்தாம் பூனா நகரத்தில் பல மராத்தியப் பெண்களைப் பார்த்திருக்கிறோமே. அவர்கள் போட்டிருக்கும் மூக்காட்டையும் காதுகளிலும் மூக்கிலும் அணிந்திருக்கும் வளையங்களையும் பார்த்தபின், இந்த அழகிகளைக் காண்பதைத் தவிர்க்கவே இவன் பிரம்மச்சாரி வேஷம் கொண்டிருக்கின்றான் போலும் என்றே தோன்றும்,

புண்ணியமா நகர் தன்னில்
ஓங்கும் குன்றில் பொலிகின்ற
தேவதேவசன் கோயில்
நண்ணிஒளிர் ஆறுமுகத்
தேவே! மஞ்ஞைநற் பரிமீது
அமர்ந்தருளும் கார்த்திகேயா
பெண்ணினத்தில் தமிழ் நாட்டு
வள்ளிதனை பெட்புற்றுப்
பார்த்த திருவிழியால் ஈங்கே
அண்ணணும் மடந்தையர் தம்மைப்
பாரேன் என்னும் அதனாலோ
அவர் பாராத் தெய்வம் ஆனாய்.

என்று அவனிடமே கேட்கவும் தோன்றும்.

இந்த கார்த்திகேயனைத் தரிசித்தப் பின் மலையை விட்டு கீழிறங்கி விடலாம். ஆம், மகாத்மாகாந்தி பல தடவை ஏர்வாடா சிறையில் இருந்தார் என்பார்களே அந்த ஏர்வாடா சிறையும் இப்பக்கத்தில்தானே, அந்த இடத்திற்கு எங்களை அழைத்துச் செல்லவில்லையே என்று நீங்கள் கேட்பது என் காதில் விழுகிறது. அந்த ஏர்வாடாச் சிறை பூனா நகரத்திற்கு கிழக்கே நான்கு மைல் தூரத்தில இருக்கிறது. ஊர் சுற்றிப் பார்க்க கார் ஏற்பாடு

செய்திருந்தால் அந்தக் காரயே திருப்பி ஏர்வாடாச் சிறைக்குப் போகலாம். போகிற வழியில் பூனாவில் ஓடுகின்ற மூலா முக்தா நதிகளையும் கடக்கலாம். ஏர்வாடா சிறையை எல்லாம்தான் இன்று மூடி வைத்திருப் பார்களே என்றாலும் அந்த சிறையில் சுற்றுச் சுவருக்குள் ஒரு சிறிய இடத்தில் கஸ்தூரிபா காந்தியின் சமாதியும் மகாதேவதேசாய் சமாதியும் இருப்பதைப் பார்க்கலாம். அந்த சமாதிகளை அணுகி இந்த அமர ஆத்மாக்களுக்கு நம் அஞ்சலியையும் செலுத்தலாம்.

இப்போது நடைபெறும் யுகம் எவர்சில்வர் யுகம் என்பதை நாம் அறிவோம். ஆனால் பல வருஷங்களுக்கு முன் பூனா பித்தளைப் பாத்திரங்கள் பிரசித்தி பெற்றிருக் கின்றன, அப்போதெல்லாம். மெல்லிய தகட்டில் செய்யப் பட்ட 'பூனாத் தம்ளர் பிரசித்தமானது. இன்று அவை போன இடம் தெரியவில்லை என்றாலும் இன்று பூனாவில் உள்ள தமிழ் மக்கள் அந்த பூனாத் தம்ளரைவிட பிரசித்திப் பெற்றிருக்கிறார்கள். அங்குள்ள மிலிட்டரி அக்கவுண்டண்ட் ஆபீசிலும் மற்றைய எஞ்சினியரிங் பகுதியிலும், கிட்டத்தட்ட மூவாயிரம் பேர் வேலை செய்கின்றனர். எல்லோருமே குடும்பத்தோடு அங்கே குடியேறியவர்கள் தாம். இந்தத் தமிழர்கள் தங்கள் குழந்தைகள் படிப்பதற் கென ஒரு பெரிய பள்ளியை நடத்துகின்றனர். 'சரஸ்வதி வித்யாலயம்' என்ற அந்தப் பள்ளிக்கென நாலு லட்சம் ரூபாய் செலவில் ஒரு பெரிய கட்டிடமும் கட்டியிருக் கின்றனர். ஹைஸ்கூலில் ஆண்களும் பெண்களுமாக ஆயிரம் பேர்களும் எலிமெண்டரி ஸ்கூலில் ஐநூறு பிள்ளை களும் வசதியாகப் படிக்க வகை செய்திருக்கின்றனர். இன்னும் இந்தத் தமிழர்கள் எல்லாம் கூடி 'கலைக்கழகம்' ஒன்றையும் அமைத்து இலக்கியம், இசை, நடனம், நாட்டியம், நாடகம் முதலிய கலைகளையும் வளர்த்து வருகின்றனர். இந்தப் பூனாத் தமிழர்களைப் பார்த்தால், அவர்களது தமிழ் ஆர்வத்தைப் பார்த்தால் ஒரு சபாஷ் போடத் தெரியும்.

# 19. பம்பாய் மகாலக்ஷ்மி



பம்பாய் - மகாலட்சுமி கோயில்

மூன்று காதல் என்று ஒரு பாட்டைப் பாடுகிறான் கவிஞன் பாரதி. சரஸ்வதி, லக்ஷ்மி, பார்வதி என்று மூன்று சக்திகளும் தனக்கு அருள்புரிந்த முறையைப் பற்றிய பாட்டு அது.

ஆற்றங்கரையினிலே-அழ
காணதோர் மண்டபமீதினிலே-தென்றல்
காற்றை நுகர்ந்திருந்தேன் அங்கு
கன்னிக்கவிதை கொணர்ந்து தந்தாள்.

என்று கலைமகள் அருளை வியந்தவன்,

இந்த நிலையினிலே-அங்கோர்
இன்பப் பொழிலிடைலே வேறொரு
சுந்தரிவந்து நின்றாள்-அவள்
சோதிமுகத்தின் அழகினைக் கண்டென்றன்
சிந்தை திறைகொடுத்தேன்-அவள்
செந்திரு எனப் பெயர் சொல்லினாள்

என்று அலைமகள் தரிசனமும் கண்டிருக்கிறான். மேலும்,

பின்னோர் இராவினிலே கரும்
பெண்மை அழகொன்று வந்தது கண்முன்
கன்னி வடிவமென்றே-களி
கொண்டு சற்றே அருகிற்சென்று பார்க்கையில்
அன்னை வடிவமடா-இவள்
ஆதிபராசக்தி தேவியடா

என்று மலை மகளையும் ஆராதித்திருக்கிறார்.

இப்படி யெல்லாம் பாடிய கவிஞனுக்கு சரஸ்வதியின் அருள் பரிபூரணமாக இருந்திருக்கிறது. அன்னை பராசக்தியோ அவளது கடைக்கண் அருளை அவருக்கு அளித்திருக்கிறாள். ஆனால் இந்த மகாலக்ஷ்மியோ அவரைக் கண்திறந்து நோக்கவே இல்லை. கவிஞன் பாரதி மாத்திரம் என்ன, தமிழ் மக்களையே அவள் கடைக்கண்ணால் நோக்கியிருகிறாளா என்பது சந்தேகம்தான். தன் அருள் முழுவதையும் தான் அவள் அந்த பம்பாய் ராஜ்யத்திற்கு அருளி விட்டாளே அதனால்தானே அங்கு செல்வத்தில் சிறந்த சீமான்கள் பலரும், தொழிலதிபர்கள் பலரும் குவிந்து இருக்கிறார்கள். எப்படி காளி கல்கத்தாவில் பிரபலம் பெற்று விளங்குகிறாளோ அப்படியே மகாலக்ஷ்மி அந்த மராத்தியரது பம்பாயில் பிரபலம் பெற்றிருக்கிறாள். பம்பாய் ராஜ்யத்தில் கோலாப்பூரில் உள்ள மகாலக்ஷ்மி கோயில் மிக்க பிரசித்தமானது. காஞ்சியில் அன்னை பார்வதி, காமாட்சி என்ற பெயரில் தனிக்கோயிலில் இருந்து அருள் புரிகிறாள். தஞ்சையில் உள்ள கூத்தனூரில்

சரஸ்வதிக்கும் ஒரு தனிக்கோயில் உண்டு. இந்த சரஸ்வதியே கவிச்சக்கரவர்த்தி ஒட்டக்கூத்தனுக்கு அருள் புரிந்தவள் என்ற வரலாறும் உண்டு. ஆனால் இந்த மகாலக்ஷ்மிக்கு என்று தனிக் கோயில் தமிழ் நாட்டில் இல்லைதான். எங்கெல்லாம் மகாவிஷ்ணு கோயில் கொண்டிருக்கின்றாரோ அங்கெல்லாம் அவரது நிழலில் அவரது துணைவியாக இந்த மகாலக்ஷ்மியும் பல பெயர்களில் உருவாகி இருக்கின்றாள். மகாவிஷ்ணுதான் ஏகபத்தினி விரதன் அல்லவே. ஆகவே இந்த மகாலக்ஷ்மியும் பூதேவி, ஸ்ரீதேவி, ஆண்டாள் முதலிய தன் சக்களத்தி மார்களுடனேதான் குடியிருக்க வேண்டியவளாக இருக்கிறாள். ஏதோ பட்டமகிஷி என்ற காரணத்தால் ஒரு தனி இடத்தை அவளுக்கு ஒதுக்கியிருப்பார்கள். அவ்வளவு தான். ஆனால் இந்த மராத்தியரிடையே அவளுக்குத் தனித்தொரு செல்வாக்கு. கோலாப்பூரில் தனிக்கோயில் கொண்டிருந்தாலும் நிறைந்த புகழுடனும், மிக்க அருளுடனும் அவள் வாழ்வது பம்பாயில்தான். அங்கு தானே மகாலக்ஷ்மிக்கு என்று ஒரு பெரிய கோயில், மகாலக்ஷ்மி என்ற பெயரிலேயே ஒரு ரயில்வே ஸ்டேஷன், மகாலக்ஷ்மி என்ற பெயரிலேயே ஒரு ரேஸ்கோர்ஸ், எல்லாம் இருக்கின்றன. குதிரைப் பந்தயம் என்றால் பணம் எவ்வளவு புரளும், எப்படி எப்படி எல்லாம் ஓடும் என்றுதான் தெரியுமே. மகாலக்ஷ்மியின் கடைக்கண் நோக்கும் பலருக்கு மாறி மாறி வரும், போகும். நாமும் இந்த மகாலக்ஷ்மியின் அருள்பெற வேண்டாமா. பம்பாய் செல்வதற்கு நமக்கு எத்தனையோ காரணங்கள் இருக்கலாம் என்றாலும் நமது தலயாத்திரையில் இந்த மகாலக்ஷ்யை வணங்குவதற்கென்றே பம்பாய்க்கு ஒரு நடை போகலாம். அங்குதான் செல்கிறோம் நாம் இன்று.

பம்பாய் செல்வதற்கு நான் வழிதுறைகள் எல்லாம் செல்ல வேண்டியதில்லை. ரயிலில் செல்லலாம், காரில் செல்லலாம், இல்லை ஆகாய விமானம் மூலமாகவும்

செல்லலாம். சென்னையிலிருந்து ரயிலில் செல்வது வசதியாக இருக்கும். சென்னையிலிருந்து புறப்படும் 'எக்ஸ்பிரஸ்' என்ற ரயில்கள் எல்லாம் சென்று சேருமிடம் விக்டோரியா டெர்மினஸ் என்ற பெரியதொரு ஸ்டேஷன். ஆனால் நாம் நமது தமிழ் அன்பர்கள் வசிக்கும் பகுதியான மாதுங்காவிற்குத்தானே செல்ல விரும்புவோம். ஆதலால் தாதர் என்ற ஸ்டேஷனிலேயே இறங்கி விடலாம். மாதுங்காவில் நண்பர்கள் இருந்தால் அவர்களிடமே தங்கலாம். இல்லாவிட்டால் சியான் பகுதியில் பம்பாய்த் தமிழர்கள நாலு லட்சம் ரூபாய் செலவில் கட்டி வைத்திருக்கும் பம்பாய் தமிழ்ச்சங்க கட்டிடத்திலேயே தங்கலாம். அங்கிருந்து பம்பாய் நகரத்தில் உள்ள பகுதி களுக்கும் காரிலோ அல்லது பஸ்ஸிலோ செல்லலாம். இனி நாம் பம்பாயில் உள்ள முக்கியமான இடங்களையும் கோயில்களையும் சுற்றிப் பார்க்கலாம். பம்பாய் நகரம் ஒரு சிறு தீவில்தான் இருக்கிறது. தீவையும் பிரதான நிலப்பரப்புடன் இணைத்து விட்டிருப்பதால் தீவு என்றே தெரியாது. தீவாக இருப்பதன் காரணமாக இயற்கையாக அமைந்த துறைமுகப்பட்டினமாக இருக் கிறது. மேல் நாட்டிலிருந்து கப்பலில் பிரயாணம் செய்து வருபவர் எல்லாம் வந்து இறங்கும் இடம் இந்தத்துறை முகம்தான். விண்வழி பயணம் ஆரம்பிப்பதற்குமுன், மேல் நாட்டினர் எல்லாம் கப்பல் வழியாகத்தானே வந்திருக் கிறார்கள். அப்படி வந்தவர்களில் நம்மை ஆண்ட ஆங்கிலேயர்கள் முக்கியமானவர்கள். அதிலும் வைஸ்ராய் முதலியவர்கள் வரும்போது, அவர்கள் வந்திறங்கும் துறை அழகுடையதாக இருக்க வேண்டாமா. அதற்காக அந்தத் துறையில் ஒரு பெரிய வாயிலைக் கட்டியிருக்கிறார்கள். அதுவே 'இந்தியாவின் நுழைவாயில்' (Gateway of India) என்றும் அழைத்திருக்கிறார்கள். மிக்க அழகாக பிம்மாண்ட மான அளவில் கட்டப்பட்ட வாயில் அது. நாம் வைஸ்ராய் இல்லை என்றாலும் நாமும் அங்கு செல்லலாம். அந்த நுழைவாயிலிலே நுழைந்து பம்பாயைச் சுற்றிப்

பார்க்கலாம். இந்த வாயிலுக்கு எதிர்ப்புறத்திலும் அந்தப் பிரபலமான 'தாஜ்மகால் ஹோட்டல்' இருக்கிறது. அது எல்லாம் நம்மைப் போன்றவர்கள் தங்குவதற்கு என்று ஏற்பட்டதல்ல. பணம் படைத்த பெருமக்கள் பணத்தை எப்படிச் செலவு செய்வது என்று தெரியாமல் திண்டாடும் அன்பர்கள் அவர்களுக்காகவே ஏற்பட்டது. ஆதலால் நாம் அதனை எட்ட இருந்து பார்த்துவிட்டே மகாலக்ஷ்மி கோயிலுக்குப் புறப்படலாம். 'கேட் வே ஆப் இந்தியா' விலிருந்து வடமேற்கே சுமார் ஐந்து மைல் தூரத்தில் கடற்கரையில் உள்ள ஒரு குன்றில் இந்தக் கோயில் இருக்கிறது. கீழேயுள்ள தெருவிலே காரை நிறுத்திவிட்டு பல படிகள் ஏறித்தான் இந்தக் கோயிலுக்குச் செல்ல வேண்டும். அங்கு தமிழ் நாட்டில் உள்ள கோயில்களைப் போல் கோபுரத்தோடு கூடிய கோயில் இருக்கும் என்று எதிர் பார்த்தால் ஏமாந்து போவீர்கள். ஏதோ ஒரு பெரிய பங்களாவைப் போலக் கட்டியுள்ளதைத்தான் கோயில் என்கிறார்கள். முன்வாயிலில் மூன்று பெரிய ஆர்ச்சுகள். அந்த ஆர்ச்சுகளை தாங்கி நிற்கும் அழகிய தூண்கள் அதில் எல்லாம் சிற்பம் என்ற பேச்சே கிடையாது. இரவு நேரத்தில் போனால் மின் விளக்குகளால் அலங்கரித்திருப் பார்கள். இப்படியே பக்கங்களிலும் பல ஆர்ச்சுகள் அமைத்து ஒரு பெரிய மண்டபம் இருக்கும். அந்த மண்டபத்தின் மத்தியில் ஒரு மேடை அதனையும் ஒரு சிறிய கட்டடமாகவே அமைத்திருக்கிறார்கள். அதுதான் மகாலக்ஷ்மியின் சந்நிதி. இந்த மகாலக்ஷ்மி தன்னலம் மிக்கவள் அல்ல. கோயிலில் நடுநாயகமாக இருக்கும் அவள், வலப் பக்கத்தில் மகாகாளியையும் இடப்பக்கத்தில் மகாசரஸ்வதி யையும் வைத்துக் கொண்டிருக்கிறாள். எல்லோரும் மூன்றடி உயரத்தில் உள்ள சிறிய வடிவினரே. முகத்தைத் தவிர மற்ற பாகங்களையெல்லாம் துணியால் மறைத் திருப்பதால் அவர்களது உடல், கை கால்களை எல்லாம் காண இயலாது. மூவர் தலையிலும் கிரீடங்கள் இருக்கும். இம்மூன்று தேவியர் முன்னால் உள்ள பீடத்தில் ஒரு

அர்ச்சகர் உட்கார்ந்திருப்பார். அவர், பூஜையைவிட பக்தர்கள் போடும் காணிக்கையிலேயே கண்ணாக இருப்பார். இந்த சந்நிதியின் விதானத்தை அழகு செய்திருக்கிறார்கள். கலை அழகு என்றெல்லாம் இல்லாவிட்டாலும் அன்னையார் மூவரையும் ஒருங்கே காணும் வாய்ப்பு பெறுகின்றோம் அல்லவா. அந்த பேற்றினையே நினைந்து தேவியரை வந்தித்து வணங்கலாம்.

மூவர்க்கும் முதற்பொருளாய்
முத்தொழிலுக்கும் வித்தாகி
நாவிற்கும் மனதிற்கும்
நாடறிய பேரறிவாய்
தேவர்க்கும் முனிவர்க்கும்
சித்தர்க்கும் நாகர்க்கும்
யாவர்க்கும் தாயாகிய
எழிற்பரையை வணங்குவாம்

என்று பாடிக்கொண்டே திரும்பலாம். திரும்புமுன் இந்தக் கோயில் எப்போது எப்படி உருவாயிற்று என்று தெரிந்து கொள்ள வேண்டாமா என்ற ஆசை எழும். பம்பாயில் 'வொர்லிகாஸ்வே' என்று ஒரு பாலம் கட்டியிருக்கின்றனர். இந்தப் பாலத்தைக் கட்டிய போதெல்லாம் இடிந்து போயிருக்கிறது. பல தடவை முயன்றும் இந்தப் பாலம் கட்டி முடிக்க முடியவில்லை. இந்த சமயத்தில் 'பிரபு' என்னும் பட்டம் பெற்ற ஒருவரது கனவில் மகாலக்ஷ்மி தோன்றி தானும்தன் துணைவியரும் கடலுள் அமிழ்ந்து கிடப்பதாகவும், அந்தப் பிரபுவே பாலம் கட்டும் காண்டிராக்ட் எடுத்துக்கட்டுவதோடு தங்களையும் வெளிக் கொணர்ந்து கோயில் கட்டினால் பாலம்கட்டுவதற்கு தான் துணைபுரிவதாகவும் சொல்லியிருக்கிறாள். அதன்படியே அந்தப் பிரபு சிலை உருவில் இருந்த தேவியர் மூவரையும் கடலில் இருந்து எடுத்து வெளிக்கொணர்ந்து கோயில் கட்டியிருக்கிறார். பாலத்தையுமே கட்டியிருக்கிறார். ஆதலால் மகாலக்ஷ்மி மிக்க வரசித்தியுடையவள். பிரார்த்தனை

செய்து கொள்பவரது பிரார்த்தனையையெல்லாம் நிறை வேற்றி வைக்கிறாள். இப்படி இக்கோயில் கட்டப்பட்ட தெல்லாம் கி. பி. 1761-ல் தான் என்றும் அறிகிறோம். இந்த மகாலக்ஷ்மியின் சந்நிதிக்கு குஜராத்தின் பனியாக்கள், பிராமணர்கள், சமண சமயத்தினர் முதலிய எல்லோரும் வந்து வணங்கிச் செல்கிறார்கள். தங்களுடைய செல்வ வளம் பெருக வேண்டும் என்று பிரார்த்தனை செய்யாதவர் கள் யார்தான் இருக்கிறார்கள்.

இந்த மகாலக்ஷ்மி கோயிலுக்கு தென்புறம் கொஞ்ச தூரத்தில்தான் பிரசித்தி பெற்ற மலபார்ஹில் என்னும் பிரதேசம் இருக்கிறது. அந்த மலைப்பகுதியின் சரிவிலே அமைந்திருப்பதுதான் தொங்கு தோட்டம், அத்தோட்டம் மிகவும் ரமணீயமாக இருக்கும். அங்கிருந்து பம்பாய் நகரம் கடற்கரை எல்லாவற்றையுமே கண்ணோட்டமிடலாம். தோட்டத்தில் உல்லாசமாகச் சுற்றிவரும்போது, கொஞ்ச அடர்ந்த தூரத்தில் கழுகுகள் வட்டமிட்டுக் கொண்டிருக் கும் புதர்களுக்கு இடையே ஒரு வெள்ளைக் கட்டிடமும் தோன்றும். அது என்ன கட்டிடம் அங்கு ஏன் கழுகுகள் சுற்றுகின்றன என்று விசாரித்தால் ஒரு அதிசயமான செய்தியை அறிவோம். பம்பாயில் பார்சி வகுப்பினர் நிறைய இருக்கின்றனர். அவர்கள் அக்கினியையே தெய்வ மாக வணங்குபவர்கள் அவர்களில் யாராவது இறந்தால் அந்த உடலை தகனம் செய்வதில்லை. பூமியில் புதைப்பதும் இல்லை. பிணமான உடலை எடுத்துச் சென்று நாம் பார்த் தோமே கட்டிடம், அந்த இடத்தில் வைத்துவிட்டு திரும்பி விடுகின்றனர். உயிரற்ற அந்த உடலை, கழுகுகள் கொத்தி தின்கின்றன. உபயோகமற்றது என்று கருதும் இந்த உடலும் பின்னர் கழுகுகளுக்காவது உணவாகட்டுமே என்ற பரோபகார எண்ணமே இப்படிச் செய்யத்தூண்டி யிருக்கிறது. அவர்களை இப்படி உயிரற்ற சடலங்களைக் கொண்டு வந்து போடும் இடம்தான் மௌன ஸ்தம்பம் என்ற பெயரோடு விளங்குகிறது. பார்சிமக்கள், நேற்றிருந்

தார் இன்று வெந்து நீறானார் என்றோ, மண்ணிற் பிறந் தார் மீண்டும் மண்ணுக்கே இறையானார் என்றோ சொல்ல வாய்ப்பு அற்றவர்கள். இந்த மௌனஸ் தம்பத்தை எட்ட இருந்து பார்த்துவிட்டே மலபார்ஹில்லிருந்து கீழே இறங்கலாம். பின்னர் நகருக்கு வரும் வழியில் சௌபாத்தி பகுதியில் ஒரு கோயில், அது சிவன்கோயில், அதனை பாபுல்நாத் கோயில் என்கின்றனர். அன்று ஆலின் கீழிருந்து அறம் சொன்ன பெருமான் இங்கும் ஒரு பெரிய ஆலமரத்தடியில் கோயில் கொண்டிருக்கிறார். இக்கோயில் ஒரு செங்குன்றின் மேல் கட்டப்பட்டு இருப்பதால் பல படிகளை ஏறிக் கடந்தே கோயிலுக்குச் செல்ல வேண்டும். கோயிலை ஒரு நீண்டுயர்ந்த விமானம் அழகு செய்கிறது. ஆதியில் இது ஒரு அடர்ந்த காடாக இருந்திருக்கிறது. அங்கு சுயம்புலிங்கமாக ஒரு மூர்த்தி இருந்திருக்கிறார். அக் காட்டிற்குச் சென்ற பசுக்கள் தானாக பாலைச் சொறிந் திருக்கிறன, அந்த லிங்க மூர்த்தியின் மேல். அதன் பின் தான் அவரை வெளிக்கொணர்ந்து கோயில் கட்டி வணங்கி யிருக்கின்றனர் மக்கள். இன்று கோயில் முழுவதுமே சலவைக் கல்லால் கட்டப்பட்டிருக்கிறது. படிகள் ஏறிய தும், விநாயகரும் ஹனுமானும் நமக்கு தரிசனம் தருகின்ற னர். மகாமண்டபத்தைக் கடந்து கருவறை வாயில் வந் தால் அங்கு விநாயகரும் காளியுமே துவார பாலகர்களாக நிற்கின்றனர். கருவறையின் நடுவில் பாபுல்நாத் லிங்க உருவில் இருக்கிறார். அவருக்குப் பின்னால் மூன்று மாடக்குழிகள். நடுமய்ய முள்ள குழியில் பார்வதி இருக்கிறார். வலப்பக்கத்துக் குழியில் சிவபார்வதி வடிவங்கள் இருக்கின்றன. பிள்ளைப் பிராயத்தில் உள்ள பிள்ளையார் தந்தையின் மடியில் தவழ்ந்து விளையாடிக் கொண்டு இருக்கிறார். இடப் பக்கத்தில் காளிகாதேவி இருக்கின்றார். எல்லோரையும் வணங்கிவிட்டு கோயிலை வலம் வந்து படியிறங்கலாம்.

இனி நாம் கிழக்கு நோக்கி மிக்க நெருக்கமான பகுதி யான பம்பாய் பசாருக்கே வரலாம். அந்த நெருக்கடிக்கு

எங்களை ஏன் இழுக்கிறீர்கள் என்று நீங்கள் கேட்கலாம். அங்குதானே மும்பை தேவி கோயில் இருக்கிறது. அந்த மும்பை தேவிதானே ஆதியில் அந்தப் பிராந்தியத்தில் உள்ளவர்களின் வழிபடு தெய்வம். அந்த மும்பை தேவியின் நகரம்தானே பம்பாய் நகரம் என்று திரிந்திருக்கிறது பின்னால். ஆதலால், அந்த மும்பா தேவியைத் தரிசிக்காமல் இருக்கலாம். அதனால்தான் இத்தனை நெருக்கடிக்குள்ளும் உங்களை அழைத்துச் செல்ல விரும்புகிறேன். கோயிலைப் பார்த்தால் கிட்டதட்ட மதுரை திருமலை நாயக்கர் மஹாலைப்போல பெரிய பெரிய தூண்கள் தாங்கி நிற்கிறது. அங்கும் மூன்று சந்நிதிகள். சிங்க வாகனத்தில் மும்பை தேவியும், அன்ன வாகனத்தில் ஜகதாம்பாளும் அன்னபூரணியும் தனித்தனி சந்நிதியில் இருக்கிறார்கள். மும்பா தேவியின் வாகனத்தைத் தினந்தோறும் மாற்றி மாற்றி அமைக்கிறார்களாம். சிவந்த முகமும் விரிந்த தலையும் உடையவளாக மும்பை தேவி காட்சித் தருகிறாள். மகாலக்ஷ்மி கோயிலுக்கு வரும் கூட்டத்தைவிட இந்த மும்பாதேவி கோயிலுக்கு வரும் கூட்டம் அதிகம் என்கின்றனர். தினசரி லட்சம் பேர்கள் வணங்கிச் செல்கின்றனர் என்கிறார்கள். ஆதலால் இக்கோயில் இருந்த இடத்தை ரயில்வே நிர்வாகிகள் எடுத்துக் கொண்ட பின்னரே இப்போதுள்ள இடத்திற்கு இந்தக் கோயிலைக் கொண்டு வந்திருக்கின்றனர். இக்கோயில் கட்டி அறுபத்து ஐந்து வருஷங்களே ஆகின்றன என்கின்றனர். பஞ்சவடியில் ராமன் இருந்த போது மாரீசன் மாய மானாக வந்ததும், அம்மானைத் துரத்திச் சென்று ராமன் அம்பெய்து கொன்றதும், நாம் ராமாயணத்தில் படித்திருக்கிறோம். அந்த மாரீச மானை கொல்ல ராமனுக்குச் சக்தியருளியவளே இந்த மும்பை தேவிதான் என்கின்றனர். மாமாயி என்ற பெயரோடு விளங்கியவளே பின்னர் மும்பாயி என்று பெயரோடு விளங்கியிருக்கிறாள். பம்பாய்க்கு வந்து இந்த

மும்பா தேவியை வணங்காமல் நமது க்ஷேத்திராடனம் பூரணத்துவம் பெற்றதாகாதே.

இதெல்லாவற்றையும் விட நமக்கு ஓர் அதிசயம் இந்த பம்பாய் நகரில் காத்து நிற்கும். வேங்கடத்துக்கு அப்பால் நாம் துவங்கியுள்ள இந்தத் தலயாத்திரையில் அந்த வேங்கடவானன் நம்மையெல்லாம் முந்திக்கொண்டு இந்நகருக்கு முன்னமேயே வந்து ஒரு நல்ல இடத்தைப் பிடித்துக் கொண்டிருக்கிறான் என்றால் நீங்கள் வியப்புத் தானே அடைவீர்கள். ஆம் பம்பாயில் பன்ஸ்வாடிப்பகுதி என்னும் இடத்தில் ஒரு பெரிய கோயில் இருக்கிறது. அதனை வேங்கடேச தேவஸ்தானம் என்கின்றனர். கோயில் வாயிலுக்கு வந்ததுமே தமிழ் நாட்டு வாடை அடிக்கிறது. நீண்டுயர்ந்த கோபுரத்துடன் கூடிய வாயில் வழியாக நுழைந்து வெளிப்பிரகாரம் வந்ததும் நாம் பம்பாயில் இருக்கிறோம் என்ற நினைப்பே இருக்காது. உள் கோயிலை சுற்றியிருக்கும் மண்டபம் எல்லாம் மொசைக் தளம் போட்டு சுத்தமாக வைத்திருக்கிறார்கள். பகவத் கீதை முழுவதையும் வெளிச்சுவரில் பொறித்து வைத் திருக்கிறார்கள் கோயில் கருவறையில் மூலவராக வேங்கடேசன் நிற்கிறார். அவருக்கு வலப்புறம் ராஜ கோபாலனும் இடப்புறம் வரதராஜனும் கோயில் கொண் டிருக்கிறார்கள். ராமர் வேறே சீதாலட்சுமண அனுமத் சமேதனாக எழுந்தருளி இருக்கிறார். அர்ச்சகர் எல்லாம் தமிழ் பேசுகிறார்கள். கோயில் பிரகாரத்தில் வடபுறம் ராமானுஜருக்கு தனி சந்நிதி. தென்புறம் மகாலக்ஷ்மி-பத்மாசனி என்ற பெயரில் தனிக்கோயிலில் வீற்றிருக் கிறாள். அவர் பக்கத்திலேயே ஒரு கண்ணாடி அறை. அந்த அறை ஏதோ பத்து அடிச் சவுக்கத்தில் கட்டியதொன்று தான். என்றாலும் உள்ளே நுழைந்து விட்டால் அங்கே அமைத்திருக்கும் கண்ணாடிகள் பிரத்திபலிப்பதிலிருந்து ஏதோ நூற்றுக்கணக்கான அடிகள் கொண்ட விஸ்தார மான மண்டபம் போலத் தெரியும். இந்த கண்ணாடி அறை

புத்தம் புதிதாக மின்விளக்கு வசதிகளுடனும் கண்கவர் வனப்புடனும் இருக்கிறது காஞ்சியிலிருந்து அனந்த ஆச்சாரியார் என்று ஒரு பெரிய பீதாம்பரதாரி இங்கு வந்திருக்கிறார். அவர்சுதசர்ன சக்கர உபாசகராகஇருந்திருக்கிறார், அவரிடம் பாலாஜி பஸந்த் என்ற ஒரு பெரிய சேட் ஈடுபட்டிருக்கிறார். அவர் விரும்பிய வண்ணமே சேட் இந்தக் கோயிலைக் கட்டியிருக்கிறார். கோயில் விமானம் பிரணவாகாரமாக அமைந்திருக்கிறது.ஆறுகால பூசைநடக்கிறது. ஐப்பசியில் பிரம்மோற்சவமும், பங்குனி உத்திரம், வைகுண்டஏகாதசி, இராப்பத்து, பகல்பத்து, ஆடி மாதம் ஜூலா என்னும் ஊஞ்சல் உத்சவம் எல்லாம் ஒழுங்காக நடக்கிறது. மார்வாரி மக்கள் ஆணும் பெண்ணும் பாலாஜி பக்தர்களாக கோயிலுக்கு தினம் வந்து போகின்றனர். மாதுங்கா தமிழர்கள், கோயில் கொஞ்சம் தொலைவில் இருப்பதால் அடிக்கடி வருவதில்லையாம். எனக்கு என்னவோ வேங்கடேசனை இந்த மராத்திய நாட்டில் கண்டபோது எவ்வளவோ 'மகிழ்ச்சி. ஆகவேதான் பம்பாய் செல்லும் தமிழர்கள் எல்லாம் இந்த வேங்கடவாணனுக்கு வணக்கம் செலுத்த மறந்துவிடக்கூடாது என்பதற்கே இவ்வளவு சொல்லியிருக்கிறேன்.

இப்படி ஊரை எல்லாம் சுற்றிவிட்டு தமிழர்கள் வாழும் பகுதியாகிய மாதுங்காவிற்கு வந்தால் அங்கு ஒரு பஜனை சமாஜம். அதை ஒட்டி ஒரு சிவன் கோயில் ஆஸ்திக சமாஜம், அதனை ஒட்டி ராமர் கோயில், விநாயகர் கோயில் எல்லாம் இருக்கிறது. சுப்பிரமண்ய சமாஜத்தார், சண்முகனுக்கு ஒரு கோயில் கட்டிக் கொண்டிருக்கிறார்கள். தமிழர்கள் எங்கு சென்றாலும் தமிழ்க் கடவுளை மறக்கமாட்டார்கள்தானே! இன்னும் பம்பாயில் எத்தனை எத்தனையோ கோயில்கள். இங்கிலிஷ் சர்ச்சின் பக்கம் ஒரு சமணர் கோயிலும், வொர்லி பக்கம் ஒரு புத்தர் கோயிலும் உருவாகியிருக்கிறது. சமய

வேற்றுமை இல்லாத நாம் அந்தக் கோயில்களுக்கும் சென்று வழிபாடு இயற்றலாம். எல்லாவற்றையும்விட பெரிய கலைக் கோயிலாக பம்பாய் தமிழ்ச்சங்கம் வேறே உருவாகியிருக்கிறதே. பம்பாயில் பகுதிக்கு ஒரு சங்கம் என்று பல சங்கங்கள் இன்று தோன்றியிருக்கிறது. எல்லோரும் ஒன்றாகச் சேர்ந்து ஒரே ஸ்தாபனமாக உழைத்தால் தமிழ் அன்பர்கள் நலம் பெறுவர் என்பது என் எண்ணம்.

# 20. எலிபெண்டா மகேசமூர்த்தி



ஒரு கவிஞன் அவன் வறியவனும்கூட. அவன் பல செல்வர்களை அணுகி இருக்கிறான். அவர்களிடம் பாடல்கள் பாடிப் பரிசு பெற்று வாழ்ந்து வந்திருக்கிறான். எல்லாச் செல்வர்களுமா இவன் பாடும் பாடல்களை கேட்டு ரசித்து சன்மானம் தந்திருப்பார்கள். ஒரு சிலர், இவன் பாடிய பாடல்களின் அருமை அறியாமல், தமிழின் இனிமையையே உணராமல், கொஞ்சம் உதாசீனமாகவே இருந்திருக்கிறார்கள். அதனால் மனம் வருந்தியிருக்கிறான். தன்வழிபடு கடவுளான சிவபெருமானிடமே முறையிட்டிருக்கிறான். பெருமானே! என்னை யானைக் காலால் இடரச் செய்தாலும் சரி. இல்லை நரகத்திலேயே

வீழ்த்திவிட்டாலும் சரி. ஒன்றே ஒன்றை மட்டும் செய்து விடாதே. அதாவது தமிழின் அருமை அறியாதவர்கள் முன்னிலையில் என்னை பாடல் சொல்லும் நிலையில் வைத்து விடாதே என்று விண்ணப்பித்துக் கொண்டிருக் கிறான் கவிஞன். அவன் பாடிய பாடல் இதுதான்.

துங்க யானைக்கால்
படுத்தினும் படுத்துக
சுடர் விழிப்பகுவாய்ச்
சிங்க வாயிடைச்
செலுத்தினும் செலுத்துக
தென்புலத்தவர் கோமான்
வெங்கண் மாநர
கத்திடை வீழ்த்தினும்
வீழ்த்துக, விடை ஏறும்
எங்கள் நாயக!
தமிழ் அறியார்கள் முன்
இயம்புதல் தவிர்ப்பாயே!

என்று கதறி இருக்கிறான் கவிஞன். அவ்வளவு மனம் கசந்திருக்கிறான். நான் எலிபெண்டா என்னும் தீவிற்குச் சென்று அங்குள்ள குடைவரைச் சிற்பங்கள் எல்லாம் சிதைந்து கிடப்பதைக் கண்டபோது இந்தப் பாடல்தான் என் ஞாபகத்திற்கு வந்தது. ஆம். சிற்பக்கலையின் அருமையை அறியாத கசடர்கள் அல்லவா இப்படி இச்சிற்பச் செல்வங்களைச் சிதைத்திருக்க வேண்டும். இச்சிற்ப வடிவங்களை உருவாக்கிய சிற்பி, இப்படி உடைந்து கிடப்பதில் ஒன்றை இன்று பார்த்து விட்டானானால், ''இறைவனே! இப்படி கலை உணர் வில்லாத ஒரு கூட்டத்தின் கண்ணில் என் சிற்பவடிவங் களைக் காட்டிவிட்டாயே, இதைத் தவிர்த்திருக்கக் கூடாதா?'' என்றுதான் ஏங்கியிருப்பார், கதறியிருப்பார். அத்தனை கோரமாக இங்குள்ள சிலைகள் எல்லாம் சிதைக்கப்பட்டிருக்கின்றன, போர்த்துகீசிய சிப்பாய்களால்.

அப்படி உடைந்து சிதைந்து எஞ்சி நிற்கும் சிற்ப வடிவங்களே அங்குள்ள வடிவங்களின் அழகை விளக்கு வதாகும். அப்படி அழகிய சிற்பவடிவங்கள் நிறைந்துள்ள குடைவரையை உடையதுதான் எலிபெண்டா. அந்த எலிபெண்டா என்னும் தீவிற்கே செல்கின்றோம் நாம் இன்று.

எலிபெண்டா பம்பாயை அடுத்த கடலில் பம்பாய்த் துறை முகத்திலிருந்து நான்கு ஐந்து மைல் தூரத்தில் உள்ள ஒரு தீவு. அங்கு செல்ல அப்போலோ பந்தர் துறைமுகத்தில் இருந்து மோட்டார் லாஞ்சு விடுகிறார்கள். இந்த லாஞ்சில் ஏறிச் செல்ல மிகவும் அதிகாலையிலேயே அப்போலா பந்தர் துறைமுகம் செல்ல வேண்டும். இல்லையென்றால் பல அன்பர்கள் சேர்ந்து ஒரு லாஞ்சை ஏற்பாடு பண்ணிக் கொண்டு எந்த நேரமும் செல்லலாம். இப்படிச் சென்றால் தீவின் வடபுறம் நல்ல வசதியான இறங்கு துறைக்கே சென்று சேரலாம். அங்கிருந்து இரண்டு பர்லாங்கு தூரம் கட்டப்பட்டிருக்கும் படிகளை ஏறிக் கடக்க வேண்டும். அப்படிக் கடந்தால் அங்குள்ள பிரபல குடைவரைக் கோயிலுக்கே வந்து சேருவோம் இந்தப் படி களில் ஏறக் காலில் வலுவில்லாதவர்களை தூக்கிச் செல்ல கம்பு வைத்துக் கட்டிய நாற்காலிகளும் கூலிகளும் படகு இறங்கும் துறையிலேயே இருப்பர். அங்குள்ள குடைவரை களில் நுழையுமுன் இந்தத் தீவிற்கு ஏன் எலிபெண்டா என்ற பெயர் வந்தது என்று விசாரித்திட தோன்றும். அந்தக் காலத்தில் இந்தத் தீவில் இறங்கு துறையில் ஒரு பெரிய கல் யானை ஒன்று இருந்திருக்கிறது. அதன் நீளம் பதின்மூன்று அடி, உயரம் ஏழு அடி இத் தீவிற்கு வந்த போர்ச்சுக்கீசியர் கண்ணில் முதன் முதல் இந்த கல் யானை தான் பட்டிருக்கிறது. ‘‘அடே! இங்கே என்ன ஒரு பெரிய எலிபெண்ட் நிற்கிறதே என்று வியந்திருக்கிறார்கள். அதனால் இந்தத் தீவினையே எலிபெண்டா என்று அழைத் திருக்கின்றனர்—அந்தப் பெயரே நிலைத்தும் விட்டது.

எலிபெண்டாவுக்கு இன்று செல்லும் நண்பர்கள் அந்த யானையைக் காண முடியாது. இத் தீவிற்கு வந்த போர்ச்சுக்கீசியர் அதனை உடைத்திருக்கின்றனர். அப்படி உடைத்த துண்டுகளையெல்லாம் எடுத்து வந்து திரும்பவும் சிமிண்ட் போட்டு கட்டி பம்பாய் வேல்ஸ் இளவரசர் காட்சி சாலையில் வைத்திருக்கிறார்கள். இந்த போர்ச்சுகீசியர் வருமுன்னே அத் தீவை, அத்தீவில் உள்ள மக்கள் கரபுரி என்றும் ஸ்ரீபுரி என்றும் அழைத்திருக்கிறார்கள். கரபுரி என்றால் கோட்டை நகரம் என்று கூறுகிறார்கள். எனக்கென்னவோ இந்த எலிபெண்டாவை அந்தப் பெயருக்கு ஏற்பவே நல்ல தமிழில் கரிபுரி என்று கூறலாம் என்றே தோன்றுகிறது.

இத் தீவில் உள்ள குடைவரைகள் பஞ்சபாண்டவர் காலத்திலேயே ஏற்பட்டது என்பர் சிலர். இங்கு தான் அந்தப் பாணாசுரனும் அவனது அழகிய மகள் உஷையும் வாழ்ந்திருந்தார்கள் என்றும் கூறுவர். மேலும் உஷை கன்னியாகவே வாழ்ந்தாள் என்றும் அவள் காலத்தில் இத் தீவிலே பொன்மாரி பெய்தது என்றும் அதனாலேயே இத் தீவை ஸ்ரீபுரி என்று அழைத்தனர் என்றும் கர்ண பரம் பரைக் கதையையும் கூறுவர். இன்னும் கிரேக்க மன்னர் அலெக்சாண்டருடன் இத்தீவினை தொடர்பு படுத்தியும் சொல்லுவர். இதற்கெல்லாம் சரித்திரச் சான்றுகளோ, ஆதாரங்களோ ஒன்றும் இல்லை என்றாலும், ஒரு காலத்தில் இத்தீவு வளம் மிகுந்த பிரதேசமாக இருந்திருக் கிறது என்று மட்டும் தெரிகிறது. இன்று விளை பொருள் ஒன்றும் இல்லாமல் வறண்ட பிரதேசமாகத்தான் இருக் கிறது. அங்கு குடியிருப்பவர் கூட அதிகமில்லைதான். அடர்ந்த காடாக அந்தத்தீவு இருக்கிறது. நாலரை மைல் சுற்றளவுள்ள இந்த சிறிய தீவில் அழகான குடைவரைகள் சில இருக்கின்றன. அங்கு அற்புத மான சிற்பங்கள் பலவும் இருக்கின்றன. இவற்றைக் காணவே நாம் படகு ஏறிக் கடல் கடந்து, மலைப் படிகள்

எல்லாம் ஏறி இங்கு வந்து சேர்ந்திருக்கின்றோம். இத் தீவில் உள்ள குடைவரைகள் ஆறு. பூரணமாக அமைக்கப் பட்ட குடைவரைகள் நான்கு. இரண்டு குடைவரைகள் அரைகுறையாகவே நிற்கின்றன. இக்குடைவரைகளை எட்டாம் நூற்றாண்டில் குப்தர்கள் காலத்தில் அமைத் திருக்க வேண்டும் என்று சரித்திரப் பேராசிரியர்கள் கருது கின்றனர். ஆனால் இக் குடைவரைகளில் உள்ள சிற்ப வடிவங்களை பதினேழாம் நூற்றாண்டில் இங்கு வந்து தங்கியிருந்த போர்ச்சுக்கீசிய சிப்பாய்கள் உடைத்து எறிந் திருக்கின்றனர். அவர்களுடைய குரூராதனத்திற்கும் தப்பி நிற்கும் வடிவங்களே அவற்றின் பெருமையினை இன்றும் நமக்கு நினைவுறுத்தப் போதுமானது.

இங்குள்ள குடைவரைகளில் எல்லாம் முதல் குடைவரை தான் பெரியது. இது தீவின் வடமேற்கு பாகத்தில் 250 அடி உயரமுள்ள ஒரு குன்றில் இருக்கிறது. இக் குடைவரை கிட்டதட்ட 120 அடி சதுர அளவில் இருக்கிறது. குடைவரையைத் தாங்கி நிற்பது போல பெரிய பெரிய தூண்களையுமே, வெட்டிச் செதுக்கியிருக்கிறார்கள். இக் குடைவரை மூன்று பகுதியாக இருக்கும். வடக்கே பார்த்த பிரதான வாயிலை அடுத்த பெரிய மண்டபத்தோடு கூடிய பகுதி ஒன்று. அதற்கு வலப்புறமும் இடப்புறமுமாக இருக்கும் பகுதிகள் இரண்டு. மத்திய பிரதான பகுதி மண்டபத்தை இருபதிற்கு மேற்பட்ட தூண்கள் அலங்கரிக் கின்றன. தூண்கள் அடிப்பாகத்தில் சதுரமாகவும், மேல் பகுதி வட்டமாகவும் வரிவரியாகவும், அதற்கும் மேல் குடைவிரித்தாற் போன்ற போதிகைகளையும் தாங்கி நிற்கின்றன. இக் குடைவரையின் பிரதான வாயிலில் நுழைந்ததும் இங்கு வலப்புறமுள்ள கற்சுவரில் பிரம்மாண்ட மான வடிவில் தாண்டவ வடிவம் ஒன்று இருக்கும். அட்டமூர்த்தியான சிவனை எட்டுத் திருக்கரங்களோடு ஆடும் பெருமானாக பத்தடி உயரத்தில் உருவாக்கி இருக் கிறார்கள். கால் இரண்டும் இன்று பூரணமாக சிதைந்து

விட்டது கைகளும் சிதைந்து தான் இருக்கின்றன. தாண்டவருக்கு இடப்புறத்தில் பார்வதியும் வலப்புறத்தில் விநாயகரும் உருவாகியிருக்கிறார்கள். இன்னும் குமரன், பிரம்மன் மற்றைய தேவர்கள் எல்லாருமே உருவாகியிருக்கிறார்கள். அத்தனை வடிவங்களும் இன்று சிதைந்தே கிடக்கின்றன. இத்தாண்டவருக்கு எதிர் திசையில் மேல் சுவரில் லகுலீச வடிவமான சிவன் இருக்கிறார். பத்மாசனம் போட்டு அவர் உட்கார்ந்திருக்க வேண்டும். இன்று மார்பிற்கு மேலுள்ள பாகம் மாத்திரமே தெரிகிறது. மற்றவற்றை எல்லாம் உடைத்து எறிந்திருக்கிறார்கள். இந்தப் பிரதான குடைவரையில், நடுவில் ஒரு சிறு கோயிலையே உருவாக்கியிருக்கின்றார்கள் சிற்பிகள். அக்கோயில் கருவறையிலே லிங்கவடிவில் சிவபெருமான் இருக்கிறார். அவரை வலம் வந்து வணங்குவதற்கெல்லாம் வகை செய்து மண்டபம் அமைத்திருக்கிறார்கள். இந்தப் பிரதான குடைவரையின் தென் கோடியிலே தலைவாயிலுக்கு நேர் எதிரே நடுநாயகமாக இருப்பவர் தான் மகேசமூர்த்தி. இவரையே திரிமூர்த்தி என்கின்றனர். மூன்று திருமுகத்தோடு மார்பு வரையே செதுக்கப்பட்ட வடிவினர் அவர். அவரது உயரம் 18 அடி. அன்று கவிச்சக்கரவர்த்தி கம்பன் தனது பாரகாவியமாகிய இராமாயணத்தை இயற்றுமுன் கடவுள் வணக்கம் ஒன்று பாடினார். எல்லா சமயவாதிகளும் ஒத்துக்கொள்ளும் வகையில் அவனது கடவுள் வணக்கம் சிறப்பாக அமைந்தது.

உலகம் யாவையும்
தாமுள ஆக்கலும்
நிலை பெறுத்தலும்
நீக்கலும்—நீங்கலா
அலகிலா விளையாட்டு
உடையார் அவர்
தலைவர் அன்னவர்க்கே
சரண் நாங்களே.

என்பது அவரது பாட்டு. ஆக்கல், காத்தல், அழித்தல் என்னும் முத்தொழிலையும் செய்பவன் ஒருவனே அவனே மகேசுவரன், அவனையே வணங்குவோம், என்று பாடியிருக்கிறான் கம்பன். இந்த மூவுருவில் நின்ற ஒரு மூர்த்தி சிற்ப உலகில் காணக்கிடைக்காத ஓர் அரிய பொருள். அந்த அரியதொரு மூர்த்தியே இக்குடைவரையில் பிரதான மூர்த்தியாக எழுந்தருளியிருக்கிறார். இம்மூன்று முகம் கொண்ட பெருமானின் நடுவில் இருக்கும் முகத்தில் சாந்தம் தவழ்கிறது. அவரே சிருஷ்டி கர்த்தாவாக இருக்க வேண்டும். வலப்புறம் உள்ள முகத்தில் புன்னகை மலர்ந்திருக்கிறது. அவரே காத்தல் தொழில் செய்பவராக இருக்க வேண்டும். இடப்புறம் உள்ள முகத்தில் ருத்திராம்சம் இருக்கிறது. இம்மூவரும் சேர்ந்த ஒரு மூர்த்தியே மகேசனாக இருக்கிறார். இந்த மகேசன் சிறிதும் சிதையாமலும் இருக்கிறார். எல்லா வடிவங்களும் சிதைந்து கிடக்கும் இடத்தில் இவர் மாத்திரம் சிதையாதிருப்பதின் ரகசியம்தான் என்னவோ? சில உடைக்கும் கலைக் கொலைஞர்கள் மகேசனை அணுக அஞ்சி விட்டார்கள் போலும். இந்த மகேசனுக்கு இருபுறத்திலும் பெரிய பெரிய துவாரபாலகர்கள் கம்பீரமான வடிவில் நிற்கின்றனர்.

மகேச மூர்த்தியைப் பூரணப் பொலிவுடன் பார்த்தபின் அவருக்கு வலப்புறம் நடந்தால் அங்கு அர்த்தநாரீஸ்வர வடிவம் பெரிய அளவில் செதுக்கப்பட்டிருப்பதைப் பார்க்கலாம். கிட்டத்தட்ட 17 அடி உயரத்தில் உருவாகியிருக்கும் இவரது வடிவில் இடைக்குக் கீழ் உள்ள பாகம் முழுவதுமே சிதைந்திருக்கிறது. நான்கு திருக்கரங்களோடு, ரிஷபத்தின்மேல் அவர் எவ்வளவு ஒயிலாக சாய்ந்து கொண்டு நின்றிருக்க வேண்டும் என்பதை சிதைந்து எஞ்சியுள்ள பாகத்தைக் கொண்டே நிர்ணயிக்கலாம். மகேச மூர்த்தியின் இடப்பக்கத்தில் கங்காதரன் பெரிய வடிவில் உருவாகி இருக்கிறார். இவரது வலக்கால்

முழுவதையுமே காணோம். வலப்பக்கத்தில் பார்வதி நாணிக் கோணும் புதுமணப் பெண்ணாக நிற்கிறாள். வான வீதியில் தேவர்கள் எல்லாம் கூடி நின்று மலர்மாரி பெய்கின்றனர். இன்னும் இந்த பிரதான கோயிலிலேதான் கைலை மலையைப் பெயர்த்து எடுக்க முனையும் ராவணனும், இன்னும் அந்தகாசுரசம்ஹாரமூர்த்தி முதலியோரும் பெரிய பெரிய வடிவங்களாக உருவாகி இருக்கின்றனர். இக்குடைவரையின் மேற்கே ஒரு பகுதியும் கிழக்கே ஒரு பகுதியும் தனியாக உருவாகி இருக்கிறது. அங்கெல்லாம் கருவறை என்று ஒன்றையும் உருவாக்கி அதில் சிவலிங்க வடிவினையும் அமைத்து வைத்திருக்கிறார். மேல் புறம் உள்ள பகுதிக்குப் பக்கத்தில் ஒரு சுனைவேறு இருக் கிறது. கீழ்புறம் உள்ள பகுதியில் உள்ள தூண்கள் எல்லாம் மிக்க அழகோடு உருவாகியிருக்கின்றன. இந்தப்பகுதியில் தான் ஒரு பெரிய சிங்கமும் சிலைவடிவில் உருவாகி இருக் கிறது. மிக்க அருமையான வேலைப்பாடுடையதாகவும் இருக்கிறது.

இந்தக் குடைவரையிலிருந்து வெளியே வந்து கிழக்கே பார்த்து நடந்தால் இன்னும் இரண்டு குடைவரைகளைக் காண்போம். அவைகள் எல்லாம் முன்மண்டபத்துடன் கூடிய குடைவரைகளே. இங்கெல்லாம் தூண்கள் அவ்வளவு அழகாக உருவாகவில்லை. வேறு சிற்பவடிவங்களும் கிடையா. அதன்பின் தெற்கே பார்த்துத் திரும்பினால். இன்னும் இரண்டு குடைவரைகளைக் காணலாம். அவற் றைப் பற்றியெல்லாம் சிறப்பாகச் சொல்வதற்கு ஒன்றும் இல்லை. இன்னும் இரண்டு குடைவரைகளைக் காண அடர்ந்த காட்டிற்குள் கிழக்கு நோக்கி ஒரு மைல் போக வேண்டும் என்பவர். அவை குடைவரைகள்தாம். ஆதலால் சிரமப்பட்டு நடந்தாலும் பலன் ஒன்றும் இராது.

எலிபெண்டா குடைவரைகளை அங்குள்ள அற்புத சிற்பவடிவங்களைப் பார்த்து விட்டுத் திரும்பும்போது நம்

உள்ளத்தை ஒன்றே ஒன்று அழுத்தும். கண்களில் நீர்கசியும். தெய்வ வடிவங்களை யெல்லாம் உருவாக்கும் தெய்வீகச் சிற்பிகளது கைத்திறனை எல்லாம் பூரணமாக அனுபவிக்க விடாமல் விக்கிரக விநாசர்களும் தோன்றியிருக்கிறார்களே என்று ஏங்குவோம். ஏதோ மகம்மதிய மன்னர் ஒரு சிலர் தான் இந்த விக்ரகவிநாசகர்களாக இருந்தார்கள் என்றில்லை. வியாபாரத்திற்கு வந்த இந்த போர்த்துக்கீசியர்கள் கூட பொல்லாதவர்களாக இருந்திருக்கிறார்களே என்று மனம் வருந்துகிறோம். கலை உணர்வு இல்லாத காரணத்தில்தானே இத்தகைய அழிவு வேலையில் இறங்கி இருக்கிறார்கள். அழகுணர்ச்சி மட்டும்படைத்தவர்களாக இருந்திருந்தால் இத்தகைய கொடுமைகளை எல்லாம் செய்திருப்பார்களா என்று எண்ணுவோம். அழகுணர்ச்சியும், கலை அழகை அனுபவிக்கும் திறமும் ஏதோ பயிற்சியால் பெறக்கூடிய ஒன்று அல்லவே· இறைவனது அருளாலே பெறவேண்டிய ஒன்றல்லவா என்று நம்மை நாமே தேற்றிக் கொண்டு, வழியும் கண்ணீரையும் துடைத்துக்கொண்டு திரும்ப வேண்டியதுதான்.

இக்குடைவரையை முழுக்க முழுக்க சிவபெருமானே ஆக்ரமித்துக் கொண்டிருக்கிறார். காத்தல் கடவுளான திருமால் ஏதோ சிறியவடிவில் சிவனது நிழலில் ஒதுங்கிறாரே தவிர, பெரிய வடிவில் தனித்து அவரை இந்த சிற்பிகள் உருவாக்கவில்லை. ஒரு வேளை அவருக்கும் பாதி இடத்தை ஒதுக்கிக் கொடுத்திருந்தால் போர்த்துக்கீசியர் அட்டூழியங்கள் நிகழாதபடி இவர் காத்திருப்பாரோ என்னவோ!

சோனையும் காத்து, நல் ஆனையும்
காத்து, துரோபதை தன்
தானையும் காத்து, அடைந்தானையும்
காத்து, தடத்து அல்லி

மானையும் காத்து. அனுமானையும்
காத்து, மருவில் விழும்
ஆனையும் காத்தவனுக்கு

இக்குடைவரையைக் காப்பது ஒரு பெரிய காரியமாகவா இருந்திருக்கும் என்றே எண்ணத் தோன்றுகிறது.

# 21. திரயம்பகத்து திரயம்பக நாதர்

செங்கண் நெடுமாலும்
சென்றிடந்தும் காண்பரிய
பொங்கு மலர்ப்பாதம்
பூதலத்தே போந்தருளி.

நின்றவன் அண்ணாமலையான் என்று மணிவாசகர் தன் அம்மானைப் பாடல்களைத் துவங்குகிறார். எல்லாம் வல்ல இறைவனது அடியையும் முடியையும் விஷ்ணுவும் பிரம்மாவும் காணாமல் அமைந்து நின்ற தன்மையை மணி வாசகர் பல பாடல்களில் பாடிப்பாடி மகிழ்கிறார். கதை நமக்குத் தெரிந்த கதைதான். சுவையான கதை ஆதலால் எத்தனை தரம் சொன்னாலும், எத்தனை தரம் கேட்டாலும் அலுப்பதில்லை. ஆம். படைப்புத் தொழில் நடத்தும் பிரம்மனுக்கும், காத்தல் தொழில் நடத்தும் விஷ்ணுவிற்குமே ஒரு பலத்தப் போட்டி. தங்களில் யார் பெரியவன் என்று. இவர்களிடையே சிவ பெருமான் வருகிறார். அழல் உருவில் நிற்கிறார். தன் அடியையோ அல்லது முடியையோ யார் முதலில் கண்டு வருகிறார்களோ அவர்களே பெரியவர் என்று போட்டியை ஆரம்பித்து வைக்கிறார். சரி என்று திருமால் வராக உருவில் இறைவன் திருவடிகளைக்காண பூமியைக் குடைந்து குடைந்து கீழே செல்கிறார். பிரம்மாவோ அன்ன உருவில் வானில் பறந்து இறைவன் முடிகாணப் புறப்படுகிறார். இருவரும் சென்று கொண்டே இருக்கின்றார்கள். அடியையோ முடியையோ கண்ட பாடாக இல்லை. ஆனால் இறைவன் திருமுடியில் இருந்து விழுந்து பூமியை நோக்கி வந்து கொண்டிருக்கும் தாழம்பூ ஒன்றைச் சந்திக்கிறார் பிரம்மன். அப்பூவோ பிரம்மனால் இறைவனது முடிகாண முடியாது என்று சொல்லி வருகிறது.

பிரம்மன் அதனால் மயங்கவில்லை. பிரம்மன் அரன் முடியைக் கண்டுவிட்டதாகவும், முடியிலிருந்த தாழம்பூவே அதற்கு சாட்சி என்று பொய் சாட்சி சொல்லும்படியாகவும் அதனைத் தயாரிக்கிறார். இருவரும் பூமிக்கு இறங்குகிறார்கள். இறைவனிடம் தான் தயாரித்த பொய்சாட்சியுடன் தன் கதையைச் சொல்கிறார் பிரம்மன். இறைவனுக்கு உண்மை தெரியாமல் போகுமா? பொய் சொன்ன பிரம்மாவிற்கு வழிபாடே இல்லாமல் போவது என்றும், பொய் சாட்சி சொன்ன தாழம்பூ தன் பூசனைக்கே உரியது அல்ல என்றும் சாபமிட்டு விடுகிறார். அழல் உருவில் நின்ற அண்ணல் உறைந்து அண்ணாமலையாக நின்றுவிடுகிறார். இதுதான் வேங்கடத்துக்கு இப்பால் உள்ள திருவண்ணாமலையின் வரலாறு என்று புராணங்கள் எல்லாம் கூறும். இதே கதையையே வேங்கடத்துக்கு அப்பால் செல்லும் நமது தலையாத்திரையிலும் கேட்கிறோம். திரியம்பகம் என்ற தலத்திலே கதையின் முடிவிலேதான் ஒரு சிறிய மாற்றம். சாபம் பெற்ற பிரம்மன் வேண்டிக் கொண்டபடியே இறைவன் மலையாக இருக்க இசைகிறான் என்றும், அந்த மலையையே பிரம்மன் பெயரால் பிரம்மகிரி என்று அழைக்கவும் இசைகிறான் என்பது தான் மாற்றம். இந்த பிரம்மகிரி இருக்கும் தலம்தான் திரியம்பகம். அந்தத் திரியம்பகத்திற்கே செல்கின்றோம் நாம் இன்று.

திரியம்பகம் செல்ல பம்பாய் ஜால்கன் ரயில் பாதையில் சென்று அஸ்வாலி என்ற ஸ்டேஷனில் இறங்க வேண்டும். ஆனால் அஸ்வாலி சிறியதொரு கிராமம் அங்கிருந்து திரியம்பகம் செல்ல வண்டியோ பஸ்ஸோ, காரோ கிடைப்பது அரிது. அதனால் நாசிக்ரோடு ஸ்டேஷனிலேயே இறங்கி அங்கிருந்து பதினெட்டு மைல் தூரத்தில் உள்ள திரியம்பகத்திற்கு பஸ்ஸிலோ காரிலோ செல்லலாம். கார் ஏற்பாடு செய்து கொண்டு சென்றால் வழியில் உள்ள கணேஷ்குண்ட், பாணகங்கை முதலிய இடங்களையும் பார்த்துவிட்டே செல்லலாம். கார் திரியம்பகத்தின் மேல் கோடிவரை செல்லும். அதற்கு அப்பால்தான் பிரம்மகிரி

மலையிருக்கிறது. அங்குதான் கோதாவரி நதி உற்பத்தியாகிறது. அண்ணாமலையில் கிரிப்பிரதக்ஷணம் செய்வது போல திரியம்பகத்திலும் பிரம்மகிரிப்பிரதக்ஷணம் செய்கிறார்கள். ஆனால் சுற்ற வேண்டியது 20 மைல் தூரம் ஆதலால் நம்மால் எல்லாம் கிரிப்பிரதக்ஷணம் செய்ய இயலாது. பிரதக்ஷணத்தை ஒதுக்கிவிட்டு நாம் முதலில் மலையேறி கோதாவரி உற்பத்தி ஸ்தானத்திற்கே செல்லலாம். இந்த இடத்திற்குச் செல்ல படிக்கட்டு கட்டியிருக்கின்றனர். இரண்டு மைல்தான் எழுநூறுக்கு மேற்பட்ட படிகள் ஏறிக் கடந்தே போகவேண்டும். கொஞ்சம் சிரமமாகவே இருக்கும். அப்படி படி ஏற இயலாதவர்கள் மலை அடியில் நின்றே வணக்கத்தைச் செலுத்திவிட்டு திரும்ப வேண்டியதுதான். இன்னும் ஒன்று, மலை ஏற விரும்புபவர்கள் அதிகாலையிலேயே அங்கு சென்று விடவேண்டும். பகல் பத்துமணிக்கு மேல் வெயிலில் படிகள் சூடாகிவிடும். ஏறுவது இயலாததாக இருக்கும். அங்கு ஒரு மண்டபம். மண்டபத்தின் முன்பு ஒரு நந்தி. மண்டபத்தில் கோதாவரி அம்மனின் சிலை இருக்கிறது. அது பளிங்குக் கல்லால் ஆனது. அந்த அம்மனின் காலடியில் இருக்கும் கோமுகத்தில் இருந்து தண்ணீர் ஒரு தொட்டியில் வடிகிறது. அந்தத் தண்ணீர் தொட்டியில் வீழ்ந்ததும் மறைந்து பின்னர் கொஞ்ச தூரத்தில் ஒரு ஓடையாக உருவெடுக்கிறது. கோதாவரி அம்மன் மண்டபத்தில் உள்ள தொட்டியில் இறங்கி ஒரு முழுக்கு போட்டுக் கொள்ளலாம். கோதாவரியின் உற்பத்தி ஸ்தானத்திலேயே நீராடும் பாக்கியம் எளிதாக கிடைக்குமா என்ன? அந்த மலை மீதே கோதமர் ஆசிரமம் என்னும் குகை இருக்கிறது. மற்றொரு பக்கம் கோரக்நாதர் குகை ஒன்றும் இருக்கிறது. இரண்டு குகைகளிலும் சிவலிங்கம் இருக்கின்றது. இங்கெல்லாம் நாம் வணக்கம் செலுத்திவிட்டு மலையைவிட்டு இறங்கலாம். வழியில் ராமகுண்டம், லக்ஷ்மண குண்டம் எல்லாம் இருக்கின்றன. மலை அடிவாரத்தில் கோடி தீர்த்தம் என்னும் திருக்குளம்

ஒன்றும் இருக்கிறது. அதிலும் இறங்கி நீராடலாம். அத்திருக்குளத்தைச் சுற்றி சிவலிங்கங்கள் பல பிரதிஷ்டை செய்யப்பட்டு இருக்கின்றன. அக்குளத்தில் மேல் திசையில் பள்ளி கொண்ட பெருமானின் வடிவம் ஒன்று இருக்கிறது. அப்பெருமானுடைய திருவடியில் நீர் ஊறிக்கொண்டே இருக்கிறது. இந்த நீரில் துளசி மணக்கிறது.

இங்குள்ள தீர்த்தக் கட்டங்களில் சிறப்பானது குஷாவர்த்த தீர்த்தம்தான். பிரம்மகிரியிலிருந்து பிரவகித்த கோதாவரியை கௌதம முனிவர் தன் கையில் உள்ள தருப்பையால் தடுத்திருக்கிறார். அதனாலேயே அவன் பூமியில் மறைந்து திரும்பவும் வெளிவந்திருக்கிறான் என்றனர். மலை அடிவாரத்தில் உள்ள தீர்த்த கட்டத்தை கௌதம குண்டம் என்கின்றனர். நல்லபடிக் கட்டுகள் மண்டபங்கள் எல்லாம் கட்டி வைத்திருக்கின்றனர். தென்புறம் ஒரு கோயிலையும் கட்டி அதில் சிவலிங்கப் பிரதிஷ்டையும் செய்திருக்கின்றார். இந்த குண்டத்தில் பலர் குளித்துக் கொண்டிருப்பர். தண்ணீர் பச்சைப்பசேல் என்று மிக்க அசுத்தமாக இருக்கும். நமக்கு தீர்த்தமாட வேண்டும் என்று ஆசை இருந்தாலும் இறங்கிக் குளிக்க துணிச்சல் வராது. ஆதலால் குண்டத்தில் உள்ள நீரை தலையில் பரோக்ஷித்துக் கொள்வதுடன் திருப்தி அடைய வேண்டியதுதான்.

கௌதம குண்டத்திலிருந்து கிழக்கு நோக்கி வந்த வழியே திரும்பினால் இத்தலத்திற்கே சிறப்பான திரயம்பக நாதர் கோயில் வந்து சேருவோம். கோயில் கிழக்கு நோக்கிய கோயில் என்றாலும் நாம் வடக்கு வாயிலின் வழியாகத்தான் உள்ளே நுழைய வேண்டும். வடக்கு வாயிலின் பேரில்தான் பேரிகை மண்டபம் கட்டியிருக்கின்றார்கள். நாலாபக்கமும் மதில்கள் சூழ்ந்த கோயில் அது. அங்குள்ள திறந்தவெளிப் பிரகாரத்தில் வலப்புறமாகச் சுற்றியே பிரதான கோயில் வாயில் வந்து சேரவேண்டும். அக்கோயில் கருங்கற்களால் கட்டப்

பட்டிருக்கிறது. என்றாலும், அது நம் நாட்டுக் கருங் கல்லைப்போல உறுதியானதல்ல. இதனை கருஞ்சலவைக் கல் என்று என்னும்படி பளபளப்பு இருக்கிறது. கோயிலில் விமானத்தின் பேரில் தங்கக் கலசம் ஒன்றிருக்கிறது. அதற்கு மேல் திரிசூலமும் இருக்கிறது. கோயிலை, மாடக்கோயிலைப்போல கொஞ்சம் உயரமான இடத் திலேயே கட்டியிருக்கிறார்கள். ஆதலால் படிகள் ஏறித் தான் கோயிலுள் செல்லவேண்டும். அப்படி படிகள் ஏறும்போதே கௌபீனதாரியாய் நிற்கும் ஒரு விநாயகர் வடிவைக் காண்போம். அதைப் போன்ற வடிவத்தை நான் வேறு இடங்களில் காணவில்லை. பிள்ளையார் பிள்ளைப்பிராயம் கடந்து வளர்கிறவர் என்று காட்டவே அவருக்கு கௌபீனம் தரித்து நிறுத்தியிருக்கிறார் போலும், சிற்பி. இல்லை தம்பி முருகன்தான் கோவ ணாண்டியாக நிற்கிறார் என்றில்லை என்னும்படி விநாயகரே கோவணாண்டியாக நிற்கின்றார். கோயில் முன் மண்டபம் சபா மண்டபம் கருவறை என்று மூன்று பகுதியாக இருக்கிறது. முன்மண்டபத்தில் உள்ள தளவரிசையெல்லாம் பல சிவலிங்க வடிவங்கள் முன் மண்டபத்தைக் கடந்து சபா மண்டபத்திற்கு வந்தால் அங்கு நந்தியிருக்கும், அதன் மேல்கோடியில் உள்ள அந்த மண்டபம் வந்தால் கருவறை வாயில் வந்து சேருவோம். கருவறை ஆறு அடி பள்ளத்தில் இருக்கிறது. அது மிகவும் விசாலமாகவே இருக்கும். அதன் நடுவில்தான் லிங்க வடிவில் இறைவன் இருக்கிறார். அவர் இந்திய நாட்டில் உள்ள பன்னிரண்டு சோதிர் லிங்கங்களில் ஒன்று என்பர்.

கருவறையில் உள்ள படிகளில் இறங்கியே இறைவனைத் தரிசிக்க வேண்டும். ஆனால் பெண்களை கருவறைக்குள் அனுமதிப்பதில்லை. அவர்கள் கருவறை வாயிலிருந்தே தான் வணங்க வேண்டும். இந்த லிங்கவடிவில் இருக்கும் இறைவன் உயரமான ஆவுடையார் கிடையாது. அதன் தலையில் மூன்று சிறு ரோஜாமொட்டுக்கள் போன்ற உரு

வங்கள் இருக்கின்றன. மும்மூர்த்தி சொருபமானவரே திரயம்பகர் என்பதை விளக்கவே இப்படி அமைந்திருக்கிறார்கள். இந்த திரபகநாதர் அடியிலே எப்போதும் நீர் ஊறிக்கொண்டேயிருக்கிறது. திரயம்பகநாதர் நமக்கு மரணமிலாப் பெருவாழ்வு அளிக்க வல்லவர். அவரது தோத்திரத்தில். சிறப்பானது மிருத்யுஞ்சய மந்திரம் ஆகும்.

ஓம்—தியம்பகம் யஜாமகே
சுகந்தம்
புஷ்டிவர்த்தனம்
ஊர்வாறாக மிவபந்தனா
மிருத்யோர் முகிஷி
யமாம் மிதாது

என்பது தோத்திரம். தமிழிலே தொழுவதற்கு பாசுரம் ஒன்றும் இல்லையா என்று நீங்கள் கேட்பீர்கள், அன்பர் ஒருவர் அதற்கும் பாடி வைத்திருக்கிறார்.

அண்டமெலாம் கண்ணாகக் கோளினும்
காண்டற்கு அணுத்துணையும்
கூடா என்று அனந்த வேதம்
விண்டலறி ஓலமிட்டுப் புலம்ப
மோனவெளிக்குள் வெளியாய்
நிறைந்து விளங்கும் ஒன்றே
கண்டவடிவாய், அகண்ட மயமாய்
எங்கும் கலந்தும் நின்ற
பெருங்கருணைக் கடவுளே எம்
கண்டவிணைத் தொடக்கற சின்
மயத்தைக்காட்டும் சற்குருவே !
திரியம்பகத்தே சார்ந்த தேவே.

என்று பாடியும் துதிக்கலாம். இவற்றையெல்லாம் விட சிறப்பாக எவ்வளவோ தொலை தூரத்தில் இருக்கும். இந்த திரியம்பக மூர்த்தியை நமது அருணகிரியார்

நினைந்து அவனைக் கந்தர் அலங்காரத்துக்குள்ளேயே அழகு செய்து வைத்திருக்கிறார் என்று அறிகிறபோது நாம் எவ்வளவோ மகிழ்ச்சி அடைவோம்.

**மாகத்தை முட்டி வருநெடுங்**
**கூற்றன் வந்தால் என்முன்னே**
**தோகைப்புரவியில் தோன்றி**
**நிற்பாய், சுத்த நித்தமுத்தித்**
**தியாகப் பொருப்பை, திரிபுராந்த**
**கனைத் திரியம்பகனைப்**
**பாகத்தில் வைக்கும் பரமகல்**
**யாணிதன் பாலகனே**

என்றல்லவா தமிழ் கடவுளாம் முருகனைப் பாடிப்பரவுகிறார்.

இத்திரயம்பகநாதர் கோயிலில், நமது அண்ணாமலையில் நடப்பது போலவே கார்த்திகை மாதம் பௌர்ணமி அன்று ரதோத்சவம் நடக்கிறது. மாசி மாதத்தில் சிறப்பான பூசை நடக்கிறது. கும்பகோணத்தில் நடப்பது போலவே பன்னிரண்டு ஆண்டுகளுக்கு ஒருதடவை மகாமகமும் அதையொட்டி ஒரு மேளாவும் நடக்கிறது என்கின்றனர். அடுத்த மகாமகம் 1968-ல்தானாம். இக்கோயிலை நாநாசாகிப் பேஷ்வா 1795-இல் கட்டி முடித்தார் என்று சரித்திர ஏடுகள் பேசுகின்றன. இக்கோயில் கட்டி முடிக்க முப்பத்தொன்று வருஷங்கள் ஆயிற்று என்கின்றனர். கட்டி முடிக்கச் செலவு பத்து லட்சம் ரூபாய் என்றும் தெரிகிறது.

இத்துறையில் திரயம்பகநாதர் கோயிலைத்தவிர இன்னும் பல கோயில்கள் உண்டு. குசாவர்த தீர்த்தத்தில் பின்புறம் கிருஷ்ணன் கோயில் ஒன்றிருக்கிறது. அதில் கிருஷ்ணவிக்கிரகம் ஒன்றைச் சலவைக் கல்லில் செய்து நிறுத்தியிருக்கிறது. கிருஷ்ணாஷ்டமி அன்று பூசை

சிறப்பாக நடக்கிறது. குசாவர்த்த தீர்த்தத்தின் வடபுறம் கங்கைக்கு ஒரு கோயில் இருக்கிறது. கங்கையம்மன் சிறிதாக இருந்தாலும் அழகாக இருக்கிறது. மாசிமாதத்தில் உற்சவம் நடக்கிறது. இன்னும் பல சிறிய கோயில்கள், இருக்கின்றன. ஊருக்கு வடபுறம் நீல பருவதம் என்றும் அழகிய குன்று ஒன்று இருக்கிறது. ஏறிப்போக நல்ல படிகள் இருக்கின்றன. அதன் உச்சியில் தத்தாத்ரேயர் கோயில் ஒன்றும் காலபைரவர் கோயில் ஒன்றும் இருக்கிறது. நீலாம் பரருக்கு என்று தனிக்கோயில் ஒன்றும் உண்டு. இக் கோயிலை அடுத்து நீலதீர்த்தம் என்று ஒரு குளிர் சுனை இருக்கிறது. அங்கு தண்ணீர் குளிர்ந்தும் தெளிந்தும் இருக் கிறது. இத்தலத்தில் உள்ள குசாவர்தமும் இமயமலையில் உள்ள கங்காதுவாரமும், பில்வதீர்த்தமும் நீலதீர்த்தமும், ஹரித்துவாரத்தில் உள்ள கன்கல் தீர்த்தமும் மறுபிறப்பை போக்க கூடியவை என்று புராணங்கள் கூறுகின்றன. ஆதலால் நாம் குசாவர்த்தத்திலும் நீல தீர்த்தத்திலும் மூழ்கி நம் வினை ஒழித்து பிறவிப் பிணியினின்றும் மீளலாம்.

# 22. நாசிக் பஞ்சவடி ராமர்



நாஸிக் பஞ்சவடி காளே ராமர் கோயில்

சில வருஷங்களுக்கு முன் ஒரு கூட்டம். அக்கூட்டத்தில் ஒரு கம்பராமாயணப் பிரசங்கம். பிரசங்கி ராமாயணத்தில் சொல்லப்படுகின்ற தலங்களை எல்லாம் விவரித்தார். கவிச் சக்கரவர்த்தி கம்பன் அத்தனை இடங்களுக்கும் சென்று நேரில்கண்டு அதன் பின்னேதான் விஸ்தாரமாக அவற்றை உரைத்திருக்கிறார் என்பது அவரது சித்தாந்தம். அந்தக் கூட்டத்திற்கு தலைமை வகித்தவன் நான். நான் சொன்

னேன், கம்பனுக்கும் ஜாக்ரபிக்கும் ரொம்பத்தூரம். அவன் கங்கைக் கரைக்கும் போனதில்லை, கோதாவரியையும் கண்டதில்லை. அயோத்தியையோ மிதிலையையோ தண்டகாரண்யத்தையோ பஞ்சவடியையோ பார்த்ததில்லை. காவிரிக்கரையிலே பிறந்து வளர்ந்த அவன் கங்கையை 'தெய்வப் பொன்னியே பொருவும் கங்கை' என்றுதான் கூறுவான். சான்றோர் கவி எனக் கிடந்தது கோதாவரி என்பதுதான் அவனது கோதாவரி வர்ணனை. பொதிகையிலிருந்து அகத்தியர் ராமனிடம் பஞ்சவடியைக் குறிக்கும் போது, குற்றாலமலையையும் அங்குள்ள மரங்கள் அடர்ந்த பொழில்களையும் மனதில் வைத்துக்கொண்டேதான் பாடி இருக்கின்றான் என்றேன். நமக்குதான் தெரியுமே அவரது பஞ்சவடி வருணனை.

ஓங்கு மரன் ஓங்கி
மலை ஓங்கி, கழை ஓங்கி
பூங்குலை குலாவு
குளிர் சோலை புடைவிம்ம
தூங்குதிரை ஆறுதவழ்
சூழல்தோர் குன்றின்
பாங்கர் உளதால் உறையும்
பஞ்சவடி மஞ்ச

என்பதுதானே அவரது சித்திரம். இப்படியே சான்றோர் கவிபோலத் தெளிந்ததாகவும், நிர்மலமானதாகவும் இருக்கும், கோதாவரி என்று எண்ணிக்கொண்டே நாம் கோதாவரிக் கரையை அணுகுகின்றோம். ஆனால் அந்த கோதாவரியில் கலங்கிய தண்ணீரே ஓடிக்கொண்டிருக்கின்றது. பல குண்டங்களில் தேங்கி நின்று ஓட்டமே தடைப்பட்டு வேறே கிடக்கிறது. இன்னும் பஞ்சவடியில் ஓங்கு மரங்கள் இருந்தாலும் பூங்குலை குலாவு குளிர் சோலைகளைக் காணோம். தூங்குதிரை ஆறு தவழ்வதைக் காணோம். குன்றில் சூழல்கள் நிறைந்த இடங்களையும்

காணோம். கம்பனது வருணனைக்கும் நாசிக்கில் ஓடிக் கொண்டிருக்கும் கோதாவரிக்கும் எவ்வளவோ வேற்றுமை. அகத்தியர் கூறும் பஞ்சவடிக்கும், நாசிக்கை அடுத்து கோதாவரிக் கரையில் இருக்கும் பஞ்சவடிக்கும் ஒற்றுமையே இல்லை எனலாம். என்றாலும் நமது தலயாத்திரையில் நாசிக் பஞ்சவடி சென்று அங்கு இன்றுள்ள குண்டங்களையும், கோயில்களையும் குடைவரைகளையும் பார்க்க வேண்டாமா? அதற்காகவே செல்கின்றோம் நாசிக் பட்டணத்திற்கு நாம் இன்று.

நாசிக் பம்பாயிலிருந்து நூற்றுப்பதினைந்து மைல் தூரத்தில் இருக்கிறது. ரயிலில் சென்றால் நாசிக்ரோட் என்ற ஸ்டேஷனில் இறங்கி ஐந்து மைல் நடந்தால்தான் நாசிக் நகரம் சென்று சேரலாம். நாசிக் நகரத்தை ஒட்டி கோதாவரி நதி ஓடிக்கொண்டிருக்கிறது. எதிர்த்த கரையில் உள்ள இடமே பஞ்சவடி அதனால் நாசிக் பஞ்சவடி என்று இரண்டையும் சேர்த்தே சொல்வார்கள். பாடல் பாடுபவர்கூட இரண்டையும் இணைத்தே பாடுவதையும் கேட்டிருக்கின்றோம்.

> செந்துவர் வாய்க் கருங்கண்ணினை
> வெண்ணகைத்தேன் மொழியார்
> வந்து வலம் செய்து மாநாடம்
> ஆட மலிந்த செல்வக்
> கந்தமலி பொழில் சூழ் பஞ்ச
> வடி நாசிக் அதனை என்றும்
> சிந்தை செய்வாரைப் பிரியா
> திருக்கும் திருமங்கையே.

என்ற பாடலில் பஞ்சவடியும் நாசிக்கும் சேர்த்தே பேசப்படுகிறது. பஞ்சவடி என்றால் ஐந்து மரங்கள் உள்ள இடம் என்று தெரிகிறது. நாசிக் என்றால் அதன் பொருள் என்ன என்று கேட்கத் தோன்றும். ராமாயணக் கதை நமக்குத் தெரியும், தாயுரை கொண்டு தாதையின் வாய்

மையைக் காக்க ராமன் தன் துணைவி சீதையுடனும், தம்பி லட்சுமணனுடனும் காணகம் புறப்படுகின்றான். சித்திர கூடத்தில் சில நாள் தங்கி இருந்துவிட்டு தண்டகாரண்யத்தில் புகுந்து, அகத்திய முனிவரால் ராமன் தங்கித் தவம் புரிவதற்கு ஏற்ற இடம் என்று சொல்லப்பட்ட பஞ்சவடி வந்து ஒரு பர்ணசாலை அமைத்துக்கொண்டு வாழ்கின்றான். அங்கு வருகிறாள் தசமுகன் தங்கையாகிய சூர்ப்பனகை. ராமனது அழகைக்கண்டு மோகித்து அவன் முன்னர் காமவல்லியாக கன்னி உருவில் தோன்றித் தன்னை மணந்து கொள்ள வேண்டுகிறாள். ஏகபத்தினி விரதனான ராமன், அவளை ஏற்றுக்கொள்ள மறுக்கிறான். சீதை என்று ஒருத்தி இருப்பதால்தான் தன்னை ஏற்க மறுக்கிறார் என்று நினைத்த சூர்ப்பனகை, அந்தச் சீதையையே எடுத்துச் சென்று தொலைத்துக்கட்ட நினைக்கிறாள். அவள் சீதயைத் தூக்க முனைகிறபோது இலக்குவன் இடை புகுந்து இலங்கு வாளால் அவள் மூக்கை அரிந்து விடுகிறான். இதனைக் கம்பன் அழகாகப் பாடுகிறான்.

மூக்கும் காதும் வெம்முதால்
முலைக்கண்களும் முறையால்
போக்கி, போக்கிய சினத்தொடும்
புரிகுழல் விட்டான்

என்பதே அவனது பாட்டு. அப்படி சூர்ப்பனகையின் நாசி அறுபட்ட இடமே நாசிக் என்று அன்று முதல் வழங்கி வருகிறது. இந்த தலத்தைப் பழைய புராணங்களில் ஹரிஹர க்ஷேத்திரம் என்றும், பத்மநகரம் என்றும் திரிகண்டகம் என்றும் அழைக்கப்பட்டிருக்கிறது. மொகலாய சக்கரவர்த்தி அவுரங்சீப் இந்த தலம் மிகவும் ரமணீயமான இடம் என்று கண்டு குல்சனாபாத் என்றே அழைத்திருக்கிறார்.

நாசிக் நகரத்தில் நுழைந்து அந்நகரையும் அங்குள்ள கோயில்களையும் சுற்றிப் பார்க்கு முன் அங்கு ஓடும் கோதாவரி நதியின் பிரபாவத்தைக் கொஞ்சம் தெரிந்து

கொள்ளலாம் அல்லவா. இக் கோதாவரி நதி கௌரியின் திருமணக்காலத்தில் பிரமதேவரது கமண்டலத்திலிருந்து வழிந்திருக்கிறாள். அதன்பின் மகாபலிச் சக்கரவர்த்தியின் யாக சாலையில் தோன்றி வாமனரது பாத கமலங்களைக் கழுவிப்பவித்திரம் அடைந்திருக்கிறாள். கோதாவரி, கங்கையுடன் சிவபெருமானது சடாமகுடத்திலேயே தங்கி யிருக்கும் பெருமையும் பெற்றிருக்கிறாள். பகீரதன் தவத் திற்கு இறங்கி கங்கையை வழியவிட்ட சிவனே கௌதமர் விரும்பியபடி கோதாவரியை பிரம்மகிரியிலிருந்து பிரவகிக்கச் செய்திருக்கிறார். அதனாலேயே இவளை கங்கைக்கு மூத்த சகோதரி என்கின்றனர். விருத்த கங்கை என்று கூட இவளுக்கு ஒரு பெயரையும் சூட்டியிருக் கின்றனர். ஹரித்துவார் சென்று அங்கிருந்து ராமேஸ் வரத்தில் உள்ள ராமநாதனுக்கு அபிஷேகம் செய்ய கங்கை நீரை எடுத்து வருபவர்கள் கோதாவரிக் கரைக்கு வந்ததும், தாம் கொண்டு வந்த கங்கையில் கொஞ்சம் எடுத்து அதனைக் கோதாவரியில் கொட்டிவிட்டு, அதற்குப் பதி லாக 'கோதாவரி நீரை கொஞ்சம் எடுத்து அதையும் கங்கையின் நீருடன் சேர்த்துக் கொள்வர். பிரிந்தவர் கூடினால் பேசவும் வேண்டுமோ என்றபடி இப்படி அக்காளும் தங்கையும் கலந்து உறவாடியே ராமநாதனுக்கு அபிஷேகம் நடத்தியிருக்கிறார்கள் என்றும் அறிகிறோம்.

நாசிக் பஞ்சவடி, நகரங்களுக்கு இடையே தக்ஷிண வாகினியாய் ஓடும் இந்த கோதாவரி பின்னர் கிழக்கு நோக்கித்திரும்புகிறது. காசி கோதாவரிக்கு மேற்கிலும் தெற்கிலும் இருக்கிறது. பஞ்சவடி கிழக்கிலும் வடக்கிலும் இருக்கிறது. நாசிக் நகரத்திலிருந்து பஞ்சவடி செல்ல கோதாவரியின் பேரில் ஒரு நல்ல பாலம் கட்டியிருக் கிறார்கள். அது விக்டோரியாவாரவதி என்று அழைக்கப் படுகிறது. இது 1897—ம் வருஷத்தில் கட்டப்பட்டது என்றும் இதைக் கட்டியவர் காசிநாத மகாதேவதத்தே என்றும் அறிகிறோம். இந்தப் பாலத்தைக் கடக்குமுன் இக்

கரையிலே ஒரு அழகான கோயில் இருக்கிறது. அதுவே சுந்தர நாராயணர் கோயில். பெயருக்கு ஏற்ப அங்கு கோயில் கொண்டிருக்கும் சத்திய நாராயணப் பெருமாள் மிக்க அழகு வாய்ந்தவராக இருக்கிறார். ஸ்ரீதேவி பூதேவி சகிதம் கிழக்கு நோக்கிய திருமுகமண்டலத்துடன் நமக்குக் காட்சி தருகிறார். பின்னர் கங்காதர யஷ்வந்த சந்திர சூடர் என்பவர் 1756—இல் கோயிலைக் கட்டினார் என்று தெரிகிறது. இந்த சுந்தர நாராயணன் சந்நிதியில் நாம் வணங்கிவிட்டு பாலத்தைக் கடந்து பஞ்சவடிப் பிரதேசத்தில் நுழையலாம். நாசிக் பஞ்சவடியில் மொத்தம் அறுபது கோயில்கள் வரை உண்டு. அத்தனைக்கும் உங்களை இழுத்தடிக்க விரும்பவில்லை. முக்கியமான ஒரு சில கோயில்களுக்கே அழைத்துச் செல்ல விரும்புகிறேன். பஞ்சவடி தெருக்கள் எல்லாம் நெருக்கமானவை. சுத்தமாகவும் இராது. ஆதலால் பாலம் கடந்ததும் கோதாவரிக்கரைப் பக்கமே சென்று அங்குள்ள கோயில்களைக் காணலாம். அங்கு கோதாவரி அன்னைக்கு ஒரு சிறு கோயில் கட்டியிருக்கிறார்கள். அந்தக் கோயில் திறந்திருக்காது. வருஷம் ஒருமுறை மாசி மகத்தன்று தான் திறக்கிறார்களாம். ஆதலால் சிலை வடிவில் உள்ள கோதாவரி அன்னையை தரிசிக்க வாய்ப்பு கிடையாது. இக் கோயிலை அடுத்தே பல குண்டங்கள், அங்கெல்லாம் ஆடவரும் பெண்டிரும் நீராடிக் கொண்டிருப்பர். கோதாவரி ஸ்நானத்தினால் எவ்வளவோ புண்ணியங்கள் சேரும் என்பார்களே, அங்கு நாமும் இறங்கி நீராட வேண்டாமா' பாகீரதியாம் கங்கையில் அறுபதினாயிர வருஷகாலம் ஸ்நானம் செய்வதும், பிரகஸ்பதி சிம்மராசியில் இருக்கும்போது கோதாவரியில் ஒருமுறை ஸ்நானம் செய்வதும் ஒரே பலனைத் தரும் என்பார்கள். அதற்காக நாம் அந்த நன்னாள் வரும் வரை கோதாவரிக் கரையிலே காத்திருக்க முடியுமா? அதற்கெல்லாம் காத்திராமல் விடு விடு என ஆற்றிற்குள் இறங்கி அங்குள்ள ராமகுண்டத்தில் ஒரு முழுக்குப் போட வேண்டியதுதான், கோதாவரியில் இறங்குமுன் தலைமுடியை

முண்டனம் செய்து கொள்ள வேண்டும் என்பர். அப்படி எல்லாம் முண்டனம் செய்து கொள்ள எல்லோருக்கும் வசதி இராது. மனமும் வராது. இங்கு தனுஷ்குண்டம், சீதாகுண்டம், லக்ஷ்மண குண்டம், அகல்யாகுண்டம் என்று பல குண்டங்கள் இருந்தாலும் அதில் பிரதான குண்டம் ராம குண்டம்தான். அதில் இறங்கி நீராடிவிட்டால், எல்லா குண்டங்களிலும் நீராடிய பலன் கிடைக்கும். ராம குண்டம் எண்பத்திமூன்று அடி நீளமும் நாற்பது அடி அகலமும் உள்ள ஒரு பெரிய தொட்டி. மூன்று நான்கடியே ஆழம் உள்ளது. அடியில் கூட சிமெண்ட் தளம் போட்டு மணலைக் கொட்டியிருக்கிறார்கள். நீர் கலங்கியதாக இருந்தாலும் ஓடிக்கொண்டே இருப்பதால் சுத்தமாகவே இருக்கும். தம்பதி சமேதராக தலயாத்திரை வந்திருந்தால் இருவரும் ஒரே வஸ்திரத்தை உடுத்திக் கொண்டு குண்டத்தில் இறங்கி நீராட வேண்டும் என்பர். இதனையே ஏக வஸ்திரஸ்நானம் என்றும் சொல்லுவார். இப்படிப் புருஷன் மனைவியர் எல்லாம் நீராடுவது தனியே வந்திருப்பவர்கள் மனதில் பொறுமையையே எழுப்பும். இதையெல்லாம்நல்ல நகைச் சுவையுடன் சமாளித்துக் கொள்ள வேண்டியது தான். இராமகுண்டத்திற்கு எதிரே ஒரு மண்டபம். காந்திஜியின் அஸ்தியைக் கரைத்த இடத்தில் காந்தி ஞாபகார்த்தமாகக் கட்டியிருக்கிறார்கள். கோதாவரிக்கு முன்னமேயே இருந்த புனிதத்தன்மை இன்னும் எவ்வளவோ புனிதம் அடைந்து இருக்கிறது, இந்த ஞாபகார்த்தத்தினால். இந்த ராம குண்டத்திற்கு அருகே இரண்டு கோயில்கள், கோதாவரியின் இடது கரையில் இருப்பது கபாலேசுவரர் கோயில். பஞ்சவடியில் உள்ள கோயில்களில் எல்லாம் புராதனமான கோயில் இது தான். பிரம்மாவின் தலைகள் ஐந்து என்றும் அதில் ஒன்றையே சிவன் கிள்ளி எறிந்தார் என்றும் அந்தக் கபாலமே அவரது கையில் ஒட்டிக் கொண்டிருக்கிறது என்றும், அந்தக் கபாலத்தை ஏந்தியே அவர் பிக்ஷாடனனாக வருகிறார் என்பதும் புராணக் கதை. சென்னையில் உள்ள

மயிலாப்பூரில் நாம் கபாலியைத் தரிசித்து வணங்கியிருக்கின்றோம். அதே கபாலீஸ்வரரே இக் கோதாவரிக் கரையிலும் கோயில் கொண்டிருக்கிறார். இக்கோயில் செல்ல சில படிகள் ஏறவேண்டும். கோயில் வாயிலில் செந்நிறத்தில் ஒரு அனுமாரும் வெள்ளைப் பளிங்கில் ஒரு விநாயகரும் நின்ற கோலத்தில் காட்சி அளிப்பார்கள். இவர்களை வணங்கிய பின்பே கோயிலுள் நுழையவேண்டும். வழக்கமாக எல்லாசிவன் கோவில்களிலும் இருப்பதுபோல் இங்கு நந்திப்பெருமான் இருக்க மாட்டார். பிரம்மாவின் சிரசைக் கிள்ளியதால் ஏற்பட்ட பிரமஹத்தி தோஷம் நீங்க நந்தியே குருவடிவில் வந்து உபதேசம் செய்தார் என்பதனால் குருவை தனக் கெதிர பபடுத்துக்கிடக்கும் கோலத்தில் வைத்துக் கொள்ள சிவன் விரும்பவில்லை போலும். இங்குள்ள கபாலேசுவரரை வணங்கிவிட்டு கோதாவரியைக் கடந்து எதிர் திசைக்கு வந்தால் அங்கு ஒரு விட்டோபா கோயில். பண்டரிபுரத்தில் இருந்த விட்டோபா இங்கு எழுந்தருளியிருப்பதன் காரணம் என்ன என்பதை அறிய விரும்புவோம். ஆம். இந்த விட்டோபா என்னும் பாண்டுரங்கன்பண்டரிபுரத்தை விட்டு வெளியே வர விருப்பம் இல்லாதவன் என்பதை ஹம்பியிலேயே பார்த்திருக்கின்றோம். அந்த விஜயநகரத்து மன்னன் கிருஷ்ணதேவராயன் ஓர் அழகிய கோயிலைக் கட்டி அதில் விட்டோபாவை இருத்திவிட எண்ணினான் என்பதும், இந்த விட்டோபா அங்கு செல்ல மறுத்து விட்டார் என்பதையும் முன்னரே அறிந்திருக்கிறோம். அந்த விட்டோபாஅங்கு மாத்திரம் எப்படிவந்தார் என்றுகேட்கத் தோன்றும் நமக்கு. ,அதற்கு ஒரு கதையையும் கேட்கலாம். பஞ்சவடியில் இருந்த விசுவநாத சர்மா என்பவர் யாத்திரிகர்கள் பலருடன் பண்டரிபுரம் சென்று பாண்டுரங்கனைத் தரிசிக்க விரும்பியிருக்கிறார். முதுமை காரணமாக உடலில் தளர்ச்சி தோன்றிவிட துவங்கிய பயணத்தை தொடர்ந்து நடத்த சக்தி அற்றவராக இருந்திருக்கிறார். என்றாலும், பண்டரிநாதனும் விட்டோபாவைக் காணும்

வரை உண்ணேன், உறங்கேன் என்று சபதம் செய்திருக்கிறார். அன்பன் ஒருவன் பட்டினிக் கிடக்கின்றானே என்று அறிந்த விட்டோபா அந்த அன்பனுக்குத் தரிசனம் கொடுக்க பஞ்சவடிக்கே ஓடி வந்திருக்கிறார். வந்தவர் இங்கேயே நிரந்தரமாகத் தங்கி இருந்திருக்கிறார், நமக்கும் தரிசனம் கொடுக்க. பக்தர்கள் இறைவன் இருக்கும் இடம் தேடிச் செல்ல வேண்டியதில்லை. இறைவனே அவர்கள் இருக்கும் இடம்தேடி ஓடி வந்துவிடுவான். கைலைகாண விரும்பிய அப்பருக்கு ஐயாற்றிலேயே கைலையைக் காணவகை செய்யவில்லையா அந்தக் கைலாய நாதன்? இந்த விட்டோபாவையும் வணங்கி விட்டுத் திரும்பவும் கோதாவரியின் மறு கரைக்குச் சென்று மற்ற கோயில்களையும் பார்க்கலாம்.

கபாலீசுவரர் கோயிலைப் போல் பெரியதொரு கோயில்தான் காளேராமர் கோயில். அஞ்சன மேனியனான ராமனையே காளே ராமர், கறுத்த ராமர் என்று அழைத்து இருக்கிறார்கள். நல்ல மதில்களோடு கூடிய கோயில் அது. கருவறையில் நல்ல கறுப்புச் சலவைக்கல்லில், ராமர், சீதை லக்ஷ்மணன் மூவரும் இருக்கிறார்கள். அல்லையாண்டு அமைந்த மேனி அழகன் ராமன் மாத்திரம் இல்லை. சிவந்த மேனியையுடைய சீதையுமே, இங்கே அல்லையாண்டு அமைந்த அழகியாகத்தான் இருக்கிறாள். இக்கோயிலின் சபாமண்டபம் மிகப்பெரியது. 75—நீளமும் 32 அகலமும் உடையது. நாற்பது தூண்கள் அதைத் தாங்கி நிற்கின்றன. இக்கோயில் கட்ட பன்னிரண்டு வருஷம் பிடித்தது என்றும், பத்து லட்சம் ரூபாய் செலவு ஆயிற்று என்றும் சொல்கிறார்கள். இங்கு நிவேதனத்திற்கு மஞ்சள், குங்குமம், எள், சர்க்கரைதான் பக்தர்கள் எடுத்துச் செல்கிறார்கள். எள்ளுருண்டையை உண்டு கொண்டே ராம, லட்சுமண, சீதை பஞ்சவடியில் காலங்களித்தார்கள் போலும்.

இந்த ராமர் கோயிலுக்கு அருகில்தான் பஞ்சவடி என்று அத்தலத்திற்குப் பெயர்வரக் காரணமாக இருந்த

ஐந்து ஆலமரங்கள் இருக்கின்றன. அதற்குப் பக்கத்திலே தான், சீதா குகையென்னும் குகை இருக்கும். குகை பூமி மட்டத்திற்கும் கீழே இருக்கிறது. 60 அடி நீளமுள்ள படிகளில் இறங்கிச் சென்றால் பத்தடி சதுரமுள்ள ஓர் அறை இருக்கிறது. அங்கு ராமர் லக்ஷ்மணன் சீதை மூவரும் சிலை உருவில் இருக்கிறார்கள். இவர்களுக்கும் வணக்கம் செலுத்திவிட்டு மேல் நடக்கலாம்.

இந்த பஞ்சவடிக்குப் பக்கத்திலேதான் நாட்டுக் கோட்டை நகரத்தார் மடம் ஒன்றிருக்கிறது. தமிழ் நாட்டு யாத்திரிகர்கள் தங்குவதற்கு வசதியான இடம். மேலும் இங்குதான் நாம் தண்டபாணியாம் முருகனைக் காணவும் வணங்கவும் கூடும். மடத்திற்குள்ளேயே சிறு கோயிலாக அமைத்து வைத்திருக்கிறார்கள்.

இந்த நாசிக் பஞ்சவடியில் நாம் பார்க்க வேண்டிய இடங்கள் இன்னும் இரண்டு உண்டு. ஒன்று இரண்டு மைல் தொலைவில் உள்ள தபோவனம். மற்றொன்று ஐந்து மைல் தூரத்தில் உள்ள பாண்டவலேணி தபோவனம். கபிலநதி வந்து கோதாவரியுடன் சேரும் இடத்தில் இருக்கிறது. இங்குதான் மாரீசன் பொன்மானாக வந்து இராமனையும் சீதையையும் பிரித்தான் என்கின்றார்கள். ஆற்றின் நடுவிலே அஷ்டகுண்டம் என்னும் எட்டுக்குழிகள் இருக்கின்றன. அதில் ஒன்றின் பக்கத்திலேதான் இலட்சுமணன் சூர்ப்பனகையின் மூக்கைக் கொய்வதுபோல ஒரு சிலை அமைந்திருக்கிறது. சூர்ப்பனகையைப் போலவே அச்சிலையும் அழகானதாயில்லை. கலை அன்பர்கள் சென்று காண வேண்டிய இடம் பாண்டவலேணி என்னும் பஞ்ச பாண்டவர் குகை. மாமல்லபுரத்தில் உள்ள கல் ரதங்களுக்கும் பாண்டவர்களுக்கும் எவ்வளவு தொடர்பு உண்டோ, அவ்வளவு தொடர்புதான் பஞ்சபாண்டவர்களுக்கும் இந்தப் பாண்டவலேணி என்னும் குடைவரைகளுக்கும். அடிவானத்திலிருந்து முன்னூறு அடி உயரத்தில்

24 குடைவரைகள் வரிசையாக வடக்கு நோக்கி அமைந்திருக்கின்றன. அவை எல்லாம் பௌத்த சைத்தியங்கள், விகாரங்கள். மிக்க சிறப்பு வாய்ந்தவை அல்ல. இதைவிட மிக்க அழகோடு சிற்பமும் நிறைந்த அஜந்தா எல்லோராக் குடைவரைகளுக்குத்தான் செல்வதாக இருக்கின்றோமே ஆதலால் இங்கு அதிகநேரம் செலவிட வேண்டாம். பௌத்த குடைவரைகளைக் காணாது திரும்பி விட்டோமே என்ற குறையில்லாமலே இவைகளையும் பார்த்த திருப்தியோடயே திரும்பி விடலாம்.

# 23. சீரடி சாயிபாபா

மகா பக்த விஜயத்திலே மகாத்மா கபீர்தாஸர் வரலாறு விரிவாகக் கூறப்படுகிறது. கபீர் தாஸர் பிறவியிலே முசல்மான். ஆனால் ராம பக்தர்களுக்குள் சிறந்த ராம பக்தராக விளங்கியவர். இவரது பாடல்கள் கேட்போரை மெய்மறக்கச் செய்யும் சக்தி வாய்ந்தவை. பாடல்கள் மூலம் பக்தியைப் பரப்பியவர்கள் நமது நாயன்மார்களும் ஆழ்வாரடியார்களும் மாத்திரம் அல்ல கபீர் போன்ற பக்த சிகாமணிகளுமே என்பதை நாம் எல்லோரும் அறிவோம். இந்த முஸ்லிம் பக்தர் ராமனிடத்து அத்யந்த பக்தியுடையவராக வாழ்ந்திருக்கிறார். 'ராமன் என்று வேண்டுமானாலும் சொல், இல்லை ரஹீம் என்று வேண்டுமானாலும் சொல் இறைவன் ஒருவனே என்பதுதான் இவரது சித்தாந்தமாக இருந்திருக்கிறது. 'ஹரிபோலோ பாயி ஹரி போலோ' என்று பாடல் கபீர்தாஸரது பாடல்களிலே பிரசித்தமானது. பஜனை பண்ணும்போது கபீர் தாஸரது பாடல்களைப் பாமரர்களும் பாடி பக்தி மேலீட்டால் மெய் சிலிர்ப்பர் என்பது பலரது அனுபவம். இப்படி முஸ்லீமாகப் பிறந்து, ராம பக்தியில் திளைக்கும் ஒரு மகாத்மாவை பக்த விஜயத்தில் மாத்திரம்தான் பார்க்கிறோம் என்றில்லை. இந்த நூற்றாண்டிலும் நம்மிடையே உலவி முஸ்லிம் இந்து என்ற வேற்றுமைகளை எல்லாம் களைந்து எறிவது, எல்லோரையும் நல்லவர்களாக்கி அவர்களுக்கு எல்லாம் நல்வாழ்வு தந்தவராகவும் வாழ்ந்திருக்கிறார் ஒருவர். அவரே சாயிபாபா என்ற மகாத்மா. அவர் ஒரு முஸ்லிம் பக்கிரியால் வளர்க்கப்பட்டிருந்தாலும், இன்றுஅவரை எண்ணிறந்த இந்துக்கள் தெய்வமாகவே போற்றி வழிபடுகின்றனர். அப்படி வழிபடுவதால் நோய் நீங்குகின்றனர். துன்பம் தவிர்க்கின்றனர். இன்னும்

எண்ணிய எண்ணியாங்கு எய்தி வாழும் பேற்றையுமே பெறுகின்றனர். அந்த மகான் தங்கியிருந்த இடம்தான் சிர்டி என்பது. இதனை நல்ல தமிழில் சீரடி என்றும் சொல்லலாம். சாயிபாபா என்னும் மகானின் சீரடியில் விழுந்து வணங்கி அருள்பெறவே நாம் இன்று அந்தச் சீரடிக்குச் செல்கின்றோம்.

சீரடி, பம்பாய் ராஜ்ஜியத்தில் அகமத் நகர் ஜில்லாவில் உள்ள ஒரு சிறிய ஊர். பூனாவிற்குக் கிழக்கேயுள்ள டோன்ட் சந்திப்பிலிருந்து வடக்கு நோக்கி மான்மாட் செல்லும் ரயிலில் சென்றால் அகம்மது நகரைக் கடந்து கோப்பர்காள் என்ற ஊருக்கு வந்து சேருவோம். இங்கு இறங்கி அங்கிருந்து பன்னிரண்டு மைல் வடமேற்கு நோக்கிச் சென்றால் சீரடி வந்து சேரலாம். சாயிபாபா சமாதியாகியிருக்கிற இடத்தில்தான் சாயிபாபா மந்திர் என்ற கோயிலைக் கட்டியிருக்கின்றனர். அக் கோயிலுக்குத் தான் எண்ணிறந்த பக்தர்கள் நாட்டின் பல பாகத்திலிருந்தும் வந்து வழிபாடு செய்து திரும்புகின்றனர்.

இக்கோயிலுக்குச் செல்லுமுன், சாயிபாபா என்றால் யார், அவர் வரலாறு என்ன என்பதையும் கொஞ்சம் தெரிந்துக் கொள்ள வேண்டாமா? பாபாவின் பூர்வோத்தரம், பிறப்பு முதலியவைகளைப் பற்றிச் சொல்லக்கூடியவர்கள் ஒருவருமே இல்லை என்றாலும் பாபா சொன்னவைகளினின்று அவரது பக்தர்கள் ஊகித்துத் தெரிந்து கொண்டவற்றையே சிலர் சொல்லிவருகிறார்கள். கிட்டத் தட்ட நூற்று ஐம்பது வருஷங்களுக்கு முன்னால் அதாவது 1820-ம் வருஷத்தை ஒட்டி, அன்றைய நைஜாம் ராஜ்யத்தில் உள்ள பாத்ரி என்ற கிராமத்தில் ஓர் அந்தணர் குடும்பத்தில் பாபா பிறந்திருக்கிறார். பெற்றோர் மிகவும் ஏழைகளாகவே வாழ்ந்து இருக்கின்றனர். பாபாவுக்கு ஐந்து வயது நிரம்புகிறபோது, அக்கிராமத்திற்கு வந்த முகம்மதிய பக்கிரி ஒருவர், பாபாவைத் தன்னுடன்

அழைத்துச் சென்றிருக்கிறார். பல வருஷ காலம் இந்த முகம்மதிய பக்கிரியால் வளர்க்கப்பட்டிருக்கிறார் பாபா. பக்கிரி உயிர் நீத்தபோது, பாபாவை சேலூரிலிருந்த கோபால்ராவ் தேஷ்முக் என்ற பெரியாரிடம் ஒப்படைத்திருக்கிறார். அப்பெரியாரோ வட வேங்கடவரான, திருப்பதி வேங்கடேசனின் அத்யந்த பக்தர். அப்பெரியாரிடமே பாபா பத்து வருஷ காலம் தங்கியிருந்திருக்கிறார். இக்காலத்தில்தான் அவர் வேங்கடவனது அருளுக்கு ஆளாகியிருந்திருக்கிறார். இங்கிருந்துதான் பாபா தனது கடைசி காலத்தில் சீரடியில் வந்து தங்கியிருக்கிறார்.

சீரடியில் கிட்டத்தட்ட ஐம்பது ஆண்டுகள் தங்கியிருந்திருக்கிறார். சீரடிக்கு வந்து சில வருஷ காலம் ஒரு வேப்பமரத்தடியிலேயே தங்கி வாழ்ந்திருக்கிறார். அங்கேயே அவர் நிலையாக இருக்கவும் இல்லை. அடிக்கடி ஊர் சுற்றும் பக்கிரியாக அலைந்து திரிந்து இருக்கிறார். இப்படி ஊர் சுற்றித் திரும்பியபொழுது ஒருநாள் சீரடியில் உள்ள ஒரு கோயிலுக்குள் நுழைந்திருக்கிறார். அப்போது அக்கோயில் நிர்வாகியாயிருந்தவர் பாபாவின் நடை உடையெல்லாம் மகம்மதிய பக்கிரியைப் போலிருப்பதால், அவரை கோயிலுள்விட மறுத்துவிட்டார். ஆகவே இப்படிக் கோயிலில் இருந்து துரத்தப்பட்ட பாபா, பக்கத்தில் இடிந்து கிடந்த ஒரு பழைய மசூதிக்குள் நுழைந்து அதையே தன்னுடைய இருப்பிடமாகக் கொண்டிருக்கிறார். அதன் பின் எங்கு சுற்றினாலும் இந்த மசூதியில் வந்து தங்குவதை வழக்கமாகக் கொண்டிருக்கிறார். மசூதிக்கு வெளியில் கிடந்த ஒரு பெரிய பாறை மீது பலமணி நேரம் இருந்து, தியானித்துக்கொண்டிருப்பாராம். சில சமயம் பழைய வேப்பமரத்தை நாடி அதன் அடியில் உட்கார்ந்திருப்பாராம். முஸ்லீம்கள் சொல்லும் நமாஸ் என்னும் பிரார்த்தனையையும், செய்வாராம். எல்லாவற்றையும் விட தான் வசித்த மசூதியில் விளக்கு ஒன்றை ஏற்றி அதனை அணைந்து போகாமல் நந்தா விளக்காக பரா

மரித்து வந்திருக்கிறார். அவருக்கு விளக்குகளை ஏற்றி அந்த ஒளியில் அருட்பெருஞ் சோதியாம் இறைவனைக் காண்பதே பொழுது போக்காக இருந்து வந்திருக்கிறது. இப்படி வாழும் பக்கிரியாம் பாபாவிடம், கிராம மக்கள் முதலில் நெருங்காவிட்டாலும் நாளடைவில் நெருங்கி வந் திருக்கின்றனர். உணவு முதலியன கொண்டு வந்து கொடுத் திருக்கின்றனர். இவருக்கோ தனக்கு உணவு என்பதைவிடத் தான் எரிக்கும் விளக்கிற்கு எண்ணெய் வேண்டுவதே பிரச் சினையாக அமைந்திருக்கிறது. அதற்காக அந்த வட்டா ரத்திலுள்ள வர்த்தகர்களை அணுகி எண்ணெய் பெற்றி ருக்கிறார், விளக்கெரித்திருக்கிறார். ஒரு நாள் அவரிடம் எண்ணெய் இல்லாதிருந்திருக்கிறது. அன்று எப்போதும் வழக்கமாகக் கொடுக்கும் வியாபாரிகளும் எண்ணெய் கொடுக்க மறுத்திருக்கின்றனர். அதனால் சிறிதும் கவலை யுறாமல், தன் பக்கத்தில் உள்ள பாத்திரத் தில் இருந்த தண்ணீரையே விளக்குகளில் ஊற்றி யிருக்கிறார். விளக்குகளும் விடிய விடிய தண்ணீ ராலேயே எரிந்திருக்கின்றன. இந்த அதிசய சம்ப வத்தை கிராம மக்கள் ஒரு சிலர் பார்த்திருக்கின்றனர். செய்தி பரவ ஆரம்பித்திருக்கிறது. அதன் பின் தான் வட்டார மக்கள் இவரை ஒரு பெரிய மகான் என்று மதித் திருக்கின்றனர். இவரது தெய்வத்தன்மையை உணர்ந்திருக் கின்றனர். அதன் பின்பே அவரைச் சாயிபாபா என்று அழைத்து வந்து வணங்கியிருக்கின்றனர். சாயி என்றால் பாரசீக பாஷையில் மகான் என்று பொருள். பாபா என் றால் இந்தியில் தந்தை என்று பொருள். மக்களுக்கு எல் லாம் தந்தை போன்றவர் இந்த மகான் என்பதாலேயே சாயி பாபா என்று அழைத்திருக்கின்றனர்.

இதன் பின்னர்தான் பாபாவின் மகிமையை மக்கள் அறிய ஆரம்பித்திருக்கின்றனர். அவரை அணுகியவர் களுக்கு நோய் நீங்கிற்று. துன்பம் விலகிற்று, எண்ணியது முற்றுப் பெற்றது என்ற முறையில் நல்ல காரியங்கள்

நடந்தன. முதலில் இப்படி தத்தமக்கு ஏற்பட்ட குறை களை நிவர்த்திக்கவே மக்கள் பாபாவை வந்து கண்டனர். நாளடைவில் பாபாவை பக்தர்கள் ஆத்ம திருப்தியும் கடவுளை அறியும் அறிவும், அவர் தாள் அடைதலில் உள்ள ஆனந்த அனுபவமும் பெறலாயினர். 'எவர் எதை விரும்புகிறார்களோ அதையே அவர்களுக்கு நான் அளிக் கிறேன். ஆனால் அவர்களாகவே நான் எதைக் கொடுக்க விரும்புவேனோ அதையே கேட்கிறார்கள். என்று பாபாவே பலதடவை சொல்லியிருக்கிறார், இன்னும் பாபாவைக் கண்டு அருள் பெற்றவர்கள் எல்லாம் பாபாவின் கருணை நோக்கைப் பற்றி விரிவாகக் கூறுகின்ற னர். பாபாவின் கண்கள் தீக்ஷண்யமானவை. அவரது கண் களை ஒருவரால் நீண்டநேரம் பார்த்துக் கொண்டிருத்தல் இயலாது.அவரதுபார்வை நமது உள்ளத்தை ஊடுருவி நாம் எண்ணுவன எல்லாம் அறியும் ஆற்றல் உடையது. 'நாம் முன் செய்த காரியங்கள், இன்று செய்கின்ற காரியங்கள், நாளைச் செய்ய நினைக்கும் காரியங்கள் எல்லாவற்றையுமே உணரும் ஆற்றல் பெற்றவர். ஆதலால் அவரிடம் சரணாகதி அடைவதால் நமக்கு ஏற்படும் நன்மைகள் பலப் பல. நமக்கு வேண்டுவன எல்லாவற்றையுமே அவரே கவனித்துக் கொள்வார்' என்று ஸ்ரீமதி மானேஜர் என்ற பக்தை கூறுகிறார். பாபாவின் தரிசன மகிமை யினாலேயே பல வருஷ காலம் தீராத நோயால் துன்பப்படுபவர்கள் எல்லாம் நோய் நீங்கி சுகம் பெறுகின்றனர். இத்தனைக்கும் அவர் தான் வளர்த்த அக்னியிலிருந்து கொஞ்சம் உத்தி அதாவது சாம்பலைத் தவிர வேறு மருந்தே கொடுப்பதில்லை. இன்னும் சீரடிக்கு வந்து தரிசனம் செய்துதான் நோய் நீங்கவேண்டும் என்ப தில்லை. இருந்த இடத்திலிருந்தே பாபாவை நோக்கிப் பிரார்த்தனை செய்து நோய் நீங்கியவர்களும் உண்டு. உடற் பிணிகளை மட்டும்தான் அவர் போக்குகிறார் என் றில்லை. பரீட்சையில் பாசாகவேண்டுமா? வேலைகிடைக்க வேண்டுமா, வழக்குகளில் வெற்றி பெற வேண்டுமா?

திருமணம் நடை பெற வேண்டுமா இன்னும் இதுபோன்ற எத்தனையோ காரியங்கள் எல்லாம் பாபாவை பிரார்த்திப் பதின் மூலம் நிறைவேறி இருக்கிறது என்பது பாபா பக்தர்களது நம்பிக்கை. ஆம், நானிருக்க பயமேன்! என்பது தானே அவரது தாரக மந்திரமாக இருக்கிறது. அத்தனை நம்பிக்கையோடு அணுகுகிறவர்களுக்கு அவரது அருள் காக்கிறது. இன்பம் பெருகுகிறது.

இந்த சாயிபாபா 1918-ல் சீரடியில் சமாதி ஆகியிருக் கிறார். அவரது உடலைசமாதியில் வைத்து அச்சமாதியின் பேரிலேயே கோயில் கட்டியிருக்கிறார்கள். அக்கோயிலே இந்துக்களுக்கு காசியாகவும், மகம்மதியர்களுக்கு மெக்கா வாகவும் இருந்து வருகிறது. கோயில் பெரிய பங்களா போல இரண்டு அடுக்கு மாடியுடன் விளங்குகிறது. கோயி லைச் சுற்றியும் பல கட்டடங்கள்க் கட்டி, வருபவர்கள் தங்க வசதி செய்திருக்கின்றனர். முதற்கட்டில்தான் அவருடைய சமாதிக் கோயில் இருக்கிறது. அங்கு சலவைக் கல்லில் அவரது உருவத்தைச் சமைத்து வைத்திருக் கின்றனர். அங்குதான் காலை 5 மணிக்கே ஆராதனை நடக்கிறது. பஜனைப் பாடிக் கொண்டேதான் ஆராதனை நடக்கிறது. அந்தக் கட்டிலேயே ஒரு கண்ணாடி அறை யில் அவர் உபயோகித்த பாதுகை, ஆடை முதலியவை களைப் பத்திரப் படுத்தி, வருபவர்கள் காண்பதற்கு வசதி செய்திருக்கிறார்கள். கோயிலை ஒரு சிறு சிகரம் அணி செய்கிறது.

கோயிலுக்கு கீழ்ப் புறத்தில் அவர் தங்கியிருந்த மசூதி யில் அவருடைய படமும் அவர் யாசித்து வைத்தகோதுமை யும் வைத்திருக்கின்றார்கள். அவர் மூட்டிய அக்கினியை யும் இன்றுவரை அணையவிடாமல் பாதுகாத்து வருகிறார் கள். கோவிலுக்கு மேல் புறத்தில் அவர் தங்கியிருந்த வேப்பமரம் இருக்கிறது. அதனைச் சுற்றி ஒரு பளிங்குக்கல் மேடை கட்டியிருக்கிறார்கள். அதில் ஒரு சிவலிங்கமும் திரு. நந்தி தேவரும் அமைத்திருக்கிறார்கள். அந்த

வேப்ப மரத்தின் இலை கசப்பாக இல்லை. சிறிதே துவர்ப்பு உடையதாக இருக்கிறது. அந்த இடத்தைச் சுற்றியுள்ள அறைகளிலே பல சந்நியாசிகள் இருக்கின்றனர். அவர்களுக்கு எல்லாம் இலவசமாக உணவு வழங்கப்படுகிறது. ஒவ்வொரு வியாழக்கிழமை இரவும் சாயிபாபாவின் திருவுருவப்படம் ஒன்றைப் பல்லக்கில் வைத்து உலா வரச் செய்கின்றனர். நூற்றுக்கணக்கான பக்தர்கள் அந்த உலாவில் கலந்து கொள்கின்றனர்.

இத்தனை சொல்கிறீர்களே, பாபா இந்துவா, இல்லை முகம்மதியரா என்று திட்டவட்டமாகச் சொல்லவில்லையே என்று நீங்கள் முணு முணுப்பது என் காதில் கேட்கிறது. முன்னமேயே சொல்லியிருக்கின்றேன். இந்து அந்தணர் குடும்பத்தில் அவர் பிறந்திருக்கிறார். மகம்மதியப் பக்கிரி ஒருவரால் வளர்க்கப்பட்டிருக்கிறார். திருப்பதி வேங்கடேசர் அருளுக்குப் பாத்திரமான ஒரு பெரியவரோடு வாழ்ந்திருக்கிறார். தாடியும் மீசையும் கொண்டவராய் முக்காடிட்டுக் கொள்ளும் வழக்கமுடையவராய் இருந்த காரணத்தால் அவர் மகம்மதியப் பக்கிரியாகத் தோன்றினாலும், உள்ளத்தால் அவர் மதங்களுக்கெல்லாம் அப்பாற்பட்ட பரம ஞானியாகவே அவர் வாழ்ந்திருக்கிறார். தன்னை அறிந்து இன்புற்று தானும் சிவமும் வேறல்ல என்று உணர்ந்தவராகி ஜாதியும் மதமும் பாராட்டாது வாழ்ந்திருக்கிறார். பாபா தன்னிடம் வரும் பக்தர்களை எல்லாம் அவரவர் மதக் கொள்கையின் படியே நடக்கச் சொன்னாரே அன்றி, உலகில் 'இந்த மதம் தான் உயர்ந்தது, இது தாழ்ந்தது' என்று ஒரு பொழுதும் சொன்னவரல்ல. தன்னிடம் வரும் இந்துக்களிடம், உங்கள் ராமனைத் துதியுங்கள், உங்கள் முன்னோர்கள் ஆராதித்த விக்கிரகங்களையே ஆராதியுங்கள் என்று கூறியிருக்கிறார். தன் கையாலேயே வெள்ளிப் பாதுகைகள், காசுகள் படங்கள், முதலியவைகளை எடுத்துக் கொடுத்து அவைகளைப் பூஜை செய்யுமாறு பணித்திருக்கிறார்.

தன்னிடம் வந்த மகமதியர்களுக்கு இவைகளில் ஒன்றை யும் அவர் கொடுத்ததில்லை. அவரவர் மதாச்சாரத்தின் படியே பஜனை செய்யச் சொல்லித்தான் உபதேசித்திருக் கிறார். பாபாவை ஸ்ரீமத் நாராயணன் என்று இன்று பலரும் பூஜிக்கிறார்கள். ஆம். அவரை மகம்மதியராக நினைத்தவர்களுக்கு மகம்மதியராகவும், இந்துவாக நினைத்த வர்களுக்கு அவர் இந்துவாகவும் இருந்திருக்கிறார். முகம்மதியர்களுக்கு குரானை விளக்கியிருக்கிறார். இந்துக்களுக்கு அவர்கள் சாஸ்திரத்தை விளக்கியிருக் கிறார். பலருக்கு அவர் கண் கண்ட தெய்வமாகவே காட்சி அளித்திருக்கிறார். அவர்களது உள்ளத்தில் அருளாட்சி புரிந்திருக்கிறார். இப்படி ஒரு மகான் இந்த நூற்றாண்டில்.

# 24. எல்லோராக் கைலாயர்

இன்று இந்திய நாட்டிலே இமயத்தின் சிகரத்திலே அண்டை நாட்டுச் சீனன் ஆக்கிரமிப்புச் செய்கிறான். அவனை முறியடிக்க பாரத மக்கள் அனைவரும் திரண்டு எழுகின்றனர். இதேபோல எவ்வளவோ காலத்திற்கு முன்பு, அந்த இதிகாச காலத்திலேயே இமயத்தையே பெயர்த்து எடுக்க ஒரு முயற்சி நடந்திருக்கிறது. அப்படி முயற்சி செய்தவன் தசமுகன் என்னும் பத்துத் தலை இராவணன். அவன் எப்படித் தன் முயற்சியில் தோற்றான் என்பது ரசமான கதை. கதை இதுதான்.

ஒரு நாள் கைலாயத்தில் கைலாய நாதனான பரமேஸ்வரன் பார்வதியோடு உல்லாசமாக இருந்திருக்கின்றார். அச்சமயத்தில் இராவணன் அப்பக்கம் வந்திருக்கிறான். எதைக் கண்டாலும் அதைப் பெயர்த்து எடுக்கும் தோள்வலி பெற்றவன் அல்லவா? அதனால் தன் தோளில் ஏற்பட்ட தினவைத் தீர்க்க, அந்த கைலைமலையையே பெயர்த்தெடுக்க எண்ணியிருக்கிறான். மலைக்கு அடியிலே கையைக் கொடுத்து மலையையே பெயர்த்தெடுக்க ஒரு அசைப்பு அசைக்கிறான். மலையும், மரனும் மாணிக்கக்கற்பாறைகளுமே ஆட்டம் கொடுத்திருக்கிறது. பார்வதியே இந்த நிலைகுலைவினால் அஞ்சுகிறாள். அந்த அச்சம் காரணமாக தன் பக்கத்தில் இருந்த இறைவனை அப்படியே கட்டிப்பிடித்துக் கொள்கிறாள். மோனத் தவத்திலிருந்த இறைவன் விஷயத்தை அறிகிறான். தன் வலது கால் கட்டை விரலால் மலையை ஒர் அழுத்தி அழுத்துகிறார். அவ்வளவுதான். தசகண்ட ராவணன் மலையின் அடியிலேயே அகப்பட்டுக் கொள்கிறான். அவன் தலை நொறுங்குகிறது. விழி பிதுங்குகிறது. இந்த நிலையில் ராவணன் தான் தப்ப ஒரு வழிதேடுகிறான். அவனுக்குத் தெரியும், இன்னிசையாய் இசைப்

பயனாய் விளங்குபவன் இறைவன் என்று. உடனே தன் தோளில் கிடந்த வீணையை எடுத்து மீட்டி அதில் சாம கானத்தை இசைக்கிறான். அவ்வளவுதான். அந்த இசையில் மயங்குகிறார் இறைவன். ஊன்றிய விரலின் அழுத்தம் குறைகிறது. உடனே தப்பினோம் பிழைத்தோம் என்று ராவணன் எழுந்து மீசையில் ஒட்டிய மண்ணை உதறி விட்டு ஓடிவிடுகிறான். இந்த வரலாற்றை கவிஞர்கள் பாடு கிறார்கள். பக்தர்கள் போற்றுகிறார்கள்.

'மருஉற்ற மலர்க்குழலி மடவாள்
அஞ்சமலை துளங்கத்
திசைநடுங்கச் செறுத்து நோக்கி
செரு உற்றவாள் அரக்கன் வலிதான்
மாளத் திருஅடியின்
விரல் ஒன்றால் அலற ஊன்றி'

யதை நாவுக்கரசர் அழகாகப்பாடி மகிழ்கிறார். இப்படி அப்பர் பாடி மகிழ்ந்ததையே தமிழ்நாட்டுக் கலைஞன் ஒரு வனும் கண்டு மகிழ்ந்திருக்கிறான். அவன் கண்ட காட் சியையே அற்புத சிலைவடிவாக அமைத்து அந்தப் பழை யாறைக் கோயிலிலே நிறுத்தியும் வைத்திருக்கிறான். இப்படி சோழர் மன்னர் கட்டிய பழையாறையிலே சிலை வடிவில் உருவான அரியதொரு கற்பனையே, வடநாட்டில் விந்தியத்திற்குத் தெற்கே எல்லோராக் குடைவரையிலும் உருவாகியிருக்கிறது. அக் குடைவரை யையே கயிலாய நாதர் கோயில் என்கின்றனர். அக் கயிலாய நாதர் கோயில் குடைவரையையும் உள்ளடக்கிய பிரம்மாண்டமான கலைக்கோயில்களான குடைவரை களைக் காணவே நாம் இன்று எல்லோரா செல்கிறோம்.

எல்லோரா இன்றைய மகாராஷ்டிர ராஜ்ஜியத்தில் அவுரங்காபாத் அருகில் இருக்கிறது. பம்பாயிலிருந்து செல் வோர் மண்மாட் ஸ்டேஷனில் வண்டி மாற்றி அவுரங்காபாத் சென்று சேர வேண்டும். தௌலதாபாத்

எல்லோரா ரோட் ஸ்டேஷன்களிலும் இறங்கிச் செல்ல லாம் என்றாலும், அங்கிருந்து எல்லோரா செல்ல டாக் சியோ, வண்டியோ கிடையாது. ஆதலால் அவுரங்காபாத் ஸ்டேஷனில் இறங்கி அங்குள்ள அரசினர் விடுதியில் தங்கி இளைப்பாறிக் கொண்டு, பின்னர் டாக்ஸி ஏற்பாடு பண்ணி மேற்கு நோக்கி பதினேழு மைல் செல்ல வேண்டும். அப்படிச்செல்வதற்கு முன்பே அவுரங்காபாத்தில் உள்ள சில கட்டிடங்களையும் பார்க்கலாம். இங்கு தாஜ்மஹாலைப் போன்ற ஒரு சிங்காரக் கட்டிடம் இருக்கிறது. இதனை பீபிகாமக்பாரர் என்று அழைக்கின்றனர். அது ரபியா தூனி என்ற பாத்திமா பேகம் பெயர் கொண்ட அவுரங்கசீப்பின் மனைவியின் ஞாபகார்த்தமாக ஆஜம்ஷா என்பவன் கட்டியிருக்கிறான் என்று சரித்திர ஏடுகள் பேசு கின்றன. அசப்பில் பார்த்தால் தாஜ்மஹாலைப் போலவே இருக்கும், என்றாலும் தாஜ்மகால் அமைந்திருக்கும் இடத்தைப்போல் ரமணீயமான இடத்தில் அமைந்திருக்க வில்லை. அதைப்போல் கவர்ச்சியாகவும் இல்லை. இந்த நகரிலிருந்து 14—மைல் தொலைவில் உள்ள குல்தாபாத்தில் அவுரங்கசீப்பின் சமாதியும் இருக்கிறது. அவுரங்கசீப், முகம்மதுநபி கூறிய நெறியில் நடந்த நல்ல முஸ்லீம். தன்னை அடக்கம் செய்வதற்கு சர்க்கார் கஜானாவில் இருந்து ஒரு பைசாக்கூட செலவு செய்யக்கூடாது என்று திட்டமிட்டு தன் வாழ் நாள் முழுவதும் குல்லாய்கள் தைத்து அவைகளை விற்றுச் சேர்த்த பணத்தைக் கொண்டே தனக்கு சமாதி அமைத்துக் கொண்டவன். சர்க்கார் பொதுப்பணத்தை கையாளுவதில் அத்தனை தூய்மை உடையவன் என்று அறிகிற போது அவனது சமாதிக்குச் சென்று அவனுக்கு உரிய வணக்கத்தை செலுத்திவிட்டே மேல்நடக்கலாம். அவுரங்காபாத்திலிருந்து எட்டு மைல் தொலைவில் தேவகிரி என்ற தௌலதாபாத் கோட்டையும் இருக்கும், இன்னும் ஹைதராபாத் நைசாமின் மாளிகையும், மாலிக் அம்பர், அப்துல் ஹாசன் முதலியவர்களின் சமாதியும் இருக்கின்றன. இவற்றை எல்

லாம் சரித்திர ஆசிரியர்கள் கண்டு ஆராயலாம். நாம் சரித்திர ஆசிரியர்கள் அல்லவே! தலயாத்திரை துவங்கி யவர்கள் அல்லவா? ஆதலால் நேரே எல்லோராக் குடை வரை நோக்கிக் காரை செலுத்தச் சொல்லி விரைவி லேயே அங்கு போய் சேரலாம்.

எல்லோராவில் உள்ள குடைவரைகள் முப்பத்தி நாலு. அவைகளை எல்லாம் சரியாகப் பார்க்க வேண்டுமென்றால் ஒருநாள் காணாது. ஆதலால் அதிகாலையிலேயேஅவுரங்கா பாத்தைவிட்டுப் புறப்பட்டு எல்லோரா போய் சேர்ந்து விடவேண்டும். குடைவரைகளுக்கு இரண்டு பர்லாங்குக்கு இப்புறமே காரை நிறுத்தி விடுவார்கள். அப்படி நிறுத்திய இடத்திற்கு பக்கத்திலேயே புதைபொருள் இலாக்கா அலுவலகம் இருக்கிறது அங்கே சென்று ரூ. 10/-கட்டணம் செலுத்தி ஒருவழி காட்டியையும் உடன் அழைத்துச் செல்வது நல்லது அதற்கு எல்லாம் வசதி இல்லாதவர்கள் பேசாமல் இக்கட்டுரைப்பிரதி ஒன்றை மட்டும் எடுத்துக் கொண்டு சென்றால் போதும்.

இங்குள்ள குடைவரைகள் முப்பத்திநான்கு என்று முன்னமேயே சொல்லி இருக்கின்றேன். அவற்றில் சரிபாதி, ஆம் பதினேழு குடைவரைகள் இந்து சமயச் சார்புடை யவை. பன்னிரண்டு பௌத்த மதச்சார்பும் ஐந்து சமண மதச்சார்பும் உடையவை. இக்குடைவரைகளுக்கு எல்லாம் நடுநாயகமாக இருப்பதுதான் கைலாசநாதர் கோயில். இதுவும் ஒரு குடைவரையே என்றாலும் இதனைக் கண்ணுறுபவர்கள் இது மலையைக் குடைந்து அமைத்த ஒன்று என்று எண்ணவே இயலாதவாறு பூரணமான பொலிவோடு ஒரு தனிக் கோயிலாகவே இருக்கிறது. இக் குடைவரை மற்றைய குடைவரைகளைப் போல மலைச் சரிவில் பக்கத்திலிருந்து குடைந்து எடுக்கப்பட்டதல்ல. இக் குடைவரையை உருவாக்கிய விஸ்வகர்மன்-சிற்பி வானுல கத்தில் இருந்தே இறங்கி இருக்க வேண்டும். அப்படி இறங் கியவன் ஒரு மலை உச்சியில்தானே இறங்கியிருக்கிறான்.

உடனேயே தன் சிற்றுளியால் மலையின் உச்சியிலிருந்து மலையை வெட்டிச் செதுக்க முனைந்திருக்கிறான். அப்படிச் செதுக்கியே பூமியின் தளத்திற்கு வந்திருக்கிறான். இதனாலே சாரம் கட்டவேண்டிய நிர்ப்பந்தம் ஒன்றும் இல்லாமலேயே அவனால் இக்குடைவரை அமைக்க முடிந்திருக்கிறது. இக்குடைவரையை உருவாக்க ஒரு நூறு வருஷமாவது ஆகியிருக்க வேண்டும் என்றும், இக்குடைவரையைக் குடைந்து கிட்டத்தட்ட முன்னூறு லட்சம் கன அடியுடைய கற்கள் அப்புறப் படுத்தப்பட்டிருக்க வேண்டும் என்றும் இன்றைய கட்டிடக்கலை நிபுணர்கள் கணக்கிடுகின்றனர். இந்த மதிப்பீடு ஒன்றே இக்குடைவரை எவ்வளவு பிரம்மாண்டமானது என விளக்கப் போதியதாகும். இது சிற்பக்கலை உலகில் ஒரு அரிய சாதனைதான். இங்கு நான் சென்றபோது எனக்கு இருந்த அதிசயம் எல்லாம் இப்படி ஒரு குடைவரையை உருவாக்கத் திட்டமிடுவதற்கு அந்தச் சிற்பிகளின் தலைவன் எவ்வளவு சிந்தனை செய்திருக்க வேண்டும். எவ்வளவு கற்பனைகள் அந்தச் சிந்தனையில் உதித்திருக்க வேண்டும் என்றெல்லாம் எண்ணி எண்ணிப்பார்த்தேன். இந்த விஷயங்களை எல்லாம் என்னாலே கற்பனை பண்ணிப்பார்க்கவே முடியவில்லை. இக்குடைவரையின் அளவைப்பற்றி இவ்வளவு தெரிந்து கொண்டபின் இனி நாம் குடைவரைக்குள்ளேயே நுழையலாம்.

நுழைவாயிலே பிரமாண்டமானதாக இருக்கும் வாயிலின் இரண்டு பக்கங்களிலும் பெரிய பெரிய காத்திரமான சிற்பவடிவங்கள். வாயிலில் நுழைந்து உள்ளே சென்றால் நமக்கு எதிரே கஜலக்ஷ்மி காட்சி கொடுக்கிறாள். ஒரு பெரிய தாமரைக் குளம். அந்தத் தாமரைக் குளத்தில் பூத்த ஒரு தாமரை. அத்தாமரையில் கொலுவிருக்கும் லக்ஷ்மி. அந்த லக்ஷ்மியை நீராட்ட நான்கு யானைகள், ஒரு யானை தண்ணீரை மொண்டு அடுத்த யானையிடம் கொடுக்க, அதை அடுத்த யானை வாங்கி அபிஷேகம்

பண்ணுகிற பாவனையில் சிற்பவடிவங்கள் உப்புச உருவில் அர்த்த சித்திரமாக அமைந்திருக்கின்றன. வாயிலுக்கு இரண்டு பெரிய துவாரபாலகர்கள். தஞ்சை ராஜ ராஜன் கட்டிய பெரிய கோயிலில் உள்ள பெரிய துவார பாலகர் களைக் காட்டிலும் பெரிய வடிவங்கள். இம்மட்டோடு இன்னும் இங்கேயே கங்கை, யமுனை, சரஸ்வதி என்னும் திரிவேணி சங்கமும் சிற்பவடிவமாக உருவாக்கப்பட்டிருக் கின்றன. இக்குடைவரை மேற்கே பார்த்திருக்கிறது. நாம் நமக்கு வலப்புறமாகத் திரும்பி நடக்கலாம். அப்போது தான் அக்கோயிலின் விஸ்தாரமான வெளிப்பிரகாரம் தெரியும். 280 அடி நீளமும் 160 அடி அகலமும் உள்ளது அப் பிரகாரம். அங்கு அந்த வடக்குப் பிரகாரத்தின் ஆரம்பத்திலும் தெற்குப் பிரகாரத்தின் ஆரம்பத்திலும் ஒவ்வொரு யானையும் ஒவ்வொரு துவஜ ஸ்தம்பமும் நிற்கும். துவஜ ஸ்தம்பத்தின் உயரம் 45 அடி. யானைகளின் கால்கள் ஒவ்வொன்றும் நமது திருமலை நாயக்கர் மண்ட பத்தில் உள்ள தூண்கள் போல் என்றால் அந்த யானை களின் காத்திரம் என்னவென்று கணக்கிட்டுக் கொள்ள லாம் தானே. அந்த விஸ்தாரமான வெளிப்பிரகாரத் திற்கு நடுவிலேதான் கைலாய நாதர் கோயில் இருக் கிறது. இக்கோயில் சிறிய கோயில் அன்று. 150 அடி நீளமும் 100 அடி அகலமும் 100 அடி உயரமும் உடைய தாக இருக்கும். இந்தப் பிரதான கோயில் சோழ நாட்டு மாடக் கோயில்களைப் போல 25 அடி உயரமுள்ள மாடத்தின் மேல்தான் செதுக்கப்பட்டிருக்கிறது. அந்த 25 அடி உயரம் உள்ள மலைச் சுவர்களில் எல்லாம் யானை களும், யாளிகளும், சிங்கங்களும் உருவாயிருக்கின்றன. இன்னும் சுவர்களில் ராமாயணம் முதலிய இதிகாச வரலாறுகள் எல்லாம் சிற்பவடிவங்களாகப் பரிணமிக் கின்றன. கோயிலின் தென்புறச் சுவரின் அடித் தளத்திலே தான் இராவணன் கைலைமலையை அசைத்த கதை சிற்ப மாக அமைந்திருக்கிறது. இக் கைலாய நாதர் கோயில் உருவாக்குவதற்கான மூலக்கற்பனையையே இந்தக் கதை உதானே தவியிருக்கிறது.

கறுத்தவன் கண்சிவந்து
கயிலை நன்மலையைக் கையால்
மறித்தலும் மங்கை அஞ்ச
வானவர் இறைவன் நக்கு
நெறித்தொரு விரலால் ஊன்ற
நெடுவரை போல வீழ்ந்தான்.

என்று அன்று அப்பர் பாடிய கவிதை இங்கே கல்லிலே வடித்த காவியமாக மலர்ந்திருக்கிறது. இங்குள்ள வடிவங்களில் நவரசங்களையுமே சிற்பி வடித்திருக்கிறான். சாந்தத்தையும் விஸ்மயத்தையும் சிவனுடைய வடிவிலே காட்டியவன் அச் சிவனையே அணைத்துக் கொள்ளும் பார்வதியின் வடிவிலே சிருங்காரத்தை பிழிந்திருக்கிறான். ராவணன் விழிபிதுங்கும் நிலையிலே பயங்கரம் பரிணமிக்கிறது. இன்னும் கைலையில் உள்ள கணங்கள் ஒவ்வொன்றுமே ஒவ்வொரு உணர்ச்சியைக் காட்டுவதாக இருக்கும். இன்னும் மரங்களிலே ஓடி ஒளியும் குரங்குகள், அஞ்சி ஒதுங்கும் சேடிப் பெண்கள் எல்லாம் அங்கு நடக்கும் அந்த அற்புத நாடகத்திற்கு உயிர் ஊட்டுகின்றனர். இச் சிற்ப வடிவில் பல பகுதிகள் சிதைந்திருந்தாலும், அச்சிற்பமெல்லாம் காண்பவர் உள்ளத்தில் ஓர் அற்புதமான உள்ள எழுச்சியையே உருவாக்குகிறது. இச் சிற்ப வடிவின் அழகிலேயே மெய்மறந்து நின்று விடாமல் பக்கங்களில் உள்ள படிகளில் ஏறி மேலே சென்று அங்கு லிங்க உருவில் உருவாகியிருக்கும் கைலாசநாதனை வணங்கலாம். மேலே சென்றதும் நாம் வந்து சேருவது மணிமண்டபம் தான். அம்மண்டபத்தைப் பதினாறு தூண்கள் தாங்குகின்றன. அதனை அடுத்த கீழ்புறத்திலேதான் கைலாயநாதர் இருக்கும் கருவறை இருக்கிறது. அங்குதான் லிங்க உருவில் கைலாயநாதர் இருக்கிறார். அவர் தஞ்சைப் பெருவுடையாரைப் போல பெரிய ஆகிருதி படைத்தவர் அல்ல. ஏழு எட்டடி உயரமே உள்ளவர். இங்கு அதிசயம் என்னவென்றால், நம் நாட்டுக் கோயில்களில் இருப்பதைப்

போல ஆவுடையார் வட்ட வடிவமாக இல்லை. நல்ல சதுர வடிவிலே ஆவுடையார் அமைந்திருக்கிறது. லிங்கம் என்பது ஆண்குறி என்று வாதமிடுபவர்கள் எல்லாம் இங்கு வாயடைத்து நிற்க வேண்டியதே. பொங்கழல் உருவமாக இருப்பவனையே லிங்கோத்பவர் என்று குறிப்பிடத் தெரிந்தவர் தமிழர். அவர்கள் வடித்த அரு உருவ வழி பாடே லிங்கத் திருவுரு என்னும் சித்தாந்தம் இந்த எல்லோராக் கைலாயரைக் கண்டால் உறுதிப்படும். கர்ப்பக் கிரகத்திற்கு மேலே விமானம். அது பூமி மட்டத் திலிருந்து 96 அடி உயரம் இருக்கிறது. அதையும் அங் குள்ள சிற்ப வடிவங்களையும் காண வகை செய்து ஒரு சிறிய பிரகாரமே அமைத்திருக்கிறார்கள். இக் கைலாய நாதருக்கு எதிரில் மணி மண்டபத்திற்கும் மேல்புறம் நந்தி மண்டபம்.. அங்கு நல்ல காத்திரமான நந்தி. அங்கு சென்று அம்மண்டபத்தின் தென்புற வாயில் வழியாக ஒரு மண்டபத்தின் விதானத்திற்கு வந்தால், அங்கிருந்து கைலாயநாதர் கோயிலின் முழுத்தோற்றத்தையும் காண லாம். புகைப்படம் எடுக்க வசதியான இடமும் அதுதான். அதன்பின் மணி மண்டபத்திற்குத் திரும்பி வந்து அங்கிருந்து வடபுறமாக இறங்கும் படிக்கட்டு வழியாக இறங்கி வெளிப் பிரகாரத்திற்கு வெளியே அமைந்திருக்கும் மண்டபங்களில் நுழைந்து நடந்தால், எண்ணற்ற, சிற்ப வடிவங்களைக் காணலாம். இங்கு நிற்கும்போதுதான் நம் தலைக்கு மேலே கவிந்திருக்கும் கற்பாறையைப்பார்க்கும் போதுதான் இது குடைவரை என்று தெளிவாகத் தெரி யும். மற்றபடி கைலாசநாதர் கோயில் ஏதோ கல்லால் கட்டிய கட்டிடம் போலவேதான் இருக்கும். இந்த மண்ட பங்களில்தான் அர்த்தநாரி, கங்காதரன், திரிபுராந்தகர் முதலிய சிவமூர்த்தங்களும், மகாவிஷ்ணுவின் பல கோலங் களும் ஹரியும் ஹரனும் இணைந்து நிற்கும் கோலத்தையும் காணலாம். இவர்களை எல்லாம் கண்டு நம் வணக்கத்தை செலுத்திவிட்டுத் தென்புறமாக வந்தால் ஓர் அந்தப்புரத் திற்குள்ளேயே வ ந் த து போலிருக்கும். அங்குதான்

ராஷ்டிரகூடமன்னனான கிருஷ்ணனது பட்டத்தரசியும் அவளது சேடிகளும் நிற்கிறார்கள். அவர்கள் ஏதோ ஒரு யாகம் நடத்த ஏற்பாடுகள் செய்து கொண்டிருப்பதால், நாமும் தாராளமாகவே நுழைந்து அவர்களைக் காணலாம்.

எல்லாம் சரிதான். இக்கோயிலை, குடைவரையை உரு வாக்கிய மன்னன் யார் என்று நீங்கள் கேட்பது என் செவியில் விழுகிறது. இவன்தான் ராஷ்டிரகூட மன்னர் களில் முதலாம் கிருஷ்ணன் என்பவன் என்கிறது சரித்திரம். பட்டடக்கல் விரூபாக்ஷர் கோயிலைப் போலவே இக்குடை வரைக் கோயிலும் அமைக்கப்பட்டது என்றும் கூறுகிறார் கள். இவன் கி. பி. 757–முதல் 783-வரை ஆண்டிருக் கின்றான். இது எல்லாம் சரியான தகவல்கள்தாமா என்று திட்டமாக உரைக்க கல்வெட்டுக்கள் ஒன்றும் இல்லை. இருக்கிற கல்லையெல்லாம் வெட்டி எடுக்கத்தான் நேர மிருந்ததே ஒழிய, அவன் வரலாற்றை எல்லாம் கல்லில் எழுதிவைக்க நேரமிருக்கவில்லை போலும்.

இனி வெளியே வந்து மேலே நடக்கலாம். ‘‘என்ன, இன்னும் நடக்கவா அதுவும் இன்றேயா? காலை 9 மணிக்கு இக்குடைவரையில் நுழைந்திருக்கிறோம். வெளியே வரும்போது மாலை 4.30 மணி. இனி கொஞ்ச நேரம்கூட நடக்க முடியாது இன்றைக்கு, ஏதாவது தங்கு மிடம் இருந்தால் சொல்லுங்கள் அங்கு உடலை கிடத்தி விட்டு நாளை மீண்டும் தொடரலாம்’’ என்று நீங்கள் சொல்வதைக் கேட்கிறேன். சரி பக்கத்தில் உள்ள அரசினர் விடுதிக்கே செல்வோம். அங்கு தங்குவோம். கிடைத்த ரொட்டி டீயைச் சாப்பிடுவோம். நாளையும்தான் பார்க்க வேண்டியவை நிறைய இருக்கும் போலிருக்கிறதே. இன் றைக்கு இவ்வளவு போதும்.

# 25. வேறுள் குருஸ்னேஸ்வரா

இராமாயணத்தில் சுந்தர காண்டம் மிகவும் சுவை யானது. இலங்கையில் அசோகவனத்தில்,சிறையிருந்த சீதை யைக் கண்டு விட்டுத் திரும்பி வருகிறான் அனுமன் கிஷ்கிந்தைக்கு. அங்கு வந்து ராமனிடம் தான் சீதையைக் கண்டுவந்த செய்தியைத் தெரிவிக்கிறார். ராமனது மனைவி என்னும் உரிமைக்கும் தசரனது மருமகள் என்ற பெருமைக்கும், ஜனக மகாராஜனது மகள் என்ற தகைமைக் கும் ஏற்றவளாக சீதை சிறையிருக்கிறாள் என்று சொன்ன அனுமார் அவளைத்தன் பெருந் தெய்வம் என்றே 'குறிப் பிடுகிறான். இப்படி அவளைத் தெய்வம் என்று அனுமன் வாயிலாகப் பாராட்டிய கம்பனுக்கு, அத்தெய்வத்திற்கு ஒரு கோயில் கட்டிப் பார்க்கவேண்டும் என்றே தோன்றி யிருக்கிறது அதனால் மேலும் பாடுகிறான்.

வேலையுள் இலங்கை என்னும்
　　விரிநகர் ஒருசார் விண்தோய்
காலையும் மாலை தானும் இல்லதோர்
　　கனகக் கற்பச்
சோலை அங்கு அதனுள் உம்பி
　　புல்லினால் தொடுத்த தூய
சாலையுள் இருந்தாள் ஐய!
　　தவம் செய்த தவமாம் தையல்

என்பது அவனது பாட்டு. இப்பாட்டை ராஜராஜன் கேட் டிருக்கிறான், தஞ்சையில் பெருவுடையாருக்கு கோயில் எழுப்பிட முனைந்த போது. ஆகவே முதலில் ஓர் அகழி, அகழிக்குள் ஒரு மதில். மதிலுக்குள் ஒரு பிரகாரம். அந்தப் பிரகாரத்திற்குள் ஒரு மண்டபம். அந்த மண்டபத்திற்குள் ஒரு கருவறை என்று அமைத்து அக் கருவறையில்.

பெருவுடையாரைப் பிரதிஷ்டை செய்திருக்கிறான். அதனால் அந்தப் பெரிய கோயில் ஒரு கலைக்கோயிலாகவே நின்று நிலவுகிறது இன்று வரை. இதைப்போல நீண்டு நிமிர்ந்த பெருங்கோயில் வேறு எங்காவது இருக்கிறதா என்று நான் பல இடங்களில் சுற்றியதுண்டு. இப்படி நான் கலை தேடும் கோயில் யாத்திரை செய்த போது ஒரு இடத்தில் ஒரு கோயிலைக் கண்டு அப்படியே அதிசயித்து நின்றிருக்கிறேன். அக்கோயில், அக்கோயிலின் விமானம் எல்லாம் தஞ்சைப் பெரிய கோயிலைப் போலவே இருக்கக் கண்டேன். தஞ்சைப் பெரிய கோயிலில் உள்ள தக்ஷிண மேருவாம் விமானத்தைப் போல இருநூற்றுப் பதினாறு, அடி உயரத்துக்கு அவ்விமானம் உயர்ந்திருக்கவில்லை. என்றாலும், அசப்பில் பெரிய கோயிலைப் போலவே அமைந்திருப்பதைக் கண்டு அப்படியே அதிசயித்து நின்றிருக்கின்றேன்- அந்தக் கோயில் தான் எல்லோராவை அடுத்த வேறுள் என்னும் கிராமத்தில் இருக்கும் குஸ்ருனேஸ்வரர் கோயில். அக் கோயிலைக் காணவே நாம் இன்று வேறுள் என்னும் இடத்திற்குச் செல்கின்றோம்.

சரிதான், சென்ற வாரம் எல்லோராவில் கைலாசநாதர் குடைவரையை மட்டும் காட்டிவிட்டு, மற்றக் குடைவரைகளைப் பிறகு காட்டுகின்றேன் என்று சொன்னீரே, அதற்குள் என்ன அனுமானைப்போல வேறுள் நகருக்கு தாவுகிறீர்கள் என்றுதானே கேட்கிறீர்கள், தப்புத்தான், முதலில் உங்களை எல்லோராவில் உள்ள மற்ற குடைவரைகளுக்கு அழைத்துச் சென்று விட்டு, அதன்பின்னரே குஸ்ருனேஸ்வரர் கோயிலுக்கு அழைத்துச் செல்லத் திட்டம்.

எல்லோராவில் மொத்தம் 34 குடைவரைகள் என்றேனே, ஞாபகம் இருக்கிறதல்லவா? இந்த 34 குடைவரைகளும் ஓர் அர்த்த சந்திரவடிவில் அமைந்த மலையிலே குடைந்து அமைக்கப்பட்டவைதாம். எல்லாக்

குடைவரைகளும் மேற்கு நோக்கிய வண்ணமாகவே அமைந்திருக்கின்றன. இவைகளுக்கு நடு நாயகமாய் மத்தியில் அமைந்திருப்பதுதான் கயிலாயநாதர் கோயில். அதனைப் பதினாறாவது குடைவரை என்று கணக்கு எடுத்திருக்கின்றனர். அதனால் அதற்கு இடப்புறமாக பதினைந்து குடைவரைகள். இதில் 12 குடைவரைகள் பௌத்த சமயச் சார்புடையவை. இவைதாம் எல்லோ ராக் குடைவரையில் காலத்தால் முந்தியவை. அவை எல்லாம் கி. பி. நான்காம் நூற்றாண்டிலிருந்து ஏழாம் நூற்றாண்டிற்குள் உருவாகி இருக்க வேண்டும் என்று கருதுகின்றனர் கலை விமர்சகர்கள். பௌத்த சமயத்தில் ஹினயான பௌத்தம், மாகாயான பௌத்தம் என்று இரண்டு பிரிவு உண்டு. ஹீனயான பௌத்தர்கள் புத்தரை வடிவமாக அமைத்து வழிபாடு செய்வதை அனுமதிக்கவில்லை. மகாயானா பௌத்தம் தோன்றிய பின்னரே புத்தரது வடிவங்களை உருவாக்கி வழிபாடு நடத்தி இருக்கிறார்கள். எல்லோராவில் உள்ள குடைவரை களில் பல, மகாயானா பௌத்த காலத்தைச் சேர்ந்தவை தாம். இந்தப் பன்னிரண்டு குடைவரைகளும் கிட்டத்தட்ட ஒன்றுபோலவே அமைந்தவை. ஆதலால் உங்களை அத்தனை குடைவரைகளுக்கும் இழுத்தடிக்கப் போவ தில்லை. இக்குடைவரைகளில் எல்லாம் சிறப்பானது பத்தாவது குடைவரையே. அதையே விஸ்வகர்ம சௌத்தியம் என்கின்றனர். இச்சைத்தியத்தின் வாயிலையே பிரமாதமான அழகுடன் சிற்பி செதுக்கியிருக்கிறான். அதனைப் பார்த்தால் ஏதோ மரத்தில் செய்து ஒண்டித்து வைத்திருக்கும் வேலைதானோ என்று தோன்றும். கல்லில், அதுவும் ஒரு பெரிய மலையைக் குடைந்து அமைத்திருக் கிறார்கள் என்று எண்ணவே முடியாது. அந்த சைத்தியம் இருபத்தாறு அடி அகலமும் 85 அடி நீளமும் 34 அடி உயரமும் உள்ள குடைவரை. அதன் கூறை 50 அடி உயரத்தில் கஜப்பிரஷ்ட ஆகிருதி உடையது. இச் சைத் தியத்திற்குள்ளே மத்திய பாகத்தில் 16 அடி உயரத்தில் ஒரு

ஸ்தூபம். அந்த ஸ்தூபத்திற்கு முன்னால் பன்னிரண்டு அடி உயரத்தில் ஒரு புத்த விக்கிரகம். உட்கார்ந்திருக்கும் பாணியில் அதனை உருவாக்கியிருக்கிறார் சிற்பி. போதி மரத்தடியில் ஞானோதயம் பெற்ற நிலையில் புத்த பகவான் அங்கேயிருந்து நமக்குக் காட்சித்தருகிறார். விதானங்களில் எல்லாம் கந்தருவர்களும், வித்யாதரர் களும் அந்தச் சைத்தியத்தில் நின்று கொண்டு மெது வாகப் 'புத்தம் சரணம் கச்சாமி' 'சங்கம் சரணம் கச்சாமி' 'தர்மம் சரணம் கச்சாமி' என்று சொன்னால், அந்த ஒலி எதிரொலித்து நம் காதுகளை மாத்திரம் அல்ல நமது உள்ளத்தையே பரவசப்படுத்தும். அங்குள்ள புத்த பகவானுக்கு நம் வணக்கத்தைச் செலுத்திவிட்டு வெளியே வந்து மேல் நடக்கலாம். 34 குடைவரைகளில் இரண்டைத்தானே பார்த்திருக் கின்றோம். இன்னும் எத்தனை குடைவரையைக் காண வேண்டும் என்று உங்கள் உள்ளம் துடிப்பதை அறிவேன். ஆனால் மற்ற குடைவரைகளையெல்லாம் சென்று காண வேண்டும் என்பதில்லை. நாம் முன்னர் பார்த்த 16-வது 10-வது குடைவரைகளைப் பார்த்ததுபோல 21-வது 29-வது 32-வது குடைவரைகளை மட்டும் பார்த்தால் போதும். இவைகளில் 21-ம் 29-ம் இந்து சமயச் சார்பு டையவை, 30-முதல் 34-வரை ஐந்து குடைவரைகள் சமண சமயச் சார்புடையவை. 21-வது குடைவரையை ராவனேஸ் வரன் குடைவரை என்பார்கள். அடே இது என்ன இந்த ராவணன் நாம் செல்லும் இடங்களுக்கு எல்லாம் தொடர்ந்து வருகிறானே என்று எண்ணுவோம். இங்கும் ராவணன் கயிலையைப் பெயர்த்து எடுக்கும் காட்சி செதுக்கப்பட்டிருக்கிறது. பார்வதி பயத்தால் மருண்டு பரம சிவனைத் தழுவிக் கொள்வதும், அவளது சேடி வெருண்டு ஓடுவதும் சித்தரிக்கப்பட்டிருக்கிறது. இக்குடைவரை வாயிலிலேயே வடக்குச் சுவரில் கங்கை உருவாகி இருக் கிறாள். காணும் ஆடவர் உள்ளத்தை எல்லாம் கொள்ளை கொள்ளும் அளவில் கவர்ச்சியான உடல் கட்டுடன்

நிற்கிறாள் மகாதத்தின் மேல். இத்தோடு இக்குடைவரை உள்ளே பார்வதி பரமேஸ்வரன் திருமணக் கோலமும் உருவாகி இருக்கிறது. இங்குள்ள ஆடவரும் பெண்டிரும் அணிந்திருக்கும் அணிகளும், மணிகளும்,ஆடைகளும் கிரீடங்களும் மிக்க அழகாக இருக்கின்றன. 14 காரட் தங்கத்தில் நகை செய்யும் பொற்கொல்லர்கள் எல்லாம் இங்கு போய்ப் பயிற்சி பெற்று வரலாம். 29-வது குடைவரையைத்தான் சீதாநாகினி என்கின்றனர். அதாவது சீதை குளித்த இடம், என்று நல்ல தமிழில் சொல்லலாம். சீதை இங்கு ஓடும் ஏலா நதியில் குளித்தாள் என்று கதை. ஏலா நதி ஓடும் எல்லபுரா என்ற கிராமத்தின் பெயர்தானே எல்லோரா என்று திரிந்திருக்கிறது. இக்குடைவரைக்கு தென்பக்கத்திலேயே அந்த ஏலா நதி ஓடுகிறது. நான் போன போது அங்கு தண்ணீரே இல்லை. நீரில்லா ஆறு தமிழ் நாட்டின் பாலாறு மாத்திரம் அன்று, அந்த ஏலா ஆறும் கூடத்தான், என்று அறிவதிலே நமக்கு ஒரு திருப்தி. இங்குள்ள குடைவரையில் சிவ பார்வதி கோலம் மிக்க அழகாக இருக்கிறது. தாமரைத் தண்டும் இடைபுகா தனம் என்றெல்லாம் காளிதாசன் வர்ணிக்கிறானே அத்தகையப் பெண்கள் எல்லாம் இங்கே வந்து உருப்பெற்று நிற்கிறார்களோ என்று தோன்றும். இவர்களையே நின்று பார்த்துக் கொண்டிருந்தால் போதுமா? 32-வது சமணக் குடைவரையையும் காண வேண்டாமா? அதனால் வெளியே வந்து 32-வது குடைவரைக்குள் நுழையலாம். இக்குடைவரை இரண்டு அடுக்குமாடியுடன் கூடியது என்பதால், கட்டப்பட்டது என்று எண்ணிவிடாதீர்கள். மலையைக் குடைந்து இரண்டு அடுக்குமாடிகளாகவே அமைத்திருக்கிறார்கள். இங்குள்ள மேல்மாடியையே இந்திர சபா என்கின்றனர். இதுவும் இருநூறுஅடி தூரம் மலையைக் குடைந்து அமைத்த குடைவரைதான் கீழ் தளத்தில் மகாவீரர் சமண தீர்த்தங்கரர் எல்லாம் இருக்கின்றனர். எல்லோரும் நிர்வாண வடிவிலே இருக்கின்றனர். மகாவீரர் தியான முத்திரையோடு இருக்கும்கோலம் அழகு வாய்ந்தது. மாடி ஏறினால் ஒரு பெரிய மண்டபம் இருக்

கிறது. அம்மண்டபத்தைப் பன்னிரண்டு தூண்கள் தாங்கி நிற்கின்றன. அம்மண்டபத்தைச் சுற்றியே 24 தீர்த்தங்கரர்களின் வடிவங்கள் உருவாகி இருக்கின்றன. மகாவீரரது வடிவமும் இரண்டிடத்தில் உருவாகி இருக்கிறது. அம் மண்டபத்தில்தான் இந்திரன் கொலு இருக்கிறான். அவன் காலடியிலே ஐராவதம் படுத்துக் கிடக்கிறது. இந்த இந்திர சபாவே, எல்லோராவில் உள்ள குடைவரைகளில் எல்லாம் கலை அழகு நிரம்பியது என்றும் சிலர் கருதுகின்றனர். இந்திர சபாவை ஒட்டியே இன்னொரு சமணக்குடைவரை அது அளவில் சிறியது. அதையே ஜகந்நாதசபை என்கின்றனர். அங்கும் மகாவீரர், பார்சவநாதர் முதலியோர் உருவாகி இருக்கின்றனர். எல்லாம் கம்பீரமானவடிவத்தில்.

எல்லோராவில் உள்ள அதிமுக்கியமான குடைவரைகளுக்கு எல்லாம் உங்களை அழைத்துச் சென்றுவிட்டேன். இவைகளை பார்த்துவிட்டு வெளியேவந்த போது இமயத்தின் சிகரத்திலேயே ஏறிநின்றது போல ஓர் உணர்ச்சி. ஆம் சிற்பக்கலையின் சிகரத்திலேயே அல்லவா இவ்வளவு நேரம் நின்றிருக்கிறோம் என்ற பூரண மனத்திருப்தியோடேயே வெளியே வரலாம். வெளியே வந்து காரை எடுத்துக் கொண்டு மேற்குநோக்கி ஒரு மைல் சென்றால் வேருள் என்னும் கிராமம் வந்து சேரலாம். அங்கு முன்னமேயே நான் குறித்தேனே அந்த குஸ்ருனேஸ்வரர் கோயிலுக்கும் வந்து சேரலாம். அது என்ன குஸ்ருனேஸ்வரர், வாயில் நுழையமாட்டேன் என்கிறதே என்கிறீர்களா, குஸ்ருணம் என்றால் மகாராஷ்டிரா பாஷையில் குங்குமம் என்று பொருளாம். அன்று பார்வதி குங்குமத்தையே பிடித்து வைத்து அதனையே லிங்கமாக்கி பூசை செய்திருக்கிறாள். அதனால் அங்கு கோயில்கொண்டுள்ள மூர்த்தி குஸ்ருனேஸ்வரர் என்று பெயர் பெற்றிருக்கிறார். பெயருக்கேற்ப அங்கு குங்கும வடிவத்திலேயே இன்னும் இருக்கிறார். அவர் இந்தியாவில் உள்ள பன்னிரண்டு சோதிர்லிங்கங்களில் ஒருவர் என்று கணக்கிடப்படுகிறார். அவர் மட்டுமே இங்கு

குங்கும வர்ணத்தில் இல்லை. கோயில், கோயில் கட்டிய கல் எல்லாமே நல்ல சிவப்பு வர்ணத்திலேயே இருக்கிறது. இக்கோயிலின் முன் மண்டபத்தினை நல்ல சிற்ப வேலைகள் அமைந்த தூண்கள் தாங்கி நிற்கின்றன. உருவ அமைப்பிலே தஞ்சைப் பெரிய கோயிலைப்போல இருப்பதாகச் சொன்னேன். இங்குள்ள தூண்களில் செய்திருக்கும் சிற்ப வடிவங்களை சாதாரணமாகத் தேக்குமரத்தில் கூடச் செய்ய முடியாது என்றே தோன்றுகிறது. ஆதியில் இக்கோயிலை சுதாமரது மனைவி பக்த கிருஷ்ணாபாய் கட்டியிருக்கிறாள். ஆதலால் இக்கோயிலை கிருஷ்ணாசுவர்க்க மந்திர் என்றே அந்த வட்டாரத்தில் அழைக்கின்றனர். பின்னர் இக்கோயிலை இந்தோர் ராணி அகல்யாபாய் என்பவர் புதுப்பித்திருக்கிறார். குஸ்ருனேஸ்வரரே மூலவர். அவரது கருவறைக்குப் பின்புறச் சுவரிலே பார்வதியின் வடிவு இருக்கிறது. அவருக்கு என்று தனிக் கோயில் ஒன்றும் இல்லை. இக்கோயிலுக்கு இரண்டு துவஜ ஸ்தம்பம் இருக்கிறது. இந்த சோதிர்லிங்கத் தரிசனம் செய்து விட்டு மேற்கு நோக்கி ஒருபர்லாங் நடந்தால் அங்கு ஒரு சிறு கோயில் இருக்கிறது. அங்கு கஜானன மூர்த்தி பிரதிஷ்டை செய்யப்பட்டிருக்கிறார். இக்கோயிலையும் அகல்யாபாய் கட்ட முனைந்தார் என்றும், அதைக் கட்டி முடிக்குமுன்பே அமரநிலை எய்திவிட்டார் என்றும் அங்குள்ளவர்கள் கூறுகிறார்கள்.

வந்ததே வந்தோம் இன்னும் கொஞ்சம் காலை எட்டிப் போட்டு பரலிக்கும் சென்று வந்து விடலாமே. அங்கும் ஒரு சோதிர்லிங்கம் உண்டு என்று படித்திருக்கின்றோமே! ரயிலில் சென்றால் பார்ப்பஹனி ஸ்டேஷனில் இறங்கி பரலி செல்ல வேண்டும். காரிலேயே சென்றால் தௌலதாபாத் வழியாகச் செல்லலாம். அங்கும் ஓர் அழகான கோயில், கோயில் கட்டிடத்தில் மரவேலைகள் அதிகம். அக் காயிலின் சபாமண்டபத்தில் பனைமரம் அளவு உயர்ந்த தூண்கள். எல்லாம் மரத்தால் ஆனவை. இரண்டு பேரால் கட்டிப்பிடிக்க முடியாத அளவிற்கு பெரிய காத்திரம்

உடையவை. இங்குள்ள சோதிர்லிங்கத்தைப் பற்றி ஒரு வரலாறு. கைலைமலையை அசைத்த ராவணன் சாம கானம்பாடி விடுதலை பெற்றான் என்று தெரியும். அவனது இசையில் மயங்கி இறைவன் அவனுக்கு ஒரு ஆத்ம லிங்கத்தைப் பரிசளிக்கிறான். அதை தலையின் மேல் தாங்கி நடக்கிறான் ராவணன். அதன் கனத்தை அவனால் தாங்க முடியவில்லை. இறைவனிடமே அதனை எடுத்துச் செல்ல ஆள் கேட்கிறார். அவரும் அந்த லிங்கத்தை இருகூறாக்கி அவற்றை ஒரு காவடியில் வைத்து எடுத்துச் செல்லச் சொல்கிறார். அப்படி எடுத்துச் சென்றவன் தாகத்துக்குத் தண்ணீர் குடிக்க காவடியை தன்னை அடுத்து நின்ற ஒரு பிராமணச் சிறுவனிடம் கொடுக்கிறான். இந்த பிராமணச் சிறுவனோ வேறுயாருமில்லை. பிள்ளையார்தான். பிள்ளையார் காவடியை வாங்கி அங்கேயே பூமியில் இறக்கிவைத்து விடுகிறார். பூமியில் தங்கிய இறைவன் அங்கேயே வேர் ஊன்றி நின்று விடுகிறார். அப்படித்தான் இந்த சோதிர் லிங்கர் அங்கே நிலை பெற்றிருக்கிறார்.

இந்த யாத்திரை மிகச்சிறப்பானது என்று சொன்னால் நீங்கள் மறுக்கமாட்டீர்கள். எல்லோராவிலுள்ள சிற்பச் செல்வங்களை எல்லாம் காணும் வாய்ப்போடு இரண்டு சோதிர்லிங்க தரிசனமும் கிடைப்பது என்றால் எளிதான பாக்கியமா என்ன? சரி, இந்த மன நிறைவோடேயே திரும்பி அவுரங்காபாத் வந்து ஜாகையில் தங்கி சிரமபரிகாரம் செய்துக் கொள்ளலாம். நாளைக்கு அறுபது எழுபது மைல் பயணம் செய்தல்லவா அஜந்தா செல்ல வேண்டியிருக்கிறது. அதனால் தக்க முறையில் உடலுக்கு ஓய்வு கொடுத்துக் கொள்வோமா. உள்ளம் குதூகலித்துக் கொண்டிருக்கும்போது அதற்கு ஓய்வு தேவை இல்லைதான்.

# 26. அஜந்தாவின் போதிசத்துவர்



அஜந்தாவின் போதிசத்துவர்

மங்கியதோர் நிலவினிலே
கனவில் இது கண்டேன்
வயது பதினாறு இருக்கும்
இளவயது மங்கை

பொங்கிவரும் பெருநிலவு
போன்ற ஒளிமுகமும்
புன்னகையின் புதுநிலவும்
போற்றவரும் தோற்றம்
துங்க மணிமின்போலும்
வடிவத்தாள் வந்து
தூங்காதே எழுந்து என்னைப்
பார் என்று சொன்னாள்
அங்கு அதனில் கண்விழித்தேன்
அடடாவோ! அடடா!
அழகுகென்னும் தெய்வந்தான்
அது என்றே கண்டேன்.

என்று தன் அழகு தெய்வ தரிசனையைக் கூறுகிறான் பாரதி. அழகுத் தெய்வம் அவருக்குப் பதினாறு வயது நிரம்பிய இளவயது மங்கையாகக் காட்சிக் கொடுத்திருக்கிறது. இதைப்படித்த எனக்கு ஒரு சந்தேகம். உண்மையிலேயே அழகுத் தெய்வம் பெண்மை உருவில்தானா? பறவை யினத்தில் சேவலும், மயிலும், விலங்கினத்தில் சிங்கமும் காளையும்தானே அழகுடையவைகளாக இருக்கின்றன. ஏன் இந்த மனித இனத்தில் மட்டும் பெண் அழகுடைய வளாகக் கருதப்படுவானேன் என்றெல்லாம் எண்ணுவேன். ஆனால் உண்மையில் பெண்ணே அழகு வாய்ந்தவள் என்பதை தமிழ் நாட்டுக் கோயில்களில் உள்ள சிற்ப வடிவங்களைப் பார்த்த போது தெரிந்து கொண்டேன். இன்னும் கொஞ்ச நஞ்சம் இருந்த சந்தேகமும், அஜந்தாவில் உள்ள சித்திரங்களில் தீட்டிய பெண்ணைப் பார்த்தப்பின் முற்றிலும் தீர்ந்துவிட்டது. எவ்வித கடைக்கண் நோக்கினால், எவ்விதம் முறுவலிப்பதால், எவ்விதமான அங்க வளைவினால், கூந்தலை எவ்விதம் கட்டிக்கொள் வதால் ஆண்களின் நெஞ்சம் துடிதுடிக்கும் என்பதை அறியும் கலையில் அஜந்தா பெண்கள் மிக்க தேர்ச்சிப் பெற்றவர்கள். அவர்களது அம்பறாத் தூணியிலே மனிதனது

உள்ளத்தைப் பிளக்கும் கூறிய அம்புகள் அடுக்கடுக்காக இருக்கும். உலகத்து இனிமை எல்லாம் ஒன்றாக உருவெடுத்து நடமாடுவதுபோல நிற்பார்கள் இந்த அஜந்தா பெண்கள். ஆம் சித்திரத்தில் உள்ள பெண்களைக் காணவே அஜந்தாவிற்கு ஒரு நடை போகலாம். சரி இன்று அந்த அஜந்தாவிற்கே போகிறோம்.

அஜந்தா பம்பாய்க்கு கிழக்கே இருநூற்று ஐம்பது மைல் தூரத்தில் இருக்கிறது. ரயிலில் செல்பவர்கள் பம்பாயிலிருந்து மண்மாட் சென்று பின்னர் ரயில்மாறி அவுரங்காபாத் சென்றுசேரவேண்டும். அஜந்தாவையும் எல்லோராவையும் பார்ப்பதற்கு வசதியான தங்குமிடம் அவுரங்காபாத்தான். ஜால்சன் என்ற இடத்தில் இறங்கினால் 35 மைல் தூரத்தில் அஜந்தா செல்லலாம் என்பர். அது நல்ல வசதியான பாதை அல்ல. அஜந்தா அவுரங்காபாத்திலிருந்து வடக்கே 67 மைல் தூரத்தில் இருக்கிறது. அவுரங்காபாத்திலிருந்து டாக்சி, கார்கள், இருக்கும்பஸ்வசதியும் உண்டு. அவுரங்காபாத்திலிருந்து அறுபது மைல் சென்றதுமே அஜந்தா என்னும் கிராமம் வரும் அது ஒரு சிறிய கிராமம். ஒரு சிறிய குன்றின் மேல் அந்த கிராமம் இருக்கிறது. அங்கிருந்து கார் ஒரு பள்ளத்தாக்கில் இறங்கும். வழியெல்லாம் வளைந்து வளைந்து செல்லும். அப்படி ஏழு மைல் சென்றால் அஜந்தா மலை அடிவாரத்திற்கு வந்து சேருவோம். பாதையில் வனாந்திர ஜுவாலை என்னும் மரங்கள் இருக்கும். இலையும் பூவும் சிவந்து அக்காடே தீப்பற்றி எரிவது போலத் தோன்றும். அஜந்தா கிராமத்திலோ, அஜந்தா மலை அடிவாரத்திலோ தங்குவதற்கு வசதியான கட்டிடங்கள் இல்லை. இப்போதுதான் மலை அடிவார்த்தில் ஒரு சுற்றுலா மாளிகை கட்டிக் கொண்டிருக்கிறார்கள். மலையடிவாரத்தில் இறங்கி கிட்டத்தட்ட ஆறு பர்லாங்குமைல் மீது ஏறிச்செல்ல வேண்டும். நல்ல பாதை அமைத்து வைத்திருக்கிறார்கள். அதனால் ஏறுவது சிரமமாக இருக்கிறது. வழிஎல்லாம் பாரிஜாத மரங்கள்

பூத்துக் குலுங்கிக் கொண்டிருக்கும். நம் நாட்டில் மலரும் பவளமல்லிகையையே பாரிஜாதம் என்கிறார்கள் அங்குள்ளவர்கள் 'மலைகளும் மரங்களும் மணிக் கற்பாறையும் நிறைந்திருந்தது அந்தப் பஞ்சவடி' என்று பாடுகிறான் கவிச்சக்கரவர்த்தி கம்பன். அந்தப் பஞ்சவடியில் இன்று மரங்கள் இருந்தாலும், மலைகளைக் காணோம். ஆனால் அஜந்தாவிலே மணிக் கற்பாறைகள் நிறைய உண்டு. அதிலும் பச்சை நிறமுடைய கற்கள் அதிகம் இருக்கும். இப்படி மலை ஏறும் போதே கிட்டத்தட்ட இருநூறு அடிக்கு கீழே வாகூரா நதி ஓடிக்கொண்டிருப்பதைப் பார்க்கலாம் மலைமீது ஓடிவந்த நதி ஒரு பெரிய அருவியாக விழுந்து ஓடுகிறது. இந்த இடத்தில் ஏழு இடங்களில் தத்தித்தத்தி விழுவதால் இந்த அருவியைச் சதகுண்டம் என்கின்றனர். இப்படி ஓடும் வாகூரா நதி இங்கு ஒரு அர்த்த சந்திர வளைவாக ஓடுகிறது. இந்த நதிக் கரையிலே உள்ள மலையைக் குடைந்துதான் குடைவரை அமைத்திருக்கிறார்கள். அக்குடைவரைகளில்தான் சிற்ப வடிவங்களைச் செதுக்கியிருக்கிறுர்கள். சித்திரங்கள் எழுதியிருக்கிறார்கள். இந்தக் குடைவரைகளில் சில இரண்டாயிரம் வருஷங்களுக்கு முன்னமேயே அமைந்தது என்கிறார்கள். பின்னர் இவைஎல்லாம் புதர் மண்டிக்கிடந்திருக்கிறது. பத்தொன்பதாம் நூற்றாண்டின் முற்பகுதியில் இந்த மலைக்கு வந்த ஒரு ஆங்கிலேயர்தான் இக்குடைவரைகள் இருப்பதை கண்டுபிடித்திருக்கிறார். பின்னர் புதர்களை எல்லாம் நீக்கி, அடைந்து கிடந்த மண்ணையும் வெட்டி எடுத்திருக்கிறார்கள். அப்படிக் கண்டுபிடிக்கப்பட்ட குடைவரைகள் 29தான். சமீபத்தில் இன்னும் ஒரு சிறு குடைவரை இருப்பதையும் கண்டுபிடித்திருக்கிறார், ஒரு புதைபொருள் ஆராய்ச்சியாளர். அதையும் சேர்த்தே இன்று இருப்பது முப்பது குடைவரை என்று கணக்கிட்டிருக்கிறார்கள்.

இவைகளில் 9, 10, 19, 26 & 29 எண் குடைவரைகள் எல்லாம் சைத்தியங்கள், மற்றவை எல்லாம் சங்கரமங்கள்

இவைகளையே விகாரங்கள் என்றும் அழைக்கின்றனர். ஒன்று சொல்ல மறந்து விட்டேன். அஜந்தா குடைவரைகள் எல்லாம் பௌத்த சமயத்தைச் சார்ந்தவை. சைத்தியங்களில் எல்லாம் புத்தபகவானை வடித்து மக்கள் வணங்க வகை செய்திருக்கிறார்கள். விகாரங்கள் எல்லாம் பௌத்த பிக்ஷுக்கள் வந்து தங்க ஏற்பட்ட மடங்கள் போன்றவை. பௌத்த மதத்திலும் இரண்டு பிரிவு இருந்திருக்கிறது. ஹினயான பௌத்தம், மகாயானா பௌத்தம் என்று. ஆதியில் புத்தரை சிலையாக அமைத்து வணங்கிவரவில்லை. பின்னரே புத்தரை சிலைவடிவில் அமைத்து வணங்கி வழிபட ஆரம்பித்திருக்கிறார்கள். ஆதலால் முதலில் வெட்டிச் செதுக்கிய குடைவரைகளில் புத்தர் சிலைவடிவில் இருக்கமாட்டார். 8, 9, 10, 12, 13 & 30 எண் குகைகளே முதலில் அமைக்கப்பட்டவை என்று சரித்திர ஆசிரியர்கள் கருதுகின்றனர். இவைகளிலும் காலத்தால் முந்தியது பத்தாம் எண் குடைவரையே. இது கி.பி. இரண்டாம் நூற்றாண்டிலேயே அமைக்கப் பட்டிருக்க வேண்டும். மற்றவை எல்லாம் கி. பி. ஐந்தாம் நூற்றாண்டிலும் அதற்குப் பின்னும் அமைக்கப்பட்டவை.

வட இந்தியாவில் குப்த சாம்ராஜ்யம் உருவாகி இருந்த போது விந்தியத்திற்குத் தெற்கே வகதகர்கள் ஆட்சி நிலைத்திருக்கிறது. வகதக அரசன் ஹரிசேனனின் மந்திரி வராகதேவன் சில குடைவரைகள் அமைத்திருக்கிறார். வகதகர்களின் கீழ் இருந்த அசமகன் என்ற சிற்றரசனும் சில குடைவரைகள் அமைத்தான் என்று சரித்திர ஏடுகள் பேசுகின்றன. இவர்கள் காலத்தில்தான் புத்தரது சிலை வடிவங்கள் செதுக்கப்பட்டு மூல விக்கிரகமாக சைத்தியங்களில் அமைக்கப்பட்டிருக்க வேண்டும். இக்குடைவரைகளை அமைக்க முதலில் குந்தாலி என்னும் இருப்புக் கோடரியை உபயோகித்திருக்க வேண்டும். பின்னரே உளியும், சுத்தியும் கொண்டு சுவர்கள் அமைத்து சிற்பவடிவங்களை வடித்து உருவாக்கி இருக்க வேண்டும். குடைவரை அமைப்புகளை

ஆராய்பவர்களுக்கு அஜந்தா குடைவரை ஓர் அற்புதமான நிலைக்களனாக அமையும்.

எப்படி எல்லோராவில், இந்து சமயம், சமணம் பௌத்தம் மூன்றும், இணைந்திருக்கிறதோ அதேபோல அஜந்தா குடைவரைகளில், இந்தியக் கட்டிடக்கலை, சிற்பக்கலை, சித்திரக்கலை மூன்றுமே இணைந்திருக்கின்றன. இப்படிப் பொதுப்படையாக மேலும் மேலும் சொல்லிக் கொண்டு போவதைவிட குடைவரை குடைவரையாக நுழைந்து அங்குள்ள அதிசயங்களை பார்த்து வருவதே நல்லது. அஜந்தா குடைவரைகளைக் காண கட்டணம் ஒன்றும் செலுத்த வேண்டியதில்லை. ஆனால் அங்குள்ள சித்திரங்களை பார்க்கவேண்டும் என்று விரும்பினால் சும்மா கைகளை வீசிக்கொண்டு நடந்தால் சரிப்படாது. முதலில் அங்குள்ள காவல் காரரை அணுகி ஐந்து ரூபாய் கட்டணம் கட்டினால் முக்கியமான குடைவரைகளில் எல்லாம் விளக்குப் போட்டு, ஆம் மின் விளக்குகள் போட்டுக் காட்டுவார். அந்த விளக்குகள் இல்லாமல் சித்திரங்களையோ சிற்பங்களையோ காண இயலாது என்பது ஞாபகம் இருக்கட்டும்.

சரி இனி முதல் குடைவரையில் நுழையலாம். அது ஒரு பெரிய விஹாரம். இக்குடைவரையில் முன்புறம் 6½ அடி நீளமும் 9 அடி அகலமும் உள்ள ஒரு பெரிய வராந்தா இருக்கிறது. இந்த வராந்தாவை நான்கு தூண்கள் தாங்கி நிற்பது போல் குடைந்து எடுத்திருக்கிறார்கள். இந்த வராந்தாவில் இருந்து உள் குடைவரைக்குச் செல்வதற்கு மூன்று பெரிய. வாயில்கள் இருக்கின்றன. வாயில்களில் எல்லாம் மலர் வளையங்களும் நாகவடிவங்களும் செதுக்கியிருக்கிறார்கள். உள்ளே நுழைந்ததும் 64 அடி சதுரத்தில் ஒரு பெரிய ஹால். அதைத் தாங்குவதற்கு 20 தூண்கள். தூண்கள் ஒவ்வொன்றிலுமே அழகான சிற்பவடிவங்கள். இங்குள்ள விதானங்களில் மலர் போன்றசித்திரங்கள். சுவர்

களில் எல்லாம் புத்த ஜாதகக் கதைகளின் காட்சிகளை சித்திரங்களாகத் தீட்டியிருக்கின்றனர். ஆனால் இங்கு நம் கண்ணை முதல் முதல் கவர்வது இந்த ஹாலிற்கும் அப்பால் அமைந்த கருவறை போன்ற ஓர் உள் அறையிலே உள்ள புத்த விக்கிரகம்தான். கிட்டத்தட்ட பன்னிரண்டு அடி உயரத்தில் புத்தர் உபதேசிக்கும் கோலத்தில் இருக்கிறார். அவர் இருக்கும் நிலையை தர்மசக்கர பிரவர்த்தன முத்திரை-என்கிறார்கள். இச்சிற்பவடிவத்தில் உள்ள சிறப்பான அம்சம் என்னவென்றால், அச்சிலைவடிவில் உள்ள புத்தர் முகத்தில் மூன்று பாவங்கள். காவலனை வேண்டிக் கொண்டால் அவன் தன் கையில் உள்ள விளக்கைத் தூக்கிப் பிடித்து மூன்றுக் கோலங்களையும் காட்டுவான். நேரே நின்றால் அவர் நம்மைப் பார்த்து புன்னகை புரிவார். வலப்பக்கம் ஒதுங்கினால் அப்படியே தியானத்தில் அமர்ந்து விடுவார். இடப்புறம் ஒதுங்கினால் முகத்திலே ஒரு சாந்தியை நிலவவிடுவார். இப்படி உள்ளத்தில் உள்ள உணர்ச்சிகளை எல்லாம உருவாக்கிக் காட்டும் அற்புத சிற்பமாக முதல் குடைவரையிலே புத்த பகவான் நமக்கு காட்சி தருகிறார். அஜந்தாவில் சித்திரங்கள்தான் உண்டு என்றல்லவா எண்ணிக்கொண்டிருந்தோம்.சிற்பத்திலும் அஜந்தா சிறந்து விளங்குகிறது என்பதற்கு இந்தப் புத்த வடிவமே ஒரு சிறந்த எடுத்துக்காட்டு. இந்தப் புத்தரது இருமருங்கிலும் அமர்ந்திருப்பவர் இருவர். ஒரு பக்கத்தில் வஜ்ரபாணி இன்னும் புத்தரைச் சுற்றி அவருடைய ஐந்து சிஷ்யர்கள் அவர்களையே பஞ்சவர்கீய பிக்ஷுக்கள் என்பர். இன்னும் எண்ணற்ற மலர்களும், கொடிகளும், மகர தோரணங்களும், நாகர் வடிவங்களும் இவற்றை எல்லாம் பார்த்து அதிசயித்துக்கொண்டே நிற்கலாம்.

மத்திய ஹாலில் உள்ள சித்திரங்களில் சிறப்பானது போதிசத்துவருடைய சித்திரம்தான். கம்பீரமான வடிவம் என்றாலும் கருணைததும்பும் முகவிலாசம். கண்களை முழுவதும் மூடாமல் இருக்கும் நிலை. கையிலே ஒரு

மலரை ஏந்தி நிற்பார். தலையை ஒரு பெரிய கிரீடம் அலங்கரிக்கும். இந்த அழகிய போதி சத்துவரைப் போல இன்னும் சில போதிசத்துவர் சித்திரங்கள் அங்கு உண்டு என்றாலும் சிதையாது அழியாத வர்ணத்தில் இருப்பவர் அந்தப் பெரிய போதிசத்துவரே. இன்னும் இங்கேயே சிபிச் சக்கரவர்த்தியின் வரலாறு, பாரசீகத்து தூதர்கள் சாளுக்கிய மன்னர் புலிகேசியை அவனது அரசவையில் சந்தித்தல், இத்துடன் பல ஜாதகக் கதைகள் எல்லாம் சித்திரவடிவில் இருக்கும். இன்னும் புத்தரது ஒன்றுவிட்ட சகோதரனான நந்தன் பௌத்த மதத்தைத் தழுவிய வரலாறும் சித்திரவடிவிலே அங்கே உருப்பெற்றிருக்கும். நந்தன், நந்தனது மனைவி சுந்தரி முதலானோர் எல்லாம் சித்திர உலகிலே சிறந்த சாதனைகள். மிதிலை மன்னன் மகாஜனகனது வரலாறும் இங்கு உயிர் ஓவியமகக தீட்டப் பெற்றிருக்கிறது.

இங்குள்ள சித்திர விசித்திரங்களையே பார்த்துக் கொண்டிருக்கலாம், எவ்வளவு நேரம் ஆனாலும். நாம் பார்க்க வேண்டியவை இன்னும் இருபத்தொன்பது குடைவரைகள் இருக்கின்றனவே என்று காவல்காரன் நமக்கு ஞாபகம் ஊட்டி நம்மை நகரச் செய்வான். அவன் சொல்கிறபடியே நகர்ந்து நாமும் இரண்டாவது குடைவரைக்குச் செல்லலாம். இது அளவில் முதல் குடைவரையை விடச் சிறியதுதான் என்றாலும் அழகில் அதற்கு குறைந்தது அல்ல. இதுவும் ஒரு விஹாரமே. இங்கும் ஒரு தாழ்வாரம் உண்டு. அதைத்தாங்கும் தூண்கள் உண்டு. சிறந்த வேலைப் பாடுகளுடன் கூடிய வாயில் ஒன்றும் உண்டு. இங்கும் ஒரு புத்தர் உள் கோயிலில் இருக்கிறார். அவர் பக்கத்தில் ஒரு பத்மபாணி. இங்குள்ள சித்திரங்கள் பல வரலாறுகளைச் சித்திரிக்கும். விதானத்தில் உள்ள ஒரு சித்திரத்தில் புத்தரது தாயான மாயாதேவியின் கனவுகாட்சி இருக்கிறது.

அந்நாளில் அவ்விரவில்
சுத்தோனப்பேர்
அண்ணற்கு வாய்த்த
அலர் மங்கை அனையாள்
எந்நாளும் காணாத
கனவொன்று கண்டாள்
சின்னஞ்சிறு மறுப்
பாருளதாய் காம
தேறுவின்பால் நிறம்
பெற்றுளதாய்
மன்னும் மது வேழம்
போன்றிடுமீன் இந்த
வையம் ஒளிர
ஒளிவிடுமீன்
விண்ணகம்விட்டு
விரைந்திறங்கி வரும்
மண்ணகம் வாழ
வலந்திரிந்து தேவி
மாயை வயிற்றில் புகுந்ததுவே.

என்று ஆசிய ஜோதியில் கவிமணி பாடிய வரலாறு இங்கே சித்திரமாக நமக்கு காட்சி தரும். இங்குள்ள சுவர்களில் பல வண்ண ஓவியங்கள். இங்கும் ஒரு போதிசத்துவர். எங்கும் தாமரைத்தடாகம். இங்குள்ள சித்திரம் ஒரு சரித்திர வரலாற்றையே உருவாக்கியிருக்கிறது. ஒரு சாம்ராஜ்ய சக்ரவர்த்தியின் காலடியில் ஒரு பெண் வீழ்ந்து வணங்கும் காட்சி ஒன்றை சித்திரமாகத் தீட்டியிருக்கிறார்கள். இச்சித்திரம் யாரைக் குறிக்கிறது என்றே தெரியவில்லை, என்று சரித்திர ஆசிரியர் பலரும் கருதுகிறார்கள். என்றாலும் அமரர் கல்கி அவருடைய சிவகாமி சபதம் என்னும் அற்புத நவீனத்தில் இது தமிழ் நாட்டு நடன சிங்காரியாம் சிவகாமி புலிகேசியின் காலடியில் விழுவதாக புலிகேசி கற்பனை பண்ணி எழுதியது என்று குறித்திருக்

கிறார். இப்படி ஒரு சித்திரம் தீட்டியதின் காரணமாக கலா ரசிகனான நீலகேசியாம் நாகநந்தி தன்சகோதரனான புலிகேசியின் பேரில் வன்மம் கொண்டு வாதாபியின் அழிவிற்கே வழி கோலினான் என்பர். இச்சித்திரத்தைப் பார்த்ததும், 'சிவகாமியின் சபதம்' என்னும் நவீனத்தின் காட்சிகள் பலவும் நம் கண்முன் விரியும்.

என்ன அஜந்தாவில் பெண்மை அழகு நிரம்பியிருக்கிறது என்று சொன்னீரே அதில் ஒரு கோடியைக் கூட காட்டவில்லையே என்று நீங்கள் முனுமுனுப்பது எனக்கு கேட்கிறது. அஜந்தாவின் அந்தப்புரத்திற்குள் அத்தனை சீக்கிரம் நுழைந்துவிட முடியுமா? சரி ஒருவாரம் காத்திருங்கள். அதன்பின் அஜந்தாவின் அந்தப்புரத்துக்கு அழைத்துச் செல்கின்றேன். அங்குள்ள அழகிகளையும் காட்டுகிறேன்.

# 27. அஜந்தாவின் அந்தப்புரம்

சில வருஷங்களுக்கு முன் நமது பிரதமமந்திரி பாண்டித ஜவஹர்லால் நேரு அமெரிக்கா சென்றிருந்தார். அவரை ஸ்ரீமதி கோல்ட் (இவர் 22 காரட் தங்கமோ அல்லது 14 காரட் தங்கத்தையோ சேர்ந்தவர் அல்ல) என்ற அம்மையார் ஒரு விருந்தில் சந்தித்திருக்கிறார், ''நான் இந்தியா வருவதாக இருக்கிறேன். அங்கு வந்தால் நான் முக்கியமாக முதன் முதல் பார்க்க வேண்டியது என்ன?'' என்று அவர் நேருவிடம் கேட்டிருக்கிறார். நிச்சயமாக ''அஜந்தா எல்லோராவைத்தான்'' என்பதே நமது பிரதம மந்திரியின் பதில்லாக இருந்திருக்கிறது. இப்படி ஒரு தகவல் ஒரு பிரபல அமெரிக்க மாதர் பத்திரிகையில். உண்மைதான். இந்தியாவிற்கு வரும் வெளிநாட்டுக்காரர் களிடம் நாம் காட்ட வேண்டியது இமயத்தின் சிகரத்தை யும், அகன்று பரந்த கங்கை நதியையும் அல்ல. அவை எல் லாம் இறைவன் அருளால் இயற்கையில் அமைந்தவை. சலவைக்கல் கனவு என்று புகழப்படும் தாஜ்மகாலைக் காட்டக் கூடாதோ? காட்டலாம். அது இந்திய கலாச் சாரத்துக்கோ, இந்திய மண்ணில் ஊறிய கட்டிடக் கலைக்கோ சான்றாக அமையாதே! அதனால்தான் இந்தியனது சிந்தனையில் பிறந்து இந்திய நாகரீகத்திலே தவழ்ந்து, இந்தியப் பண்பாட்டிலே வளர்ந்து, இந்திய மண்ணிலே சிறப்புடன் கொலுவிருக்கும் கலைக்கோயில் களைத்தானே காட்ட வேண்டும். அதிலும் சிற்பக்கலை எல்லாம் கிரேக்கர்களிடையேதான், சித்திரக்கலை எல் லாம் இத்தாலியர்களிடையே தான் என்று படித்து, அதே எண்ணத்தில் ஊறி இருக்கும் மேலை நாட்டு ரசிகர்களையும் மூக்கில் விரலை வைத்து அதிசயித்து நிற்கும்படி செய்ய வல்ல கலைக்கூடங்களைத்தானே காட்டவேண்டும். அதி

துகைய கலைக்கூடங்களில் தலையாய கலைக்கூடங்கள் தான் அஜந்தாவும், எல்லோராவும். எல்லோராவை நாம் பார்த்துவிட்டோம் சிற்பக்கலை அங்கு எப்படி பூரணத்துவம் பெற்றிருக்கிறது என்பதையுமே தெரிந்து கொண்டோம்.

ஆயிரம் வருஷங்களுக்கு முன் இந்திய நாட்டில் சித்திரக் கலை எவ்வளவு வளர்ச்சி பெற்றிருக்கிறது என்று தெரிய விரும்பும் எவரும் சென்று காணவேண்டியது அஜந்தாவைத் தான். சிற்பக்கலையின் சிகரத்தில் ஏறி இருந்த தமிழர் சித்திரக்கலையில் அவ்வளவு சிறப்புற்றிருக்கவில்லைதான். தமிழர்களாகிய நாம் பெருமைப்படுவதற்குரிய சித்திரங்கள் எல்லாம் சித்தன்ன வாசல் குடைவரையிலும் தஞ்சைப் பெருவுடையார் கோயில் கருவறையை சுற்றிய பிரகாரத்திலும், இன்னும் காஞ்சி கைலாசநாதர் கோயிலிலும் பனைமலைக் கோயிலிலும் உள்ளவைதானே. இவற்றை எல்லாம் விட அஜந்தா சித்திரங்கள் எவ்வளவு உயர்ந்தது என்று நாம் தெரிந்து கொள்ள வேண்டாமா? அதற்காகவே செல்கிறோம் அஜந்தாவிற்கு. அங்குள்ள குடைவரைகளில் இரண்டையும் பார்த்தோம். இனி மற்ற குடைவரைகளை யும் எல்லாவற்றையும் பார்க்க முடியாவிட்டாலும் முக்கிய மான குடைவரைகளையாவது பார்த்துவிட வேண்டாமா? அஜந்தா பெண்கள் பேரழகிகள், அவர்கள் கட்டியிருக்கும் கொண்டையும் அணிந்திருக்கும் ஆடையும் அணிகளும் மிக மிக நேர்த்தியானவை என்றெல்லாம் கேள்விப்பட்டிருக் கிறோமே, அவற்றின் உண்மையையும் தெரிந்து கொள்ளுவோமே இன்று.

மூன்றாவது குடைவரை முதல் 15-வது குடைவரை வரை விறு விறு என்று பார்த்து விடலாம். இவைகளில் 3-வது 5-வது குடைவரைகள் பூர்த்தியாகாத குடை வரைகள். 4-வது குடைவரையில் ஒரு அவலோகிதேஸ்வரர் சிலை ஒன்று உண்டு. புத்தரும் அவருக்கு இருபுறத்திலும் வஜ்ரபாணியும், பத்மபாணியும் வேறே சிலை உருவில் உரு

வாகி இருப்பார்கள். இந்த விகாரத்தில் 60-அடி சதுரமுள்ள பெரிய ஹாலும் அதைத் தாங்கி நிற்கும் 28 தூண்களும் உண்டு. 6-வது குடைவரை மாடியோடு கூடியது. இங்கும் ஒரு புத்தர். இக்குடைவரையில் ஒரே ஒரு பக்கத்துச் சுவர் மட்டுமே சித்திரம் தீட்டப் பெற்றிருக்கிறது. 7-வது குடைவரையில் முன்பு நல்ல சித்திரங்கள் தீட்டப்பட்டிருக்க வேண்டும். இன்று எஞ்சியிருப்பவை குறிப்பிடக் கூடியதாக இல்லை. 8-வது குடைவரை மற்ற குடைவரைகளை விடத் தாழ்ந்த இடத்தில் இருப்பதால் அதில் பெரும் பகுதி தூர்ந்துபோய் இருக்கிறது. 9-வது குடைவரை 10-வது குடைவரை இரண்டும் சைத்தியங்கள், இவை இங்குள்ள குடைவரைகளில் காலத்தால் முற்பட்டவை என்று கணக்கிடுகிறார்கள். இங்கு முதலில் சுவரில் தீட்டிய சித்திரங்கள் மேலேயே திரும்பவும் சித்திரம் தீட்டியிருக்கிறார்கள். இங்கு நாக மன்னர்கள், அவர்கள் தலைமீது விரிந்திருக்கும். பாம்புக்குடைகளும் தீட்டப்பட்டிருக்கின்றன. இவைதான் முதன் முதல் தீட்டிய சித்திரங்கள். பின்னரே புத்தரது சித்திரங்கள் தீட்டப்பட்டிருக்கின்றன. 10-வது குடைவரை அளவில் பெரியதுதான். அங்கு சாம ஜாதகக் கதைகள் சாதாந்த சாதகக் கதைகள் இவைகள் சித்திரங்களாக உருவாகி யிருக்கின்றன. இக்கதைகளில் உள்ள காட்சிகள் தொகுத்துக் கூறும்வகையில் இருக்கவில்லை. மிகவும் சிதைந்து போய் இருக்கும். இப்படியே 11, 12, 13, 14, 15, குடைவரைகள் எல்லாம். ஆதலால் விறு விறு என்று 16-வது குடைவரைக்கே போகலாம். இக்குடைவரையின் வராந்தாவில் உள்ள விதானத்திலே இரண்டு கந்தருவக் காதலர்கள். ஒருவரை ஒருவர் அணைத்துக் கொண்டு வானுலகில் பறக்கின்ற காட்சி சிற்பவடிவில் இருக்கும். ஆடவனது தோளில் ஒயிலாகச் சாய்ந்து கொண்டு அந்தக் கந்தருவப் பெண்பறந்து செல்வதே அவர்கள் புதியதொரு காதல் உலகத்தில் சஞ்சரிக்கின்றவர்கள் என்பதைக் காட்டும். இந்துதான் நந்தன் முடிதுறந்து பௌத்த பிக்ஷுஆன கதை முழுவதும்

சித்தரிக்கப்பட்டிருக்கின்றது. நந்தன் துறந்த முடியை ஏந்திவரும் அரண்மனைச் சேவகனைக் கண்டு மயங்கி விழும் நந்தன், மனைவி சுந்தரி எல்லாம் அழகாக உருவாகி யிருக்கிறார்கள். இன்னும் பல ஜாதகக்கதைகள் சித்திரங் களாக உருவாகி இருக்கும் இங்கே.

இவற்றையெல்லாம் விட்டு 17-வது குடைவரையில் நுழைந்ததால்தான் அஜந்தா பெண்கள் பலரைக் காணும் வாய்ப்புக் கிடைக்கும். சுருக்கமாகச் சொன்னால் இக் குடைவரையே அஜந்தாவின் அந்தப்புரம் ஆகும். இக்குடை வரையின் வாயிலிலே இரண்டு அப்சரஸ்களை நாம் சந்திப் போம். இருவரும் இரண்டு மரங்களில் பேரில் நின்று கொண்டிருப்பர். இந்த வாயிலைக் கடந்து உள்ளே நுழைந்தால் இங்குதான் அஜந்தா சித்திரங்கள் அழியாத நிலையில் காக்கப்பட்டு வந்திருக்கின்றன என்று தெரியும். இங்குள்ள சித்திரங்களில் சிறப்பானவை பல. ஓர் அரசிளங் குமரனும், குமரியும் இணைந்து உட்கார்ந்திருப்பர் ஒரு பக்கத்தில். இந்த இளங்குமரி உட்கார்ந்திருக்கும் கோலமே மிக்க கவர்ச்சியாக இருக்கும். குமரனோ கையில் ஒரு மதுக்கிண்ணத்தை ஏந்தி அதை குமரியிடம் கொடுத்து அருந்தும்படி சொல்லிக் கொண்டிருக்கும் பாவனை. இந்தச் சித்திரத்தை அடுத்து இந்த அரசிளங்குமரனும் குமரியுமே அரண்மனை வாயிலை நோக்கிச் செல்லும் காட்சியும் சித்தரிக்கப்பட்டிருக்கிறது. அந்த வாயிலில் அரசிளங் குமரன் பிச்சைக்காரர்களுக்குப் பிச்சை இடுகிறார். இக் கூட்டத்தில் உள்ள பிச்சைகாரிகூட அழகுடையவளாகத் தான் இருக்கிறாள். இதே குடைவரையில் அஜந்தா சித்திரங்களில் பிரசித்திப் பெற்ற அலங்காரக் கலையில் ஈடுபட்டிருக்கும் பெண்கள் நால்வரையும் பார்க்கிறோம். மத்தியில் நிற்பவர் குறைந்த உடையையும் நிறைந்த அணிகளையும் அணிந்து நிற்கும் அலங்காரவல்லி. கையிலே ஒரு பெரிய கண்ணாடியை ஏந்தி நிற்கிறாள். அவள் நிற்கிற ஒயிலே மிக்க கவர்ச்சியாக இருக்கிறது. அவள்

ஓர் அரசிளங்குமரி என்பதை அவள் தலையில் அணிந்து உள்ள கிரீடம் சுட்டிக்காட்டுகிறது. அவள் தன் அலங்காரத்தை எல்லாம் முடித்துக்கொண்டு பொட்டிட முனைந்து நிற்பவளாகத் தோன்றுகிறது. இவளைச் சுற்றி நிற்கும் இவள் தோழியர் சாந்து ஏந்தி நிற்கிறார்கள் போலும். இவர்களில் எல்லோருமே கருநிறத்து அழகிகள். எல்லோரும் சேர்ந்து ஒரு சொப்பன உலகத்தையே சிருஷ்டித்துக் கொண்டிருக்கிறார்கள் அங்கே. இன்னும் இங்கேயே ஒரு கந்தருவன் இசைமீட்டிக்கொண்டு விண்ணில் பறந்து செல்கிறான். அவனுடன் செல்கிறார்கள் மூன்று பெண்கள் தாளம் போட்டுக்கொண்டு, இவர்களது தலை அலங்காரம் எல்லாம் பிரமாதமாக இருக்கிறது. 'தன்னையும் தாங்கலாதார் துகில் ஒன்றும் தாங்கி நின்றார்' என்று கவிச்சக்கரவர்த்தி கம்பன் பாடியதற்கு ஒப்ப விழுந்து சரியும் துகிலையும் தாங்கிக்கொண்டு பறப்பவர்களாகவே தெரிகிறது. இன்றைய சினிமா நடிகையர் எல்லாம் அலங்காரக் கலையில் இப்பெண்களிடம் பிச்சை வாங்க வேண்டும் என்று எண்ணும்படி அத்தகைய கோலாகலமான அழகுடன் அவர்கள் விளங்குகிறார்கள். இந்தச் சித்திரங்களிடையேதான் பிம்பிசார மன்னனும் அவனது பட்டத்து அரசியும் கொலுவிருக்கிறார்கள். இன்னும் இங்கேயே சிங்கள நாடாகிய இலங்கைக்கு விஜயன் வரும் காட்சியும் அதை ஒட்டிய ஜாதகக் கதைகளும் உருவாகி இருக்கின்றன. இந்தப் பெண்களையும், அரசிளங்குமாரர்களையும், குமரிகளையும் காணும் கண்ணாலேயே ஓர் அற்புத சித்திரத்தையும் இங்கே காண்கிறோம். தன் மனைவியான யசோதரையையும், ராகுலனையும் பிரிந்து சென்ற சித்தார்த்தர் திரும்பவும் தன் நாட்டிற்கு வந்து தன் மனைவியிடமே பிச்சை பெறும் காட்சி. மிகப் பெரிய அளவில் சித்திரிக்கப்பட்டிருக்கிறது. ஆம். சிறிய வடிவிலே நிற்கும் யாசோதரை ராகுலன் முன்பு பெரியதொரு வடிவோடு புத்தர் நிற்கிறார், பிச்சை பாத்திரத்துடன், அவர்கள் உள்ளத்திலே அவர் எவ்வளவு உயர்ந்திருக்கிறார்

என்று காட்டவே இப்படி ஒரு கற்பனை பண்ணி சித்திரம் தீட்டியிருக்கிறார்கள். இன்னும் எண்ணற்ற சித்திரங்களை யும் தீட்டியிருக்கிறார்கள் இக்குடைவரையிலே. இக்குடை வரைச் சித்திரங்களை பார்த்துக் கொண்டே நிற்கலாம் என்ற எண்ணமே நமக்கு ஏற்படும் என்றாலும், மற்றக் குடைவரைகளையும் பார்த்துவிட்டு சீக்கிரம் ஜாகை திரும்பவேண்டுமே என்ற நினைவிலேதான் நாம் வெளியே வரவேண்டும்.

இனி நாம் காண வேண்டியது அதிகம் இல்லை. 19-ம் நம்பர் குடைவரை ஒரு சைத்தியம் இருக்கிறதே, அது ஒரு பெரிய அரண்மனை முகப்பு போலவே இருக்கும். அழகான உருட்டுத் தூண்கள் தாங்கும் மண்டபம் ஒன்று முன்னாலே நீண்டு கொண்டிருக்கும். அதற்கு மேலே கிட்டத்தட்ட துவாதசி சந்திரன் வடிவில் ஒரு பெரிய வாயில் இருக்கும் அதைச் சுற்றி எண்ணிறந்த சிற்ப வடிவங்கள் வேறே எல் லாம் ஏதோ செங்கல்லும் சுண்ணாம்பும் கொண்டு இன்றைய கொத்தனார்கள் கட்டியமைத்த கட்டிடமோ என்றே தோன்றும். கூர்ந்து நோக்கினால்தான் அது மலையையே குடைந்து கற்களை வெட்டிச் செதுக்கி அமைத்த குடைவரை என்று காண்போம்.

இங்கும் வெளிப்புறத்திலேயே ஒரு நாக அரசன். அவன் தலைக்கு மேலே ஏழுதலை நாகம் ஒன்று குடைபிடிக்கும். மன்னன் மனைவியும் அரசன் பக்கத்தில் அந்த அரியனையி லேயே இருப்பாள். இருவரும் ஒரு காலைத் தொங்கவிட்டு ஒரு காலை தூக்கிவைத்து ஒய்யாரமாகவே உட்கார்ந் திருப்பர் இருவர் தலையையும் மணிமகுடம் அலங்கரிக்கும். உள்ளே நுழைந்தாலோ எல்லோராவில் கண்ட விஸ்வகர்ம குடைவரை போலவே இருக்கும். வானளாவிய விதானங்கள் அவ்விதானத்தைத் தாங்கி நிற்கும் பிரம்மாண்டமான தூண்கள் எல்லாம் கம்பீரமாக இருக்கும்.

இந்தப் பத்தொன்பதாவது குடைவரையைக் கண்ட பின் இன்னும் ,நேரத்தைப் போக்கிக் கொண்டிருக்க

வேண்டாம். நேரே 26-வது குடைவரைக்கே நடந்து விடலாம். அங்குதான் புத்தர் மகாபரிநிர்வாணம் அடைந்த காட்சி செதுக்கப்பட்டிருக்கிறது. 24 அடி நீளத்தில் புத்தர் படுத்திருக்கிறார். அவர் பக்கலில் அவரது சிஷ்யர்கள் எல்லாம் துயரம் தேங்கிய முகத்தினராய் அமர்ந்திருக்கிறார்கள். இங்குதான் புத்தரை மயக்க முனைந்த மாரா ஜாதகக் கதையும் சித்தரிக்கப்பட்டிருக்கிறது. இக்குடைவரையின் சிற்பவடிவங்கள் எல்லாம் ஒரே புத்த மயம் இங்கு மத்தியில் ஒரு ஸ்தூபமும் அதில் சிம்மாசனத்தில் வீற்றிருக்கும் புத்த விக்கிரகம் ஒன்றும் இருக்கிறது. இந்த புத்தரை நீங்கள் எங்கு வேண்டுமானாலும் நின்று பார்க்கலாம். எங்கு நின்றாலும் பார்க்கிறவர்களைப் பார்க்கும் பாவனை உடையவராகவே புத்தர் காணப்படுகிறார். இக்குடைவரைக்கு -மேல்புறத்தில்தான் 28, 29 குடைவரைகள் இருக்கின்றன. இவைகளுக்கு செல்ல நல்ல பாதையில்லை. மேலேயுள்ள குடைவரையிலிருந்து வாகூரா நதிக்குள் இறங்கி அதன் பின்னும் மலைப்படிகளில் தத்தித் தத்தி ஏறினால்தான் சென்று காணலாம். அப்படி சிரமத்துடனே சென்று காண்பதற்குத் தகுந்த சிற்பங்களோ சித்திரங்களோ அங்கு இல்லை. காலை 9 மணிக்கு எல்லாம் முதல் குடைவரையில் நுழைந்தோம். 26—வது குடைவரையை விட்டு வெளி வரும் போது கிட்டத்தட்ட மாலை 4 மணி ஆகியிருப்பதாக கடிகாரம் காட்டும். இது வரை பசி, தாகம் எல்லாவற்றையும் அல்லவா மறந்திருக்கிறோம். இனி அக்குடைவரை வாயிலிலேயே அமர்ந்து, கொண்டு வந்திருக்கும் சிற்றுண்டியை ஒருகை பார்க்க வேண்டியதுதான். அதன் பின்னும் நடக்க வேண்டியிருக்கிறதே. முதல் குடைவரையிலிருந்து 26-வது குடைவரை தான் கிட்டத்தட்ட ஒரு மைல் தூரம் இருக்கும் போலிருக்கிறதே. ஆதலால் சென்ற படியே திரும்பி அஜந்தா மலை அடிவாரத்திற்கு வந்து கார் ஏறி திரும்பவும் ஔரங்காபாத்திற்கோ அல்லது ஜால்கன் நகரத்திற்கோ சென்று சேரவேண்டியதுதான்.

அஜந்தாவில் உள்ள இந்த வண்ண வண்ண ஓவியங்களை எழுதி எவ்வளவு காலம் ஆயிற்று தெரியுமா? திட்டமாகச் சொல்ல முடியாவிட்டாலும் 1800-வருஷங்களுக்கு குறைவில்லை, என்று தெரிகிறது. இது என்ன சென்ற வருஷம் எழுதிய படம் இந்த வருஷம் மங்கிவிடுகிறது! அப்படி இருக்க இச் சித்திரங்கள் மட்டும் எப்படி அழியாமல் இருக்கிறது என்று கேட்கத் தோன்றுகிறதல்லவா? அதுதானே அஜந்தா ரகசியம். அந்த ரகசியத்தை அறியத்தானே பல்லவ சாம்ராஜ்யச் சிற்ப சக்கரவர்த்தி ஆயனர் முயன்றார் என்று அமரர் கல்கியின் 'சிவகாமியின் சபதம்' என்ற நவீனம் கூறுகிறது. ஆயனாரும் அவரை ஆதரித்த பல்லவ மன்னர் மகேந்திரவர்மனாலும், நரசிம்மவர்மனாலும் காணமுடியாமல் போனதை நம்மால் கண்டுபிடிக்க முடியவா போகிறது? இருந்தாலும் சிற்பவல்லுநர்கள் சொல்வதை மட்டும் சொல்லிவிட்டு நான் நின்று கொள்கின்றேன். மேலும் ஒரு சந்தேகம். வெட்டிச் செதுக்கிய பாறையில் இந்த வர்ணங்களை எப்படித் தீட்ட முடிந்தது, என்று ஒரு கேள்வி. இதற்கும் விடை சொல்கிறார்கள் இன்றைய சிற்ப வல்லுநர்கள். பாறையை வெட்டிச் செதுக்கிய பின் அதன் மேல் சுண்ணாம்புக்கொண்டு பூசி சமதளம் ஆக்கிக் கொண்டு அதன் மேல் பச்சிலைச் சாற்றையும் வண்ணக் கற்களின் பொடியையும் சேர்த்து அரைத்த கலவையைக் கொண்டு இச்சித்திரங்கள் தீட்டப்பட்டிருக்க வேண்டும். அப்படி தீட்டப்பட்டதின் காரணமாகத்தான் அவை அழியாதிருக்கின்றன, பல இடங்களில் காரை பெயர்ந்து விழுந்து பின்னும்கூட.

இன்னும் எவ்வளவு காலம் இச் சித்திரங்கள் நிலைத்து நிற்கும் என்று சோதிடம் சொல்ல நம்மால் இயலாது. ஆனால் ஒரு தடவை பார்த்தவர்கள் உள்ளத்தில் என்றும் அழியாத வண்ண ஓவியமாக அது நிலைத்து வருகிறது. இது போதாதா என்ன?

# 28. சாஞ்சி ஸ்தூபங்கள்



காஞ்சி ஸ்தூபி

' புரவுதரு குடியாகிப் புயல் வண்ணன்
விரும்பியதும் பொழில்சூழ் காஞ்சி
கரிய சுடர்வீதி தோறும் உலாப்போந்து
கவர்வதும் கலை ஆழ் காஞ்சி
நிரைவளை இவ்வுலகுய்ய நின்று தவம்
செய்வதுவும் நிழல் சூழ் காஞ்சி
சுரமகளிர் பாடுவதும் பயில்வதுவும்
சொல்மாலை தொகுத்த காஞ்சி

என்று தமிழ்நாட்டின் கலைவாழ் நகரமான காஞ்சி பாராட்டப்படுகிறது. வீரசோழியம் என்னும் இலக்கண நூலில் வரும் மேற்கோள் பாட்டு ஒன்றில். ஆனால் இந்தச் சாஞ்சி எல்லாம் உருவாவதற்கு எத்தனையோ நூற்றாண்டுகளுக்கு முன்னமேயே ஒரு அரியகலைச் சின்னத்தைத் தன்னகத்தே கொண்டு விளங்கியிருக்கிறது சாஞ்சி. பௌத்தர்கள் பற்றற்றவர்களாக வாழ்ந்தாலும் கலை வளர்ப்பதில் யார்க்கும் பின்னடையவில்லை. கலைச் சின்னங்கள் பலவற்றை நாடு முழுவதும் பரப்பி வைத்திருக்கிறார்கள். அவைகளில் காலத்தால் முற்பட்ட சின்னங்களைத் தாங்கி நிற்கிற இடம்தான் சாஞ்சி. அங்குதான் அசோகர் கி. மு. மூன்றாம் நூற்றாண்டிலேயே அமைத்த கலைச்சின்னமான பெருந்தூபியும் அதை ஒட்டிய மற்ற சின்னங்களும் இருக்கின்றன. அவற்றைக் காணவே இன்று நாம் சாஞ்சிக்குச் செல்கின்றோம். சாஞ்சி செல்ல நாம் சென்னையிலிருந்து டில்லி செல்லும் கிராண்ட் டிரங்க் எக்ஸ்பிரசில் ஏறி போப்பால் ஜங்ஷனில் இறங்கி விட வேண்டும். அங்கிருந்து பினாய் செல்லும் பாசஞ்சர் வண்டியில் ஏறினால் போப்பாலிலிருந்து இருபத்தி எட்டு மைல் தூரத்தில் உள்ள சாஞ்சி என்னும் ஸ்டேஷனிலேயே இறங்கலாம். ஸ்டேஷனுக்கு பக்கத்திலேயே உள்ள டூரிஸ்ட் ஹோமிலேயே போய்த் தங்கலாம். தக்க வசதி உடையவர்கள் என்றால் மத்திய பிரதேசத்தின் தலைநகரான போப்பாலில் இறங்கி அங்கிருந்து டாக்சி கார் பிடித்துக் கொண்டு சாஞ்சி போய் முன்சொன்ன டூரிஸ்ட் ஹோமிலேயே போய்த் தங்கலாம். அங்கிருந்து அரைமைல் தூரத்திலேதான், சாஞ்சி ஸ்தூபம் இருக்கும் குன்றிருக்கிறது. டாக்சியில் சென்றிருந்தால் மலை மேலேயே செல்லலாம். நல்ல பாதைபோட்டு வைத்திருக்கிறார்கள். இல்லை ரயிலில் சென்றிருந்தால் கால்கடுக்க படிகள் பல ஏறி நடந்துதான் ஆக வேண்டும்.

சாஞ்சி புத்தரது வாழ்க்கையோடு நேரடியாகத் தொடர்புடைய தலம் அன்று. இங்குள்ள பிரம்மாண்ட

மான ஸ்தூபி அசோக சக்கரவர்த்தியால் சாக்கிய முனிவரின் ஞாபகார்த்தமாக கட்டப்பட்டது என்று சரித்திர ஏடுகள் பேசுகின்றன. ஆனால் மற்ற பௌத்த சின்னங்களைப்பற்றியெல்லாம் விரிவான குறிப்புகள் எழுதியிருக்கும் ஹீவான் சுவாங், இந்த சாஞ்சியைப் பற்றி ஒரு குறிப்புமே எழுதிவைக்கவில்லை. என்றாலும் இலங்கை மகாவம்சம் என்னும் பௌத்த நூலில் சில தகவல்கள் இருக்கின்றன. மௌரியச் சக்கரவர்த்தி அசோகர் உஜ்ஜியினியில் ராஜப்பிரதிநிதியாக இருந்து அரசாண்டு வந்த காலத்தில், சாஞ்சிக்குப் பக்கத்தில் உள்ள விதிசா நகரத்து வணிகன் ஒருவனது மகளை மணந்திருக்கிறார். அவளிடம் அசோகருக்கு மூன்று பிள்ளைகள் பிறந்திருக்கிறார்கள். அவர்களில் ஒருவனே மகிந்தன். மகிந்தனது தாயே வேதிசகிரி என்னும் இடத்தில் ஒரு புத்தவிகாரம் கட்டி அங்கு வாழ்ந்திருக்கிறாள். இலங்கையில் பௌத்தத்தைப் பரப்பச் சென்ற மகிந்தன் தன் துணைவி தேவியுடன் இந்த வேதிசகிரிக்கு வந்து தன் தாயைக் கண்டு வணங்கியிருக்கிறார் என்று மகாவம்சம் கூறுகிறது. விதிசா என்று அன்று அழைக்கப்பட்ட பட்டணமே இன்று பில்சா என்று வழங்குகிறது. வேதிசகிரியே சாஞ்சி என்றாகியிருக்க வேண்டும்.

சாஞ்சி ஸ்தூபி இருப்பது ஒரு சிறு குன்று. அது பூமி மட்டத்திற்குமேல் 350-அடி உயரம் உள்ளது. ஆம். நம் திருத்தணிகை மலையின் அளவினதே. படிவழியாக ஏறி நடந்தாலும், இல்லை காரிலேயே சென்றாலும் மலையின் மேல்தளத்திற்கு வந்து சேரலாம். அங்கு ஒரு பரந்த சமவெளியிருக்கிறது. அதில்தான் இந்தப் புகழ்பெற்ற ஸ்தூபி கட்டப்பட்டிருக்கிறது. இது வட்டவடிவமாக அமைந்துள்ளது. ஒரு பெரிய பூகோள உருண்டையை இரண்டாக வெட்டி ஒரு பகுதியை கவிழ்த்து வைத்திருந்தால் எப்படி இருக்குமோ அப்படி இருக்கிறது. இந்த ஸ்தூபியின் குறுக்களவு 120 அடி உயரம் 54 அடி,

ஸ்தூபியின் அடிமட்டத்தில் அதைச் சுற்றிப் பிரகாரம் அமைத்திருக்கின்றனர். இப்பிரகாரத்திற்குச் செல்ல படிகள் கட்டப்பட்டு இருக்கின்றன. ஸ்தூபியைச் சுற்றி தரைமட்டத்தில் ஒரு சுற்று வழியும் அமைக்கப்பட்டு இருக்கிறது. இந்த வழியைச் சுற்றித்தான் கல்லால் ஆகிய வேலி ஒன்றும் இருக்கிறது. இந்த வேலியின் நான்கு பக்கங்களிலும் நான்கு தோரண வாயில்கள் இருக்கின்றன. தோரண வாயிலின் மூன்று தோரணங்களை இரண்டு தூண்கள் தாங்கி நிற்கின்றன. தோரண வாயில்களின மேல் பகுதியில் குறுக்கு கல் சட்டங்கள் பரப்பி இருக்கிறார்கள். தூண்களின் மேல் பானை யக்ஷிணி முதலிய வடிவங்கள் செதுக்கப் படிருக்கின்றன. அவைகளே மேலே உள்ள தோரணங்களைத் தாங்கி நிற்பதாகக் காட்டப்பட்டிருக்கின்றன. வாயிலின் மேல் அடுக்கடுக்காக மூன்று தோரணங்கள். எல்லாம் கல்லால் ஆகிய சட்டங்கள். தூண்களிலும், போதிகைகளிலும், தோரணங்களிலும், புத்தர் வாழ்க்கை வரலாறும், ஜாதகக் கதைகளின் நிகழ்ச்சிகளும். ஸ்தூபி, சக்கரம், மரம் முதலிய சின்னங்கள் சிற்பவடிவில் அமைந்திருக்கின்றன, புத்தர் ஞானம் பெற்ற அசோக மரமே மிகுதியும் காணப்படும். அசோக மரம் தளிர்க்கும் காட்சி மிகவும் அழகானது. இந்தத் தோரண வாயில்களின் தலைப்பில்தான் தர்ம சக்கரங்கள் அமைந்திருக்கிறார்கள். அவைகளை அடுத்து சாமரை வீசும் யக்ஷர்கள், இன்னும் புத்தர், தர்மர், சங்கம் மூன்றையும் குறிக்கும் பௌத்த திரி ரத்னங்களும் இருக்கும். இத்தோரண வாயில்களின் வேலைப்பாடு ஆதி பௌத்த கலைக்கு சிறந்த எடுத்துக்காட்டாக அமைகின்றன. இத்தோரண வாயில்கள் கி. பி. 35—க்கு பின்னரே அமைக்கப்பட்டவை என்று கட்டிடக்கலை நிபுணர்கள் கூறுகின்றனர்.

இந்த வாயில்களின் வழியாக நுழைந்தே ஸ்தூபியைச் சுற்றிவர வேண்டும். ஸ்தூபி முழுவதும் செங்கல்லால் கட்டப்பட்டு, மேலே கற்கள் பதித்து வைக்கப் பட்டிருக்கின்றது. முன்னரே குறித்தபடி ஸ்தூபி அர்த்த

கோளவடிவில் இருக்கும். ஸ்தூபியின் உச்சியில் புனிதத் தன்மை வாய்ந்த குடை ஒன்றிருக்கிறது. அதனைச் சத்திராவளி என்கின்றனர். அதைச் சுற்றி தூண்கள் நிறுத்தியிருப்பது போல் கட்டி வைத்து இருக்கின்றனர். அதனையே ஹார்மிகம் என்கின்றனர். ஸ்தூபிகள் மீது ஏறி அதனைச் சுற்றிவர பிரதக்ஷணப் பிரகாரம் அமைத் திருக்கின்றனர். அங்கிருந்து தான் குடை பெட்டியை எல்லாம் காணவேண்டும்- அதற்கு மேல் ஸ்தூபியில் ஏற முடியாது ஏறவும் கூடாது,

இனி ஸ்தூபியை விட்டு வெளியே வரலாம். இந்தப் பெரிய ஸ்தூபியின் தெற்கு வாயிலுக்குப் பக்கத்திலே அசோகர் சாஸனத்தூண் ஒன்று உடைந்து கிடக்கிறது. அதில் பௌத்தர்கள் சமயச் பூசலை எல்லாம் விட்டுவிட வேண்டும் என்று அசோகர் பொறித்து வைத்திருக்கிறார். இது தான் 42 அடி உயரம் உள்ளதாக இருந்திருக்கிறது. இத் தூண்ணின் மேல் பணிபோன்ற வடிவுள்ள போதிகை ஒன்றும் அதன் மேல் நான்கு திசைகளையும் நோக்கும் நான்கு சிங்க வடிவங்களும் இருந்திருக்கின்றன. இதுதான் இன்று மண்ணில் புதையுண்டும் பெரும்பாலும் துண்டு துண்டுகளாக உடைந்தும் கிடக்கிறது. இவற்றை எல்லாம் சேர்த்து வைக்க புதை பொருள் ஆராய்ச்சியாளர் முயன் றிருக்கின்றனர். இதனைப் போன்ற அமைப்புள்ள தூணையே சிதையாத நிலையில் சாரநாத்தில் காண்கின் றோம். அதை அங்கு செல்லும் போது பார்த்துக் கொள் வோம். இதுவே நமது குடியரசின் சின்னம் என்பது ஞாபகமிருக்கும்.

பெரிய ஸ்தூபிக்கு வடக்கிழக்கில் ஐம்பது கஜ தூரத்தில் மற்றொரு ஸ்தூபி இருக்கிறது. இதையே ஸ்தூபி எண் மூன்று என்று கணக்கிட்டிருக்கின்றனர். இது கி.பி. 150—ம் வருஷம் கட்டப்பட்டிருக்க வேண்டும் என்று கருதுகின்றனர். இது அமைப்பில் பெரிய ஸ்தூபியை போன்றதே என்றாலும் அளவில் சிறியது. இதன்

குறுக்களவு 50 அடி உயரம் 27 அடி. இதனை 1851—ம் வருஷமே அகழ்ந்து எடுத்திருக்கிறார்கள். அப்போதே இது சிதைந்திருக்கிறது. இங்குதான் புத்தரின் பிரதம மாணவர்களாகிய சாலிபுத்திரர், மகா மௌத் கல்யாயனர் முதலியவர்களது அஸ்திகள் அடங்கிய கற்பெட்டிகள் இருந்திருக்கின்றன. இந்த கற்பெட்டிகளை எடுத்து அடக்கம் செய்து அதன் பேரில் ஒரு புதிய விகாரத்தைக் கட்டி இருக்கின்றனர்.

பெரிய ஸ்தூபியின் தெற்கு வாயிலின் நேர் எதிரே சைத்திய மண்டபம் ஒன்றிருக்கிறது. அதற்கு கிழக்கே குப்தர் கோயில் ஒன்றிருக்கிறது. பெரிய ஸ்தூபியின் மேற்கு வாயிலின் முன்னால் அசோகரின் மனைவியால் கட்டப்பட்ட இருமண்டபங்கள் இருக்கின்றன. இவைகள் எல்லாம் பௌத்த பிக்ஷுக்கள் தங்குவதற்காகக் கட்டப்பட்டிருக்கின்றன. குன்றின் மேற்குச் சரிவில் பாதி வழியில் உள்ள பாறையின் மேல் மற்றொரு ஸ்தூபி இருக்கிறது. இதனையே இரண்டாவது ஸ்தூபி என்பர். இது அளவில் மிகச் சிறியது. குறுக்களவு 39 அடிதான். உயரமும் 22 அடிதான். இதற்குத் தோரண வாயில்கள் இல்லை. ஸ்தூபியின் மேல் தளத்திலும் குடையோ பெட்டியோ இருக்காது. மொட்டையாகவே இருக்கிறது. ஸ்தூபியைச் சுற்றி கல் அளி மாத்திரம் உண்டு. அளியின் பெண் தேவதைகள், இறக்கையுள்ள சிங்கங்கள், குதிரைத்தலை, மீன் தலையுடைய மனிதர்கள், யானைகள் என்று பல வகையான உருவங்கள் சித்திரிக்கப்பட்டிருக்கின்றன. குன்றின் அடிவாரத்தில் மேற்கு பக்கத்தில் சிறிய ஸ்தூபி ஒன்றும் இருக்கிறது. இது கி.மு. மூன்றாம் நூற்றாண்டில் கட்டப்பட்டதென்பர். இங்கு பௌத்த போதகர்கள் கச்யபன், மௌதல்ய புத்திரன் முதலியவர்களின் அஸ்திகள் அடக்கம் செய்யப்பட்டிருக்கின்றன. இங்குள்ள அளியும் தோரணவாயிலும் சிற்ப வேலைப்பாடுகள் உள்ளவை. காஞ்சியில் ஐந்து விகாரங்கள் காணப்படுகின்றன. ஆதியில் இவை மரத்தால் கட்டப்பட்டிருக்கின்றன. அவை அழிந்து

பட பின்னர் அவைகளைக் கல்லாலேயே கட்டியிருக் கின்றனர்.

இவைகளை எல்லாம்விட, குன்றின் மேல் தளத்திலே வடபாகத்தில் இலங்கை பௌத்த சங்கத்தினர் ஒரு புதிய கோயில் ஒன்றைக் கட்டி அதில் புத்தபகவானை பிரதிஷ்டை செய்திருக்கிறார்கள். இத்தனை ஸ்தூபிகளையும் பார்த்த பின் அந்த புத்தர் சந்நிதிக்கும் சென்று வணங்கலாம். வணங்கிய பின்,

> மூன்தாள் பெருமைக் கண்
> நின்றான் முடிவெய்து காலும்
> நன்றே நினைந்தான்
> குணமே மொழிந்தான், தனக்கென்று
> ஒன்றானும் இல்லான்,
> பிறர்க்கே உறுதிக்கு உழந்தான்
> அன்றே இறைவன்
> அவன் தாள் சரணங்கள் அன்றே.

என்று குண்டலகேசி கடவுள் வாழ்த்துப் பாடலைப் பாடிக் கொண்டே வெளியே வரலாம்.

சாஞ்சியின் சரித்திரம் மிக்க குறைபாடுகள் உடையது. மௌரிய அரசர்கள் காலத்து சாஞ்சி புகழ் பெற்றிருந் திருக்கிறது. மௌரிய வம்சம் க்ஷீணித்த பின்னர் சுங்க வம்சத்தாரது ஆட்சியின் கீழ் வந்திருக்கிறது. அவர்கள் பௌத்த மதத்தைச் சார்ந்தவர்கள் அல்ல என்றாலும் அவர்கள் காலத்தில் இரண்டு ஸ்தூபிகள் எழுந்திருக் கின்றன. இப்போதுள்ள பெரிய ஸ்தூபியே சுங்க அரசர்கள் தான் கட்டினார்கள் என்பது ஓர் ஆராய்ச்சி. இல்லை, ஸ்தூபியைச் சுற்றியுள்ள கல் கிராதிகள்தான் சுங்க அரசர் கட்டியவை என்பர் சிலர். ஹர்ஷர் காலத்தில்தான் தோரண வாயில்கள், மற்ற கட்டிடங்கள் கட்டப்பட்டன என்றும் கூறுவர். அதன் பின் சாஞ்சி ஸ்தூபிகள், ஸ்தலங்கள் கவனிப்பாரற்றுச் சிதைந்து கிடந்திருக்கின்றன.

விதிசா நகரமும் அழிந்திருக்கிறது. பில்சா பட்டணம் தோன்றியிருக்கிறது. அவுரங்கசீப் பில்சா பட்டணத்தை பலமுறை தாக்கி அழித்திருக்கிறான். ஆனால் அவன் சாஞ்சியின் மேல் கை வைக்கவே இல்லை. பின்னர் சாஞ்சி கவனிப்பாரற்றுக்காடு மண்டி ஸ்தூபங்கள் எல்லாம் புதையுண்டு கிடந்திருக்கின்றன. 1912—ல்தான் புதை பொருள் ஆராய்ச்சியாளர் காட்டை அழித்து, சாஞ்சி ஸ்தூபங்களை வெளிக் கொணர்ந்திருக்கின்றனர். இந்தப் பணியில் பெரும் பங்கு பெற்றவர் சர் ஜான் மார்ஷல் என்பவர். அவரது பெரு முயற்சியாலேயே சாஞ்சி பழைய நிலையை பெற்றிருக்கிறது. சாஞ்சியில் இன்று சாந்தம் நிலவுகிறது. வாழ்க்கையில் ஏற்படும் தொல்லைகளை மறந்து அமைதியான இடத்தைத் தேடி வருபவர்கள் சென்று தங்கியிருக்க வசதியான இடம் சாஞ்சி என்று மட்டும் கூறி விட்டால் போதும் அல்லவா?

# 29. தாக்கோர் துவாரகா நாதர்



தாக்கோர் துவாரகா நாதர் கோயில்

இப்படியன், இந்நிறத்தின், இவ்வண்ணத்தின் இவன் இறைவன் என்று எழுதிக் காட்ட ஒண்ணாது என்கிறார் அப்பர் பெருமான். ஆனால் அப்படிப்பட்ட இறைவனைத் தான் கல்லிலும் செம்பிலும் வடித்து வைத்திருக் கின்றோம் நாம். இப்படி இருக்கும்போது இறைவன் எவ்வளவு எடை இருப்பான் என்று நினைத்துப் பார்த்து விடமுடியுமா என்ன? அதிலும் தோலா, பலம், மணங்கு

என்ற எடையை எல்லாம் ஒதுக்கிவிட்டு கிராமாகவும், கிலோவாகவும் நிறுத்தல் அளவையைக் கணக்கிடும் இன்று இறைவன் எடை எவ்வளவு என்று கேட்டால் எளிதாகச் சொல்லக் கூடுமா? முடியாது என்றுதானே கைவிரிப்போம். ஆனால் பக்தர்கள் இதற்கெல்லாம் சளைக்கின்றவர்கள் அல்ல. உலகில் உள்ள மக்களின் தராதரங்களை எல்லாம் எடைபோட்டு சொல்லும் ஆற்றல் உடையவர்கள் அல்லவா அவர்கள். ஆதலால் அவர்களால் அந்த பகவானை எடைபோட முடியாதா என்ன? சரி, ஏனைய்யா கதையை நீட்டிக் கொண்டிருக்கிறீர். பகவானின் எடைதான் எவ்வளவு என்று நீர் கணக்கிட்டிருக்கிறீர் என்றுதானே கேட்கிறீர்கள்? ஈரேழு பதினேழு லோகங்களையும் அவர் காத்து எல்லா இடத்திலும் பரவி நிற்கிற இறைவன்தான் என்றாலும், அவரது எடை எல்லாம் பக்தர் விஜய சிம்மரின் மனைவியான கங்காபாய் அம்மையாரின் மூக்குத்தி எவ்வளவு எடையோ அதற்கும் குறைவான எடை உள்ளவர்தான் அவர். அது என்ன பகவானையும், கங்காபாய் அம்மையார் மூக்குத்தியையும் சேர்த்து எடைபோட்டு விட்டீரே என்றுதானே கேட்கிறீர்கள். அதன் விவரம் தெரிந்து கொள்ள விரும்பினால், இன்றைய குஜராத்தில் உள்ள தாக்கோர் என்னும் டங்கபுரத்திற்கே செல்ல வேண்டும். அங்கேயே செல்கிறோம் நாம் இன்று.

தாக்கோர் என்னும் தலத்திற்கு ரயிலிலும் செல்லலாம், ரோட் வழியாகவும் செல்லலாம். பம்பாயிலிருந்து அகமதாபாத் செல்லும் ரயிலில் ஏறி, ஆனந்த் என்ற ஜங்ஷனில் ரயில் மாறி அங்கிருந்து ரட்லம் செல்லும் ரயிலில் சென்றால், தாக்கோர் ஸ்டேஷனிலேயே இறங்கலாம். இல்லையென்றால் அகமதாபாத் சென்று அங்கிருந்து காரிலோ பஸ்ஸிலோ சென்றாலும் தாக்கோர் போய்ச் சேரலாம். தாக்கோர் என்னும் டங்கபுரத்தில் கோயில் கொண்டிருப்பவர் கிருஷ்ண பரமாத்மாவே. துவாரகையில் எழுந்தருளியிருந்த இந்த பரமாத்மா இந்த

டங்கபுரத்திற்கு வந்து சேர்ந்து விட்டார் என்பது வரலாறு. அப்படி அவர் வந்து சேர்ந்த விவரம் ஒரு ரஸமான கதை. டங்கபுரம் என்னும் இத்தலத்தில் விஜயசிம்மன் என்பவர் தன் மனைவி கங்காபாயுடன் வசித்து வருகிறார். அவர் சிறந்த விஷ்ணு பக்தர். ராம பக்தியில் திளைத்த காரணமாக ராமதாஸர் என்றே அழைக்கப்படுகிறார். அவர் துவாரகா நாதனான கிருஷ்ண; பரமாத்மா வையே தன் வழிபடு தெய்வமாகக் கொண்டவர். ஆண்டுக்கொரு முறையாவது துவாரகை சென்று கண்ணனைக் கண்டு தொழாவிட்டால் அவரது ஆத்மா திருப்தி அடையாது. தன்கையாலேயே துளசியை வளர்த்து அத்துளசியைக் கொண்டே துவாரக நாதனை வழிபாடு செய்பவர் அவர். அவருக்கு வயது எண்பது ஆகிறது. துவாரகையோ டங்கபுரத்திலிருந்து இருநூறு மைலுக்கு அப்பால் இருக்கிறது. போக்குவரத்து சாதனங்களும் கிடையாது. இந்தத் தள்ளாத வயதில் துவாரகை செல்வது கஷ்டமான காரியமாக இருந்தது. இருந்தாலும் அவர் நியமத்தை விடவில்லை. இவரது கஷ்டத்தை அறிந்த பரந்தாமன், விஜயசிம்மரது கனவில் தோன்றி ''இனி நீர் துவாரகை வர வேண்டியதில்லை. நாமே டங்கபுரம் வருகிறோம். நாம் அங்கு எழுந்தருள்வ தற்கு ஒரு வண்டி கொண்டுவாரும் பார்ப்போம்'', என்று சொல்கிறார். இதனை செவிமடுத்த விஜயசிம்மர் ஆனந்த பரவசமாகி ஓர் அன்பரிடம் வண்டியும் மாடும் பெற்று மிக்க சிரமத்துடன் துவாரகை சென்று சேர்கிறார். அங்கு ஒரு பிராமணர் இல்லத்தில் தங்குகிறார். அங்கும் துவாரகா நாதன், தான் அவருடன் கிளம்ப தயாராக இருப்பதாகவும் தன்னை வந்து எடுத்துச் செல்லும்படியும் கனவில் உரைக் கிறார். நள்ளிரவில். ஊரில் உள்ளவர்கள் எல்லாம் உறங்கும்போது விஜயசிம்மர் துவாரகைக் கண்ணன் கோயிலுக்குச் செல்கிறார். இவரது கை தொட்ட உடனேயே கதவுகள் எல்லாம் திறந்து கொள்கின்றன. கருவறையில் இருந்த கண்ணனை எடுத்து தன் வண்டியில்

ஏற்றி இரவுக்கிரவே டங்கபுரம் நோக்கிப் பிரயாணம் ஆகிறார், விஜயசிம்மர். என்ன அதிசயமோ, பொழுது புலருமுன் வண்டியும் விஜயசிம்மரும் டங்கபுரம் வந்து சேர்ந்து விடுகின்றனர். துவாரகா நாதனை தன் இல்லத்திலேயே எழுந்தருளச் செய்து, தானும் தன் மனைவி கங்காபாயும் சேர்ந்து வழிபாடுகள் செய்கின்றனர்.

துவாரகையில் உள்ள பூசாரிகள் காலையில் கோயிலுக்குச் சென்றால் அங்கு துவாரகா நாதனைக் காணோம். விசாரித்ததில் டங்கபுரத்திலிருந்து வந்திருந்த விஜயசிம்மர்தான் எடுத்துச் சென்றிருக்க வேண்டும் என்று அறிகிறார்கள். ஆகவே டங்கபுரத்திற்கு அவர்கள் வந்து சேர்கிறார்கள். துவாரகையிலிருந்து அரசாண்ட மன்னனும் விஜயசிம்மரைப்பிடித்து வர தன் சேனாவீரர்களை எல்லாம் அனுப்புகிறார். விஜயசிம்மர் யாது செய்வது என்று தெரியாது மயங்கும்போது, துவாரகாநாதன், நீர் எம்மை பக்கத்தில் உள்ள கோமதி புஷ்கரணியில் போட்டுவிட்டு, யுத்தகளத்திற்குச் செல்லும் அங்கு வரும் புஷ்பக விமானத்தில் ஏறி வைகுண்டம் வந்து நம் திருவடி நிழலில் அமர்ந்திரும் என்று சொல்கிறார். அவர் சொன்னபடியே விஜயசிம்மரும் துவாரகாநாதனை கோமதி புஷ்கரணியில் போட்டு விட்டுப் போர்க்களத்திற்கே செல்கிறார். துவாரகையில் இருந்து வந்தவர்கள் விஜய சிம்மரைக் குத்திக் கொலை செய்து விடுகிறார்கள். அவரது ஆன்மா மட்டும் வைகுண்டம் சென்று சேர்ந்து விடுகின்றது. கங்காபாய் விஜயசிம்மருக்குச் செய்ய வேண்டிய ஈமக்கடன்களை எல்லாம் செய்கிறார். துவாரகைப் பூசாரிகள் அவரது வீட்டை வந்து வளைத்துக் கொண்டபோது துவாரகாநாதன் கோமதி புஷ்கரணியில் கிடப்பதைச் சொல்லி விடுகிறார். பூசாரிகளும் மற்றவர்களும் துவாரகாநாதனை வெளிக்கொணர முயல்கின்றனர். அவரோ அங்கிருந்து கிளம்ப மறுத்துவிடுகிறார். கடைசியில் கங்காபாயே அவரை வெளிக் கொணர்கிறார்.

இப்படி வெளிவந்த துவாரகா நாதனைப் பார்த்தால் அவர் உடல் எல்லாம் ரத்தக்காயங்களாக இருக்கின்றன. விஜய சிம்மரது உடலில் குத்திய குத்துக்களை எல்லாம் துவாரகா நாதனே தன்னுடலில் ஏற்றிருக்கிறார். துவாரகாநாதனை துவாரகைக்கு எடுத்துச் செல்ல இயலாத பூசாரிகள் கடைசியில் அவரது எடைக்கு எடை தங்கமாவது தரவேண்டும் என்று கங்காபாயைத் துன்புறுத்துகின்றனர். இந்த அம்மையிடமோ ஒரு பொன் மூக்குத்தியைத்' தவிர வேறு தங்க நகைகளே கிடையாது. கடைசியில் ஒரு துலாக்கோல் அமைத்து அதில் ஒரு தட்டில் துவாரகாநாதனை வைக்கின்றார்கள். கங்காபாயும் தன் கணவன் விஜயசிம்மனின் திருவடிகளை நினைத்துக் கொண்டு தன் மூக்குத்தியைக் கழற்றி மற்றொரு தட்டில் வைக்கிறார். எல்லோரும் கண்டு அதிசயிக்கும் வண்ணம் மூக்குத்தி இருந்த தட்டே தாழ்கிறது. அதைப் பெற்றுக்கொண்டு துவாரகாவிற்கு திரும்புகின்றனர். பின்னர் அவர்கள் பிரார்த்தித்துக் கொண்டபடி ஒரு நாளில் ஐந்து நாழிகை நேரம்தான் துவாரகையில் எழுந்தருளுவதாகவும் மற்ற காலமெல்லாம் டங்கபுரத்திலேயே தங்குவதாகவும் துவாரகாநாதர் அருளுகிறார். இப்படித்தான் துவராகாநாதர் டங்கபுரத்திற்கு எழுந்தருளியிருக்கிறார். இவரே இன்று ரண் சோட்ஜீ என்ற திருநாமத்தோடு டங்கபுரத்தில் வாழ்கிறார். அது என்ன ரண் சோட்ஜீ என்றுதானே கேட்கிறீர்கள். விஜய சிம்மரின் உடலில் ஏற்பட்ட ரணங்களை எல்லாம் தன் உடலில் ஏற்றுக்கொண்ட பரந்தாமனை ரண் சோட்ஜீ என்று அழைக்காமல் வேறு எப்படித்தான் அழைப்பது?

இவ்வளவு விவரங்களையும் தெரிந்து கொண்டபின் நாமும், டங்கபுரத்து ரண்சோட்ஜீ கோயிலுக்கு செல்லுவோமே. கோயில் பெரிய கோயில்தான் இக்கோயிலுக்கு இரண்டு வாயில்கள் இருக்கின்றன. ஒன்று வடக்கு நோக்கியும் மற்றொன்று மேற்கு நோக்கியும் இருக்கிறது. கோயிலுக்கு முன்பு திறந்த வெளி பெரிதாக அமைந்திருக்கிறது. விஜயசிம்மர் குடியிருந்த வீட்டிலே குடியேறிய

ரண் சோட்ஜிக்கு, அந்த வீட்டையே இடித்துப் பெரிய கோயிலாகக் கட்டியிருக்கிறார்கள். அக்கோயிலைக் கட்டியவன் தாமிரம் என்ற ஊரைச்சேர்ந்த கோபால்நாயக் என்று கர்ண பரம்பரை வழங்குகின்றது. ஆனால் இக் கோயில் 1772-ல் சதாராவை சேர்ந்த பேஷ்வாவின் பொக்கிஷதாரரான கோபால் ஜகன்னாத் தாம்பேகர் என்ற மராட்டியர் ஒரு லட்சம் ரூபாய் செலவு செய்து கட்டினார் என்று சரித்திர ஏடுகள் பேசுகின்றன. கோபால் ஜகந்நாததாம்பேகர் என்பதைத்தான் கோபால் நாயக் என்று குறுக்கி வழங்குகின்றார்கள் போலும், கோயிலுள் ஒரு பெரிய தங்க சிம்மாசனத்தில் ரண்சோட்ஜி தேவியோடு எழுந்தருளியிருக்கிறார். அந்த சிம்மாசன பீடத்தை கெயிக்வாட் மகாராஜா ஒன்றரை லட்சப் ரூபாய் செலவில் அமைத்துக் கொடுத்திருக்கிறார். ரண்சோட்ஜியின் உடலில் ஏற்பட்டுள்ள ரண காயங்களை இன்றும் காணலாம். ரண்சோட்ஜி துவாரகையில் உள்ள கண்ணன் வடிவிலேயே இருக்கிறார். சங்கு, சக்கரமும், கதையும் ஏந்திய திருக்கோலம். கண்ணன் என்னும் கருந் தெய்வம் என்பதற்கேற்ப நல்ல கருப்பு நிறத்தில் கருங்கல் வடிவில் அமைந்திருக்கிற மேற்கே பார்த்து நின்ற கோலம். கண்ணனை பல கோலங்களில் நவரத்தினங்களால் அலங் கரிக்கின்றனர். கோயிலுள் சென்று பார்த்து திருவடிகளைத் தொட்டு வணங்கலாம். கோயிலுக்குப் பக்கத்திலேயே கோமதி புஷ்கரணியிருக்கிறது. துவாரகையின் நதி வடிவ மாக இருக்கும் கோமதியே இங்கு புஷ்கரணியாக இருக் கிறாள் என்று கூறுகின்றனர். இந்த புஷ்கரணியில் டங்கேசுவரகட்டம், சலேசுவரி தேவி கட்டம் ரத்னகிரி கட்டம் முதலிய ஸ்நான கட்டங்கள் இருக்கின்றன. இவை களில் மூழ்கி எழுந்தால் வினைகள் எல்லாம் நீங்கும் என்பர். ஆனால் பாசி பிடித்து துர்நாற்றம் நிறைந்திருக்கும் இந்த புஷ்கணிரயில் ஸ்நானம் செய்ய நமக்கு மனம் வராது. ரண்சோட்ஜி ரணகாயத்துடனேயே கிடந்த புஷ்கரணி யானதால் ரத்த வாடையே அடிக்கிறது போலும், மேலும்

இத்திருக்குளத்தில் நாரை, கூழைக் கடா, வாத்து முதலிய நீர்ப்பறவைகளும் நிறைந்திருக்கும். பக்கத்தில் உள்ள மரங்களில் வௌவால்களும் ஏராளமாக இருக்கின்றன. பறவைகளையோ வௌவால்களையோ, ஒருவரும் சுடுவது மில்லை இம்சிப்பதும் இல்லை.

இக் கோமதி புஷ்கரணியின் கரையிலேதான் பகவானை நிறுத்து எடை போட்டிருக்கிறார்கள். அங்கேயே இன்னும் துலாபாரம் நடக்கிறது. ரண்சோட்ஜி கோயிலில் ஒவ்வொரு பௌர்ணமி தினத்தன்றும் ஏராள மான பக்தர்கள் கூடி வழிபாடு செய்கின்றனர். புரட்டாசி மாதப் பௌர்ணமியை மிகவும் சிறப்பாக கொண்டாடு கின்றனர். இத்தலத்தில் குங்குமப்பூ கலந்த தண்ணீரில் அபிஷேகம் செய்வதே சிறப்பானதாக கருதப்படுகின்றது.

இந்த டங்கபுரத்து ரண்சோட்ஜி ஆழ்வார்களால் மங்களா சாஸனம் செய்யப்பட்டவர் அல்ல என்றாலும் திருமங்கை மன்னன் நந்திபுர விண்ணகரத்தினைப் பற்றிப் பாடிய பாசுரம் ஒன்றில் நந்திபுரவிண்ணகரம் என்ற சொல் தொடரை டங்கபுரம் விண்ணகரம் என்று மாற்றிப்பாடு வதும் உண்டு என்று சொல்கிறார்கள்.

> தந்தை மனமுந்து துயர் நந்த இருள்
> வந்தவிறல் நந்தன் மதலை
> எந்தை இவன் என்று அமரர் கந்தமலர்
> கொண்டு தொழ நின்ற நகர்தான்
> மந்தமுழ வோசை மழையாக எழு
> கார் மயில்கள் ஆடு பொழில் சூழ்
> நந்திபணி செய்த ஊர் டங்கபுரம்
> விண்ணகரம் நண்ணுமனமே.

என்பதே பாடல்.

தாக்கோரிலிருந்து அக்கினி திக்கில் எட்டுமைல் தூரத்தில் நைஷத வனம் என்று ஓர் வனம் இருக்கிறது. அங்கே ஆஞ்சநேயர் கோயில் கொண்டிருக்கிறார். அவர்

சிறந்த வரப்பிரசாதி. ஸமர்த்த ராமதாஸ சுவாமிகளால் அவர் பிரதிஷ்டை செய்யப்பட்டார் என்பது வரலாறு. நைஷத வனத்திற்கும் மேற்கே எட்டுமைல் தூரத்தில் உள்ள கலத்தூர் என்னும் இடத்தில் நீலகண்டேஸ்வரர் கோயில் ஒன்று இருக்கிறது. இன்னும் தாக்கோருக்கு கிழக்கே ஒரு மைல் தூரத்தில் ரணமுக்த தீர்த்தம் இருக்கிறது. அதன் கரையில் ரண முக்தேஸ்வரர் கோயில் இருக்கிறது. இங்கே வழிபட்டால் சர்வ ரண நிவாரணம் ஆகும் என்கின்றனர். ரண்சோட்ஜியும் ரணமுத்தேஸ்வரரும் சேர்ந்து சர்வ ரண நிவாரணம் பண்ணும் இடத்தில் நாமும் சென்று சர்வ ரண நிவாரணம் பெற்றுத் திரும்பலாம்தானே!

# 30. சபர்மதி ஆசிரமம்

ஒரு பெரிய நகரம். ஏராளமான நெசவு ஆலைகளை உடைய நகரம். லண்டன் அளவு பெரிய நகரம். பெரிய வியாபாரத் தலமாக விளங்கும் நகரம். எண்ணிறந்த கட்டிடங்களை தன்னகத்தே கொண்ட நகரம் என்றெல்லாம் பெருமையுடையது இன்றைய குஜராத்தின் தலை நகரான அகமதாபாத் நகரம். என்றாலும், இத்தனையும் அந்நகரத்தின் பெருமையை என்றும் நிலைநிறுத்தக் கூடியவை அல்ல. அங்கு மனிதருள் மாணிக்கமான மகாத்மா காந்தி ஒரு ஆசிரமம் அமைத்துக்கொண்டு வாழ்ந்தார். அங்குதான் இந்தியா சுதந்திரமடைவதற்கு உரிய வழிகளை வகுத்தார். அங்கிருந்துதான் தண்டியை நோக்கி தன் உப்பு சத்தியாக்கிரகப்போரை நடத்தினார் என்பது தான், அந்நகரத்திற்கு என்றும் நிலைத்த புகழைத் தருவதாகும் ஆம். அகமதாபாத் நகரத்தின் ஒரு பகுதியாகவே சபர்மதி ஆசிரமம் விளங்குகிறது. சபர்மதி என்ற நதிக் கரையிலே அமைந்த ஆசிரமம் ஆனதால் அதற்கு சபர்மதி ஆசிரமம் என்று பெயர் விளங்குகிறது. அந்த சபர்மதி ஆச்சிரமத்திற்கும் அதை ஒட்டி புகழ்பெற்று நிற்கும் அகமாதாபாத்திற்குமே செல்கிறோம் நாம் இன்று.

அகமதாபாத் செல்ல ஜாம் ஜாம் என்று ரயிலிலேயே செல்லலாம். பம்பாயிலிருந்து பரோடா சென்று, அங்கிருந்து பாலான்பூர் செல்லும் ரயிலில் ஏறினால் அகமதாபாத் ஸ்டேஷனிலேயே இறங்கலாம். சபர்மதி ஆச்சிரமம் செல்லுமுன் அந்த பிரபலமான அகமதாபாத் நகரத்தையே ஒரு சுற்றுச்சுற்றி விடலாம். இன்று அகமதாபாத் என்று அழைக்கப்படும் நகரத்தின் பழைய பெயர் அசாவல் என்னும் கர்ணாவதி என்றும் இருந்திருக்கிறது. இந்த நகரத்தை புதிய முறையில் நிர்மாணித்தவர்

சுல்தான் அ க ம த் ஷ ா என்றும், அப்படி அவர் நிர்மாணித்தது கி. பி. 1411-ம் ஆண்டில் என்றும் சரித்திர ஏடுகள் பேசுகின்றன. சுல்தான் அகமத்ஷா சபர்மதி நதிக் கரையில் வந்து தங்கி இருந்தபோது அவரது வேட்டை நாய்கள் முயல் கூட்டம் ஒன்றைத் துரத்திச் சென்ற தாகவும், இந்த நகரம் இருக்கும் இடத்தில் அந்த முயல் கூட்டம் வேட்டைநாய்களை எதிர்த்தன என்றும். அதனால் தான் அந்த மண்ணில் ஏதோ சிறப்பு இருக்கிறது என்று தீர்மானித்து அகம்மதுஷா இங்கே இந்நகரை நிர்மாணித் தான் என்றும் ஒரு கதை வழங்குகிறது. இப்படி இங்கு நகரை நிர்மாணிக்கும்படி அவருக்கு ஆலோசனை கூறியவர் அகம்மது காட்டு கஞ்பக்ஷா என்ற முஸ்லீம் சந்நியாசி என்றும் கூறுவர். அகமதாபாத் ஒரு பெரிய நகரம். கட்டிடக்கலைக்கு சிறப்பு சேர்க்கும் பல கட்டிடங்கள் கொண்டது. இ ந் ந க ர த் தை 1615-ல் பார்த்த ஸர் தாமஸ்ரோ என்ற ஆங்கிலேயர் இது என்ன லண்டனை விடப் பெரிய நகரமாக இருக்கிறதே என்று அதிசயத்திருக் கிறார். பதினேழாம் நூற்றுண்டின் பிற்பகுதியில் இந்தியாவில் உள்ள நகரங்களில் அழகு வாய்ந்த நகரம் இந்த அகமதாபாத்தே என்று புகழ் பெற்றிருக்கிறது. தாஜ்மகாலைக் கட்டிய மொகலாய மன்னன் ஷாஜகான் மும்தாஜ் மஹாலை, திருமணம் மு டி த் த து ம், தேன்நிலவை அனுபவிக்கத் தேர்ந்து எடுத்த இடம் இந்நகரமே என்றும், அவனுடைய தந்தை ஜஹாங்கீர், அவன் காதலி நூர்ஜஹானுடன் அகமதாபாத்தில் உள்ள கங்காரியா ஏரியில் உல்லாசப் படகுப் பயணம் செய்திருக் கிறார் என்றும் சொன்னால் அந்நகர எழிலைப் பற்றி அதிகம் சொல்ல வேண்டியதில்லை அல்லவா? இன்னும் ஒரு சிறப்பு என்னவென்றால், சர் தாமஸ் ரோ என்ற ஆங்கிலேயன் முதன் முதல் மொகலாய மன்னனைச் சந்தித்து இந்தியாவோடு வியாபாரம் செய்ய அனுமதி வாங்கியதும் இங்கேதான். இந்திய மண்ணில் பிரிட்டிஷ் ஆட்சி நிலைத்த பின்பு அதனை எதிர்த்து, இந்தியாவிற்கு

சுதந்திரம் பெற மகாத்மா காந்தி சுதந்திரப் போரை முதன் முதல் ஆரம்பித்ததும் இங்கேதான். அதன்பின் காந்திஜி சபர்மதி நதிக்கரையில் ஒரு ஆசிரமம் அமைத்துக் கொண்டு வாழ்ந்திருக்கிறார். கிட்டதட்ட பதினைந்து வருஷகாலம் அங்கேயே தங்கியிருந்து அவர் சுதந்திர இயக்கத்தை வளர்த்திருக்கிறார். பின்னர் அங்கிருந்து தான் அவர் தம் தண்டிப் பயணத்தையும் துவக்கி யிருக்கிறார்.

இந்துக்கள், முஸ்லீம்கள், சமணர்கள் எல்லோரும் அவர்களது பெரிய விழாக்களை இங்கே கொண்டாடி மகிழ்கிறார்கள். மார்ச்சு மாதத்தில் ஹோலிப் பண்டிகை நடக்கிறது. ஆகஸ்டில் மெக்காப் பண்டிகையும் கோகுலாஷ்டமி விழாவும் நடக்கிறது. அக்டோபரில் தீபாவளியும், ஜனவரியில் உத்தராயணமும் சிறப்பாகக் கொண்டாடப்படுகின்றன. சூலை மாதத்தில் ஜகதீசனை ரதத்தில் ஏற்றி ரதோத்சவமும் நடத்துகிறார்கள். இந்த நகரத்தில் பார்க்க வேண்டிய கட்டிடங்கள் பல உண்டு என்றாலும், அழகு வாய்ந்த இடமாகக் காணப்படுவது கங்காரியா ஏரிதான். பரந்து கிடக்கும் ஏரி மிகவும் அழகாக அமைந்திருக்கிறது. அதில் படகு விட்டு உல்லாச மாகப் பொழுது போக்குவதற்கும் வசதி செய்யப்பட்டிருக் கிறது இந்த ஏரியை அடுத்து மலைத் தோட்டம் என்ற— பூங்காவும் இருக்கிறது. மனோரம்மியமான இடமாக இது அமைந்திருக்கிற காரணத்தால் பலரும் இங்கு வந்து உல்லாசமாகப் பொழுது போக்குகிறார்கள். இந்தப் பூங்காவை 1451ல் குத்புதீன் என்னும் சுல்தான் நிர்மாணித் தான் என்றும் அது 72-ஏக்கர் நிலத்தில் அமைக்கப்பட்டிருக் கின்றதென்றும் சொல்கிறார்கள். தீன் தர்வாஜா, ஜூம்மா மஜீத். ராணி சிப்லியின் சமாதி எல்லாம் கண்களைக் கவரும் வகையில் கட்டப்பட்ட கட்டிடங்கள். ஹைமத் கான் மசூதி சீதி சையத் மசூதி எல்லாம் கட்டிடக் கலையின் சிறப்பை எடுத்துக் காட்டுவனவாகும். அங்கு

துளையிடப்பட்ட சன்னல்கள் பல இருக்கின்றன. இது போன்ற வேலைப்பாடுடைய சன்னல் உலகில் வேறு எங்குமே இல்லையாம். அகம்மது ஷாவின் சமாதி 1414-ல் கட்டப்பட்டதொன்று. இங்குள்ள தூண்கள் எல்லாம் இந்தியக் கட்டிடக்கலையினர் பாணியிலும் விதானம் எல்லாம் சார்சானிக் பாணியிலும் அமைந்திருக்கின்றன. அன்றிருந்த இந்துக் கோயில்கள் ஒரு சிலவற்றை இடித்து அங்குள்ள தூண் களைக் கொண்டு இம்மசூதி கட்டப்பட்டிருக்க வேண்டும் என்று கருதுகின்றனர். இன்னுமொரு அதிசயம் என்ன வென்றால் ஜும்மா மசூதியில் உள்ள இரண்டு கோபுரங்கள் நாம் கையால் ஆட்டினால் ஆடுகின்றன. இவைகளில் ஒன்றுதான் இன்று இருக்கின்றது. மற்றொன்று 1818-ல் நேர்ந்த பூகம்பத்தில் விழுந்திருக்கிறது. தில்லி தர்வாஜா வுக்கு பக்கத்தில் உள்ள ஹதிசிங் கோயில் அகமதாபாத்தில் உள்ள பிரபலமான சமணர். கோயில் கிட்டத்தட்ட ஆபூமலையில் உள்ள டில்வாரா கோயிலுக்குச் சமமானது. எல்லாம் வெள்ளைச் சலவைக் கல்லால் கட்டப்பட்டது. 53-கோபுரங்களைத் தாங்கி நிற்கிறது. இன்னும் 24 சமண தீர்த்தங்கரர்களின் வடிவங்களையும் அமைத்து வைத்திருக் கின்றனர். கலை அழகு நிரம்பிய கோயிலாக அது விளங்கு கின்றது. அகமதாபாத்தின் தென்பகுதியிலே ஷாஆலம் ரோஜா என்னும் தொழுகைத்தலம் ஒன்றும் அமைத்திருக் கிறார்கள். நூர்ஜஹானின் தம்பி இதன் ஸ்தூபிகளை நவரத்தினத்தால் அலங்கரித்து வைத்திருந்தானாம். ஆனால் இப்போது நவரத்தினங்கள் ஒன்றுமே இல்லை. இதனை அடுத்து சந்தோலா ஏரி என்று ஒரு பெரிய ஏரி இருக்கிறது. ஆண்டு தோறும் நவம்பர் மாதத்தில், தமிழ் நாட்டு வேடந்தாங்கலைப் போல பல தேசத்துப் பறவை கள் வந்து தங்கும் இடமாக இந்த ஏரி விளங்குகிறது.

இன்னும் இந்நகரத்துக் கோட்டையை அடுத்து பத்ரா என்று ஒரு இடம் இருக்கிறது. அங்குள்ள கோட்டை வாசலை சிவப்பு வாயில் என்று அழைக்கின்றனர். இங்கே

பிரபலமான ஒரு காளி கோயில் இருக்கிறது. அங்கு பொன்னாலும் வெள்ளியாலும் அமைந்த வாயில்களும், விதானங்களும் பீடங்களும், இருக்கின்றன. எல்லாம் சிறந்த வேலைப்பாடுடன் விளங்குகின்றன. இங்கு வந்து வணங்கும் இந்துக்கள் எல்லாம் இன்னும் பொன்னையும் பொருளையும் காணிக்கையாகச் செலுத்துகின்றனர்.

என்ன அகமதாபாத் நகரிலேயே அதிக நேரம் இழுத்து அடித்து விட்டீரே, எப்போது சபர்மதி ஆசிரமத்திற்குச் செல்வது என்று தானே கேட்கிறீர்கள்? சரி. இனி தாமதமில்லாமல் நேரே சபர்மதி ஆசிரமத்திற்கே செல்வோம். அது அகமதாபாத்திலிருந்து ஐந்து மைலுக்கு வடக்கே இருக்கிறது. செல்வதற்கு பஸ் வசதி உண்டு என்றாலும், டாக்சியை வைத்துக்கொண்டு சென்றால்தான் ஆற அமர இருந்து பார்த்துத் திரும்பலாம். இன்று சபர்மதி ஆச்சிரமம் இரண்டு பகுதியாக இருக்கிறது. நடுவிலே பெரிய ரோடும் அதற்கு இருபக்கமும் ஆச்சிரமக் கட்டிடங்களுமாக இருக்கின்றன. வடகிழக்காய்ச் செல்லும் ரோட்டிற்கு வடக்கே பெரிய பெரிய கட்டிடங்கள் இருக்கின்றன. அவை சபர்மதி ஆசிரமமாய் இருத்தல் இயலாது என்று எண்ணுவோம். அங்குதான் இன்றைய ஐந்தாண்டு திட்டத்தில் கட்டிய கட்டிடங்கள் இருக்கின்றன. இக்கட்டிடங்கள் காந்திஜி போதித்த எளிமையை எடுத்துக் காட்டுவதாக இல்லை. ஆனால் ரோட்டிற்குத் தென்புறம் இருப்பதே பழைய ஆசிரமக் கட்டிடங்கள், அங்கு காரை விட்டு இறங்கிய உடனேயே நமது உடல் புல்லரிக்கும். ஆம். பாபுஜியின் தபோ பூமியை அல்லவா மிதிக்கிறோம் என்ற உணர்ச்சியில் உள்ளம் பொங்கும். இங்கு நாம் காண வேண்டிய குடில்கள் பல உண்டு. இந்த ஆசிரமப் பகுதியை ஒட்டியே சபர்மதி நதி ஓடுகிறது. ஆசிரமம் நல்ல உயரமான கரையில் இருக்கிறது. ஆற்றுக்குள் இறங்க இரண்டு பெரிய படிக்கட்டுக்கள் இருக்கின்றன. ஆற்று வெள்ளத்தால் ஆசிரமம் பாதிக்கப்படாதபடி

நல்ல உயரமான காம்பவுண்டு சுவர் கல்லிலேயே கட்டி யிருக்கிறார்கள். இங்கு நுழைந்து உடனே ஒரு பெரிய மரத்தைப் பார்ப்போம். அதனை இம்லி மரம் என்கின் றனர். நம் நாட்டு ஆலமரம் போல அகன்று பரந்திருக் கிறது. விழுதுகள் இல்லை. இலையும் சிறிய இலையாக இருக்கிறது. காந்திஜி முதன் முதல் இப்பக்கம் வந்தபோது இந்த மரத்தின் நிழலில்தான் தங்கியிருக்கிறார். இந்த மரம்தான் அவரை வரவேற்று அவர் உள்ளத்தில் ஒரு ஆசிரமம் நிறுவலாமே என்ற எண்ணத்தை உருவாக்கி யிருக்கிறது. ஆசிரமத்தில் நடந்த பெரிய காரியங்கள் எல்லாம் இந்த மரத்தடியிலேதான் துவங்கியிருக்கின்றன. ஏன் உப்பு சத்தியாக்கிரகம் என்னும் தண்டி யாத்திரையையே இம்மரத்தடியில் நின்றுதான் துவங்கி யிருக்கிறார். இதற்கு அடுத்தபடியாக ஆசிரமத்தில் புனிதமாகக் கருதப்படும் இடம் இருதய குஞ்ச் என்ற குடில்தான். இது தான் ஆசிரமத்தின் இருதயம் போன்றது. ஆரம்பத்தில் அது மடப்பள்ளியாக இருந் திருக்கிறது. அதன்பின் அதனையே தன் வாசஸ்தலமாக கொண்டிருக்கிறார் காந்திஜி. இங்குதான் உலகப் பிரமுகர்கள் எல்லாம் வந்து பாபுஜியைக் கண்டு பேசியிருக் கிறார்கள். இங்குதான் காந்திஜியும் கஸ்தூரிபாவும் இருந்து குடித்தனம் நடத்தியிருக்கிறார்கள். காந்திஜியின் ஞாபகச் சின்னங்கள் பல இங்கு சேகரித்து வைக்கப்பட் டிருக்கின்றன. படங்களும் பல இருக்கின்றன. இதற்கு முன்னுள்ள திறந்த வெளி முற்றத்தில்தான் பாபுஜி இரவு படுப்பாராம். இந்த இடத்தை எல்லாம் தொட்டுக் கண்ணில் ஒற்றிக் கொண்டு மேலும் நடந்தால், பாபுஜியின் உபாசனா மந்திர் என்ற இடத்திற்கு வருவோம். அங்கு கட்டிடம் ஒன்றும் இருக்கிறது. நாலு சிறு சுவர்களை எழுப்பி வளைத்து வைத்திருக்கிறார்கள். அந்த இடத்தில் கூரை ஒன்றும் கிடையாது. இங்குதான் ஆசிரமவாசிகள் எல்லாம் ஒன்றாகக் கூடி பிரார்த்தனை பண்ணுகிறார்கள். இதன் பக்கத்திலேயே மகன் நிவாஸ் என்ற குடில் இருக்

கிறது. முதன் முதல் பாபுவுடன் வந்து தங்கியவர் மகன்லால். இவர்தான் 'ஆசிரம விவசாயத்தை எல்லாம் கவனித்து வந்திருக்கிறார். அவர் இறந்தவுடனே பாபுஜி 'இன்று நான் விதவை ஆகிவிட்டேன்' என்று வருந்தினாராம். இதிலிருந்தே அவர் மகன்லாலிடம் எவ்வளவு ஈடுபாடு உடையவராக இருந்திருக்கிறார் என்று தெரிகிறதல்லவா? மகன்லாலைப் போலவே காந்திஜியின் ஆசிரம வேலைகளில் எல்லாம் பங்கு பெற்றவர் இமாம் சாஹிப். இவர் தென்ஆப்பிரிக்கா விலிருந்தே காந்திஜியுடன் இந்தியா வந்தவர். அவர் பெயரால் இமாம் மன்ஜீல் என்று ஒரு குடில். மன்ஜீலின் மகளும் குடும்பத்தினரும் இன்னும் அங்கே தங்கியிருந்து ஆசிரமப் பணியில் பங்கெடுத்துக் கொள்கிறார்கள். இதை அடுத்தே ஆனந்த் நிவாஸ், அது பேராசிரியர் பன்சாலி என்பவருக்காக கட்டப்பட்டிருக்கிறது. காந்திஜியின் காரிய தரிசி மகாதேவதேசாய் குடும்பத்துடன் இக்குடிலில்தான் தங்கியிருக்கிறார். காகாசுலேல்கார் இங்கு தங்கியிருந்த போதுதான் அமரராகியிருக்கிறார்.

இன்னும் இங்கே ஹரிஜன் கன்யா வித்யாலயம், பிர்லா மந்திர், சேவநிவாஸ் சோமநாத் சத்திராலாய என்னும் ஹாஸ்டல், காதிபந்தர் முதலிய கட்டிடங்கள் இருக் கின்றன. எல்லாம் மண் சுவர்களாலேயே கட்டப்பட்டு கூரை வேயப்பட்டவை. இன்னும் இங்கே விருந்தினர் வந்து தங்க நந்தினி என்று ஒரு "கட்டிடம். நந்தினி என்றால் மகிழ்ச்சி தரும் இடம் என்று பொருளாம். உண்மையி லேயே அந்த விருந்தினர் விடுதியில் நின்று சபர்மதி நதி ஓடும் அழகைக் கண்டால் உள்ளத்தில் மகிழ்ச்சி துள்ளும். இதன் பக்கத்திலேயே மீரா குடில் என்று ஒருசிறு கட்டிடம். ஆதியில் இங்குதான் வினோபாஜி தங்கியிருந்திருக்கிறார். பின்னரே காந்திஜியின் சிஷ்யையான மீரா பென் தங்கி யிருந்திருக்கிறார். இன்றளவும் மிகவும் சுத்தமாக அந்த இடம் காப்பாற்றப்பட்டு வருவதே அங்கு தங்கியிருந்த ஆத்மாக்களின் பரிசுத்தமான உள்ளத்தை பிரதிபலிக்கும்.

ஆசிரமம் மொத்தம் 121 ஏக்கர், விஸ்தீரணமுள்ள இடத்தில் அமைந்திருக்கிறது. இருதய குஞ்ச், உபாசனா மந்திர், மகன் நிவாஸ் போன்றவைகளே ஆதியில் இருந்த படியே இருக்கின்றனவாம். மற்றவைகளை எல்லாம் திருத்தி அமைத்ததுடன் சேர்த்தும் கட்டியிருக்கிறார்கள். அந்த ஆசிரமத்தில் எனக்கிருந்த பெருங்குறை என்ன என்றால் கட்டிடத்தின் பெயர், அங்கு நடக்கும் பணி என்ன, என்பதைப் பற்றியெல்லாம் ஆங்கிலத்திலோ அல்லது தேசிய மொழி என்று போற்றப்படும் இந்தியிலோ எழுதி வைக்கவில்லை என்பதுதான். எல்லாவற்றையும் குஜராத்திலேயே எழுதிவைத்திருக்கிறார்கள். காந்திஜிக்கு அஞ்சலி செலுத்துபவர்கள் குஜராத்தியர் மட்டும் அல்ல. ஏன், இந்திய மக்கள் மாத்திரம் அல்ல. உலகத்தின் பல பாகத்திலிருந்தும் பலர் வருகிறார்கள். வந்து வணங்குகிறார்கள். அவர்களுக்கு எல்லாம் ஆங்கிலத்திலேயே இருத்தல் வேண்டும். மொழிவாரிமாகாணப் பிரிவினையால் மொழி வெறியை வளர்த்திருக்கின்றோமே தவிர தேசிய ஒருமைப் பாட்டை உருவாக்கவில்லை. இந்த ஏக்கத்தோடே தான் நான் ஆசிரமத்திலிருந்தும் வெளியே வந்தேன். காந்திஜியின் ஆத்மாவுமே என்னுடன் சேர்ந்து ஏங்கியிருக்கும் என்று எண்ணுகின்றேன்.

# 31. சோமநாதபுரத்து சோதிர்லிங்கம்

பத்து வருஷங்களுக்கு முன் வேலூர் ஜலகண்டேஸ்வரர் கோயிலைப் பற்றி நான் எழுதுகிறபோது அது தமிழ் நாட்டின் சோமநாத் என்று குறிப்பிட்டேன். வேலூரில் சில அதிசயங்கள் அன்பர்களுக்கு காத்திருக்கிறது. அங்கு ஆறு இருக்கும் ஆனால் அதில் நீர் இருக்காது. கோட்டை இருக்கும் அதனுள் கோமகள் இருக்கமாட்டாள். கோயில் இருக்கும் அங்கு மூர்த்தி இருக்காது. இப்படி மூர்த்தி இல்லாமல் கீர்த்தியுடைய வேலூரைத்தான் தமிழ் நாட்டின் சோமநாத்துடன் ஒப்பிட்டிருந்தேன். அப்போது சோமநாத புரத்தை நான் பார்த்திருக்கவில்லை. அங்குள்ள சோம நாதனை கஜினி முகம்மது அகற்றிவிட்டான் என்று புத்தகங் களில் படித்திருந்ததை வைத்துத்தான் அப்படி எழுதினேன். ஆனால் இப்போது சோமநாதபுரத்தை நேரில் சென்று பார்த்தபின், வேலூரை சோமநாதபுரத்தோடு ஒப்பிட்டது தவறு என்று அறிந்தேன். வேலூரில் கோயிலில் உள்ள மூர்த்திகளைத்தான் அகற்றினார்களே ஒழிய, அக் கோயிலை அழியாமல் காப்பாற்றி வந்திருக்கின்றனர் இன்றுவரை. ஆனால் சோமநாதபுரத்திலோ ஒரு தடவை அல்ல, பலதடவை மூர்த்தியோடு கோயிலையும் சேர்த்து இடித்து தரை மட்டமாக்கியிருக்கின்றனர். அங்குள்ள சோதிர்லிங்கமோ, சோமநாதரோ இத்தனை இடிபாடு கட்கு உள்ளாகியும் திரும்பவும் திரும்பவும் உருப்பெற்றிருக் கின்றனர். கடைசியில், நம் நாட்டின் இரும்பு மனிதர் என்று புகழ்பெற்ற சர்தார் வல்லபாய் பட்டேல் அவர்களின் முயற்சியால், இந்தியா சுதந்திரம் அடைந்தபின் திரும்பவும் அக்கோயில் கட்டப்பட்டு இன்று வானளாவ உயர்ந்திருக்கிறது. அந்த சோமநாதர் கோயிலைக் காணவே இன்று நாம் சோமநாதபுரம் செல்கின்றோம்.

சோமநாதபுரம் செல்ல முதலில் பம்பாயிலிருந்து அகமதாபாத் செல்ல வேண்டும். அங்கிருந்து ராஜ்காட் சென்று ரயில் மாறி வீராவல் என்ற நகரம் செல்ல வேண்டும். அங்கிருந்து கிழக்கே மூன்று மைல் தூரத்தில் சோமநாதபுரம் இருக்கிறது. ஆகாய விமானத்தில் சென்றால் கேசாட் என்ற விமான நிலையத்தில் இறங்கி அங்கிருந்து முப்பத்துமூன்று மைல் காரிலே செல்ல வேண்டும். பம்பாய்க்கும் வீராவல்லுக்கும் வாரம் ஒருமுறை ஸ்டீமரும் போகும். வடஇந்தியாவைக் காரிலேயே சுற்றுபவர்களாக இருந்தால் நேரே ராஜ்காட் சேரலாம். வழியில் ஜூனாகத்திலும் தங்கி அங்கு பார்க்க வேண்டியவைகளையும் பார்த்துக் கொள்ளலாம். ஜூனாகத் என்றால் பழைய கோட்டை என்று அர்த்தம். கோவை ஜில்லாவில் உள்ள பட்டக்காரரது பழைய கோட்டையில் காளைகள் அதிகம் என்றால் ஜூனாகத்தை அடுத்த கிர்னார் மலைக்காடுகளில் சிங்கங்கள் அதிகம். இந்த மிருக இந்திரன்களைக் காண வேண்டுமானால் ஜூனாகத்திலேயே ஒன்றிரண்டு நாட்கள் தங்க வேண்டும். காட்டிற்குள் தக்க துணையுடன் செல்ல வேண்டும். அக்காட்டில் சிங்கங்கள் எல்லாம் ஆட்டிக் குட்டிகள் போல அலைகின்றனவாம். இதற்கெல்லாம் எல்லோருக்கும் அவகாசம் இராது. கலை ஆர்வத்தோடு கலைக் கோயிலைக் காணச் செல்பவர்கள் ஜூனாகத் பக்கத்தில் உள்ள கிர்னார் மலை ஏறி அங்குள்ள சமணக்கோயில்களைக் காண வேண்டும் 500 அடி உயரமே உள்ள மலையானாலும் ஏறுவது சிரமமாக இருக்கும். அங்குள்ள கோயில்களில் பெரியது நேமிநாதர் கோயில்தான். அது பன்னிரண்டாம் நூற்றாண்டில் கட்டப்பட்டது. அக்கோயிலின் முன்புறமுள்ள மைதானம் 200 அடி நீளமும் 150 அடி அகலமும் உள்ளது. கோயிலைச் சுற்றி, பல சுற்றுக் கோயில்கள், கிட்டத்தட்ட எழுபது இருக்கும். நேமிநாதர் இருபத்திரண்டாவது தீர்த்தங்கரர். அவர் வடிவை கருங்கல்லில் அமைத்திருக்கிறார்கள். ஏராளமான நகைகள் அணிவித்து வைத்திருக்கிறார்கள். இன்னும் அங்குள்ள

கோயில்கள் பதினாறு, தேஜ்பால், வாஸ்துபால் என்ற அமைச்சர்கள் கட்டிய கோயில்கள் அவை. அதில் ஒன்றில் பத்தொன்பதாவது தீர்த்தங்கரர் மல்லிநாதர் இருக்கிறார். இன்னும் அம்பமாதாவிற்கு ஒரு கோயில். புது மணத் தம்பதிகள் இக்கோயிலில் வந்து வணங்கி ஆசி பெறு கின்றனர். பக்கத்தில் உள்ள தாதர் என்ற சிகரத்தில் ஜமால் ஷா என்னும் முஸ்லீம் பக்கிரிக்கு ஒரு மசூதி இருக்கிறது. அங்கு வந்து பிரார்த்திப்பவர்கள் குஷ்ட நோய் நீங்குகிறார்கள், என்கிறார்கள். மலையடிவாரத்திலே தாமோதர் குண்டம் என்று ஒரு குளமும் கோயிலும் இருக் கிறது. அதற்குப் பக்கத்திலேயே கல்லிலே அசோகர் பொறித்து வைத்த கட்டளைகள் இருக்கின்றன. எல்லாம் கவனமாக பாதுகாக்கப்பட்டு வந்திருக்கின்றன. இவைகளை எல்லாம் பார்த்து அங்குள்ள வசதியான, பிரயாணிகள் விடுதியிலும் தங்கிவிட்டு வீராவல் சென்று சேரலாம். வீராவல்லுக்கு கிழக்கே மூன்று மைல் தூரத்திலேதான் சோமநாதபுரம் இருக்கின்றது. பஸ், டோங்கா வசதிகள் எல்லாம் உண்டு. அது மிகச் சிறிய நகரம். தெருக்கள் எல் லாம் அகலமாக இராது. அவற்றை யெல்லாம் கடந்து சோமநாதபுரத்து சோதிர்லிங்கர் கோயிலுக்கு வந்து சேர வேண்டும். சோமநாதபுரத்தை பிரபாசபட்டணம் என்றும் தேவபட்டணம் என்றும் இன்று அழைக்கிறார்கள்.

கோயில் பெரிய கோயில்தான். அதைச்சுற்றி பெரிய வெளி ஒன்று இருக்கிறது. அதைச் சுற்றியே சுற்றுச்சுவர் அமைத்திருக்கின்றனர். அந்தச் சுற்றுச்சுவர் நம் தமிழ் நாட்டுக் கோயில் மதில்களைப் போல கனமாகவோ உயர மாகவோ இராது. இந்த வெளிப் பிரகாரத்திற்குள்ளேயே காரைக் கொண்டு போகலாம். இக்கோயில் மிக மிகப் பழமையான கோயில் என்கின்றனர். உலகம் தோன்றிய பொழுதே 'இக்கோயிலும் தோன்றியதாம். வேதகாலத் திலும் அதன்பின் மகாபாரதத்திலும் இக்கோயில் பேசப் பட்டிருக்கிறதாம். பாண்டவர்கள் இங்கு வந்து பிதுர்க்

கடன்கள் செய்ததாக கர்ணபரம்பரை கூறுகிறது. அதைப் போலவே பலராமனும் கிருஷ்ணனும் இங்கு வந்து பிதுர்க் கடன்கள் செய்திருக்கின்றனர். இக்கோயிலுள் உள்ள மூர்த்தியைப் பற்றிய புராண வரலாறு சுவையானது. தக்ஷப் பிரஜாபதி என்பவனுக்கு 27 பெண்கள். அத்தனை பேரையும், அழகில் சிறந்தவனான சந்திரனுக்கே மணம் முடித்து வைத்திருக்கிறான். ஆனால் சந்திரனோ அந்த இருபத்தி ஏழு பெண்களில் அழகுமிகுந்தவளான ரோகிணியிடமே அதிக அன்பைக் காட்டியிருக்கின்றான். மற்ற மனைவியரை உதாசீனம் செய்திருக்கிறான். மற்றப் பெண்கள் சென்று இதுகுறித்துத் தந்தையிடம் முறையிட்டிருக்கின்றனர். அவர் சொல்லியும் கேளாது சந்திரன் ரோகிணியிடமே மையல் கொண்டு வாழ்ந்திருக்கிறான். இதனால் கோபம் கொண்ட தக்ஷப்பிரஜாபதி சந்திரன் தன் கலை இழந்து நலியும் படி சபித்திருக்கிறான். அதன்படியே சந்திரனும் கலை இழந்து மெலிந்திருக்கிறான். கடைசியில் சந்திரன் சிவபெருமானை அணுகிப் பிரார்த்திக்க அவர் கலை வளர அருள் புரிந்திருக்கிறார். இந்த நன்றி காரணமாகவே சோமன் என்னும் சந்திரன் இந்த இடத்தில் ஒரு சோதிர் லிங்கத்தைப் பிரதிஷ்டை செய்து வணங்கியிருக்கிறான். சோமனால் பிரதிஷ்டை செய்யப்பட்டவர் ஆனதினாலே சோமநாதர் என்ற பெயராலேயே அவர் அங்கு கோயில் கொண்டிருக்கிறார். சந்திரனையும் அவனைச்சுற்றியுள்ள நட்சத்திரங்களையும் வைத்து ஒரு சுவையான கதையையே உருவாக்கியிருக்கிறார்கள் நமது முன்னோர்கள்.

ஆதியில் இக்கோயில் தங்கத்திலேயே கட்டப்பட்டிருக்கிறது. பின்னரே வெள்ளியாலும் அதன் பின்னர் மரத்தாலும் கல்லாலும் கட்டப்பட்டது என்பது கதை. இக்கோயில் ஐந்து தடவை அழிந்து அழிந்து திரும்பத் திரும்பக் கட்டப்பட்டது என்பது வரலாறு. கிறிஸ்து சகாப்தம் ஆரம்பிப்பதற்கு முன்பே இக் கோயில் இருந்திருக்கிறது.

இரண்டாவது தடவையாக கி. பி. 649—ல் கட்டப்பட்டிருக்கின்றது. பின்னர் கி. பி. 792—அரேபியர்கள் இந்தியாவின் மீது படை எடுத்து வந்து இக் கோயிலை அழித்திருக்கின்றனர். மூன்றாவது தடவையாக கி. பி. 800லும் நான்காவது தடவையாக கி. பி. 1075லும் கட்டப்பெற்றிருக்கிறது. ஐந்தாவது முறையாகத்தான் கி பி. 1114—ல் குமாரபாலா என்பவர் இக் கோயிலை விஸ்தரித்துக் கூட்டியிருக்கிறார். இந்த பிரம்மாண்டமான கோயிலைத் தான் கஜினி மகம்மது இடித்துத் தரைமட்டமாக்கி இங்குள்ள பெண்களையும் நவரத்தினங்களையும் கொள்ளையடித்துச் சென்றிருக்கிறான். அதன் பின் பல நூற்றாண்டுகளாக இக்கோயில் திரும்பவும் கட்டப்படவில்லை. இந்தியா சுதந்திரம் பெற்ற பின்னரே சர்தார் பட்டேல் பெருமுயற்சி எடுத்து, முழுக்க புதுக் கோயிலாக கட்டி முடித்திருக்கிறார். இப்போது நாம் காணுகின்ற கோயில் இந்த புதுக்கோயிலே. நல்லதொரு மாடக்கோயில் போல் ஒரு பெரிய பீடத்திலேயே கட்டப்பட்டிருக்கிறது. சாண்ட்ஸ்டோன், என்னும் ஒருவித சிவப்பு நிறக்கல்லால் கோயில் முழுதும் கட்டப்பட்டிருக்கிறது. இடையிடையே சலவைக் கல்லையும் பொருத்தி நிறையச் சிற்பவேலைகளையும் செய்திருக்கிறார்கள். கிழக்கே பார்த்த வாயில். இரண்டு மாடிக்கட்டிடம்போல அமைத்து பெரிய பெரிய தூண்களை நிறுத்தி அழகு செய்திருக்கிறார்கள். தோரணவாயில்களில் எல்லாம் சிற்பவேலைகள் சிறப்பாய் இருக்கின்றன. படிகள் ஏறி கோயில் உள்ளே மகாமண்டபத்திற்குச் சென்றால் அங்கு சலவைக் கல் நந்தி ஒன்று மூலஸ்தானத்தை நோக்கி படுத்திருக்கும். அதற்கு இருபக்கத்துச் சுவர்களில் அனுமாரும், மகாதேவர் பார்வதி வடிவங்களும் சலவைக்கல்லில் அமைத்து வைத்திருக்கின்றனர். இவர்களைத் தரிசித்த பின்னரே நாம் மண்டபத்தின் விதானத்திற்குள் வருகிறோம். விதானத்தைப் பதினாறு தூண்கள் தாங்கி நிற்கின்றன. அதன் பேரிலே தான் 'டோம்' இருக்கிறது.

அங்குள்ள அந்த டோமைத் தாங்கி நிற்பவர்களே வித்யாதர மகளிர். எல்லோரும் நல்ல அழகுவாய்ந்தவர் கள், இதற்குப் பின்னால்தான் கருவறை- கருவறையிலே மூன்றடி உயரத்திலே சோமநாதர் லிங்கத் திருவுருவினராய் இருக்கிறார். ஆதியிலே சோமனால் பிரதிஷ்டைபண்ணப் பட்ட சோதிர்லிங்கம் அத்தளத்திற்கு கீழே நூறு அடி ஆழத்திலே இருக்கிறது என்கிறார்கள். அப்படிப் புதைந்து கிடப்பவரைக் காணவகையில்லை. இனி நாம் இன்று கருவறையிலிருக்கும் சோமநாதரை வணங்கி விட்டு வெளியே வரலாம். சோமநாதருக்குத் துணைவியர் ஒரு வரும் இல்லை. திருஅஞ்சைக்களத்து இறைவனை அம்மை யில்லா அப்பன் என்பார்கள். அவரைப்போலவே சோமநாத புரத்து சோமநாதரும் அம்மையில்லா அப்பனாகவே வாழ் கிறார்.

இப்புதிய கோயிலைக் கட்ட இதுவரை இருபத்தெட்டு லட்சம் ரூபாய் செலவாகியிருக்கிறதாம். 155 அடி உயரத் தில் கம்பீரமான சிகரம் ஒன்றும் அமைத்திருக்கிறார்கள். இன்னும் கோயிலை விரிவாக்க இருபது லட்சத்திற்கு ஒரு திட்டம் உருவாக்கியிருக்கிறார்கள். இக்கோயில் கட்ட கற்கள் எல்லாம் இருபத்திஆறு மைலுக்கு அப்பால் உள்ள இடத்திலிருந்து வந்திருக்கிறது. ஒன்று சொல்ல மறந்து விட்டேனே. இக்கோயில் இருப்பது கடற்கரையிலே. கடல் அலைகள் கோயிலை அரித்து விடாதபடி ஒரு பெரிய கற்சுவர் ஒன்றையும் கட்டிவைத்திருக்கிறார்கள். அந்த சுவருக்கும் கோயிலுக்கும் இடையே ஒரு கல் ஸ்தம்பம் இருக் கிறது. அது பழைய கோயிலின் சின்னமாக நிற்கிறது. பழைய கோயிலில் இடிந்து கிடந்த பகுதியில் உள்ள சிற்ப வடிவங்களை எல்லாம் சேகரித்து, பக்கத்தில் உள்ள தெருவில் ஒரு காட்சிசாலை அமைத்து வைத்திருக் கிறார்கள், பழம்பொருள் ஆராய்ச்சியாளர்கள். அங்கே சென்று சிதைந்து கிடக்கும் சிலை வடிவங்கள் சிலவற்றைக் கண்டு மகிழலாம்.

சோமநாதபுரத்திற்குப் பக்கத்திலேயே பார்க்க வேண்டிய இடங்கள் இரண்டு உண்டு. ஒன்று அகல்யாபாய் என்ற ராணிகட்டிய கோயில், அகல்யாபாய் கோயில் என்று வழங்குகிறது. அங்கு கோயில் கொண்டிருப்பவர் கரனீசர். அங்கே விநாயகர், திருமால், முதலியவர்களுக்கும் சந்நிதியிருக்கிறது. தேகோத்சர்க்கம் என்ற இடத்தில்தான் துவாரகாபதியான கண்ணன் தன் உடலை நீத்து சுவர்க்கம் சென்றிருக்கிறார். அதிலேயே சுவர்க்காரோகணம் என்கின்றனர். பக்கத்தில் ஓடும் நதியை ஹிரண்யாநதி என்கின்றனர். அந்நதிக்கரையில்தான் ஒரு குரா மரம் இருக்கிறது. அம்மரத்தின் அடியில்தான் பகவான் கிருஷ்ணன் வேடன் ஒருவனது அம்பால் அடிபட்டு, அதன்பின் திருமேனியை இவ்வுலகில் விட்டு விட்டு வானுலகம் சென்றிருக்கிறான். அங்கு பல தலைகளுடன் கூடிய பாம்பின் சிலை ஒன்றும் இருக்கிறது. அங்குதான் பலராமர் தன் சரீரத்தை விடுத்தார் என்பது வரலாறு. அங்கே லட்சுமிநாராயணன் கோயில், பீமேஸ்வரர் சந்நிதி எல்லாம் இருக்கின்றன. சோமநாதபுரத்தை வணங்க வந்த நாம்லட்சுமிநாராயணன் அவருக்கும் வணக்கம் செலுத்தியே மேல் நடக்கின்றோம்.

# 32. போர்பந்தர் கீர்த்திமந்திர்



போர்பந்தர் கீர்த்திமந்திர்

''பூலோகத்தில் மனிதனுடைய சரித்திரத்தில் மிகப் பெரிய விஷயம் என்னவென்றால் அவனுடைய லௌகிக சித்திகள் அல்ல, அவன் கட்டிவைத்த, உடைத்துப் போட்ட ஏகாதிபத்யங்கள் அல்ல. சத்தியத்தையும் தர்மத்தையும் தேடிக்கொண்டு யுகத்திற்கு யுகம் அவனுடைய ஆத்மா வளர்ச்சியடைந்து வந்து இருக்கிறதே அதுதான் மிகப் பெரிய விஷயம். இந்த ஆத்ம வளர்ச்சிக்காகப் பாடுபடுகின்றவர்கள் மானிட சமுதாயத்தின் ஞான இதிகாசத்தில் நிரந்தர ஸ்தானம் பெற்று வருகிறார்கள். கால தேவதை

யானவள் எவ்வளவு காலமாக மற்றவர்களை மறந்து விடு கிறாளோ அதுபோலவே வீரர்களையும் புறக்கணித்து வருகிறாள். ஆனால் மகான்கள் எப்போதும் காலதேவதை யின் ஞாபகத்தில் ஸ்திரவாசம் செய்து கொண்டிருக்கிறார் கள். மகாத்மா காந்தியடிகளின் பெருமை அவர் நடத்திய தீவிரமான போராட்டங்களைக் காட்டிலும், அவருடைய பரிசுத்த வாழ்க்கையிலே தான் தங்கியிருக்கிறது. உலகத் தின் அழிவுச் சக்திகள் மேலும் மேலும் மோசமாகப்போய்க் கொண்டிருந்த தருணத்தில், ஆத்மாவுக்கு சிருஷ்டி சக்தி உண்டு, ஜீவசக்தியை அளிக்கும் தன்மையும் உண்டு என்று அவர் வற்புறுத்திப் பேசினாரே அதிலேதான் அவருடைய பெருமை இருக்கிறது.''

இப்படி மகாத்மாவின் ஆன்மீக சக்தியைப் பாராட்டி யவர் வேறுயாருமில்லை, நமது ராஷ்டிரபதியாக விளங்கிய டாக்டர். ராதாகிருஷ்ணன் அவர்கள்தான். அவ்வளவு பெருமைக்கும் புகழுக்கும் உரியவராய் இருந்த மகாத்மா காந்திஜியின் அவதாரத்தலம்தான் போர்பந்தர். நாம் நம் நாட்டில் பிறந்து வளர்ந்த பெரியவர்களை மாத்திரம் வழிபடுகிறதில்லை. அவர்கள் பிறந்த ஊரையும் புனித மான தலமாக கருதி அங்கு சென்று வழிப்பட்டு வரு கிறோம். சம்பந்தர் பிறந்த ஊர் என்பதனால் சீர்காழிக் கும், அப்பர் பிறந்த ஊர் என்பதால் திருவாமூருக்கும் சுந்தரர் பிறந்த ஊர் என்பதால் திருநாவலூருக்கும், மணிவாசகர் பிறந்த ஊர் என்பதற்காக திருவாதவூருக்கும் சென்றிருக்கிறோம். இதைப் போலவே ஆழ்வார்கள் பிறந்த தலத்திற்கும் சென்று வந்திருக்கின்றோம். ஏன் சொல்லப் போனால் கம்பர் பிறந்த ஊராகிய திருவழுந் தூருக்கும், ராமானுஜர் பிறந்த ஊராகிய ஸ்ரீ பெரும்புதூ ருக்குமே ஒரு நடை நடந்திருக்கிறோம். இப்படி நமது நாயன்மார்கள், ஆழ்வார்கள் ஆச்சார்யர்கள் பிறந்த தலத்திற்கு எல்லாம் சென்று வந்த நாம், நமது வடநாட்டு யாத்திரையிலும் கண்ணன் பிறந்த ஊர் ராமன் பிறந்த

ஊர் எல்லாம் செல்ல இருக்கின்றோம். இப்படிப் பெரியவர் களின் அவதாரத் தலங்களுக்கெல்லாம் சென்றுவரும் நாம் மாந்தருக்குள் ஒரு தெய்வமாக வாழ்ந்த மகாத்மா காந்தி யின் ஜனன பூமிக்குச் சென்று வரவேண்டாமா? அதற் காகவே செல்கிறோம் நாம் இன்று போர்பந்தருக்கு.

போர்பந்தர் செல்ல முதலில் அகமதாபாத்திலிருந்து ராஜ்காட் செல்ல வேண்டும். அங்கு ரயில் மாறி ஜெட்சலார் செல்ல வேண்டும், திரும்பவும் ரயில் மாறி போர்பந்தர் போய்ச் சேர வேண்டும். தக்க வசதி உடைய வர்கள் எல்லாம் பம்பாயிலிருந்தே வாரம் இரு முறை செல்லும் ஆகாய விமானத்தில் செல்லலாம். வடநாட்டு யாத்திரையை காரிலேயே செய்பவர்கள் என்றால் ராஜ் காட்டிலிருந்து ஜாம்நகர் சென்று அங்கிருந்து போர் பந்தருக்கு காரிலேயே சென்று சேரலாம். ஜாம்நகர் போர்பந்தர் ரோடு அவ்வளவு வசதியாக இராது. என்றாலும்,ரயிலில் செல்வதைவிட காரிலே செல்வதுதான் நல்லது. ஜாம் நகரிலிருந்து பஸ் வசதி உண்டு.

போர்பந்தர் சென்றதும் அங்குள்ள வீதிகளும், வீடு களும் ஒரே வரிசையாகவும் நேராகவும் அழகாகவும் அமைந் திருப்பதே நமக்கு முதலில் தென்படும். பழையவீடுகளே காணக் கிடைக்காது. எல்லா வீடுகளுமே மூன்று நான்கு அடுக்குகளுடன் கூடியதாக இருப்பதால் மிகுந்த செல்வக் செழிப்புள்ள நகரமாகவே தோன்றும். வீதிகளிலும் இரு புறத்தும் நடைபாதையும், நிழல் தரும் மரங்களும் இருப்ப தால் அது ஒரு பூஞ்சோலை நகரமாகவே காணப்படும். போர்பந்தர் ஒரு கடற்கரைப்பட்டினம். ஆதலால் நல்ல இனிய காற்று எப்போதும் வீசிக்கொண்டே இருக்கிறது. துறைமுகத்தோடு கூடிய நகரம் ஆனதால் வணிக மக்கள் நிறைந்திருக்கின்றனர். வாணிபமும் செழிப்பாக நடக் கிறது. ஆம், நமது மகாத்மா காந்தியும் ஒரு 'பனியா' வகுப்பைச் சேர்ந்தவர்தானே. பனியா என்றால் வாணிபம்

செய்பவர்கள் என்று தான் பொருள். இங்குள்ள வணிகர்கள் பெரும்பாலோருக்கு ஆப்பிரிக்கா கண்டத்துடன் தான் வியாபாரம் அதிகம். ஆப்பிரிக்கா நாட்டுடன் ஏற்றுமதி இறக்குமதி செய்வதால் வியாபாரம் செழிப்பாக இருக்கிறது. இந்நகர் பிரமுகர்கள் பலர் ஆப்பிரிக்கா கண்டத்திலேயே நிரந்தரமாகக் குடியேறி இருக்கிறார்களாம். வியாபாரத் தொழில் நிலையங்கள் நிறுவி அங்கேயே வாழ்ந்து வருகிறார்களாம். நமக்கும் தெரியுமே, காந்திஜி பாரிஸ்டர் பட்டம் பெற்றதும் ஆப்பிரிக்கா நாட்டிற்குத்தானே சென்றிருக்கிறார். அங்குதானே அவரது அரசியல் வாழ்விற்கு வித்திடப்பட்டிருக்கிறது. இப்போது கூட ஆப்பிரிக்காவிற்கு கப்பல் மார்க்கமாகச் செல்கிறவர்கள் இப்போர்பந்தர் துறைமுக வழியாகத்தான் செல்கிறார்களாம்.

நாம் எல்லாம் வியாபாரிகள் அல்லவே. நமக்கு எதற்கு இந்தச் சங்கதியெல்லாம். நாம் வந்தது ஒவ்வொரு தலத்திலும் உள்ள கோயில்களைக் காணத்தானே என்று நீங்கள் முணுமுணுப்பது என் காதில் கேட்கிறது. அது எனக்கும் ஞாபகம் இருக்கிறது. ஆதலால் விறு விறு என்று அங்குள்ள கோயில்களைக் காணப் புறப்படலாம். இந்த போர்பந்தர் ஆதியில் சுதாமபுரி என்றுதான் பேர் பெற்றிருந்தது. சுதாமர் என்பவர் யார் என்று பலருக்குத் தெரிந்திராது. ஆம் அவரைத்தான் குசேலர் என்று நாம் அழைத்து வந்திருக்கின்றோம். அவர் கதையை குசேலோபாக்கியானம் என்ற பெயரில் வல்லூர் தேவராஜபிள்ளை பாடல்களாகவும் பாடிவைத்திருக்கிறாரோ. குசேலர் கதை நமக்குத் தெரியும். சின்னப் பையனாக இருக்கும்போது கண்ணனோடு ஒரு சாலை மாணாக்கனாக இருந்திருக்கிறார். பின்னர் தன்மனைவி சுசீலையுடன் இல்லறம் நடத்தி இருபத்துஏழு பிள்ளைகளைப் பெற்றிருக்கிறார். அதன்பின் வறுமையில் வாடியிருக்கிறார். பின்னர் தன் மனைவியின் ஆலோசனைப்படிக்கண்ணனைக் காணத் துவார

கைக்கே சென்றிருக்கிறார். தன்னுடன் கொஞ்சம் அவலையும் எடுத்துச் சென்றிருக்கிறார். அந்த அவலையும் அவல் கொண்டு வந்த குசேலரையும் அன்புடன் ஏற்று உபசரித்து அவர் செல்வத்தில் திளைக்க கண்ணன் அருள் புரிந்திருக்கிறான். இந்த சுதாமர் பிறந்து வாழ்ந்த இடம் ஆனதால் இதனை சுதாமபுரி என்று அழைத்திருக்கின்றனர். இதைப்பற்றி பகவத் கீதையே பேசுகிறது. இங்குள்ள பழமையான கோயில் சுதாமர் கோயில்தான். அக்கோயிலில் கிருஷ்ணனையே பிரதிஷ்டை செய்திருக்கிறார்கள். இக்கோயிலின் இடைவெளியில் 84 கோணங்கள் என்று ஒரு சிறுமேடை எழுப்பியிருக்கிறார்கள். சதுரமான ஒரு மைதானத்தில் 84 வளைவுகள் உள்ள சுவர் எழுப்பி மேடை அமைத்திருப்பதின் காரணமான இதனை 84 கோணங்கள் என்று அழைக்கின்றனர்.

இச்சுதாமர் கோயிலை விட இன்று பிரசித்திப் பெற்றிருப்பது, 'கீர்த்தி மந்திர்' தான். காந்திஜி பிறந்த வீட்டுக்குப் பக்கத்திலே தான் இக் கோயிலைக் கட்டி இருக்கிறார்கள். அவரது புகழுக்கும் கீர்த்திக்கும் ஏற்ற வண்ணமே பெரிதாகக் கட்டியிருக்கிறார்கள். காந்தியடிகள் பிறந்த அறையைக் காணும் போது நமக்கு உடம்பெல்லாம் புல்லரிக்கும். கீர்த்தி மந்திரில், கஸ்தூரிபாய், காந்திஜியின் படத்தை பெரிதாக எழுதி வைத்திருக்கிறார்கள். மேல் மாடியிலும் கீழே உள்ள அறைகளிலும் காந்திஜியின் பொன் மொழிகளை எல்லாம் சலவைக் கல்லில் பொறித்து வைத்திருக்கிறார்கள். காந்திஜியின் வாழ்வை விளக்கும் பலவகைப் படங்களும் இருக்கின்றன. நூல் நிலையம் ஒன்றும் அமைத்திருக்கிறார்கள். காந்திஜி சிறுவனாக இருந்து போது உபயோகித்த பொருட்களை எல்லாம் சேர்த்து வைத்திருக்கிறார்கள். சிறுவனாக இருந்தபோது அவர் உபயோகித்த செருப்பு, பெட்டி, துண்டு, காகிதங்கள் சில்லறைச்சாமான்கள் எல்லாம் இன்று அரிய கண்காட்சிப் பொருட்களாக அங்கே இருக்-

கின்றன. மகாத்மாகாந்தி அவரது சுய சரிதையில் போர் பந்தரைப் பற்றி அதிகம் எழுதவில்லை.

"சுதாமபுரி என்று அழைக்கப்படும் போர்பந்தரில் 1869—ஆம் ஆண்டு அக்டோபர் இரண்டாம் தேதி நான் பிறந்தேன், குழந்தைப் பருவத்தில் நான் போர்பந்தரி லேயே இருந்தேன். அங்கே என்னைப் பள்ளிக்கூடத்தில் வைத்தது நினைவு இருக்கிறது. கொஞ்சம் சிரமத்துடன் தான் பெருக்கல் வாய்ப்பாட்டை நோட்டில் போட்டேன். மற்றச் சிறுவர்களுடன் சேர்ந்து கொண்டு எங்கள் உபாத்தி யாயரை ஏளனம் செய்தேன், என்பதைத் தவிர அந்த நாட் களைக் குறித்து வேறு எதுவுமே எனக்கு ஞாபகம் இல்லை, என்று மட்டுமே அவர் எழுதியிருக்கிறார். இதற்கு மேலே அவர் எழுதாதற்கு காரணம் ஏழு வயது நிரம்பு முன்னே அவர் தன் தந்தையார் வேலைபார்த்து வந்த ராஜ்கோட் டிற்குச் சென்று விட்டதுதான், அங்குதான் அவர் பள்ளி யில் சேர்ந்து ஒழுங்காகக் கல்விகற்க ஆரம்பித்திருக்கிறார்.

காந்திஜியின் ஜனன பூமியையும், அதை ஒட்டிய கீர்த்திமந்திரையும் பார்த்தபின் அங்கு பார்க்க வேண்டியது அதிகம் இல்லைதான். கீர்த்திமந்திருக்கு கிழக்கே ஒரு மைல் தூரத்தில் சங்கர்மந்திர், கீதாமந்திர், திருமால் மந்திர் என்னும் கோயில்கள் இருக்கின்றன. இவைகளில் சிறப்பானது கீதாமந்திர்தான், அக்கோயிலின் சுவர்களில் பகவத்கீதை முழுவதும் தெளிவாக எழுதிவைக்கப்பட்டி ருக்கிறது. மகாத்மாகாந்தி மிகவும் பாராட்டிப் படித்த தும், அவர் வாழ்வைச் செம்மைப்படுத்தியதும் பகவத்கீதை என்ற நூல்தானே! ஆனால் அவர் அந்த நிலை 'மூலத்தில்' படிக்கவில்லை. பாரிஸ்டர் பரிட்சைக்கு இங்கிலாந்து சென் றிருந்த போதுதான் அவர் முதல் முதலில் எட்வின் அர்னால்டின் மொழி பெயர்ப்பு மூலம் கீதையைப் படித் திருக்கிறார். கீதையில் இரண்டாவது அத்தியாயத்தில் காணும் சில சுலோகங்கள் அவர் உள்ளத்தைச் செம்மை

செய்திருக்கிறது. அவரை மனிதனாக வாழச் செய்திருக்கிறது.

> இந்திரிய விஷயங்களைத் தியானிக்கிற மனிதனுக்கு
> அவற்றில் பற்றுதல் உண்டாகிறது.
> பற்றுதலிலிருந்து ஆசை உண்டாகிறது
> ஆசையிலிருந்து குரோதம் வளர்கிறது
> குரோதத்திலிருந்து மனக்குழப்பம் உண்டாகிறது
> குழப்பத்திலிருந்து நினைவின்மையும்
> நினைவின்மையிலிருந்து புத்திநாசமும் உண்டாகிறது.
> புத்திநாசத்தால் மனிதன் அழிந்து போகிறான்.

என்ற வரிகள் அவர் உள்ளத்தில் ஆழப்பதிந்திருக்கின்றன. இதை அவரே அவரது சுயசரிதத்தில் இருபதாவது அத்தியாயத்தில் தெளிவாகச் சொல்கிறார். இப்படி கீதை சொல்லும் பாதையில் நடந்த காந்திஜியின் அவதாரத் தலத்தில் கீதாமந்திர் ஒன்று கட்டி அதில் கீதாபோதனைகளை எழுதி வைத்திருப்பது மிகவும் பொருத்தம் என்று தோன்றுகிறது.

இப்படி காந்திஜி பிறந்த தலத்தையும் அங்குள்ள கீர்த்திமந்திர், கீதாமந்திர் எல்லாவற்றையும் தரிசித்தபின் நாமும் மேல் நடக்கலாம். அப்படி நடக்கும்போது,

> வாழ்க நீ! எம்மான்! இந்த
> வையத்து நாட்டில் எல்லாம்
> தாழ்வுற்று வறுமை மிஞ்சி
> விடுதலை தவறிக் கெட்டு
> பாழ்பட்டு நின்றதாமோர்
> பாரத தேசம் தன்னை
> வாழ்விக்க வந்து காந்தி
> மகாத்மா நீ வாழ்க, வாழ்க.

என்று பாரதியின் பாட்டைப் பாடிக்கொண்டே நடக்கலாம்.

# 33. ஜாம் நகர் சமணக் கோயில்கள்



ஜாம் நகர் சமணக் கோயில்

சைவமும் தமிழும் தழைத்திருந்த நாடு தமிழ் நாடு என்பது உலகறிந்தது. சைவத்துடன் வைஷ்ணவமும் தமிழகத்தில் இணைந்து வாழ்ந்தது, வளர்ந்தது என்பதற்கு நாட்டில் அன்று தொட்டு இன்றுவரை பயிலப்படும் தேவார திருவாசகங்களும், திவ்யப் பிரபந்தங்களும், சான்று பகரும். அப்படி இருந்தும் சைவ வைணவ வேற்றுமைகளை மிகைப் படுத்துவார் கூட்டமும் கூடவே இருந்து வந்திருக்கிறது. என்றாலும், இவ்விரு பெரிய சமயங்களும் அதிகம் மோதிக் கொண்டதில்லை. அதைப் போலவே வடநாட்டில் பிறந்து இந்திய நாடு முழுவதும், பரவி இருந்த சமயங்களும் இரண்டு. ஒன்று சமணம்,

மற்றொன்று பௌத்தம், இப்படி இருந்தும் சமணத்துடன் சைவத்திற்கு எப்போதும் முரண்பாடு இருந்து வந்திருக்கிறது. தமிழ் நாட்டுச் சைவர்கள் சமண சமயத்தை வெறுத்தனர். வாதில் சமணர்களை வெல்வதையே வாழ்வின் குறிக்கோளாகக் கொண்டனர். அது காரணமாகவே திருஞானசம்பந்தர் சமணர்களைக் கழுவேற்றினார் என்றெல்லாம் பெருமையோடு பேசவும் முற்பட்டனர். எல்லாச் சமயங்களும் இறைவனை அடைவதற்குரிய வழிகளையே சொல்கின்றன. எந்த வழியில் சென்றாலும். இறைவனது கருணைப் பெறுவது எளிதானதே என்று எண்ணுகிறவர்கள் நாம். அதிலும் நானோ சைவ வைணவச் சண்டைகளையும் சைவ, வைணவச் சண்டைகளையும் சைவ, சமண வேறுபாடுகளையும் அறவே வெறுப்பவன். ஆதலால் எனது வடநாட்டு யாத்திரையில் எல்லாக் கோயில்களுக்கும் சென்றேன். அங்குள்ள தெய்வங்கள் எல்லாவற்றையுமே தொழுது வணங்கினேன். தமிழ் இலக்கியத்தை வளப்படுத்திய புலவர்களில் பலர் சமணர் என்பதை அறிந்த நான் எனது யாத்திரையில் இந்திய நாட்டில் கலை வளர்த்த பெருமையில் சமணர்களுக்கு மிகுந்த பங்கு உண்டு என்பதையுமே உணர்ந்தேன். ஆதலால் சமணருடைய சமயக் கருத்துக்களை அறிவதிலும், அவர்கள் கட்டிய கலைக் கோயில்களைக் காண்பதிலும் ஆர்வமிகுந்தவனாக இருந்தேன். சரவணபெலகோலாவில் உள்ள கோமதேஸ்வரர் சிலை வடிவம் எப்படி வானுற ஓங்கி வளர்ந்திருக்கிறதோ அப்படியே சமண சமயமும் சமணர்கள் வளர்த்த கலைச் செல்வங்களும் என் உள்ளத்தில் ஓங்கி உயர்ந்து கொண்டே போயிற்று. சமண சமயத்தின் ஆதி கர்த்தர் ஜிநன் என்பார்கள். எல்லாக் கருமங்களின்றும். நீங்கி, முடிவிலா அறிவும் இன்பமும் பொருந்தி பரமாத்ம சொரூபனாகி, பிறப்பு, பிணி, மூப்பு, சாக்காடு என்னும் சம்சார பந்தங்களை எல்லாம் ஜயித்தவனே ஜிநன் என்றும் அறிகிறோம். சர்வஜீவ தயாபரனும் தர்ம ஹிதகாரணனுமான ஜிநனை ஏனைய

ஜீவன்கள் பின் பற்றினால் மீண்டும் பரம சுகமடையலாம் என்பதே ஜிநனைப் பின்பற்றும் சமணர்கள் நம்பிக்கை. கொல்லா விரதமே அவர்களின் மூலமந்திரம். பரமாத்மனே அவர்கள் தெய்வம். எல்லா உயிர்களிடத்தும் அன்பும் தயவும் பூண்டு அவைகளுக்கு இதமே செய்தல், உண்மை பேசுதலே வேள்வி என்றும், தனக்குள் அநாதிகாலமாகப் படிந்து உரம் பெற்றுள்ள கர்மமாகிற களங்கத்தினை தியானமாகிற அக்கினியால் எதிர்த்து ஒழித்து, ஆத்ம ஜோதியைப் பெறுவதே தவம் என்றும், சம்சாரம் அநித்யமாகையால், வீடே பெறற்பாலது, வீடுபெறும் வழி, நற்காட்சி, நல்ஞானம் மூன்றும் தலைப்பட்டு நிற்பது என்றும் உணர்த்தி, சத்யாத்வரதம் எனப் பெயர் பூண்டு விளங்கும் சமயமே சமணசமயம் என்றெல்லாம் நாம் அறிகிறபோது, அப்படி உபதேசித்த ஜிநனை நோக்கி நம் தலை தானாகவே தாழும்.

இன்று நம் நாட்டில் குஜராத் பகுதியில்தான் சமணர்கள் நிறைந்திருக்கின்றனர். அவர்கள் கட்டிய கோயில்களும் பல இருக்கின்றன. அவைகளில் சிறப்பானவை கும்பாரிய கோயில்கள் என்கின்றனர். இன்னும் பாலிடானா, சத்துருஞ்சயா என்னும் இடங்களில் உள்ள சமணக் கோயில்கள் எண்ணிக்கையிலும் அளவிலும் பெரியவை என்றனர். எனது பிரயாணத்திட்டத்திலோ இவைகள் இடம்பெறவில்லை. ஆதலால் அங்கெல்லாம் காரிலேயே செல்வது அவ்வளவு எளிதான காரியமாகவும் இருக்கவில்லை. ஆதலால் சமணக் கோயில்கள் நிறைந்த ஜாம்நகரையே சுற்றினேன். அங்குள்ள கோயில்களுக்கு எல்லாம் சென்றேன். வணங்கினேன். அது காரணமாகத்தான் உங்களையும் இன்று ஜாம் நகருக்கே அழைத்துச் செல்கிறேன். ஜாம்நகர் சமணர் கோயில்களைப் பார்த்தால் குஜராத்திலுள்ள எல்லாச் சமணக் கோயில்களையுமே கண்டதுபோலத்தான். அகமதாபாத்திலிருந்து ராஜ்காட் வழியாக துவாரகை செல்லும் ரயில் மார்க்கத்தில் ஜாம்

நகர் ஒரு பெரிய ஸ்டேஷன். ஆதலால் ரயிலிலேயே சென்று அந்நகரை அடையலாம். பம்பாயிலிருந்து செல்லும் ஆகாய விமானம் மூலமாகவும் இவ்வூர் செல்லலாம். ஜாம்நகர் குஜராத்தில் உள்ள பெரிய நகரங்களில் ஒன்று. பழைய சௌராஷ்டிரா ராஜ்ஜியத்தில் உள்ள பல அரச குடும்பங்கள் தங்கியிருந்த இடம் ஆதலால் கட்டிடங்கள் எல்லாம் பெரிய பெரிய அரண்மனைகளாகத்தான் இருக்கும்.

அங்குள்ள பெரிய அரண்மனையைப் பார்க்க வேண்டுமானாலும் முன் கூட்டியே எழுதி ராஜபிரமுகரின் அனுமதி எல்லாம் பெறவேண்டும். நாமெல்லாம் அரண்மனைகளையோ அங்குள்ள அந்தப்புரங்களையோ காண வந்தவர்கள் அல்லவே. ஆதலால் அனுமதிக்காக எல்லாம் காலம் கடத்திக்கொண்டு கிடக்க வேண்டாம். நகரத்தின் மத்தியில் ஒரு பெரிய ஏரி இருக்கிறது. அந்த ஏரியின் நடுவிலே இரண்டு பெரிய கட்டிடங்கள். ஒன்று கோத்தாக் கோட்டை மன்றொன்று லாகோத்தா கோத்தாக் கோட்டையில் பார்க்க வேண்டியது ஒன்றுமில்லை. பழைய கிணறு ஒன்று இருக்கிறது. அங்குள்ள ஒரு துவாரத்தின் வழியாக வாயால் ஊதியே தண்ணீரை வெளியில் கொண்டு வரவேண்டியிருக்கிறது. லாகோத்தா கட்டிடத்தை இன்று ஒரு பெரிய பொருட்காட்சி சாலையாக மாற்றியிருக்கிறார்கள். அங்கு தான் கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டு முதல் பதினெட்டாம் நூற்றாண்டுவரை குஜராத்தில் வளர்ந்த கலைப் பொருட்களை எல்லாம் சேகரித்து வைத்திருக்கிறார்கள். அங்குள்ள சிற்பக் கலைப்பொருட்கள் எல்லாம் பக்கத்தில், உள்ள கும்லி, பச்சாத்தார், பரன்ஸ், சோட்டில்லா பிண்டாரா காந்தவி என்ற கிராமங்களிலிருந்து கொண்டு வரப்பட்டவை என்று தெரிகிறது. இன்னும் எண்ணிறந்த படங்கள், காசுகள், மட்பாண்டங்கள் எல்லாம் அங்கே இருக்கின்றன. நர்மதை நதிக்கரையில் நாகரிகம் எப்படி வளர்ந்தது என்று ஆராய்ச்சி பண்ணுபவர்களுக்கு இவை பெருந்துணைபுரியும்.

என்ன ஏதோ சமணர் கோயில்களைக் காட்டுவதாகச் சொல்லி விட்டு, ஒரு கண்காட்சி சாலையை வர்ணித்துக் கொண்டிருக்கிறீரே என்று தானே கேட்கிறீர்கள். சரி. விறு விறு என்று நடந்து வாருங்கள் என்னுடனே. நகரத்தின் பிரதான பாகத்திற்கே செல்லலாம். இந்த நகரத்தில் பதினான்கு சமணக் கோயில்கள் இருக்கின்றன. ஒன்றே ஒன்று தான் ஊருக்கு மேல் புறத்தில் ஓர் ஒதுக்கமான இடத்தில் இருக்கின்றது. மற்றவை எல்லாம் நகரின் மத்தியிலேயே இருக்கின்றன. இந்த பதினான்கு கோயில் களையும் பார்க்க நமக்கு அவகாசம் இராது. ஆதலால் அங்குள்ள சாந்திநாதர் கோயில், சோரிவாார் கோயில், சேட் மந்திர் என்னும் மூன்று கோயில்களை மட்டும் பார்த் தால் போதும், சாந்திநாதரைப் பதினாறாவது தீர்த்தங் கரர் என்று சொல்கிறார்கள். அங்கு சாந்திநாதரும் நேமி நாதரும் கோயில் கொண்டு இருக்கிறார்கள். கருவறை, வாயில் எல்லாம் வெள்ளித்தகடு பொதிந்து வைக்கப் பட்டிருக்கின்றது. கட்டிடம் முழுவதும் பளிங்கு—சலவைக் கற்களாலேயே கட்டப்பட்டிருக்கின்றது. மரம் மிகக் குறை வாகவே உபயோகப்படுத்தப்பட்டிருக்கிறது. இக்கோயில் சுவர்களில் எல்லாம் சலவைக்கல் சித்திரங்கள். எல்லாம் மகாவீரரது போதனையை விளக்க எழுந்தவைகளே. அவை களில் ஒரு சிற்பம்- அர்த்த சித்திர வடிவில் அமைந்த அந்த சிற்பம் விளக்கும் வரலாறு சுவையாக இருக்கிறது. ஒரு மனிதனை புலி ஒன்று துரத்தி வருகிறது. அந்தப் புலிக்குப் பயந்து மனிதன் பக்கத்தில் இருந்த மரத்தில் ஏறுகிறான், மரத்தில் ஒரு கிளையைப் பற்றித் தொங்குகிறான். அந்தச் சமயத்தில் மரத்தில் உள்ள ஒரு எலி இவன் தொங்கிக் கொண்டிருக்கும் விழுதைக் கடிக்கிறது. மனிதன் கீழே விழு கின்ற நிலையில் இருக்கிறான். கீழே விழுகிற இடத்தில் ஒரு பாம்பு சீறிக்கொண்டு நிற்கிறது. துரத்தி வந்த புலியுமே ஒரு பக்கத்தில் விழுகின்ற மனிதன் பேரில் பாயத் தயாராக இருக்கிறது. இந்த நிலையில், மரத்தில் கட்டியிருந்த தேன் கூட்டிலிருந்து தேன் சொட்டுகிறது. அந்த அபாயகரமான

நிலையிலும் அந்தத் தேன் துளிக்கு தன் நாவை நீட்டு கிறான் மனிதன். என்ன அற்புதமான கற்பனை! சம்சார பந்தத்தில் சிக்குண்டு பல தாக்குதல்களுக்கு உட்படும் மனிதன் எந்த நேரத்திலும் உயிரிழக்க நேரிடும் என்ற நிலையிலும் கூட. சிறு இன்பங்களை அனுபவிக்கத் துடிக் கிறானே! ஆம். பந்த பாசங்களில் சிக்கித் தவிப்பவன் புலன் நுகர்ச்சியை அல்லவா விரும்புகிறான். இறைவனை நோக்கிச் சிந்தையைத் திருப்ப இயலாதவனாக மாண்டு மடிகிறானே என்று மக்களுக்கு அறிவுறுத்தவே மகாவீரர் இப்படி ஒரு கற்பனை பண்ணியிருக்கிறார் அக் கற்பனைக்கு ஓர் உருவம் கொடுத்து சிற்பமாக வடித்து அங்கே நிறுத்தி யிருக்கிறார்கள். இன்னும் இது போன்று மகாவீரர் போதனையை விளக்கும் பல சிற்பங்கள் உண்டு அங்கே. இச்சமணக் கோயிலுக்கு பலப்பல சிகரங்கள். அத் தனையும் அழகுவாய்ந்தவை. உள்ளேயோ பூசை பண்ணு வோர் எல்லாம் வாயைத் துணியால் கட்டிக்கொண்டே சிறு சிறு பணிகளைச் செய்கிறார்கள். ஆண்களை விடப் பெண்களே நிறையக் கோயிலுக்கு வருகிறார்கள். தூய வெள்ளை ஆடை அணிந்து அவர்கள் வந்து வணங்கித் தொழும் காட்சி எல்லோர் மனத்திலும் பக்தியை ஊட்டுவ தாக இருக்கும். நாமும் மெய்மறந்து சாந்தி நாதரையும் நேமிநாதரையும் வணங்குவோம். சோர்வாலி கோயில் ஐந்நூறு வருஷங்களுக்கு முன் கட்டப்பட்டது, என்கிறார் கள். ராய்சேஷ, தார்சேஷ என்னும் இரண்டு சகோ தரர்கள் கட்டிய கோயில் அது. கட்டிட அமைப்பு, கருவறை யில் தீர்த்தங்கரர் அமைப்பு எல்லாம் ஒன்றுபோலத்தான் இருக்கும். சிறப்பாகச் சொல்லும்படி ஒன்றுக்கொன்று மாறுபட்டிராது. இங்குள்ள மூர்த்திகளை எல்லாம் நான் தரிசிக்கும்போது அருகனைப்பற்றிய ஒரு பழம்பாடல் என் நினைவிற்கு வந்தது.

**மண்டித் தடுமாறும்**
**வாழ் விழந்தேன் மாதுயரப்**
**பண்டைப் பழவினைநோய்**

பற்றறுத்தேன்—பிண்டித்
திருமாலை முக்குடைக்கீழ்
தேவாதி தேவர்
பெருமானை யான் அடைந்த பின்

என்பதே பாட்டு. ஆம். அந்த ஜிநன் வணங்கிய அருக்கனாம் தேவாதி தேவனை வணங்கி தொழுத மகிழ்ச்சியிலேயே வெளியில் வந்தேன். சமணக் கோயிலின் கட்டிடக்கலை தீர்த்தங்கரரின் வடிவங்கள் எல்லாம் எப்படி அமைந்திருக்கின்றன என்பதையும் தெரிந்து கொண்டேன். இக் கலையின் பூரணப்பொலிவை, இன்னும் சில நாளில் ராஜஸ்தானில் உள்ள ஆபுசிகரத்தில் உள்ள அற்புதக் கோயில்களைப் பார்க்கும்போது நெரிந்து கொள்ளலாமே என்ற நிறைவுடன் மேலே நடந்தேன்.

எவ்வளவுதான் சர்வ சமயவாதியானாலும் தமிழனாகிய எனக்கு, இத்தலத்தில் சிவனுக்கும் விஷ்ணுவுக்கும் கோயில்கள் இல்லையா என்று கேட்கவே தோன்றியது. கடைசியில். அங்கு என்னுடன் வந்து சமண நண்பர் ஒருவர் ஓ! இருக்கிறதே வாருங்கள் என்று அழைத்துச் சென்றார். ஊருக்குள்ளேயே ஒரு சிறு மண்மேட்டில் ஒரு கோயிலுக்கு சென்றோம். அதனை புருஷோத்தமன் கோயில் என்றார்கள். அங்கு மகாதேவனாம் சிவனும், புருஷோத்தமனான விஷ்ணுவும் கோயில் கொண்டிருக்கிறார்கள். கோயில் மிகச்சிறிய கோயில் சமணக்கோயில்களின் நூற்றில் ஒரு பங்குகூட அளவோ அழகோ இல்லாதது தான். இன்னும் ஒரு நூறு ஆண்டுகளுக்குள்ளேயே கட்டப் பட்ட சத்தியநாராயணன் கோயில் ஒன்றும் அங்கிருக்கிறது. அக்கோயிலில் பிள்ளையார், அனுமார் எல்லோரும் இருக்கிறார்கள். அங்குள்ள இறைவனை பீடுபஜன் மகாதேவர் என்று அழைக்கின்றவர் பிரார்த்தித்துக் கொள்பவர்களின் துக்கத்தை எல்லாம் நிவர்த்தி பண்ணி வைக்கிறாராம் அவர். சுற்றுக் கோயில்களில் லிங்கத் திருவுருவங்கள் பல இருக்கின்றன. காயத்ரி தேவிக்கு

தனிக் கோயில் இருக்கிறது. தமிழ் நாட்டு வைத்தீஸ்வரன் கோயிலைப் போல வேம்பு வேறே அங்கு தலைவிருட்சமாக நிற்கிறது.

ஜாம்நகர் சமணக் கோயில்களையும் புருஷோத்தமன் கோயிலையும், சத்திய நாராயணர் கோயிலையும் மட்டும் பார்த்துவிட்டால், ஜாம்நகர் முழுவதையும் பார்த்துவிட்டதாக ஆகி விடாது. ஜாம்நகர் ஊருக்கு வட மேற்கே மூன்று மைல் தூரத்தில் சோலேரியம் என்று ஒரு கட்டிடம் இருக்கிறது. சூரிய ரஸ்மியை சில கண்ணாடிகள் மூலம் உடலில் பாய்ச்சுவதால், என்ன என்ன வியாதிகள் நீங்கும் என்று தெரிந்து அதற்கென ஒரு பிரம்மாண்டமான கட்டிடம் கட்டிவைத்திருக்கிறார்கள். அக்கட்டிடம், ஆகாய விமானத்தைப்போல் ஒரு பெரிய வாலுடன் கூடியதாக இருக்கிறது. அந்த வால் பகுதியிலேதான் சிகிச்சைக்கு வருபவர்களை வைக்கிறார்கள். சூரிய ரஸ்மி எவ்வளவு படவேண்டுமோ அவ்வளவு படும் வகையில் அந்தக் கட்டிடப் பகுதியே சுழல்கிறது. சூரிய ரஸ்மி படப்பட நோய் நீங்குகிறது. இப்படிப்பட்ட சோலேரியம் என்ற சூரிய ரஸ்மியால் ஏற்படும் இயற்கை சிகிச்சைக்கட்டிடம் இந்தியாவிலேயே இது ஒன்று தான் இருக்கிறதாம். நமக்குச் சிகிச்சை ஒன்றும் தேவை இல்லை, என்றாலும், சிகிச்சை பெறுபவர்களைப் பார்த்து வரலாம் அல்லவா? அதற்காகவே அங்கு சென்று திரும்பலாம்.

இன்னும் ஒன்று. மருத்துவத் துறையில் என்ன என்ன முறைகள் எல்லாமோ இருக்கின்றன. எல்லாவற்றிக்கும் தலையாய முறை ஆயுர் வேதமே என்பதை அறிவோம். அந்த ஆயுர்வேத வைத்திய முறைக்கு ஓர் ஆராய்ச்சிக் கழகம், இந்த ஜாம் நகரில் தான் இருக்கிறது. இங்கு ஆயுர் வேத முறையை ஆராய்ந்து வரும் மாணவர்கள் பயிற்சி பெறுகின்றனர். தோல் வியாதிகள் சம்பந்தமாக பல ஆராய்ச்சிகள் நடக்கின்றன. அங்கு சென்றதும் எனக்கு ஒரு மகிழ்ச்சி ஏற்பட்டது. அந்த ஆராய்ச்சி நிலையத்தின் உதவி

டைரக்டர் ஒரு தமிழர். அன்போடு அளவளாவி ஆராய்ச்சி விவரங்களை எல்லாம் விவரிக்கிறார். ரத்த அழுத்தத்திற்கு பெரிதும் உதவும் தமிழ் மூலிகை சர்ப்பகந்தி அங்கு பயிராக்கப்படுகிறது. இவற்றை எல்லாம் பார்த்துவிட்டுத் திரும்பும் போது ஒரு கட்டிடத்தின் முகப்பிலே தேஜோ மயமான ஒரு சிற்பவடிவம் நின்றது. அது ஒரு மகா ராஜாவினுடைய சிலை. கிட்ட போய்ப் பார்த்தால் அது தான் ரஞ்சித் சிங்ஜீயின் சிலை என்று அறிந்தேன். ஆம் ரஞ்சித்சிங்தான் கிரிக்கெட் விளையாட்டில் பெரிய புலி என்று புகழ்பெற்றவர் ஆயிற்றே. அந்த விளையாட்டு வீரருக்கும் அஞ்சலி செலுத்திவிட்டு மேலும் நடந்தேன். கலை வாழ்நகரம் என்று காஞ்சியைச் சொல்வார்கள். ஜாம் நகரைப் பார்த்தபின் அப்படி காஞ்சியைச் சொல்வது வெறும் உபசாரமே என்று தான் தோன்றுகிறது எனக்கு.

# 34. துவராபதி மணிவண்ணன்



துவராபதி மணிவண்ணன் கோயில்

பதினேழாம் நூற்றாண்டின் முற்பகுதியில் வாழ்ந்த புலவர் பிள்ளைப் பெருமாள் அய்யங்கார். திவ்யகவி என்று அழைக்கப்படும் பெருமை வாய்ந்தவர். அவர் பாடிய அஷ்டப்பிரபந்தம் சொல்நோக்கும், பொருள் நோக்கும் தொடைநோக்கும், நடைநோக்கும் உடைய இலக்கியம் என்று தமிழர்களால் பாராட்டப்படும் பெருமை உடையது. அஷ்டப்பிரபந்தம் கற்றவன் அரைப்பண்டிதன் என்று ஒரு பழமொழியும் வழங்குவதே அதற்குச்சான்று. அவர் அரங்கனிடத்தில் ஆழ்ந்த காதல் கொண்டவர் என்றாலும், மற்றும் 107 திருப்பதிகளில் இருக்கும் பெருமாளையும் பாடிப்பாடி மகிழ்ந்தவர். அவரது

நூற்றெட்டுத் திருப்பதி அந்தாதி மிக்க சுவையுடைய வெண்பாக்களைக் கொண்டது. அதில் ஒரு பாட்டு.

திறம் திறமாய் தாம் துய்க்கும்
 தீஞ்சுவையை நாடி
அறம் திறம்பிப் பாதகர் ஓர்
 ஐவர்—நறுந்துளவ
மாதுவரை யோனே!
 மனம் துணையாக் கொண்டு எனனைக்
காதுவர் ஐயோ! மெய்கலந்து

என்று துவாரகாநாதனான கண்ணனிடம் முறையிடுகிறார். சிறப்புடைய துவாரகையில் உள்ள பெருமானைக் கூவியழைத்து, "ஐயனே! எனது ஐம்பொறிகளாகிய பகைவர் என் மனத்தைக் கெடுத்து விதம் விதமாக அனுபவிக்கும் இன்பத்தை நான் விரும்பும்படி வருத்துகிறார்களே, என்னை இக்கொடுமையினின்று காக்க மாட்டாயா?" என்று ஏங்கியிருக்கிறார். இந்தப் பிரார்த்தனை மனிதனாகப் பிறந்த நாமெல்லோருமே செய்ய வேண்டிய பிரார்த்தனைத்தானே. அத்தகைய பிரார்த்தனையைத் தான் துவாரகா நாதனான கண்ணனை நோக்கிச் செய்திருக்கிறார். இந்தப் பாடலை நான் முன்னரே படித்திருக்கிறேன். அனுபவித்திருக்கிறேன். அது காரணமாக அந்தத் துவாரகாநாதனைக் காணும் ஆவலையும் உள்ளத்தில் வளர்த்து வந்திருக்கின்றேன். இந்தத் துவாரகை குஜராத் நாட்டில் மேலைக் கடற் கரையின் ஓரத்தில் உள்ளது என்று ரயில்வே கால அட்டவனை கூறுகிறது. ஆனால் புத்தகங்களில் இது விவாதத்திற்கு உரிய விஷயமாக அல்லவா இருந்திருக்கிறது. குஜராத்தில் ராஜ் கோட்டிற்கு தென்பக்கம் உள்ள ஜுனாகத்தான் துவாரகை என்பது ஒரு ஆராய்ச்சியாளர் கண்ட முடிவு. ரைவதகூட பர்வதத்தின் அருகே இருந்தது அந்த துவாரகை என்பதே இதற்கு ஆதாரம். ஆனால் இந்த ஆராய்ச்சியாளர் துவாரகை கடற்கரை ஓரமாக இருந்த

பட்டினம் என்று பழைய புராணங்கள் கூறுகின்றனவே என்பதை மறந்து விட்டார். இன்னும் கோடினாருக்கு அருகில் மூலத்துவாரகை என்று ஓர் இடம் இருக்கிறது. போர்பந்தர்க்கும் மியானிக்கும் அருகேயுள்ள மத்வபூர் என்ற ஸ்ரீநகர் தான் துவாரகை என்பது இன்னொரு கட்சியாளர் கொள்கை. இப்படி எல்லாம் பலர் கிருஷ்ணன் வாழ்ந்த துவாரகை எது என்று முடிவு கட்டுவதிலே இடர்ப்பட்டுக் கொண்டிருந்தாலும், பலர் மேலக் கடற்கரை ஓரத்தில் கோமதி நதிக்கரை ஓரமாக இருக்கும் துவாரகையையே, துவாரகை என்று முடிவு கட்டியிருக்கிறார்கள் இந்திய நாட்டின் வட கோடியில் ஒரு பத்ரி நாராயணனும், கிழக்கே பூரியில் ஒரு ஜகந்நாதனும் நாட்டை காப்பது போல் மேல்க் கோடியில் ஒரு துவாரகநாதனும் இருந்து மக்களைக் காத்து வருகிறார் என்பதே பொருத்தம் என்று எண்ணத் தோன்றுகிறது. ஆதலால் அந்த துவாரகைக்கே செல்வோம் நாம் இன்று.

துவாரகைக்குச் செல்ல நல்ல ரோடு வசதியில்லை. ஏதோ ஜீப் கார் இருந்தால்தான் அங்குள்ள ரோட்டில் முயன்று பார்க்கலாம். ஆனால் அகமதாபாத்திலிருந்து ராஜ்காட், ஜாம்நகர் வழியாக நல்ல ரயில்பாதை இருக்கிறது. இரவு பத்து மணிக்கு ராஜ்காட்டில் ரயிலில் ஏறினால் மறுநாள் காலை எட்டு மணிக்கெல்லாம் துவாரகை போய்ச் சேர்ந்து விடலாம். ரயிலை விட்டு இறங்கியதும், பெண்கள் பலர் ஓடி வந்து உங்கள் சாமான்களைக் கேட்பர், என்ன இவர்கள் எல்லாம் கண்ணன் நாட்டில் உள்ள கோபியரோ, இந்த கோபியரை நாடியா கண்ணன் அன்று ஓடினான் என்று எண்ணுவோம். பின்னர் விசாரித்தால் அவர்களே அங்குள்ள போர்ட்டர்கள் என்று தெரிவோம். என்ன கொடுமை, பெண்கள் என்ன என்ன வேலைகள் செய்யலாம் என்ற நியதி இல்லையா. போர்ட்டராகக் கூட வந்து விட்டார்களே. இனி ஜட்கா டோங்கா, வண்டிக்காரர்களாக மாறினாலும் விய

யில்லை தான். அந்தப் பெண் போர்ட்டர்களிடமிருந்து தப்பி டோங்காவில் சாமான்களை ஏற்றிக் கொண்டு ஒன்றரை மைல் சென்றால் துவாரகை வந்து சேரலாம்.

வசுதேவர், தேவகி மைந்தனாகப் பிறந்த கண்ணன் கோகுலத்தில் யசோதையின் மகனாக வளர்கிறான். தன் மாமனான கம்சனைக் கொல்கிறான். கம்சனின் மனைவியான அஸ்தியும் பிரஸ்தியும், இதனால் கோபம் கொண்டு தங்கள் தந்தையாகிய ஜராசந்தனை கண்ணனுக்கு எதிராகக் கிளப்பி விடுகிறார்கள். ஜராசந்தனும் மதுரா நகரின் மேல் பதினேழு தடவை படை எடுத்து, அத்தனைப் படை எடுப்பிலும் தோல்வியே அடைகிறான். கடைசியாக பதினெட்டாவது தடவையாகப் போருக்கு வரும் போது, கண்ணன் படையை சேர்ந்த யாதவர்கள் மிகவும் களைத்திருக்கிறார்கள். அத்துடன் அவர்கள் மது அருந்தி ஒருவரோடொருவர் சண்டை போட்டு நலிந்தும் இருக்கிறார்கள் ஆதலால் ஜராசந்தன் மதுராவைக் கைப்பற்றிக் கொள்கிறான்.போர் நிலைமை தங்களுக்கு சாதகமாக இல்லை என்பதை அறிந்த கண்ணன், அண்ணன் பலராமனுடனும் எஞ்சியிருந்த யாதவர்களுடன் மேற்கே பிரயாணம் ஆகி ரைவத கூட பர்வதத்திற்கு வந்து அங்கு துவாரகையை நிர்மாணித்து அங்கிருந்து அரசு புரிந்திருக்கிறான். இப்படித் தான் கண்ணன் கோயில் கொண்டுள்ள துவாரகை உருவாகியிருக்கிறது. இந்தத் துவாரகை கோமதி நதிகடலோடு கலக்கும் இடத்தில் அமைந்திருக்கிறது. அங்குதான் பிரபலமான கண்ணன் கோயில் இருக்கிறது. கோயிலுக்குச் செல்லு முன் கோமதி கடலுடன் சங்கம்மாகும் இடம் சென்று நீராடவேண்டும் என்பது நியதி. இந்த கோமதி சங்கமத்திலே பன்னிரண்டு துறைகள் இருக்கின்றன. அவை முறையே ரங்கம்காட், நாராயணன்காட், வசுதேவகாட் காவூகாட், பார்வதிகாட், பாண்டவங்காட், பிர்ம்மகாட், சுரதன்காட், சர்க்காரிகாட், கங்காகாட், அனுமான்காட், நாராயண் பலிகாட் என்று பெயர் பெற்றிருக்

கின்றன. இங்கேயே ரிஷபா குண்டம் என்றும் ஓர் இடம் இருக்கிறது. கோமதியின் துறையிலும் ரிஷபா குண்டலத்திலும் ஸ்நானம் செய்த பின்னரே கோயிலை நோக்கி நடக்க வேண்டும்.

கோமதி நதியிலிருந்து 56 படிகள் ஏறி வந்தால் கண்ணன் கோயிலை அடையலாம். இங்குள்ள கண்ணனை ரண்சோட்ராய் என்றும் அழைக்கிறார்கள். துவாரகா நாதனான கண்ணனுக்கு அந்தப்பெயர் வந்த காரணம்தான் நாம் தாக்கோரிலேயே தெரிந்து இருக்கிறோம். கோயிலை ஜகத்மந்திர் என்கிறார்கள். இக்கோயில் பளிங்குக் கற்களால் கட்டப்பட்டிருக்கிறது. கோயிலின் முக்கியப்பகுதி ஐந்து மாடங்கள் உடையதாக இருக்கின்றது. துறையிலிருந்து ஐந்தாவது மாடம் நூறுஅடி உயரத்தில் இருக்கிறது. இதன் மேல் உள்ள டோமை அறுபது தூண்கள் தாங்கி நிற்கின்றன. கோயிலை ஒரு விமானம் அழகு செய்கிறது. விமானத்தின் நீளம் 175-அடி உயரம் இருக்கிறது. அதன் பேரில் ஒரு நீண்ட கழியில் வெள்ளைக் கொடி ஒன்று பறந்து கொண்டிருக்கிறது. கருவறையில் கிருஷ்ண பரமாத்மா நான்கு திருக்கரங்களோடு வெள்ளி மஞ்சத்தின் மீது நின்று கொண்டிருக்கிறார். மேற்கு நோக்கிய கோலம். அவர் மூன்றடி உயரமே உள்ளவர். நல்ல கரிய மேனியர் வடிவம் அழகுடையதாக இல்லை என்றாலும் நிறைய நவரத்னங்களால் அலங்கரித்திருக்கின்றனர். அவருக்கு எதிரே சுமார் ஐம்பதடி தூரத்தில் கண்ணனின் தாயான தேவகிக்கு ஒரு சிறு கோயில் இருக்கிறது. கண்ணன் கோயிலுக்கு துவஜஸ்தம்பம் கிடையாது. கண்ணன் திருவடிகளில் நாமே துளசியிலை அருச்சிக்கலாம். கட்டணம் கட்டினால் நமக்காகவே ஒரு திருமஞ்சனமும் செய்து வைப்பார்கள். சர்வாலங்கார பூஜிதனான கண்ணனுக்கு தினசரி பதினோரு தடவை நைவேத்தியத்துடன் பூஜை நடக்கிறது. முக்கியமான நைவேத்தியம் வெண்ணெய் தான். நாம் தாம் அறிவோமே. கோகுலத்தில் கண்ணன்

ஆய்ச்சியர் வீட்டில் எல்லாம் வெண்ணெய் திருடித் தின்றிருக்கிறான் என்று. மேலும் பள்ளியில் இரண்டாம் வகுப்பிலே, கண்ணன் தின்னும் பண்டம் வெண்ணெய் என்றும் படித்திருக்கிறோமே! ஆதலால் அங்கு வெண்ணெய் பிரதான நைவேத்தியமாக இருப்பது வியப்பில்லை இக் கோயிலின் மேல் அடுக்கில்தான் அப்பாஜீ என்னும் பிராட்டியின் வடிவம் இருக்கிறது. ' சபாமண்டபத்தில் பலராமருக்கு ஒரு சந்நிதி இருக்கிறது. இன்னும் பிரத்தும்னன் அநிருத்தன் என்னும் கண்ணன் குடும்பத்தினர் அனைவருமே அங்கு எழுந்தருளியிருக்கிறார்கள். கோயில் பிரகாரத்தில் உள்ள சுற்றுக் கோயில்களில் துருவாசர், திரிவிக்கிரமன், மாதவநாயர், ராதாகிருஷ்ணன் முதலியோருக்கு தனித்தனி கோயில்கள் இருக்கின்றன. இங்கு ராமனுக்கு மாத்திரம் கோயிலைக் காணோம். தமிழ் நாட்டு வைணவ ஆலயத்தில் எல்லாம் இடம் பிடித்து நின்று கொண்டிருக்கும் இந்த ராமன் இக் கோயிலில் இடம் பெறாத காரணம் என்னவோ தெரியவில்லை.

கண்ணன் கோயிலில் ஐந்து விழாக்களை பிரதானமாக கொண்டாடுகிறார்கள். கண்ணனுடைய ஜன்மாஷ்டமி, தீபாவளி, ஆம் கட் என்றும் குஜராத்திய புது வருஷம் ரதயாத்திரை, ஹோலி என்பவைகளே அந்த விழாக்கள். விழாக்காலங்களில் ஏராளமான மக்கள் வந்து கூடுகின்றனர். இக் கோயிலை ஆதியில் கண்ணனுடைய பேரன் வஜ்ரநாபன் என்பவனே மயன் உதவியால் கட்டினான் என்பது கர்ண பரம்பரைக் கதை.

இக் கோயிலில் உள்ள துவாரகநாதர் சிறந்த வரப் பிரசாதியாயிருக்கிறார். தன்னைக் காணும் ஆவல் கொண்ட பக்தன் ஒருவனுக்காக மாட்டு வண்டியில் ஏறிக் கொண்டு இரு நூறு மைல் தூரத்தில் உள்ள தாக்கோருக்குச் சென்று அப் பக்தன் இல்லத்திலேயே தங்கி இருந்திருக்கிறார். பரோடாவில் நரசிம்ம மேத்தா என்று ஒரு கவிஞர் இருந்

திருக்கிறார். அவர் சிறந்த பக்தரும் கூட. பரோடாவில் உள்ள ஒரு வர்த்தகர் துவாரகை செல்ல விரும்பி துவாரகையில் உள்ள ஒருவருக்கு உண்டி (Bank draft) கேட்டிருக்கிறார். அங்குள்ள சிலர் ஏளனமாக வர்த்தகரை நரசிம்மமேத்தாவிடம் அனுப்பியிருக்கிறார்கள். நரசிம்ம மேத்தாவும் சாமல்உஷா என்னும் ஒருவருக்கு உண்டி எழுதிக்கொடுத்திருக்கிறார். உண்மையில் சாமல்ஷா என்ற நபர் ஒருவருமே துவாரகையில் இல்லைதான். என்றாலும், பக்தன் நரசிம்ம மேத்தா கொடுத்த உண்டியலை கௌரவிக்க துவாரகா நாதனே சாமல்ஷா வடிவில் வந்து உண்டியைப் பெற்று வந்த வர்த்தகருக்குப் பணம் கொடுத்திருக்கிறார். தமிழ் நாட்டில் வைணவ மத ஸ்தாபகரான ராமானுஜர் கி. பி. 1050—ல் துவாரகைக்கு வந்திருக்கிறார். அங்கு பாஞ்சராத்தில், முறைப்படி பூஜைகளை ஏற்பாடு செய்திருக்கிறார். வியூக மூர்த்தினையும் பிரதிஷ்டை செய்திருக்கிறார், இன்னும் கி. பி. 1240—ல் மத்வாச்சாரியார் துவாரகைக்கு எழுந்தருளியிருக்கிறார். ஞானேஸ்வரர், வல்லபாச்சாரியார், சைதன்யர், மீராபாய் முதலிய பக்தகோடிகள் பலர் துவாரகைக்குவந்து துவாரகா நாதனை வணங்கியிருக்கிறார்கள் என்று வரலாறு கூறுகிறது. ஆதிசங்கரர் ஸ்தாபித்த மடங்களில் ஒன்று துவாரகையில் உண்டு. கண்ணன் கோயிலுக்குள்ளேயே சாரதாபீடம் ஒன்று இன்னும் இருக்கிறது. சங்கராச்சாரிய பரம்பரையில் வந்த ஆசாரியார்கள் இங்கிருந்து வருகிறார்கள்.

ஆமாம். துவாரகையிலிருந்தபோதுதான் இந்தக் கண்ணன் ருக்மணியை ரதத்தில் ஏற்றிக் கூட்டி வந்து திருமணம் செய்து கொண்டார் என்று கதையில் கேட்டிருக்கின்றோமே, அந்த ருக்மணியைப்பற்றி ஒன்றுமே சொல்லவில்லையே என்றுதானே கேட்கிறீர்கள். அந்த ருக்மிணி துவாரகநாதன் கோயிலுக்கு வடக்கே ஒரு மைல் தூரத்தில் உள்ள ஒரு தனிக்கோயிலில் இருக்கிறாள்.

கிருஷ்ணனுக்குரிய பணிவிடையில் இருந்தபோது துருவாச மகரிஜி வந்திருக்கிறார். அவரை வரவேற்கவில்லை என்பதால் அந்த நாடெல்லாம் பாழாகப் போகும்படி சபித்திருக்கிறார். ஆதலால் துவாரகையின் பெரும்பகுதி அதன் வளம் எல்லாம் இழந்து பொட்டலாய்க் கிடக்கிறது. அந்தப் பொட்டலில் ஒரு மூலையிலே சமீப காலத்தில் ருக்மணிக்கு ஒரு கோயிலைக்கட்டி அவளை அதில் இருத்தியிருக்கிறார்கள். அங்குள்ள சுவர்களில், துருவாசர் சாபமிட நேர்ந்ததையும் பின்னர் ருக்மணி சாப விமோசனம் பெற்ற வரலாற்றையும் சித்திரங்களாகத் தீட்டிவைக்கின்றனர். இக்கோயிலுக்குச் சென்று ருக்மணியையும் வணங்கி விட்டே திரும்புதல் வேண்டும். துவாரகை அன்று 12 யோசனை தூரம்தான் பரவி இருந்தது. அங்கு அழகான பூஞ்சோலைகளும், கனிதரும் மரங்களும், மாடமாளிகைகளும், தாமரைத் தடாகங்களும் நிரம்பியிருந்தன என்று பழைய வரலாறு கூறுகின்றது. ஆனால் இன்றோ வெயிலுக்கு ஒதுங்க ஒரு மரம் கூடக்கிடையாது. ஒரே பொட்டலாக இருக்கிறதே என்று ஐயுறுவோம். எல்லாம் அந்தப் பொல்லாத மகரிஷி துருவாசரது சாபத்தால் நேர்ந்ததுதான் என்று ருக்மிணி கோயிலுக்குப் போய்த் தான் தெரிந்து கொள்வோம்.

துவாரகையில் கண்ணனே பிரதான தெய்வம் என்றாலும், சிவனுக்கும் அங்கு ஒரு கோயில் இல்லாமல் இல்லை. ஓர் ஒதுக்குப் புறத்தில் சித்தேஸ்வரர் கோயில் என்று ஒரு கோயில் இருக்கிறது. இந்த ஊரிலேயே நான் கண்ட ஒரேமரம், ஓர் ஆலமரம்தான் இக்கோயில் வாயிலில் நிற்கிறது. கோயில் வாயிலில் விநாயகர் வடிவம் ஒன்றிருக்கிறது. ஆனால் அழகாக இல்லை. கோயிலின் உள்ளே மிகச் சிறிய வடிவில் லிங்கத் திருவுருவில் சித்தேஸ்வரர் எழுந்தருளியிருக்கிறார். அவரைச் சுற்றி நாகபாணம் ஒன்று அமைத்து வழிபடுகிறார்கள்.



துவராபதி மணிவண்ணன்

இந்தத் துவாரகையை மாத்திரம் பார்த்துவிட்டு திரும்பினால் நமது யாத்திரை பூர்த்தியானதாகாது. கோமதி நதிக்கரையில் உள்ள இந்த துவாரகையிலிருந்து இருபது மைல் தூரத்தில் பேட்டி துவாரகை என்று ஓர் இடம் இருக்கிறது. ரயிலில் சென்றால், ஏகா என்னும் இடத்தில் இறங்க வேண்டும். பஸ்ஸில் சென்றாலும்

அங்கு சென்று அதன்பின் படகுகளில் சென்று பேட்டி துவாரகா என்னும் தீவிற்குச் செல்ல வேண்டும். செல்லும் வழியில் கோபி தபஸ் என்னும் கோயில்குளம், தீர்த்த கட்டம் வேறே இருக்கிறது. இங்கு கோபிநாதருடைய கோயிலும் மகாபிரபுஜியின் கூடமும், சாட்சி கோபால னுடைய கோயிலும் இருக்கின்றன. இங்கு கிடைக்கும் மண் சந்தனம் போலவே இருக்கிறது. இந்த சந்தனத்தை எடுத்து நெற்றியிலும், மார்பிலும் அணிந்து கொண்டே பேட்டிதுவாரகை செல்லலாம்.

பேட்டி துவாரகை என்றால், தீவாயிருக்கும் துவாரகை என்றுதான் அர்த்தம். இங்கு செல்ல ஸ்டீம் லாஞ்சுகளும் சாதாரண படகுகளும் இருக்கின்றன. துவாரகையை தலைநகராக வைத்துக்கொண்டு கண்ணன் அரசாண்ட போது தானும் தன் குடும்பமும் தங்க இந்தத் தீவைத்தான் வைத்துக் கொண்டிருந்தான் என்பர். அதற்கேற்ப அங்கே கிருஷ்ணனின் வீடு, ருக்மணி வீடு, சத்தியபாமையின் அந்தப்புரம், ராதைவீடு என்று தனித்தனிப் பகுதிகள் இருக்கின்றன. அங்கங்கே வசித்தவர்கள் சிலைகளையும் பிற்காலத்தில் பிரதிஷ்டை செய்து வணங்கி வந்திருக் கிறார்கள். பூசைகளும் ஒழுங்காய் நடக்கின்றன. எல்லா வற்றிலும் பெரிய வீடு ராதையின் வீடுதான். அதனையே ராதா ராணி வீடு என்று கூறுகின்றனர். இந்தப் பேட்டி துவாரகையிலே சங்கோதார் தீர்த்தம், ஹனுமான் வேண்டி, கல்பகவிருக்ஷம், ராமசபோக்கா மந்திர் முதலியன பார்க்கத் தகுந்தவை.

இவற்றையெல்லாம் விட தமிழர்களாகிய நமக் கெல்லாம் துவாரகை, ஆழ்வார்களால் மங்களா சாஸனம் செய்யப்பட்ட திருப்பதிகளில் ஒன்று என்பதே மகிழ்ச்சிக் குரிய விஷயமாகும். பெரியாழ்வார், ஆண்டாள், திருமங்கை ஆழ்வார், நம்மாழ்வார் ஆகிய நால்வரும் துவாரகா நாதனைப் பாடியிருக்கின்றனர். இவர்கள்

*பாடிய பாடல்களில் எல்லாம் சிறப்பான பாடல் நம்மாழ்வார் துவராபதி மன்னனைப் பாடிய பாடலே.*

அன்னை என் செய்யில் என்?
    ஊரென் சொல்லில் என்? தோழிமீர்?
என்னை இனி உமக்கு ஆசையில்லை
    அகப்பட்டேன்
முன்னை அமரர் முதல்வன்
    வண்துவராபதி
மன்னன் மணிவண்ணன்
    வாசுதேவன் வலையுளே !

*என்ற பாடல் சுவையான பாடல்தானே. நாமும் அந்தத் துவராபதி மன்னன் வாசுதேவன் வலையில் அகப்பட்டுக் கொண்டால் மீளவழியறியாது தான் மயங்குவோம்.*

# 35. அதிசயம் கண்டோமே

ஒரு அரசகுமாரனுக்கு பக்கத்து ராஜ்யத்தில் உள்ள ராஜகுமாரியை மணம் பேசுகின்றனர். திருமணம் நிச்சயமாகிறது. திருமண ஏற்பாடுகளும் சிறப்பாக நடக்கிறது. ராஜகுமாரி இருக்கும் நகரை நோக்கி ராஜகுமாரன் புறப்படுகிறான். அவன் ஒரு பெரிய யானை மீது அமைக்கப்பட்டிருக்கும் அம்பாரியில் வீற்றிருக்கிறான். மந்திரி பிரதானிகள் எல்லாம் முன் நடக்கின்றனர். கோலாகலமாக மாப்பிள்ளை அழைத்து செல்லப்படுகிறார். மங்கள வாத்தியங்கள் முழங்குகின்றன. பெண்களின் வாழ்த்தொலிகள் வானையே பிளக்கின்றன. பெண்ணிருக்கும் நகரை இந்த மாப்பிளை அழைப்பு ஊர்வலம் நெருங்குகிறது. அந்தச் சமயத்தில் ஒரு சிறு ஆட்டுமந்தையை சிலர் ஓட்டிச் செல்வதை யானைமீது ஊர்ந்து வரும் ராஜகுமாரன் பார்க்கிறான். இந்த மந்தை எங்கே செல்கிறது. எதற்காகச் செல்கிறது என்று கேட்கிறான் ராஜகுமாரன். பக்கத்தில் வந்தவர்களில் ஒருவர் இந்த ஆடுகள் எல்லாம் மணப்பெண் இருக்கும் அரண்மனைக்கே செல்கின்றன. அங்கு அவற்றை எல்லாம் கொன்று கறி சமைத்து, திருமணம் காணவந்திருப்பவர்களுக்கு சிறந்த விருந்து நடத்தப்படும் என்கிறார். அவ்வளவுதான் யானை மீதிருந்த மணமகன் கீழே குதித்து விட்டான். தன் திருமணத்திற்காக இத்தனை ஆடுகள் பலியிடுவதா, இப்படித்தான் உலகம் உயிர்வதை மூலமாக முன்னேறுகிறதா என்று எண்ணியவனாய், அந்த உலக வாழ்வையே துறக்கத் தீர்மானித்து விடுகிறான். விடு விடு என்று காட்டிற்கே ஓடுகிறான். உலக இன்பங்களை எல்லாம் வெறுத்து கடுந்துறவு பூணுகிறான். அருந்தவமே ஆற்றுகிறான் ராஜகுமாரன். அரசகுமாரன் இப்படித் துறவு பூண்டு ஓடிய விவரத்தை மணமகளாக இருந்த ராஜ

குமாரி கேட்கிறாள். அவள் இதயத்திலும் கருணை பிறக்கிறது. அவளுமே ஓடுகிறாள், ராஜகுமாரன் இருந்த காட்டிற்கு. அங்கேயே ராஜகுமாரனுடன் சேர்ந்திருந்து தவம் இயற்றுகிறாள். பின்னர் இருவரும் தங்கள் தபோ பலத்தால் அழியாத சாம்ராஜ்யமாகிய முக்திப்பேறு பெறுகின்றனர்.

இப்படி ஒரு கதை. இப்படித் துறவு பூண்ட ராஜகுமாரன் தான் நேமிநாதன். அவனுடன் சேர்ந்து துறவியான ராஜகுமாரி தான் ராஜுல். இது நடந்தது குஜராத்தில் உள்ள கிர்னார் காட்டில் என்று ஜைன இலக்கியம் கூறுகிறது. இந்த நேமிநாதரே ஜைன தீர்த்தங்கரில் ஒருவர். அந்த தீர்த்தங்கரருக்கு அழகிய கோயில் ஒன்று கட்டப்பட்டிருக்கிறது. அந்தக் கோயில் இருக்கும் இடம் ஒரு மலைச்சிகரம். அன்று அற்புத சிகரம் என்றனர். இன்றோ அற்புதம் என்ற பெயர் குறுகி அபூசிகரம் என்றிருக்கிறது. அந்த அற்புத சிகரத்தில் இரண்டு பிரபலமான சிற்பக் களஞ்சியமான கோயில்கள் இருக்கின்றன. அந்தக் கோயிலில் ஒன்றே நேமிநாதர் கோயில். இன்னொரு கோயில் அந்த நேமிநாதருக்கு முந்திய தீர்த்தங்கரரான ஆதிநாதர் கோயில். இனி அபூ மலைச் சிகரத்தை நோக்கி நாம் நடக்கலாம் கோயில்களுக்கும் சென்று அங்குள்ள சிற்ப அதிசயங்களைக் கண்டு மகிழலாம்

அபூசிகரம் இன்றைய ராஜஸ்தான் ராஜ்யத்தில் ஆரவல்லி மலைத் தொடரில் இருக்கிறது. கடல் மட்டத்திற்கு மேல் சுமார் 4000 அடி உயரத்தில் உள்ள அபூ சிகரம் செல்ல நாம் அகமதாபாத்திலிருந்து டில்லி செல்லும் ரயில் பாதையில், அபூரோட் ஸ்டேஷனில் இறங்க வேண்டும். அந்த ஸ்டேஷனில் இறங்கி காரிலோ, பஸ்ஸிலோ 18 மைல் மலைமேல் சென்றால் அபூநகரம் வந்து சேருவோம். அடர்ந்த காடுகள், பசும் புல்தரைகள். அருவி பாயும் ஆறுகளைக் கடந்து இந்தப்பாதை செல்கிறது.

ரோடு அவ்வளவு சிறப்பாக இல்லாவிட்டாலும், வசதி யாகச் சென்று சேருதல் கூடும்.

அபூ சிகரத்தில் உள்ள அதிசயக் கோயில்களையும் அற்புதச் சிற்பங்களையும் சென்று காண்பதற்கு முன் அபூவின் பழைய வரலாற்றையும் கொஞ்சம் தெரிந்துக் கொள்ளுதல் நல்லதல்லவா. அபூ மலையைப் பற்றி இரண்டு வரலாறுகள் இருக்கின்றன. இரண்டுமே பழைய புராண வரலாறுகள் தாம். ஆதி காலத்தில் அபூ அடர்ந்த காடாக இருந்திருக்கிறது. அங்கு பல முனிவர்கள் இருந்து தவம் செய்திருக்கின்றனர். அப்படித் தவம் செய்த முனிவர் களில் ஒருவர் வசிஷ்டர். அவருடைய பசுவான நந்தினி ஒரு நாள் ஒரு பெரிய பள்ளத்தில் விழுந்து விடுகிறது. அந்தப் பள்ளத்திலிருந்து பசுவை வெளியேற்றுவது மிக சிரமமான காரியமாக இருந்திருக்கிறது. பசுவை வெளியேற்றிய பின் வசிஷ்டர் சிவனைப் பிரார்த்தித்திருக்கிறார். அந்தக் கிடு கிடு பாதாளத்தை நிரப்பிவிடும்படி வேண்டியிருக்கிறார். வசிஷ்டர் விருப்பப் படி சிவபெருமானும், அற்புதன் என்ற பெயர் படைத்த ஒரு பெரிய நாகசர்ப்பத்தை அந்தப் பள்ளத்தை நிரப்ப உத்தரவிட்டிருக்கிறார். உத்தரவுப் படியே அற்புதனும், பல மலைகளைப் பெயர்த்து எடுத்து அந்தப் பள்ளத்தில் போட்டு நிரப்பியிருக்கிறார். அப் போது அந்தப் பிரதேசமே கிடு கிடுத்திருக்கிறது. சிவ பெருமான், இராவணன் கைலைமலையினை அசைத்த போது செய்தது போல், தன் பெருவிரலை ஊன்றி மலையின் அசைவை நிறுத்தியிருக்கிறார். இப்படி அற்புதன் செய்த சேவையினால் ஏற்பட்ட மலைக் குன்றையே அற்புதக் குன்று என்று நாமகரணம் செய்திருக் கின்றார் சிவபெருமான். இது ஒரு கதை.

மற்றொரு கதை—

இந்தக் காட்டிலேதான் கௌதம முனிவரும் தன் துணைவியான அகல்யையுடன் வாழ்ந்து வந்திருக்கிறார்.

இந்த கௌதமருடைய சிஷ்யனாய் உதங்கர் வந்திருக்கிறார். அவருடனேயே தங்கி குருகுலவாசம் செய்திருக்கிறார். பதினாறு வருஷகாலம் இப்படித் தங்கியிருந்து பூரண ஞானம் பெற்றுத் தன் இருப்பிடத்திற்கு திரும்ப எண்ணியிருக்கிறார். உதங்கர் இப்படித் திரும்பும்போது குருவினிடம் தான் என்ன தட்சிணை கொடுக்க வேண்டும் என்று கேட்டிருக்கிறார். குரு பத்தினியான அகலிகையோ குருவையும் முந்திக் கொண்டு சௌதேச முனிவரது மனைவி அணிந்திருக்கும் குண்டலங்களைக் கொணர்ந்து கொடுக்கும்படி கேட்டிருக்கிறார். உதங்கரும் மிக்க சிரமத்துடன் சௌதேசரது மனைவியை அணுகி, அவளது குண்டலங்களைப் பெற்று திரும்பியிருக்கிறார். திரும்பும் வழியில் களைப்பு மிகுதியால் ஒரு மரத்தடியில் தங்கியிருக்கிறார். பின்னர் அயர்ந்து தூங்கியிருக்கிறார். அந்தச் சமயம் அம்மரத்தில் இருந்த நாகசர்ப்பம் ஒன்று இறங்கி வந்து குண்டலங்களை எடுத்துச் சென்றிருக்கிறது. சிரமத்தோடு கொண்டு வந்த குண்டலங்களை இழந்து விட்டோமே என்று உதங்கர், வருந்தி, மலைகளுக்கு எல்லாம் அரசனான இமவானிடமே முறையிட்டிருக்கிறார்.

தன் புத்திரர்களில் ஒருவனான ஹக அற்புதனிடம், குண்டலங்களை அந்தப் பாம்பினிடமிருந்து மீட்டுத்தரச் சொல்லியிருக்கிறார். தந்தையின் கட்டளைப்படியே அந்த அற்புதன் குண்டலங்களை மீட்டு உதங்கரிடம் சேர்த்திருக்கிறான். உதங்கரும் குருபத்தினி கேட்ட குருதக்ஷிணையைக் கொடுத்து விட்டு தன் இடம் சென்றிருக்கிறார். உதங்கர் குண்டலங்களைப் பெற உதவிய அற்புதன் பெயராலே அந்த மலைச்சிகரம் அற்புத சிகரம் என்று அழைக்கப்பட்டிருக்கிறது. அற்புதம் அபூ என்று பின்னர் குறுகியும் இருக்கிறது.

அபூ நகரத்தைச் சென்றடைந்ததும் நம் கண் முன் வருவது ஒரு பெரிய ஏரிதான். அதை நக்கி ஏரி என்கின்

றனர். பால்கடல் ஆனாலும் நாய் நக்கித்தானே குடிக்கும் என்பது பழமொழி. அதைப்போல இங்கு ஏதாவது நாய் நக்கிக் குடித்ததால், நக்கி ஏரி என்று பேர் பெற்றதோ என்று எண்ணத் தோன்றும். அப்படி எல்லாம் இல்லை. பாஷ்கலி என்று ஓர் அசுரன். அசுரன் என்றாலே தேவர் களுக்கு இடுக்கண் செய்திருப்பான் என்பதுதான் தெரியுமே. அந்த அசுரனது கொடுமைகளைத் தாங்க இயலாது தேவர்கள் பிரம்மனிடம் முறையிட்டிருக்கின்றனர். பிரம் மனும் அவர்களை இந்த அற்புத மலையில் தங்கியிருக்கச் சொல்லியிருக்கிறார். அப்படி இத்தலத்திற்கு வந்த தேவர்கள், அசுரனின் பாதையிலிருந்து ஒதுங்கியிருக்க தங்கள் நகத்தாலேயே பூமியைக் கீறி ஏற்படுத்திய ஏரி தான் நக்கி ஏரி என்று பெயர் பெற்றிருக்கிறது: அரை மைல் நீளமும் கால்மைல் அகலமும் இருபது அடி ஆழமும் உள்ள ஏரியில் இன்று உல்லாசமாக மக்கள் தோணிகளில் ஏறி உலவி வரலாம். ஏரிக்கரைகளிலே உள்ள சிறு கற்குன்றுகள் தவளை போலவும், நாய்த்தலைப் போலவும் இருக்கின்றன. இவைகளில் தவளைக்குன்று பிரசித்தமானது. ஏரியின் தென்புறத்தில் ரகுநாத்ஜி கோயில் இருக்கிறது. 14-ம் நூற்றாண்டில் ராமானந்தர் என்பவரால் இந்த ரகுநாதர் ஆலயம் பிரதிஷ்டை செய்யப் பட்டிருக்கிறது.

இந்த ஏரிக்கரையிலிருந்து நான்கு ஐந்து மைல் வடமேற்கே சென்றால் அற்புத தேவி கோவில் அசலேஸ்ரர் கோயில், அனுமான் ஆசிரமம், வசிஷ்டர் ஆசிரமம் முதலி யவைகளைக் காணலாம். வசிஷ்டர் ஆசிரமத்தில் உள்ள கோயிலில், ராமனும் லக்ஷ்மணனும் இருபுறம் இருக்க இடையே வசிஷ்டர் வீற்றிருக்கும் கோலத்தில் இருக்கிறார். ஆனால் நாம் வந்தது இந்தக் கோயில்களைக் காண அல்லவே! அற்புத மலையில் உள்ள அதிசயக் கோயில் களைக் காண அல்லவா என்று ஞாபகப்படுத்திக்கொண்டு கொஞ்சம் கிழக்கு நோக்கி நடந்தால் டில்வாடா என்ற பகுதிக்கு வந்து சேருவோம். மெயின் ரோட்டிலிருந்து

கொஞ்சம் நடந்து இரண்டு சந்துகள் திரும்பினால் ஒரு சிறு கோயில் தென்படும். இந்தக் கோயில்தானா அதிசயக் கோயில், இதன் அமைப்பு ஒன்றும் அதிசயிக்கத் தக்கத்தாக இல்லையே என்று எண்ணிக்கொண்டே மேல் நடந்தால், ஓரிடத்தில் ஒன்றிரண்டு காவல்காரர்கள் நிற்பார்கள். அவர்கள் காலில் உள்ள செருப்பைக் கழட்டிவிட்டு மேலே நடவுங்கள் என்பர். அப்படியே நடந்து தென்பக்கம் உள்ள படி வழியாக உள்ளே சென்றால் ஒரு வாசல் தெரியும். அங்குள்ள கோயிலின் வெளித்தோற்றத்தைக் கண்டால் அது நமக்கு மிகவும் ஏமாற்றத்தையே அளிக்கும். ஆனால் அந்த வாயிலைக் கடந்து உள்ளே நுழைந்ததும், நாம் இந்த உலகில்தான் இருக்கின்றோமா இல்லை. அதிசயமான தேவர் உலகத்திற்கே வந்துவிட்டோமா என்று தோன்றும். அப்படி நம்மை அதிசயிக்க வைக்கும் கோயில்தான் ஆதிநாதர் கோயில் என்றாலும் அந்தக் கோயில் ஆதிநாதர் பெயரால் வழங்கப்படவில்லை, அந்தக் கோயிலைக் கட்டிய விமலாஷா என்பவர் பெயரால் விமலாவாசிகி என்றே அழைக்கப்படுகிறது. கோயில் முழுவதும் ஒரே சலவைக்கல் மயம். கோயில்வாயிலிலேயே, இந்தக் கோயில் முதலாம் பீமதேவரது ஆஸ்தானத்தில் இருந்த அமைச்சர் விமலாஷாவினால் 1032-ம் ஆண்டு பதினெட்டு கோடி ரூபாய் செலவில் கட்டப்பட்டது என்று எழுதி வைத்திருக்கிறார்கள். என்ன, இதை கேட்டதும் மூர்ச்சித்து விட்டீர்களா? ஆம். அந்தக் கோயில் கட்ட ஆயிரம் வருஷங்களுக்கு முன்னாலே பதினெட்டுக்கோடி. சரியாக பதினெட்டுக்கோடி ரூபாய் செலவாகியிருக்கிறது. அதுவும் ஆண்களுக்கு தினசரி கூலி 5 பைசாவும், பெண்களுக்கு கூலி மூன்று பைசாவும் என்றிருந்த காலத்தில். அப்படி என்றால் பணவீக்கம் மிகுந்து, கூலியும் உயர்ந்து இருக்கும் இக்காலத்தில் இக்கோயிலின் மதிப்பு எத்தனை கோடியிருக்கும் என்று கொஞ்சம் கணக்குப் போட்டுதான் பாருங்களேன். பொருளாதார சாஸ்திர அறிவெல்லாம் கூட நமக்கு இப்போது துணைவராது. அப்படி விலை

மதிக்க இயலாத அற்புத சிருஷ்டியாக இருக்கிறது. இக்கோயிலை விமலாஷா கட்டுவதற்கு காரணமாயிருந்த வரலாற்றையுமே கொஞ்சம் தெரிந்து கொள்ளலாம். விமலாஷாவின் வழிபடு தெய்வம் அம்பாஜீ. அப்படியிருந்தும் ஜைனர்களின் 23—வது தீர்த்தங்கரரான பார்சவ நாதருக்கு 360 கோயில்கள் கட்டியிருக்கிறார், இந்த விமலாஷா. இதனால் அம்பாஜி கடுங் கோபம் அடைகிறாள். அவள் கோபத்திற்கு அஞ்சி விமலாஷா ஓடி ஒளிகிறான். அம்பாஜியும் அவன் கட்டிய கோயில்களை எல்லாம் அழித்து விடுகிறாள். கடைசியில் அந்த அம்பாஜி கட்டளை இட்டபடியே டில்வாராவில் முதல் தீர்த்தங் கரராகிய ஆதிநாதருக்கு இந்தக் கோயிலைக் கட்டியிருக்கிறான். கோயில் உட்புரத்தில் ஒரு சுற்று மண்டபம் வராந்தாவாக அமைந்திருக்கிறது. அதன் நீளம் 140 அடி. அகலம் 90 அடி. அந்த மண்டபத்தைத் தாங்கி நிற்பவை எல்லாம் சிறந்த சிற்ப வேலைப்பாடமைந்த சலவைக்கல் தூண்கள் இந்த மண்டபத்தை சுற்றி 52 தீர்த்தங்கரர் களின் வடிவங்கள் அமைக்கப்பட்ட சிறு சிறு கோயில்கள். அங்கும் சுவர், விதானம், தரை, தூண் எல்லாம் சலவைக் கல் தான். தீர்த்தங்கரர்கள் எல்லோருமே ஒரே அச்சில் வார்த்தவர்கள் போல்தான் இருப்பார்கள் அவர்கள் அழகானவர்களும் அல்ல. அவர்களது பாதங்களின் அடியில் செதுக்கியிருக்கும் பதுமம், முதலியவைகளைக் கொண்டு தான் அவர்கள் யார் யார் என்று தெரிந்துக்கொள்ள வேண்டும். அந்த சிரமம் எல்லாம் நமக்கு வேண்டாம். இந்தக் கோயில் கட்டக் காரணமாயிருந்த அம்பாஜிக்கு கோயிலின் தென்மேற்கு மூலையில் ஒரு சந்நிதி-இவற்றை எல்லாம் பார்த்து விட்டுத்தான் முற்றத்திற்குள் இறங்க வேண்டும். முற்றம் திறந்த வெளி முற்றம் அல்ல. நாற்பது தூண்களால் தாங்கப்பட்ட மண்டபம் அது. அந்த மண்டபத்திற்கு நடுநாயகமாய் எட்டு சிறந்த வேலைப் பாடமைந்த தூண்கள் தாங்கி நிற்கும் விதானம் ஒன்று. அந்த விதானத்தில் லஸ்தர்குளோப்புகள் எல்லாம்

சலவைக் கல்லில் தஞ்சை மாவட்டத்தில் தென்னை கிடுகு களை வைத்து அலங்கார மணப்பந்தல் இடுவார்கள். அதில் தங்கள் கைத்திறனை எல்லாம் காட்டுவார்கள் கலைஞர்கள். ஆம். எல்லாம் ஓலையில்தான். அவற்றை எல்லாம் தூக்கி அடிக்கும் வகையில் சலவைக்கல்லில் விதானம். அந்த விதானத்தில் சரஸ்வதி, லக்ஷ்மி போன்ற வடிவங்கள். இன்னும் படிப்படியாகத் தொங்கிக்கொண் டிருக்கும் லஸ்தர் குளோப்புகளைப் போல சலவைக் கல் லிலே செய்யப்பட்டிருக்கும். இவைகளை எல்லாம் பார்த் துப் கல்லைக்கனியாக்கும் சிற்பிகள், வெண்ணெய்யையே பொருளாகக் கொண்டு இப்படி செய்திருக்கிறார்களோ என்று எண்ணத்தோன்றும். அத்துனை தூயவெண்மையான சலவைக் கற்களால் ஆக்கப்பட்டிருக்கும் மண்டபம், அது ஆக்ராவில் உள்ள தாஜ்மகால் சலவைக்கல் கனவு என்றால் இது சலவைக்கல் நனவாக அமைந்திருக்கிறது. இந்த மண்டபத்தினை கடந்துதான் ஆதிநாதர் இருக்கும் கருவறை. ஆதிநாதர் அத்தனை அழகானவர் அல்லதான். என்றாலும் அற்புதக் கோயிலின் கருவறை உள்ளே அல்லவா அவர் இருந்து கொண்டிருக்கிறார். அந்த கருவறையின் முகப்பிலே ஒரு சிறு மண்டபம் பல தூண்கள். தூண்கள், விதானம், எல்லாம் சிற்பவேலைகள் நிறைந்த சலவைக் கற்களால் ஆனவைதான்.

இக்கோயிலை விட்டு வெளியே வந்தால் வாயிலில் ஒரு சிறு கோயில். அதனை 'ஹத்திகானா' என்று அழைக் கின்றனர். அங்கு பத்து யானைகள் ஆம் எல்லாம் சலவைக் கல்லால் ஆனவை தாம், இருக்கின்றன. இவற்றிற்கு எல் லாம் நடுநாயகமாய் ஒரு பெரிய யானை மீது ஏறி இருப் பவர்தான் விமலாஷாவின் வடிவம் என்பர். ஆம் அவருமே சலவைக்கல்லில் உருவானவர்தான்.

இந்த டில்வாடா என்னும் பகுதியில் இருக்கும் ஜைனக் கோயில்கள் இன்னும் நான்கு என்றாலும் அதில் முக்கிய மானது ஒன்றே ஒன்றுதான். அதுதான், லூனவாசிகி,

என்னும் நேமிநாதர் கோயில், அவரை 22-வது தீர்த்தங் கரர் என்று ஜைனசரித்திரம் கூறுகிறது. இக்கோயிலைக் கட்டியவர்கள் வாஸ்து பாலா, தேஷ்பாலா என்னும் சகோதரர்கள், இவர்கள் இக்கோயிலை பன்னிரண்டு கோடி ரூபாயில் 1231-ம் வருஷம் கட்டியிருக்கின்றனர். தங்கள் தமையனான லூனா என்பவர் பெயரைக் கோயிலுக்குச் சூட்டியிருக்கின்றனர். இந்தக் கோயில் அமைப்பும் அந்த விமலவாசகி கோயிலைப் போலத்தான் என்றாலும் இங்கு சிறப்பாயிருப்பது வட்டவடிவமான விதானம்தான். இன்னும் தூண்கள் மேலே அமைந்திருக்கும் தோரணங்கள், ஏதோ துணியால் கட்டப்பட்டவைதானோ என்று தோன்றும். கூர்ந்து நோக்கினால் அவையும் சலவைக் கல்லால் ஆனவையே என்று அறிவோம். இங்கு நேமிநாதர் சந்நிதியை அடுத்த மண்டபத்தில் இரண்டு பக்கத்தில் இரண்டு மாடங்கள் அமைத்து அதில் இரு தீர்த்தங்கரர் களை பிரதிஷ்டை செய்திருக்கிறார்கள். அவைகளே துராணி, ஜிதானி ஆலயம்என்கின்றனர். இன்று ஒவ்வொன் றையும் கட்ட ஒன்றேகால் லட்சம் ரூபாய் ஆயிற்றாம். அந்தத்தொகை முழுவதையும் வாஸ்துபாலா, தேவிபாலா சகோதரர்களின் மனைவியரே கொடுத்தார்களாம். ஆம் பதிக்கேற்ற சதிகளாயிற்றே அவர்கள், அவர்களது கைங் கர்யமும் கொஞ்சம் இருக்க வேண்டாமா என்று எண்ணி னார்கள் போலும். எல்லோருடைய அன்பும் ஆர்வமும் சேர்ந்து இரண்டு அற்புதமான கலைக்கோயில்களைச் சிருஷ்டித்திருக்கிறது.

இந்த அற்புத மலையில் உள்ள அதிசயக் கோயில் களைப் பற்றிச் சொல்ல எனக்கு சொற்களே அகப்பட மாட்டேன் என்கிறது. திருப்பெருந்துறையிலே இருந்த மரத்தடியிலே அடியவர் கூட்டத்துள் இருந்த இறைவன் வாதவூரரை ஆட்கொண்டபோது அவர் பெற்ற அனுபவத்தை

முத்து மாமணி மாணிக்க வயிரத்த
பவளத்தின் முழுக்ஜோதி
அத்தன் ஆண்டு தன் அடியரில் கூட்டிய
அதிசயம் கண்டோமே.

என்று பாடினார், ஒருதரம். பின்னரும் மயங்கி

இறைவன் எம்பிரான் எல்லையில்லாததன்
இணைமலர்க்கழல் காட்டி
அறிவுதந்து எனை ஆண்டு கொண்டருளிய
அற்புதம் அறியேனே.

என்றும் பாடினார். ஆம். நானும் அற்புத மலையில் உள்ள அதிசயமான கலைக் கோயில்களைக் கண்டபின், இதன் அற்புதத்தை சொல்ல அறியாவிட்டாலும், அதிசயம் கண்டோமே, அதிசயம் கண்டோமே என்று கூத்தாடி மகிழலாம் அல்லவா? அந்த மகிழ்ச்சியையும் உங்களுடன் பகிர்ந்து கொள்ளவே ஒரு சில பாகங்களைப் படம் பிடித்து உங்களுக்கு காட்டுவதில் திருப்தி அடைகிறேன். பெருமைப் படுகிறேன்.

# 36. உதயபுரி ஜகதீசர்

பாரசீகக் கவிஞரான ஓமர்கய்யாம் என்பவரிடம் 'சுவர்க்கம் எங்கே' என்று ஒரு கேள்வி கேட்டிருக்கிறான் ஒருவன். அதற்கு அவர் சுவர்க்கம் ஏதோ வானுலகத்தில் தான் இருக்கிறது என்று இல்லை இங்கே இந்த உலகிலேயே இருக்கிறது. ஒரு ரமணீயமான தோப்பு, அங்கு உண்ப தற்கு ஒரு ரொட்டித் துண்டு, குடிப்பதற்கு கொஞ்சம் மது, படிப்பதற்கு ஒரு கவிதைப் புத்தகம், பக்கத்தில் இருந்து இன்னிசை எழுப்ப ஒரு காதலி மட்டும் அமைந்து விட்டால், அதுவே சொர்க்கம்தானே? என்று பதில் கூறி இருக்கிறார், அவர். அவர் சொன்னதை கவிமணி தேசிய விநாயகம் பிள்ளை அப்படியே தமிழில் மொழி பெயர்த்து ஒரு நல்ல பாடலாக நமக்கு அளிக்கிறார்.

வெய்யிற்கேற்ற நிழல் உண்டு
வீசும் தென்றல் காற்றுண்டு
கையில் கம்பன் கவி உண்டு
கலசம் நிறைய அமுதுண்டு
தெய்வகீதம் பல உண்டு
தெரிந்து பாட நீயும் உண்டு
வையந்தனில் இவ்வனம் அன்றி
வாழும் சொர்க்கம் வேறுளதோ?

என்பது பாடல். ஆம், தன்பக்கத்தில் இருக்கும் காதலியைப் பார்த்தே பாடுகிறான் கவிஞன். இப்படிப்பட்ட கற்பனை சுவர்க்கத்தைக் காணவேண்டும் என்றால், ராஜஸ்தானத் தில் உள்ள உதயபுரிக்கே செல்ல வேண்டும் என்பேன் நான். அதிலும் எழில் நிறைந்த அந்த நகரத்தில் பிச்சோலா ஏரி யில் மிதக்கும் படகுகளில் ஒன்றில்மட்டும் ஒரு காதலியுடன் அமர்ந்து செல்லும் அனுபவம் ஏற்பட்டு விட்டால்

ஓமர்கய்யாமும், தேசிகவிநாயகம் பிள்ளையும், சொன்ன சொர்க்கம் இதுதானோ என்று ஐயுறுவோம். அவ்வளவு ரமணீயமான இடம் அது. அங்கு கடவுள் படைத்த இயற்கை எழிலும், மனிதன் படைத்த கைவண்ணத் திறமை கைகோத்து உலவுகின்றன அங்கே. ஊரைச் சுற்றி மலைகளும் அம்மலைகளுக்கு இடையே வளர்ந்திருக்கும் காடுகளும் அமைந்து இயற்கை அழகை அதிகப்படுத்திக் கொண்டிருக்கும். இத்தகைய இயற்கைச் சூழ்நிலை அமைந்த நகரம் அது. எங்கு பார்த்தாலும் ஒரே சலவைக் கல் அரண்மனைகள்தான். அழகான ஏரிகள். அவ்வேரி களைச் சுற்றி வளைந்து வளைந்து செல்லும் பாதைகள். ஏரியின் நடுவிலேயும் அலங்காரமான மாளிகைகள். இத்தனை கோலாகலத்துடன் அமைந்த நகரத்தை இந்தியாவில் வேறு எங்கும் காணமுடியாது, அதனால் தானே அது இந்தியாவின் வெனிஸ் என்று பெயர் பெற் றிருக்கிறது. மேல்நாட்டார் ஒன்று சொல்வார்கள், "வெனிஸைப் பார் அதன் பின் இறந்துவிடு! என்று, நான் சொல்வேன், உதயபுரியைப் பார்க்கவே நாம் வாழலாம். ஒரு தடவை பார்த்தபின் இன்னும் பல தடவை சொல் வதற்காகவே வாழலாம் என்பேன் நான். அத்தகைய அழகிய நகராம் உதயபுரிக்கே செல்கிறோம் நாம் இன்று.

உதயபுரி செல்ல மேற்கு பிராந்திய ரயில்வேயில் ரட்லம் ஜங்ஷனில் இருந்து 185-மைல் மேற்கு நோக்கி ரயிலில் செல்லலாம். தற்போது போட்டுக் கொண் டிருக்கும் உதயபுரி ஹிமத்நகர் ரயில்பாதை முற்றுப் பெற்றால் அகமதாபாத்திலிருந்தே உதயபுரிக்கு எளிதாகச் செல்லலாம். தக்க வசதி உடையவர்கள் என்றால், அகமதாபாத்திலிருந்தோ இல்லை டில்லியிலிருந்தோ ஆகாய விமானத்திலும் பறந்து செல்லலாம். ரோடு வழியாகக் காரில் போவதானால், அபூ ரோட்டிலிருந்து நேர் வழியிலே கொஞ்சம் சுற்றி வளைத்து மார்வார் வரை வடக்கே போய்த்தான் தெற்கே திரும்ப வேண்டும். ஆதலால் ரயிலில் போவதுதான் நல்லது. ரயில்வே

ஸ்டேஷன் ஊரின் கீழ்க்கோடியில் இருக்கிறது. இங்கிருந்து மேற்கு நோக்கிச் சென்றே உதயபுரியைப் பார்க்க வேண்டும்.

உதயபுரி இரண்டு பகுதிகளாக இருக்கிறது.

பழமையான நகரம் மலைச்சரிவில் இருக்கிறது. சமவெளியிலேதான் புதிய நகரம் விஸ்தரிக்கப்பட்டிருக் கிறது. பழைய நகரைச் சுற்றி ஒரு பெரிய மதில்சுவர் கட்டப்பட்டிருக்கிறது. அதன் நீளம் ஆறுமைல். ஐந்து அடி அகலமும் இருபது அடி உயரமும் உடைய அந்த மதில் சுவரில் பத்து வாயில்கள் அமைத்திருக்கிறார்கள். இவை களில் நான்கு வாயில்கள் பிரமாதமானவை. கிழக்கு வாயிலை சுரஜ்போல் என்றும், வடக்கு வாயிலை ஹத்திபோல் என்றும், மேற்கு வாயிலை பிரம்மாபோல் என்றும் தெற்கு வாயிலை கிஷான்போல் என்றும் அழைக் கின்றனர். இவ்வாயில்களில் ஒன்றான கிழக்கு வாயில் வழியாகத்தான் உதயபூர் நகரத்திற்குள் செல்லவேண்டும். அங்கு முதல் முதல் நம் கண்முன் வருவது மகாராணாவின் அரண்மனைதான். ராஜஸ்தானத்தில் உள்ள அரண்மனைகளில் எல்லாம் பெரிய அரண்மனை இதுதான் என்கின்றனர். அம்மாளிகை ஒரு மகா ராஜாவால் கட்டப்பட்டதல்ல. பல ராஜாக்கள் பல காலம் நினைந்து நினைந்து கட்டியது என்று பேசுகின்றன சரித்திர ஏடுகள், சோட்டி சித்ரசாலை, மானக்மஹால் மோத்தி மஹால், பாரிமஹால் என்று பல பகுதிகள். எல்லாம் சலவைக்கல் கட்டிடங்கள். கண்ணாடிகள் பதித்து அலங்காரம் செய்திருக்கின்றனர். அதில் எல்லாம் இன்றைய இந்தியாவின் தேசியப் பறவையாம் மயில் வண்ணத்தோகையை விரித்து ஆடும் காட்சியை வர்ணக் கண்ணாடிகள் மூலம் அமைத்துக் காட்டியிருக்கின்றனர். இது அற்புதமான காட்சியாக இருக்கும். அரண் மனையில் சித்திரங்களுக்கும் குறைவிருக்காது. அரண் மனை பிச்சோலா ஏரிக்கரையில்தான் இருக்கிறது.

ஆதலால் நாம் ஏரிக்கரைக்கே செல்லலாம். இந்த ஏரி மூன்றரை சதுர மைல் பரப்பில் அமைந் திருக்கிறது. முன்னர் பிச்கோலா, ரங்சாகர், ஸ்வரூபசாகர், தூத்தாலை என்னும் நான்கு பகுதிகளாக இருந்து இப்போது எல்லாம் ஒன்றாய்ச் சேர்ந்து பிச்கோலா ஏரி என்ற பெயரால் அழைக்கப்படுகிறது. இதன் தென்வடல் நீளம் மூன்று மைல். கீழ மேல் நீளம் இரண்டு மைல். இந்த ஏரிக் கரையிலிருந்து மேற்கு நோக் கினால் மலைகளும் மரங்களும் பசிய நிறத்தோடு கூடிய ஏரித்தண்ணீரும் நவநவமான கனவுலகத்தையே காட்டும். அன்று அவ்வையார் பாடினார்,

ஆடுங்கடை மணி ஐவேல்
அசதி அணிவரையில்
நீடும் கயற்கண்ணியார்
தந்த ஆசை நிகழ்தரிதால்,
கோடும் குளமும்
குளத்தருகே நிற்கும் குன்றுகளும்
காடும் செடியும்
அவளாகத் தோன்றும் என் கண்களுக்கே

என்ற பாட்டிற்கு ஏற்ப அமைந்த காட்சியாகத் தோன்றும் அந்தக் காட்சி. இந்த ஏரிக் கரையில் நின்று மட்டுமே பார்த்து திருப்தி அடைய முடியாது. அங்கு அந்த ஏரியின் நடுவில் இருக்கும் இரண்டு அரண்மனைகளையும் சென்று காணவேண்டாமா? அங்கு போவதற்கு வசதியான படகுகள் இருக்கின்றன. அந்தப் படகுகளுக்கு கட்டணம் செலுத்தி ஏறிக்கொண்டு ஏரியில் மிதந்து சென்றால்,

சிந்து நதியின் மிசை நிலவினிலே
சேரநன்னாட்டிளம் பெண்களுடனே
சுந்தரத் தெலுங்கினில் பாட்டிசைத்து
தோணிகள் ஓட்டி விளையாடி வருவோம்

என்ற பாடலை நம். வாய் நம்மை அறியாமலே முணு முணுக்கும். படகில் சென்றால் நாம் காண்பது ஜக்மந்திர் ஜக்நிவாஸ் என்னும் இரண்டு அரண்மனைகள். இவை இரண்டில் ஜக்மந்திர் தான் சிறப்பானது. மொகலாய மன்னனான ஷாஜஹான், அவன் தந்தையின் காலத்தே குர்ரம் இளவரசனாக இருந்திருக்கும் போது இங்கு வந்திருக்கிறான். இந்த அரண்மனையில் தங்கி இருக்கிறான். இங்குதான் பின்னர் அவன் தன் மனைவியின் சமாதி மேல் உருவாக்கிய தாஜ்மஹாலின் கரு உருவாகி யிருக்கிறது. உலகப் பிரசித்திப் பெற்ற கனவு மாளிகை தாஜ்மஹால் உருவாவதற்கு இந்த ஜக்மந்திர் கருவாய் அமைந்திருந்தது என்று சொன்னால் அந்த மாளிகையை பற்றி மேலும் சொல்ல வேண்டுமா என்ன? ஜக்நிவாஸ், மகாராணா ஜகத்சிங்—II என்பவரால் பதினெட்டாம் நூற்றாண்டின் முற்பகுதியில் கட்டப்பட்டது என்று சரித்திரம் கூறுகிறது. நாலு ஏக்கர் விஸ்தீரணத்தில் அமைந்த இந்த அரண்மனையின் உத்தியான வனங்களும், வண்ணப் படங்களும், அலங்கார சாமான்களும் மிக மிக அழகாக இருக்கின்றன.

பிச்கோலா ஏரியின் வட புறம் ஒரு பெரிய ஏரி இருக்கிறது. இதனையே பத்தே சாகர் என்கின்றனர். பழைய ஏரியை மகாராஜாபத்தேசிங் புதுப்பித்திருக்கிறார். இதுவும் இரண்டு சதுரமைல் பரந்து கிடக்கிறது. இந்த ஏரியைச் சுற்றி அமைந்திருக்கும் பாதை அழகாக வளைந்து வளைந்து செல்கிறது. இதை ஒட்டியே மலைத் தோட்டம் இருக்கிறது. பூரண நிலவொளியிலே இந்த ஏரியில் படகுகளில் அமர்ந்து உல்லாசமாய்ச் சுற்றி வருவது ஓர் அற்புத அனுபவமாக இருக்கும் என்று தெரிகிறது.

சரிதான்! க்ஷேத்திராடணம் புறப்பட்ட எங்களை ஏதோ ஏரிகளுக்கும் அரண்மனைகளுக்குமே இழுத்து அடித்துக் கொண்டிருக்கிறீரே, இங்கே கோயில்கள் ஒன்றும்

கிடையாதா என்றுதானே கேட்கிறீர்கள். சரி விரைந்தே சென்று ஜகதீசன் கோயிலைக் காண்போம். இக்கோயில் அரண்மனைக்குச் செல்லும் வழியில்தான் இருக்கிறது. எழுபத்தி ஐந்து லட்சம் ரூபாய் செலவில் மகாராணா ஜகத்சிங் என்பவர் 1650-ல் இக்கோயிலைக் கட்டி முடித்திருக்கிறார். இருபத்தி ஐந்து அடி உயரத்தில் உள்ள மாடத்தில் எண்பதடி உயரத்தில் கட்டப் பெற்றிருக்கும் கோயில் அது. முப்பத்திரண்டு படி ஏறியே அம்மாடக் கோயிலுள் நுழையவேண்டும். கோயில் சுவர்களில் எல்லாம் நுணுக்கமான வேலைப்பாடுடன் சிற்ப வடிவங்கள். கோயிலின் கருவறையிலே சதுர்புஜத்தோடு கூடிய மகாவிஷ்ணு, ஜகதீசர் என்ற பெயரோடு நிற்கிறார். ஜகத்சிங் கட்டிய கோயிலில் ஜகதீசன் வந்து குடியேறி இருப்பது பொருத்தம் தானே. இன்னும் இந்த உதயபுரியில் முப்பதுக்கும் மேற்பட்ட சமணக் கோயில்கள் இருக்கின்றன. அவைகளில் இரண்டு பிரசித்தமானவை. ஒன்று சீத்தல் நாதருக்கும் மற்றொன்று வாசுபூஜ்யருக்கும் அமைந்தவை. இவர்கள் இருவருமே மகாவீரரது வடிவங்கள்தாம் என்கின்றனர். பளிங்கு கற்களாலும் வர்ணக் கண்ணாடிகளாலும் அலங்கரிக்கப்பட்டு அழகோடு விளங்குகிறது, இக்கோயில்கள் இரண்டும்.

என்ன இங்கு சிவபெருமானுக்குக் கோயில்களே இல்லையோ என்றுதானே கேட்கிறீர்கள்? சிவபெருமானைக் கண்டு தரிசித்து வணங்கக் கொஞ்சம் வடக்கு நோக்கி செல்லவேண்டும். உதயபுரியிலிருந்து 12 மைல் சென்றால் ஏகலிங்கநாதர் கோயில் வந்து சேருவோம். இந்த ஏகலிங்கநாதர்தான் மகாராணாக்களின் வழிபடு தெய்வம். பலதடவை முகம்மதிய படை எடுப்பிற்கு உட்பட்டிருக்கிறது. இடிக்கப்பட்டிருக்கிறது கடைசியாக மகாராணா பாப்பாராவால் என்பவர் கட்டிமுடித்திருக்கிறார். கோயில் சதுர்முக சிவன் மிக்க அழகாக கருப்புச் சலவைக்கல்லில் உருவாகியிருக்கிறார்.

நாள் முழுவதும் பூசை நடந்து கொண்டே இருக்கிறது என்றாலும், மாலை 7 மணிக்கு நடைபெறும் ஆரத்திக்கே பக்தர்கள் பலர் வருகின்றார்கள். இரண்டு மாடியாக கோயில் அமைந்திருக்கிறது. அதில் கருவறைக்கு மேலே சிகரம் ஓங்கி உயர்ந்திருக்கிறது. ஏகலிங்கரையும் வணங்கிய திருப்தியுடனேயே திரும்பலாம்.

இதே வழியினைத் தொடர்ந்து வடக்கு நோக்கி இன்னும் பதினெட்டு மைல் போனால் நாதத்துவாரம் என்னும் இடத்திற்கு வந்து சேரலாம். இங்கு செல்வதற்கு ரயில்வசதி பஸ்வசதி எல்லாம் உண்டு. இது ஒரு சிறந்த வைஷ்ணவத் தலம், இங்கு கோயில் கொண்டிருப்பவர் ஸ்ரீநாதர். இவர் கரிய வடிவினர். இருந்த கோலத்தில் காட்சி அளிக்கிறார். இவர் பிருந்தாவனத்திலிருந்து வந்த கோவர்த்தனதாரி என்று கதை. நமக்குத்தான் தெரியுமே. நந்தகோபன் மாளிகையில் கண்ணன் வளர்ந்து வந்தபோது கோகுலத்து யாதவர்கள் இந்திரவிழா நடத்தியிருக்கிறார்கள். இந்த விழா முறைப்படி நடக்கவில்லை என்று இந்திரனுக்கு கோபம். அவன் பெருமழை பெய்யும்படி மேகங்களை ஏவியிருக்கிறான். மழையைத் தடுக்கவும் கோகுலத்து யாதவர்களைக் காக்கவும், கண்ணன் கோவர்த்தன மலையையே குடையாகத் தூக்கிப் பிடித்திருக்கிறான். அந்த கோவர்த்தனனையே பிருந்தாவனத்திலிருந்து ஸ்ரீவல்லிபாச்சாரியார் மேவாருக்கு கொண்டு வந்திருக்கிறார். வருகிற வழியில் சின்ஹாத் என்ற பழைய ஊரில் கோவர்த்தனன் வந்த வண்டி நின்று விட்டது. ஆதலால் அங்கேயே கோவர்த்தனனை ஸ்ரீநாதர் என்ற பெயரில் வல்லபாச்சாரியார் பிரதிஷ்டை செய்திருக்கிறார். அந்த இடமே நாதத்துவாரம். நாதத்துவாரம் என்றால் ஸ்ரீநாதர்கோயில் செல்லும் வாயில் என்றுதான் அர்த்தம். இங்கு ஸ்ரீவல்லபாசாரியார் பூஜை முறைகளை ஒழுங்கு செய்திருக்கிறார். அவருடைய சந்ததியார் இன்றும் கோயிலில் ஆதிக்கம் செலுத்திக்

கொண்டிருக்கின்றனர். கோயிலிலே பிருந்தாவனத்து கோவர்த்தனனை ஸ்ரீவல்லபர் நாதத் துவாரத்தில் பிரதிஷ்டை செய்யும் சித்திரம் அழகாகத் தீட்டப்பட்டிருக்கிறது.

இன்னும் காலமும் வசதியும் உள்ளவர்கள் இங்கிருந்து கங்ரோலி செல்லலாம். அங்கிருந்து சதுர்புஜர் ரிஷபதேவர் முதலியவர்களை வணங்கித் திரும்பலாம். திரும்பும்போது உதயபுரிக்கு திரும்பவும் எப்போது வர முடிகிறதோ என்று ஏங்கிய வண்ணமே திரும்புவோம். அத்தனை அழகிய நகரம் அது. 'ரமணீயம்' என்ற வார்த்தையின் பொருள் அறிய ஒரு நடையே போகலாம் அங்கே.

# 37. சித்தூர் கோட்டையில் மீரா கோயில்

சமீபத்தில் அனைத்திந்திய தமிழ் எழுத்தாளர் பெரு மன்றத்தின் மகாநாடு ஒன்று நடந்தது. அதில் ஒரு பட்டி மன்றம் கூடி விவாதித்த பொருள் இலக்கியத்திற்கு ஆக்கம் தருவது காதலா? வீரமா? என்று விவாதித்தவர்கள் எல்லாம் ஆங்கில இலக்கியம், சமஸ்கிருத இலக்கியம் தமிழ் இலக்கியங்களிலிருந்து பலசான்று காட்டி தங்கள் தங்கள் கட்சிக்கு ஆதரவு தேடினர். கடைசியில் இலக்கியத் திற்கு மிகவும் ஆக்கம் தருவது காதலே என்று தீர்ப்புக் கூறப்பட்டது. அதற்குச் சான்றாக பாரதியார் பாடிய

காற்றிலேறி
விண்ணையும் சாடுவோம்
கர்தற்பெண்கள்
கடைக்கண் பணியிலே

என்று ஆதாரம் காட்டப்பட்டது. ஆனால் எனக்கு இந்த வடநாட்டு யாத்திரையில் ஒரு ஊருக்குச் சென்றதும், அந்த ஊரின் புகழை எப்படி காதலும் வீரமும் கலந்து பரிமளிக்கச் செய்திருக்கின்றன என்று எண்ணத் தோன்றிற்று. அந்த நகரம்தான் ராஜஸ்தானத்தில் உள்ள சித்தூர். அங்குள்ள மீவார் ராணாக்களும் அவர்களது படை வீரர்களான ராஜபுத்ர வீரர்களும் நாட்டைக் காக்க எத்தகைய போர் புரிந்திருக்கிறார்கள், அங்கிருந்த ராணிபத்மினியின் அழகை அலாவுதின் கில்ஜி என்பவன் கண்ணாடியில் கண்டு மோகித்து அவளை அடைய படையெடுத்து வந்து போர் புரிந்ததும், அந்தப் போரில் ராணுவம் கோட்டையையும் வீழ்த்திவிட, ராணிபத்மினி மற்றைய ராஜபுத்திர பெண் மணிகளும் எப்படித் தீப்பாய்ந்து வீரமரணம் எய்தினார்கள் என்பவையெல்லாம் நமக்குத் தெரிந்தவைதான். இன்னும்

சிறப்பாக, இதுதானே வடநாட்டு ஆண்டாள் எனப்படும் மீரா கிரிதர கோபாலனின் பேரில் தீராத காதல் கொண்டு அவனையே கணவனாக அடைந்து அவனுடன் இரண்டரக் கலந்ததும் இங்குதான் என்று அறிகிறபோது நம் மெய் சிலிர்க்கிறது. ஆம் பல வருஷங்களுக்கு முன் கோகில கான ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி அவர்கள் பக்த மீராவாக திரைப்படத்தில் நடித்தபோது பாடிய பாடல்கள் எல்லாம் நம் காதில் ஒலிக்கத் தொடங்கி விடுகிறது:

கிரிதர கோபாலா-பாலா
ச்யாமள சரீரகௌஸ்துபஹாரா
பீதாம்பரதர பிரபோ முராரே
நந்த குமாரா மனமோகன கள
பிருந்தாவனசா துளசீஹாரா
கிரிதர கோபாலா கம்ஸவிதாரா
மீராமாஸை ஸரோ விஹாரா

என்ற மீரா பஜன் பாடல்கள் எல்லாம் எழுந்த மண்ணல்லவா இந்த சித்தூர் கோட்டை. அந்த சித்தூர் கோட்டைக்குச் செல்கிறோம் நாம் இன்று.

சித்தூர் கோட்டை செல்வதற்கு பம்பாயிலிருந்து டில்லி செல்லும் ரயிலில் ஏறி ரட்லம் ஜங்ஷனில் இறங்கி அங்கிருந்து ஆஜ்மீர் செல்லும் ரயிலில் ஏறவேண்டும். நடுவழியில் சித்தூர்கர் என்ற ஸ்டேஷனிலே இறங்க வேண்டும். ரோடு மார்க்கமாகச் சென்றால் உதயப்பூர் போய் அங்கிருந்து எழுபது மைல் வட கிழக்காக வர வேண்டும். சித்தூர் ஸ்டேஷனிலிருந்து இரண்டு மைல் தூரத்தில் சித்தூர் கோட்டை இருக்கிறது. அக்கோட்டை, பக்கத்தில் உள்ள நிலப்பரப்பைவிட 500 அடி உயரமுள்ள ஒரு குன்றின் மேல் கட்டப்பட்டிருக்கிறது. அது தென் வடலாய் மூன்றரை மைல் நீளமும் கிழமேலாய் அரை மைல் அகலமும் உள்ள இடத்தில் இருக்கிறது. கோட்டை சூழ்ந்திருக்கும் இடம் 700 ஏக்கர் விஸ்தீரணம் எனக்

கணக்கிட்டிருக்கிறார்கள். கோட்டை மதில்சுவர் 8 மைல் சுற்றளவுடன் இருக்கிறது. கோட்டையைச் சுற்றிக் காடுகளும் கோட்டைக்குள் பல பல அரண்மனைகளும் ஏரிகளும், கோயில்களும் சிகரங்களும் உண்டு. அவைகளில் பல பாழடைந்தே கிடக்கின்றன. கோட்டைக்கு வளைந்து வளைந்து செல்லும் பாதை உண்டு. மலையடிவாரத் திலிருந்து ஒருமைல் வளைந்து வளைந்து சென்றால்தான் கோட்டையை அடையலாம். கோட்டைக்கு ஏழு வாயில்கள் இருக்கின்றன. ஒவ்வொன்றும் கம்பீரமாய் உயர்ந்திருக்கிறது. செல்லும் வழியில் உள்ள முதல் வாயிலை பாதல்போல் என்கின்றனர். அங்குதான் மகாராணா மிகுல் என்பவரின் பேரன் பரக்சிங் என்பவர் 1535-ல் குஜராத்தின் சுல்தான் பஹதூர் ஷா முற்றுகை இட்டபோது கொல்லப்பட்டார் என்று குறித்திருக் கிறார்கள். இப்படியே ஒவ்வொரு வாயிலும் ஒவ்வொரு வீரராஜபுத்திரனது மரணத்தின் ஞாபகச் சின்னமாகவே இருக்கிறது. கோட்டையில் பிரதான வாயிலான ராம்போல் சிறந்த வேலைப்பாடுடையது. முழுவதும் நன்கு செதுக்கிய கற்கள் கொண்டு கட்டப்பட்டது. இந்த வாயிலைக் கடந்து கோட்டைக்குள் நுழையுமுன், இந்த கோட்டையின் வரலாற்றைக் கொஞ்சம் தெரிந்து கொள்ளலாம். இக்கோட்டையை ஏழாம் நூற்றாண்டில் மோரிராஜபுத்திரர்கள் தலைவனான சித்ராங்கதன் கட்டி யிருக்கிறான். அதனைச் சித்ரகூடம் என்றே அழைத்திருக் கிறான். அந்தப் பெயரே சித்தூர் என்று குறுகி வழங்கி வந்திருக்கிறது. இந்தக் கோட்டையிலிருந்தே சிஸோதயா ராஜபுத்திரர்கள் பதினாறாம் நூற்றாண்டு வரை ஆண்டு வந்திருக்கிறார்கள். அதன்பின் ராணா உதயசிங் உதயப்பூரை உருவாக்கி, தன் தலைநகராக அதனை ஆக்கியிருக்கிறான்.

சித்தூர் கோட்டையிலிருந்து அரசாண்ட பெருமக்களுள் மூவர் குறிப்பிடத்தக்கவர்கள். அவர்களே மகாராணா

கும்பா, மகாராணா சங்கிரமசிங், மகாராணா பிரதாப் அவர்களது வீரதீரச் செயல்களும் புகழும் சரித்திர ஏடுகளில் ஏறி நிற்கின்றன. இக்கோட்டையின் முதல் முற்றுகை 1303-ல் என்று சரித்திரம் கூறுகிறது. அலாவுதீன் கில்ஜீ படையெடுத்து வந்து கோட்டையைக் கைப்பற்றி ராஜ புத்திர மன்னர் ராவல் ரத்தன்சிங் என்பவனைக் கைது செய்து போயிருக்கிறான். அந்த ராஜபுத்திரமன்னன் மனைவிதான். புகழ்பெற்ற சித்தூர் ராணி பத்மினி. அவனு டைய சூழ்ச்சியினாலும் கோரா, பாடல் என்ற இரண்டு வீரர்களது திறமையினாலும் மன்னனை சிறைமீட்டிருக் கிறார்கள். இந்தப் பத்மினியின் அழகைக் கண்ணாடியில் கண்டே அலாவுதீன் கில்ஜி சித்தூர் கோட்டை மீது படை எடுத்தான் என்பது வரலாறு. கில்ஜியின் அடுத்த தாக்குதலில் கோட்டை தகர்ந்து விடுகிறது. ராஜபுத்திரர் கள் எல்லாம் போரிட்டு போர்க்களத்தில் மடிந்து விடு கின்றனர். ராணி பத்மினியும் மற்றைய ராஜபுத்திரப் பெண்மணிகளும் தீக்குளித்து வீரமரணம் எய்தி தங்கள் மானத்தையும் புகழையும் காப்பாற்றிக் கொண்டிருக் கின்றனர்.

பின்னர் அலாவுதீனது பிரதிநிதியைத் தோற்கடித்து ராணா ஹமீர் என்பவன் சித்தூர் கோட்டையைக் கைப் பற்றுகிறான். இவன் வழி வந்த ராணா கும்பாவின் காலத்தில்தான் சித்தூர் பழையபடியும் பெருமை அடை கிறது. அவன் கோட்டையைப் பலப்படுத்தினான். பல கட்டிடங்களைக் கட்டினான். மால்வா, குஜராத் முதலிய இடங்களிலிருந்து ஆண்ட முகம்மதிய மன்னர்களை எல் லாம் வென்று அந்த வெற்றியின் சின்னமாகவே ஜயஸ் தம்பம் ஒன்றையும் கட்டி வைத்தான். அந்த ராணாகும்பா சகலகலா வல்லவன். கவிதையும், கலையும் இவன் காலத் தில் ஆக்கம்பெற்றன. இவனே ஜயதேவரது கீதகோவிந் தத்தை மொழி பெயர்த்திருக்கிறான்.

இவன் பின் வந்த வீர ராஜபுத்திர மன்னரே மகாராணா சங்கரம் சிங். இவனே சுருக்கமாக ராணா

சங்கா என்று அழைக்கப்பட்டான். இவன் காலத்தில்தான் மேவார் ராஜ்யம் பெரும் புகழ் எய்தியது. பதினெட்டுப் போர்களங்களில் வெற்றி கண்டவீரன் என்று இவன் புகழ் பேசப்படுகிறது. இந்த வீரனுமே 1527-ல் மொகலாய மன்னர் பாபரால் முறியடிக்கப்படுகிறான். அதனால் மனம் உடைந்து சாகிறான். இன்னும் சில வருஷங்களில், இங்கிருந்து ஆண்ட விக்ரமாதித்யன் என்பவனும் குஜராத் சுல்தான் பஹதூர் ஷாவினால் முறியடிக்கப்படுகிறான். இந்தப் படையெடுப்பில் ராஜபுத்திரப் படைகளை மன்னனது தாயாரான ஜவஹிர்பாய் என்பவளே முன்னின்று நடத்தியிருக்கிறாள். இப்போர் முடிய முன்னேயே ராணா சங்காவின் மனைவியான ராணி கர்ணாவதி தேவியும் மற்றவர்களும் தீக்குளித்து ஜௌஹர்' நடத்திவிடுகின்றனர். ஆம் ராஜபுத்திரப் பெண்மணிகள் தீக்குளிப்பதையே 'ஜௌஹர்' என்று சரித்திர ஏடுகள் பேசுகின்றன.

மொகலாய மன்னன் அக்பர் காலத்தில்தான் 1567-ல் சித்தூர் கோட்டை கடைசியாக முற்றுகை இடப்படுகிறது. இப்போரில்தான் ராஜபுத்திர மன்னர்களால் ஜெய்மாலும், பத்தாவும் வீரமரணம் எய்துகின்றனர். பெண்மணிகளும் 'ஜெஹெர்' நடத்தி விடுகின்றனர். ஜெய்மால், பட்டா என்னும் இரண்டு வீரர்களின் வீரத்தை மெச்சி அவர்களது வடிவைச் சிலைகளாக வடித்து ஆக்ராவிலே தன்னுடைய கோட்டை வாயில் யானைகளின் மேல் ஏற்றிவைத்து அக்பர் கௌரவித்திருக்கிறார். இதன் பின் தான் மகாராணா பிரதாப் அரியணை ஏறி அக்பரோடு பல தடவை போரிட்டிருக்கிறார். கடைசியில் தன் அருமந்த குதிரை சட்டாக்குடன் ஓடி காடுகளில் இருந்து அக்பருக்கு ஓயாத தொல்லை கொடுத்திருக்கிறான். மகாராணா பிரதாப்பின் வீரத்தை தாட் முதலிய ஆங்கில சரித்திர ஆசிரியர்கள் சொல்லிச் சொல்லி மகிழ்கிறார்கள்.

இக்கோட்டைக்குள் நாம் காணவேண்டிய நிறைவுச் சின்னங்கள் இரண்டு, ஒன்று கீர்த்தி ஸ்தம்பம், மற்றொன்று

ஜயஸ்தம்பம். இவ்விரண்டில் காலத்தால் முந்தியது கீர்த்தி ஸ்தம்பமே. அது கோட்டையின் கீழ்மதில் சுவர்பக்கம் இருக்கிறது. இந்த ஸ்தம்பம் பன்னிரண்டாம் நூற்றாண்டில் ஜீஜா என்னும் சமணவர்த்தகர் ஒருவரால் கட்டப்பட்டிருக்கிறது. அடித்தளத்தில் முப்பது அடி குறுக்களவு உள்ளதாகவும் 75 அடி உயரமுள்ளதாகவும் இருக்கிறது. அதன் உச்சிக்கு ஏற உள்ளேயே படிகட்டுக்கள் இருக்கின்றன. ஐந்து மாடிகள் உடையதாய் இந்த ஸ்தம்பம் நிற்கிறது. சமண சமயத்தின் இருப்பத்திநாலு தீர்த்தங்கரர்களில் முதல் தீர்த்தங்கரரான ஆதிநாதருக்கு என இந்த ஸ்தம்பம் கட்டப்பட்டிருக்கிறது. இந்த ஸ்தம்ப திகம்பர சமணர்களுடையது என்று தெரிகிறது. அதற்கு ஏற்பவே சிற்ப வடிவங்களும், வேலைப்பாடுகள் நிறைந்து இருக்கின்றன. இதற்குப் பக்கத்திலேயே சமணர் கோயில் ஒன்று இடிந்து கிடக்கிறது. அங்கும் சமண மதத்தைச் சேர்ந்த தேவ தேவியர் வடிவங்கள் இருக்கின்றன. ஜயஸ்தம்பம் ராணா கும்பா என்பவர் மாவாநாட்டு மகம்மது கில்ஜி என்பவனை வெற்றி கண்டதற்காக 1460-ம் எழுப்பப்பட்ட சின்னம் இது. இதுவும் கீர்த்தி ஸ்தம்பத்தைப் போன்றதே. அடித்தளத்தின் குறுக்களவு 47 அடி. ஒன்பது மாடிகள் கொண்டதாய் 122 அடி உயரமாக அமைந்திருக்கிறது. இந்த சமயத்து தெய்வவடிவங்களை சிற்பவடிவில் ஏந்தி நிற்கிறது. எல்லாம் அந்தத் சித்திரத்தில் (bas relief) செய்யப்பட்ட சிற்பவடிவங்களாகவே இருக்கும்.

ராணா கும்பாவின் அரண்மனை இடிந்து கிடக்கிறது. ஆனால் அது ராஜபுத்திரர் கட்டிடக்கலைக்கு ஒரு சிறந்த எடுத்துக்காட்டாக விளங்குகிறது. யானை கட்டும் தறி, வரவேற்புக்கூடம் சூரிய நமஸ்காரத்திற்கு என்று அமைந்த விதானம் என்றெல்லாம் அரண்மனைப் பகுதிகள் அழகழகாய் இருக்கின்றன. பூமிக்கடியிலும் நிலவறைகளை அமைத்து கட்டிய கட்டிடம் அது. அந்த நிலவறைகளில் ஒன்றில்தான் முதல் முதல் 'ஜௌஹர்' நடந்திருக்கும்

என்று எண்ண வேண்டியிருக்கிறது. ராணி பத்மினியின் அரண்மனை மிகப்பெரிய கட்டிடம். ஒரு குளக்கரையில் இருக்கிறது. ஒரு கட்டிடம் ராணியின் வசந்த மண்டபமாக இருந்திருக்கிறது. இந்த அரண்மனையில்தான் அலாவுதீன் கில்ஜி ராணியின் அழகை ஒரு கண்ணாடியில் கண்டு மகிழ்ந்திருக்கிறான். ராணி பத்மினியின் கணவர் ராவல் ரத்தன்சிங் என்பவரது அரண்மனையும், ஜெய்மால், பட்டா என்ற மாவீரர்களின் வீடுகளும் உருத்தெரியாமல் அழிந்து கிடக்கின்றன.

என்ன, இங்கே கோயில்களே கிடையாதா என்று தானே கேட்கிறீர்கள்? சரித்திரப் பிரசித்தியும், கலைப் பிரசித்தியும் உடைய கோயில்கள் பல இங்கு இருக்கின்றன. ஸ்ரீ நகர் சௌரி என்பது ஒரு சமணக் கோயில், பதினாறாவது தீர்த்தங்கரரான சாந்தி நாதருக்கு எனக் கட்டப்பட்ட கோயில் அது. கும்பாராணாவின் கஜான்ஜி ஒருவரது திருக்குமாரன் வெங்கா என்பவன் 1448-ல் கட்டினான் என்று கல்வெட்டு ஒன்று கூறுகிறது. வெளிச் சுவர் முழுவதும் சிற்பவடிவங்கள் நிறைந்து, இது ஓர் அழகிய கலைக்கோயில் என்று பறைசாற்றிக் கொண்டிருக்கிறது. இன்னும் சத்பீஸ் தோரர் என்னும் 27 கோயில்கள் சமணர் கோயில்களே. எல்லா இடத்தும் சிற்பங்கள் நிறைந்திருக்கின்றன. இங்குள்ள சிவன் கோயில்களில் சிறப்பானது ஜண்டா சங்கர் கோயில் தான். ஒரு பெரிய டோமோடு கூடிய விதானம் இருக்கிறது இங்கே. அங்கும் நிறைய சிற்பவடிவங்கள் உண்டு. சங்கரர் மூலத்தானத்தில் கோயில் கொண்டிருக்கிறார். சாமி தேஸ்வாரா மகா தேவருக்கு என்று ஒரு கோயில். இதை மாளவநாட்டு போஜராஜன் கட்டியிருக்கிறான். 1428-ல் ராணா மொகல் என்பவன் பழுது பார்த்திருக்கிறான். குஜராத்தில் இருந்த சாளுக்கிய மன்னன் குமாரபால் சித்தூர் வந்து வெற்றி கண்ட விவரம் கல்வெட்டில் குறிக்கப்பட்டிருக்கிறது. இன்னும் ஆதியில் சூரியனார் கோயிலாக இருந்து காலாக

மாதா காளி கோயிலாக மாறி இருக்கும், கோயில் ஒன்றும் உண்டு. இதுவும் பழைய கோயில்தான். எட்டாம் நூற்றாண்டிலேயே கட்டப் பெற்றிருக்கின்றன. இக் கோயில் இன்று இடிந்து கிடந்தாலும் அங்குள்ள பிரதக்ஷிண பாதையிலும், மண்டபத்திலும் உள்ள சிற்ப வடிவங்கள் அழியாப் புகழுடையனவாக இருக்கின்றன. ஜய ஸ்தம்பம் பக்கத்தில் கும்பஸ்யாம் என்று கோயில் இருக்கிறது. அங்குள்ள மூல மூர்த்தி வராகர், இதனை ராணா கும்பா 1448-ல் கட்டியிருக்கிறார். இக்கோயில் வாயிலில் ஒரு பெரிய கருடனது சிலை வேறு இருக்கிறது. இக்கோயிலில் பக்கத்திலேதான் மீராபாய் வணங்கிய கண்ணன் கோயில் இருக்கிறது. உயர்ந்த சிகரத்தோடு கூடிய பெரிய கோயில் அது. இங்கு ஒரு பெரிய மண்டபம் இருக்கிறது. அதைத் தாங்கி நிற்கும் தூண்கள் எல்லாம் சிறந்த வேலைப்பாடு உடையவை. கருவறையை சுற்றி ஒரு பிரதக்ஷிண பாதை. இக்கோயிலின் பக்கத்திலேயே மீராவின் சரித்திரத்தோடு ஒட்டிய வேறு ஒரு சிறிய கோயிலும் இருக்கிறது.

மீராவின் கதை நமக்குத் தெரியும். ராவ்ரத்தன் சிங்கின் மகளாய் பிறந்து குன்வர் போஜராஜனை மணக்கிறாள். இந்த போஜராஜன்தான் மகாராணா சங்காரம் சிங்கின் மூத்தமகன். ஆனால் மீரா இளமையிலேயே நீலநிறத்துப் பாலகனான கண்ணனிடம் உள்ளம் பறிக் கொடுத்து நின்றிருக்கிறாள். ஆதலால் தன் கணவருடன் அதிகம் ஒட்டவில்லை. கடைசியில் கண்ணனையே காதலனாக அடைகிறாள். துவாரகை சென்று அவன் திருவடிகளில் கலந்தும் விடுகிறாள். மீரா பாடிய பஜன் பாடல்கள் எல்லாம் இந்த கோபாலனைப் பற்றிய பாடல் களாகவே இருக்கும். அவை வடநாட்டில் பிரசித்த மானவை. மீராவின் பாடல்கள் சிலவற்றை தமிழில் கவிமணி தேசிக விநாயகம் பிள்ளையவர்களும் மொழி பெயர்த்துத் தந்திருக்கிறார்கள்.

என்றுமே கிரிதரனை அன்றி
    வேறிங்கு ஏதுமொரு துணை அறியேன்
குன்றுயர்ந்த கோமானே வணங்கும்
    தெய்வம், குலப்பெருமை குடிப்பெருமை
எல்லாம் விட்டேன்
    நன்று தரு திருக்கூட்டம் நாடிச்
சார்ந்தேன் நாண் இழந்தேன்
    எவரையும் நான் மதிக்க மாட்டேன்
துன்று கண்ணீர் விட்டன்பு
    கொடி வளர்த்தேன் சுகமென்னும்
கனியை அது தந்ததம்மா.

என்ற மீராவின் பாடல்தான் அவளது மனப் பக்குவத்தை எவ்வளவு சிறப்பாகக் காட்டுகிறது. சித்தூர் சென்றபோது மீரா வணங்கிய கோபாலன் முன்பு இப்பாடலைப் பாடியே திரும்பலாம்தானே.

# 38. உஜ்ஜயினி மகாகாலர்

"அகோ! வாரும் பிள்ளாய், மகாராஜாதி ராஜனான விக்கிரமாதித்யனும், அவனது மதியூகி மந்திரியுமான பட்டியும் இரண்டாயிர வருஷகாலம் இருந்து அரசாண்ட உஜ்ஜயினிப்பட்டணம் இதுதான். இங்கு தான் பொன்னாலும் மணியாலும், முத்தாலும், பவளத்தாலும் அலங்கரிக்கப்பட்டதும், முப்பத்திரண்டு மோகப்பதுமைகளால் சிறப்பிக்கப்பட்டதுமான அரியாசனம் இருக்கிறது. அந்த அரியாசனத்திலிருந்துதான் குறைவற்ற புகழ் உள்ள குணாளன், காடாறுமாதம் நாடாறு மாதம் என இருந்து நாடுகாத்த கோமகன், நான்கு வேதம் ஆறு சாஸ்திரம், பதினான்கு புராணம், அறுபத்தி நான்கு கலைகள் தொன்னூற்றாறு தத்துவங்கள் எல்லாவற்றையும் கற்றுணர்ந்த மேதை. கூடுவிட்டுக் கூடுபாயும் வித்தை, இந்திராஜாலம் மகேந்திரஜாலம் முதலிய ஜால வித்தைகள், காயசித்தி, அட்டமாசித்தி முதலிய சித்தி வித்தைகளை எல்லாம் கற்று, ஐம்பத்தாறு தேச ராஜாக்களையும் அடிமை கொண்டு வாழ்ந்த விக்கிரமாதித்யனைக் காணவா வருகிறாய்? அந்த மகாராஜனைப் பார்ப்பதற்கு முன் என்னை அறிமுகம் செய்து கொள்ள வேண்டாமா?" என்று கேட்டுக் கொண்டே வேதாளம் ஒன்று என் முன் வந்தது. "என்னையா? கனவு கண்டீரா? அல்லது புத்திக் கோளாறா?" என்று தானே நினைக்கிறீர்கள். இல்லை நல்ல நினைவோடேயே தான் சொல்கிறேன். என்னை மட்டுமல்ல, இந்த உஜ்ஜயினிப்பட்டணம் செல்லும் அன்பர்களை எல்லாம் இப்படித்தான் வேதாளம் வரவேற்கும் கற்பனை உலகத்தில் தான். ஆம், அந்த விக்ரமாதித்தன், பட்டி, வேதாளம் எல்லாம் இருந்து அரசாண்ட உஜ்ஜயினி பட்டணத்திற்கே செல்கிறோம் நாம் இன்று.

உஜ்ஜயினி செல்வதற்கு, பம்பாயிலிருந்து ஆக்ரா செல்லும் ரயிலில் ஏற வேண்டும். நாக்டா ஜங்ஷனில் இறங்கி ரயில் மாறி உஜ்ஜயினி சென்று சேரலாம். இல்லை சென்னையிலிருந்தே புறப்படுவதானால் டில்லி செல்லும் கிராண்ட் டிரங்க் எக்ஸ்பிரஸ்ஸில் ஏறி போபபால் ஜங்ஷனில் இறங்கி வண்டி மாறி உஜ்ஜயினி சென்று சேர லாம். இல்லை காரிலேயே வட இந்தியா சுற்றுப் பிரயாணம் செய்பவர்களாக இருந்தால், அஜந்தாவிலிருந்து ஜால்கன் போய், அங்கிருந்து இந்தோர் வந்து, அங்கு ஓரிரவு தங்கி சிரமபரிகாரம் செய்து கொண்டு அங்கிருந்து காரிலேயே நேர் வடக்கே முப்பத்தி மூன்று மைல் சென் றாலும் உஜ்ஜயினில் வந்து சேரலாம்.

உஜ்ஜயினி ஒரு பெரிய நகரம். அதன் ஜனத்தொகை ஆறுலட்சம். இன்று பொலிவிழந்திருந்தாலும், அன்று மிகவும் பிரசித்தி அடைந்த பட்டணமாக அல்லவா இருந் திருக்கிறது. இந் நகரின் சரித்திர ஏடுகளைப் புரட்டினால் எத்தனை எத்தனை கதைகளையோ அவை கூறும். விக்கிரமாதித்தன் காலத்தில் மாளவ நாட்டின் தலை நகராக விளங்கியிருக்கிறது. கி. மு. 6 முதல் 4—ம் நூற்றாண்டுவரை, கிட்டத்தட்ட இரண்டாயிரத்து ஐநூறு வருஷங்களுக்கு முன், இது அவந்தி நாட்டின் தலை நகராக இருந்திருக்கிறது. வடமொழி இலக்கியங்களிலும், தமிழ்க் காப்பியங்களான சிலப்பதிகாரம், யசோதர காவியம், உதயணன் பெருங்கதை என்னும் நூல்களிலும் இந் நகர வர்ணனை காணப்படுகிறது. பெருங்கதையில் பிரச்சோதனனுடைய ராஜ தானியாக இந்த அவந்தி கூறப் படுகிறது. இங்கு நடந்த நீர் விழாவை பெருங்கதை சிறப் பாகக் கூறுகிறது, உதயணன் வஞ்சனையால் சிறையி லிருந்தது முதலாக, வாசவதத்தையை யானை மீது ஏற்றிக் கொண்டு சென்றது வரையில் உள்ள நிகழ்ச்சிகள் எல்லாம் இங்கு தான் நடந்திருக்கின்றன. படை முதலிய அரண் களாலும், சிற்ப செல்வர்களாலும் செல்வ நிறைவினாலும்

மேம்பட்டிருந்தது என்றும், அகநகர் புறநகர் என்று இரண்டு பிரிவாக இந்நகர் இருந்ததென்றும் இந் நகர மக்கள் முருகக் கடவுளை வழிபட்டார்கள் என்றும் பெருங் கதை கூறுகிறது.

ஆனால் இன்றோ தெருக்கள் எல்லாம் அசுத்தமாயும், வீடுகள் எல்லாம் பொலிவிழந்துமே காணப்படுகின்றன. நாம் இங்கு வந்தது தெருக்களையும் வீடுகளையும் மக்களையும் காண்பதற்கல்லவே. முத்தி தரும் நகரங்கள் எழில் அவந்தியும் ஒன்று, என்று படித்திருக்கிறோமே. ஆதலால் இங்குள்ள கோயில்களைக் காண அல்லவா வந்திருக்கிறோம். ஆகவே, காரை நேரே மேற்கு நோக்கிச் செலுத்தி, உஜ்ஜயினி மகாகாலர் கோயில் வாயிலுக்கே செல்லலாம். விக்கிரமாதித்தன் கதையில் விக்ரமாதித்தனுக்கு அருள் புரிந்தவள் ஒரு மகாகாளி என்று படித்திருக்கிறோம். அத்துடன் எங்கள் திருநெல்வேலியில் உச்சினி மாகாளி என்னும் காளி கோயில் ஒன்றும் எங்கள் தெருவை அடுத்து இருக்கிறது. ஆதலால் உஜ்ஜயினியின் பிரதான தெய்வம் காளி என்றே எண்ணிக் கொண்டிருந்தேன். ஆனால் அங்கு சென்று பார்த்தால், அந்நகரின் பிரதான தெய்வம் மகா காலேஸ்வரர்தான் என்று காண்போம். ஆகவே நாம் முதலில் அம்மகாகாலர் கோயிலுக்கே செல்லலாம். கோயில் விஸ்தாரமான வெளிப் பிரகாரத்துடன் அமைந்த பெரிய கோயில் தான். கோயிலின் பிரதான வாயில் வடக்கு நோக்கி இருக்கிறது. அதில் நுழைந்ததும் ஒரு பெரிய வராந்தா இருக்கிறது. அங்கு தான் ஆதிக்கோயிலின் சிதைந்த சிற்பங்கள் பலவும் சேகரித்து வைக்கப்பட்டிருக்கின்றன. எல்லாம் கல்லில் செதுக்கிய சிற்பங்கள், கையிழந்தும்' காலிழந்தும், தலையிழந்தும் கிடக்கும். இடையிடையே ஒன்றிரண்டு சிதையாமலும், முழு வடிவுடனும் இருக்கும். இச் சிற்ப வடிவங்கள் சிறந்த அழகு வாய்ந்தவை என்று கூற இயலாது. ஆதலால் விறு விறு என்று சுற்றிப் பார்த்துவிட்டு

கோயிலுக்கு நடுநாயகமாக இருக்கும் மகாகாலர் சந்நிதிக்கே வந்து சேரலாம். இங்கு கோயில் வாயிலில் நீலகண்டேஸ்வரர் இருக்கிறார். இம்மகா காலர் கோயில் இந்தியாவில் உள்ள பன்னிரண்டு ஜோதிர்லிங்களில் ஒன்று. இக்கோயில் ஐந்து அடுக்குகள் கொண்டது. மூன்று அடுக்கு களில் மூன்று லிங்க வடிவங்கள் இருக்கின்றன. பூமி மட்டத் திற்கு அடியில் இருப்பவர்தான் மகாகாலர். அவரே ஜோதிர்லிங்கம். படிகளின் வழியாக இறங்கியே அவர் சந்நிதிக்குச் செல்லவேண்டும். அங்கு எப்போதும் இருள் சூழ்ந்திருப்பதால் விளக்கு எரிந்தபடியே இருக்கும். அந்த மகாகாலர் வழிபாட்டில் ஓர் அதிசயம். அவருக்குச் சமர்ப் பித்த எந்தப் பொருளும் நிர்மால்யம் ஆவதில்லை. அவற்றை எடுத்து திரும்பவும் அவருக்கே சமர்ப்பிக்கலாம். நாம் பூமாலை வாங்கிச் சென்றிருந்தால் அதை அவருக்கு அணிவித்து கற்பூர ஆரத்தி பண்ணி வணங்கிவிட்டு திரும் பலாம். அவருக்கு மேலே பூமி மட்டத்திலேயே இருப்பவர் தான், ஓம்காரேஸ்வரர். அவருக்கு மேலே மூன்றாவது மாடியில் இருப்பவர்தான் தாரகேஸ்வரர், எல்லோரும் லிங்கத்திருவுருவிலேயே இருக்கிறார்கள். இந்த மகாகாலர் இங்கு கோயில் கொண்டிருப்பதற்கு ஒரு கதை உண்டு. ஆதியில் அவந்தி நகரில் ஒரு அந்தணர் ஒருவர் இருந்திருக் கிறார். பக்கத்தில் உள்ள மலைப்பிரதேசத்தில் தூஷணன் என்று ஒரு வேதாளம் இருந்திருக்கிறது. அது மக்களை மிகவும் துன்பப்படுத்தியிருக்கிறது. மக்கள் எல்லாம் அங்கி ருந்த அந்தணரிடம் வந்து முறையிட்டிருக்கின்றனர். அந்தணர் ஒரு பெரிய யாகம் ஒன்றைச் செய்து சிவனை நினைந்து வணங்கியிருக்கிறார். அவரது தபோவனத்தில் பூமியே வெடித்து மகாகாலர் தோன்றியிருக்கிறார். தூஷணன் என்னும் வேதாளத்தையும் வதம் செய்திருக் கிறார். பின்னர் அந்த அந்தணர் வேண்டிக் கொண்ட படியே அங்கேயே கோயில் கொண்டிருக்கிறார். பூமி வெடித்து தோன்றியவராதலினால்தான் அவர் இன்னும் பூமிக்கடியிலேயே வாழ்ந்து வருகிறார். இம்மாகாகாலர்

கோயிலுக்குத்தென்புறம் ஒரு குளம் இருக்கிறது. நல்ல படிக் கட்டுக்கள் எல்லாம் கட்டி வைத்திருந்தாலும், தண்ணீர் சுத்தமாகயில்லை. பாசிபிடித்தே கிடக்கிறது. இதனையே கோடி தீர்த்தக் குளம் என்கின்றனர். இந்தத்தீர்த்த மகிமையைப்பற்றியும் ஒரு கதை. இராவணனை வதம் முடித்து அயோத்தி திரும்பிய ராமனுக்கு பட்டாபிஷேக ஏற் பாடுகள் நடக்கின்றன. சப்த தீர்த்தங்களிலிருந்தும் தீர்த்தம் கொண்டுவரும் பணியை அனுமானிடம் ஒப்புவிக்கிறார்கள். அவந்தியில் உள்ள சிப்ரா நதியின் தீர்த்தத்தை எடுக்க வரு கிறான். அந்த ஆற்றங்கரையில் காகபுஷண்டரிஷி என்பவர் தவம் செய்து கொண்டிருக்கிறார். அனுமானது வரவால் அவரது தவம் கலைகிறது. அவரது தவ வலிமையால் இங் குள்ள தீர்த்தத்தை எடுத்துச் செல்ல இயலவில்லை அனுமா னுக்கு. பின்னர் அனுமான் அந்த ரிஷியைப் பிரார்த்திக்க, அந்த முனிவரும் அனுமன் எடுத்துவந்திருக்கும் மற்றத்தீர்த் தங்களில் கொஞ்சம் கொஞ்சம் அங்கே விடும்படி சொல் கிறார். அப்படியே செய்கிறான் அனுமனும். அதன்பின் தான் அங்குள்ள தீர்த்தத்தை எடுத்துச் செல்ல முடிந்திருக் கிறது, அவனுக்கு. ராமபட்டாபிஷேகத்திற்கு என்று எடுத்துச் சென்ற அந்த சப்த தீர்த்தங்களும் இங்கே ஒருங்குசேர்ந்த காரணத்தால் இந்த தீர்த்த கட்டம் பிரசித்தி அடைந்திருக்கிறது. சரும வியாதி உள்ளவர்கள் இதில் மூழ்கி எழுந்தால் அவர்களது வியாதி தீர்கிறது என்கின்றனர். இக்குளத்தின் மேலக்கோடியில் ராமர் சீதாலட்சுமண சமேதராக எழுந்தருளியிருக்கிறார். அவ ருக்குப் பின்னால் அவந்திகா தேவியும் எழுந்தருளியிருக் கிறாள். இக்குளத்தைச் சுற்றி தருமசாலை கட்டிவைத் திருக்கிறார்கள். இக்குளத்திற்கு படிக்கட்டுகள், தரும சாலை எல்லாம் கட்டியவர் மாதவராவ் விநாயக்ராவ் பீஷ்வா என்பவர்கள். மகாகாலரது பழைய கோயிலைக் கட்டியவர் ராமச்சந்திர பீஷ்வா என்று சரித்திர ஏடுகள் பேசுகின்றன.

மகாகாலர் கோயிலைவிட்டு வெளியேவந்து மேல வீதிக்குச் சென்றால் அங்கு ஒரு விநாயகர் கோயில், மதுரை முக்குறுணிப் பிள்ளையாரைப்போல, பெரியதொரு வடிவிலே பிள்ளையாரை சுதையிலே அமைத்து, வண்ணங் களை எல்லாம் பூசி இருக்கிறார்கள். இக்கோயிலில் சுண்டெலிகள் பல அங்குமிங்கும் ஓடிக்கொண்டேயிருக் கின்றன. மகாகாலரையும் அவரது சீமந்த புத்திரன் விநாயகரையும் வணங்கிய பின்னர், நம் உள்ளத்தின் அடித் தளத்தில் ஒரு குறை இருந்துகொண்டே இருக்கும். ஆமாம், அந்த விக்கிரமாதித்த மகாராஜனுக்கு அருள் புரிந்த காளி கோவில் இன்று இங்கு இல்லாமல் இருக்குமா என்று எண்ணுவோம். அந்தக் காளியை ஹரசித்தி தேவி என்று அழைக்கின்றனர். அக்கோயில் மகாகாலர் கோயி லுக்கு தென்மேற்கே ஒரு மைல் தூரத்தில் இருக்கிறது. ஒரு நாள் சிவபெருமானும் காளிதேவியும் உடன் இருந்து உல்லாசமாக சொக்கட்டான் ஆடிக்கொண்டிருக்கின்றனர். அப்போது நந்தி பெம்மான் வாயில் காவலனாக இருந் திருக்கிறார். சண்டன், பிரசண்டன் என்ற இரண்டு அசுரர் கள் இங்கு வந்து நந்தியைத் தாக்கி சிவபெருமானும் காளி யும் ஆடிக்கொண்டிருந்த ஆட்டத்திற்கு இடையூறு செய் திருக்கின்றனர். சிவபெருமான் வேண்டிக்கொண்டபடி காளியே அவ்வரக்கர்களை வதம் செய்திருக்கிறாள். ஹரனுடைய ஏவலால் அரக்கனை வதம் செய்த சித்தியை ஹரசித்தி என்றே அழைத்திருக்கின்றனர். இந்த ஹரசித்தி தான் விக்ரமாதித்தனது வழிபடு தெய்வம். அவனுக்கு எல்லா சக்திகளையும் அருளியவள். இக்கோயில் வாயிலில் இரண்டு தீப ஸ்தம்பங்கள் இருக்கின்றன. கோயில் பிரகா ரத்தில் சித்தவடம் என்னும் ஆலமரம் ஒன்றும் இருக் கின்றது. பல ஆண்டுகளாக அம்மரம் அங்கேயே இருக் கின்றது என்கின்றனர். கோயிலுக்குச் செல்லும் மக்கள் அதனையும் வந்தித்து வணங்குகின்றனர். ஹரசித்திதேவி பயங்கர வடிவினள். ஆதலால் எட்டியிருந்தே வணக்கம் செலுத்திவிட்டுத் திரும்பி விடலாம். இக்கோயிலுக்கும்

மேற்கே மூன்றுமைல் தூரத்தில் கடிகிகால்காதேவி கோயில் இருக்கிறது. அங்கிருந்துதான் விக்ரமாதித்தன் நீதி வழங்குவானாம்.

இந்த உஜ்ஜயினியை கிருஷ்ணபரமாத்மாவின் வரலாற்றோடு தொடர்பு படுத்தி ஒரு கதையும் இங்கு வழங்குகின்றது. கிருஷ்ணன், பலராமன் சுதாமர் மூவரும் சாந்திப முனிவரிடம் குருகுலவாசம் செய்திருக்கின்றனர். அந்த சாந்திப முனிவரின் ஆசிரமம் இந்த உஜ்ஜயினில் தான் இருந்திருக்கிறது. கிருஷ்ணன் குருகுலவாசம் வருவதற்கு முன்னரே சாந்திப முனிவரின் குமாரன் கடலில் விழுந்து மூழ்கி இறந்து போயிருக்கிறான். பஞ்சனன் என்ற அசுரனே அவனைக்கொண்டு சென்றிருக்கிறான். இப்படி சாந்திப முனிவரின் மகன் இறந்து பன்னிரண்டு ஆண்டுகள் கழிந்திருக்கின்றன. கிருஷ்ணன் தன் குருகுலவாசம் முடிந்து தன் ஊர்திரும்பும் போது என்ன குருதட்சிணை வழங்குவது என்று எண்ணியிருக்கிறான். முனிவர் தன் பையனையே கொணர்ந்து கொடுக்கும்படி வேண்டியிருக்கிறார். அவர் விரும்பியபடியே கிருஷ்ணன் கடலுள் புகுந்து பஞ்சனன் என்ற அசுரனைக்கொன்று அவனையே ஒரு சங்காக்கி அச்சங்கால் வெற்றியை ஊதிக்கொண்டே திரும்பி முனிவர் மகனைக் கொணர்ந்திருக்கிறான். அப்படி பஞ்சனனையே சங்காகக் கொண்டதன் காரணமாகவே பாஞ்சஜன்யம் என்னும் சங்கும் என்றும் நிரந்தரமாய் கிருஷ்ணன் கையில் இலங்குவதாயிற்று. இந்த வரலாற்றையே திருமங்கை மன்னன் பெரிய திருமொழியில் 'ஏழை ஏதலன்' என்று துவங்கும் பாசுரத்தில்பாடி அரங்கத்து அரவணையானைத் துதித்திருக்கிறார்.

ஓது வாய்மையும் உவனிய பிறப்பும்
உனக்கு முன் தந்த அந்தணன் ஒருவன்
காதல் என் மகன் புகலிடம்காணேன்
கண்டு நீ தருவாய் எனக்கு என்று

கோதில் வாய்மையினன் உனை வேண்டிய
குறைமுடித்து அவன் சிறுவனைக் கொடுத்தாய்
ஆதலால் வந்து உன் அடியினை அடைந்தேன்
அணிபொழில் திருவரங்கத்து அம்மானே.

என்பது மங்கை மன்னரது பாடல்.

இன்னும் காளிதாஸன் மேகதூதத்தில் இந்த உஜ்ஜயினியின் புகழைப்பாடி இருக்கிறான். "ஏ! மேகமே நீ மாலை வேளையில் உஜ்ஜயினி சென்றால், மாலைச் சூரியன் மறையும்வரை அங்கிருந்து இரவில் உன் இடிமுழக் கத்தால் மகா காலருடைய பறையைக்கொட்டி அவரை வணங்கிய பின்பே மேற்செல்வாயாக" என்று பாடி இருக் கின்றான். இப்படியே பல்லோரும்பாடும் புகழுடன் உஜ்ஜயினி அன்று விளங்கியிருக்கிறது.

# 39. புஷ்கரத்தில் பிரம்மா



ரங்க்ஜி கோயில் வாயில்

கூடவுள் எங்கும் நிறைந்திருக்கிறார் என்பது யாவரும் ஒப்புக்கொள்ளும் உண்மை. இதை எளிதில் எல்லோரும் உணர்ந்து கொள்ள அவன் தூணிலும் இருக்கிறான். துரும்பிலும் இருக்கிறான் என்று கூறுவர். தூணில் இவன்

இருக்கிறான் என்றால் அவன் தூணினின்றும் விலகிய ஒரு பொருள். அதில் வந்து அவன் ஏறி நின்று கொண்டிருக் கிறான் என்றுதானே கொள்ள இயலும். இப்படி எண்ணி யிருக்கிறார். நாவுக்கரசராம் அப்பர். ஆதலால் தூணில் அவன் இருக்கிறான் என்று சொல்வதைவிட தூணாகவே இருக்கிறான் அவன் என்றுதான் சொல்ல வேண்டும் என் கிறார். ஆம்;

நின்னாவார் பிறர் இன்றி
நீயே ஆனாய்

என்றுதானே இறைவனைப் புகழ்ந்து பாடி இருக்கிறார். இன்னும் இந்த இறைவன் பஞ்சபூதங்களின் ஒவ்வொரு அணுவிலும் இருக்கிறார் என்றும் கூறுவர். சாணிலும் உளன். ஓர் தன்மை அணுவினைச் சதகூறிட்ட கோணிலும் உளன் என்பதுதானே கவிச்சக்கரவர்த்தி கம்பன் சித்தாந்தம். நீருளான், தீ உளான், நினைப்பவர் மனத்துளான் என்றெல்லாம் விளக்கிய அப்பரோ பின்னர் தன்னையே திருத்திக்கொண்டு,

இருநிலனாய் தீயாகி நீரும் ஆகி
இயமானனாய் எறியும்
காற்றும் ஆகி
அருநிலைய திங்களாய்
ஞாயிறாகி ஆகாசமாய்
அட்டமூர்த்தியாகி
பெருநலமும் குற்றமும்
பெண்ணும் ஆணும் பிறர் உருவும்
தம் உருவும் தாமே ஆகி
நெடுநிலையாய் இன்றாகி
நாளையாகி நிமிர்புன்
சடைஅடிகள் நின்றவாறே

என்று பாடித்தீர்த்து விடுகிறார். அவனே நிலனாய் தீயாய், நீராய், நிற்கிறான் என்றே முடிவுகட்டுகிறார். இந்த

உண்மையை அழுத்தமாக நமக்குக் காட்டுவதற்கு எழுந்த தலத்தில் ஒன்றுதான் புஷ்கரம். அங்கு பரந்தாமன் நீர் உருவில் இருக்கிறான் என்பது ஐதீகம். அதற்கேற்றாற்போல் அங்கு ஒரு பெரிய தடாகம். அத் தடாகமே பரந்தாமன் அதில் மூழ்கி எழுபவர் வினையெல்லாம் களையப்படுகிறது. இறைவனோடு கலந்து ஆடும் இன்பம் பெற்றுவிட்டால் அதன் வினைகள் நிற்பது ஏது? அந்த புஷ்கரம் என்னும் தலத்திற்கே செல்கின்றோம் நாம் இன்று. அங்கு சென்று புஷ்கரத்தில் நீராடி வினை களைவோம் வருகிறீர்களா?

புஷ்கரம் செல்ல முதலில் ஆஜ்மீர் செல்ல வேண்டும். ரயிலில் சென்றால் பம்பாயில் இருந்து புறப்பட்டு ரட்லம் ஜங்ஷனில் ரயில் மாற்றி ஆஜ்மீர் செல்ல வேண்டும். ஆஜ்மீர் பம்பாயிலிருந்து கிட்டத்தட்ட 1000 மைல் தூரத்தில் இருக்கிறது. சித்தூர்கர் என்னும் ஸ்டேஷனிலிருந்து 117-மைல் தூரம்தான். வட இந்திய யாத்திரையைக் காரிலேயே செல்பவர்கள் என்றால் அகமதாபாத் உதயப்பூர், சித்தூர் எல்லாம் பார்த்துவிட்டே செல்லலாம். ரோடுகள் எல்லாம் மிகவும் நன்றாயிருக்கும் என்று சொல்லமுடியாது. புஷ்கரத்தில் தங்குவதற்கு வசதியான இடங்கள் கிடையாது. ஆதலால் ஆஜ்மீரில் உள்ள டூரிஸ்ட் ஹோமிலேயே தங்கிக் கொண்டு அங்கிருந்து ஏழு மைல் தூரத்திலேயுள்ள புஷ்கரத்திற்கு சென்று திரும்பிவிடலாம். பஸ், டாக்சிகள் எல்லாம் கிடைக்கும்.

ஆஜ்மீரும் பிரசித்திப்பெற்ற நகரம் ஆயிற்றே! ஆதலால் முதலில் ஆஜ்மீரையே ஒரு சுற்று சுற்றலாம். ஆதியில் அஜயமேரு என்றே அந்த ஊர் பெயர் பெற்றிருக்கிறது. வெற்றியைத் தவிர வேறு அறியாத ஊராக கருதப்பட்டிருக்கிறது. அஜயபாலசௌஹான் என்பவனால் ஏழாம் நூற்றாண்டிலே இந்த நகரம் நிர்மாணிக்கப்பட்டிருக்கிறது என்றாலும் பன்னிரண்டாம் நூற்றாண்டில் அஜயராஜன் என்ற மன்னவன் காலத்தில்தான் பிரசித்தி பெற்றிருக்கிறது. பலராஜபுத்ர வீரர்கள் இருந்து அரசாண்டிருக்

கிறார்கள். மேற்கு மொகலாய மன்னன் அக்பர் காலத்தில்தான் இங்கே பிராந்தியத்திற்கு ஒரு தலைமை ஸ்தானம் இந்த ஆஜ்மீருக்குக் கொடுக்கப்பட்டிருக்கிறது. மேலை நாட்டிலிருந்து வந்த ஸர்தாமஸ் ரோ என்பவர், முதல் முதல் மொகலாய மன்னன் ஜஹாங்கீரைச் சந்தித்து தன் அரசன் கொடுத்த தகுதிப் பத்திரத்தை 1616-ல் இங்குதான் கொடுத்திருக்கிறான். ஷாஜஹான் மூத்த மகள் தாளசிக்கோ பிறந்ததும் இந்த நகரில்தான். ஷாஜகான் இங்கு அடிக்கடி வந்து தங்கியிருக்கிறார். இங்குள்ள ஆனசாகர் ஏரிக்கரையிலே ஓர் அழகிய மாளிகையையும் கட்டியிருக்கிறான். எண்ணூறு அடி உயர்ந்திருக்கும் தாராகர் மலையடிவாரத்திலே இந்நகரம் இருக்கிறது. இங்குள்ள கோட்டையை தாராகர்கோட்டை என்றே அழைக்கிறார்கள். இந்த மலையடிவாரத்திலே தான் அடாய்தின்கா ஜோன்ப்ரா என்ற அழகிய கட்டிடம் இருக்கிறது. இதன் வேலைப்பாடு மிகவும் சிறந்தது, இரண்டரை நாட்களிலே கட்டி முடித்த கட்டிடம் என்கிறனர். இங்குள்ள முஸ்லீம் மகுதியில் சிறப்பானது தர்கா குவாஜா சாஹிப் என்பதுதான். நகரத்தின் மத்தியில்தான் அக்பர் கோட்டை இருக்கிறது. அதன் வாயில் எண்பத்திநாலுஅடி உயரம், நாற்பத்து மூன்றுஅடி அகலமும் என்றால் ,அக்கோட்டையின் கம்பீரத்தை கொஞ்சம் கற்பனை செய்து பார்த்துக் கொள்ளலாமே.

இந்த ஆஜ்மீருக்கு வடமேற்கு ஏழுமைல் தூரத்தில் தான் புஷ்கரம் இருக்கிறது. செல்லும்பாதை ஆனசாகர் ஏரிக்கரை வழியாகவும் தாராகர்மலை வழியாகவும் தான் செல்கிறது. புஷ்கரத்தின் சிறப்பு எல்லாம் அங்குள்ள தீர்த்தத்தில்தான். அகலிகை கதை நமக்கு தெரியும். கௌதம முனிவரின் மனைவியான அகலிகையைக் கண்டு மோகித்து இந்திரன் அவளை வஞ்சித்துக் கற்பழித்து விடுகிறான். விஷயம் தெரிந்ததும் கௌதம முனிவர் அகலிகையை கல்லாகப் போகும்படியும் இந்திரன் ஆயிரம்

கண் பெறவும் சபிக்கிறார். இச்சாபம் தீர பிரம்மனை நோக்கி இந்திரன் தவம் செய்கிறான். பிரமனும் கங்கை நதியையே ஒரு குளத்தில் பெருகச் செய்து அதில் தன் கமண்டலத்திலிருந்த தண்ணீரையும் தெளித்துப் புனிதமாக்குகிறார். அந்த தீர்த்தமே புஷ்கரம். இதில் நீராடியே இந்திரன் தன் பாவங்களைத் தீர்த்துக் கொள்கிறான். இந்தத் தீர்த்தம் புனிதமான தீர்த்தமாகக் கருதப்படுகிறது. இங்கு பரந்தாமன் தீர்த்த ரூபியாகவே எழுந்தருளியிருக்கிறான் என்பது ஐதீகம். இதனையே தீர்த்த ராஜா என்கின்றனர். இன்னும் ஒரு விளக்கம். புஷ்கரம் என்றாலே தாமரை என்றுதான் பொருள். தாமரைக்கும் இங்குள்ள குளத்திற்கும் ஒரு தொடர்பு இருந்திருக்கிறது. பிரம்மா தான் தவம் செய்ய ஒரு இடம் தேடி அலைந்திருக்கிறார். அவர் கையிலிருந்த தாமரை தவறி விழுந்து விடுகிறது. அப்படி விழுந்த இடத்திலே பூமி பிளந்து நீர்பெருக்கெடுத்து ஓடி இருக்கிறது. அதனால் அக்குளத்தையே புஷ்கரம் என்று அழைத்திருக்கின்றனர். மூன்று இடங்களில் பூமிபிளந்து பெருக்கெடுத்ததால் அவற்றை முறையே ஜேஷ்டமத்ய கனிஷ்ட புஷ்கர தீர்த்தங்கள் என்கின்றனர். இம்மூன்று தீர்த்தங்களிலும் முறையே பிரம்மா, விஷ்ணு மூர்த்தி மூவரும் உறைவதாக ஐதீகம். ஆதலால் புஷ்கரம் சென்றதும் அங்குள்ள குளத்தில் இறங்கி படிக்கட்டுகளில் நின்று கொண்டே ஒரு முழுக்குப் போடலாம். குளம்நிரம்ப ஆழம் கிடையாது. அப்படி முழுக்கப் போட்டுவிட்டு நம் பாவங்களை எல்லாம் கழுவியபின் கரையேறி அங்குள்ள கோயில்களைக் காணச் செல்லலாம். ஒன்று சொல்ல மறந்து விட்டேனே. பத்ரி, பூரி, ராமேஸ்வரம் துவாரகை முதலிய யாத்திரைகளின் பலன் புஷ்கரத்தில் நீராடினால்தான் பூர்த்தியடையும் என்பது வேதவாக்கு.

புஷ்கரத்தில் உள்ள பிரதான கோயில் பிரம்மாவின் கோயில்தான். அது ஊருக்கு மேற்கே ஒரு சிறு குன்றின் மேல் இருக்கிறது. அதுஆதியில் கட்டப்பட்ட கோயில்

அவுரங்கசீப்பால் இழக்கப்பட்டுத் திரும்பவும் 1809-ல் கோகுல் சந்த்ரேபக் என்பவரால் புதிதாகக் கட்டப் பட்டிருக்கிறது. இந்திய நாட்டில் பிரம்மாவிற்கு என்று தனி கோயில்கள் அதிகம் இல்லை. ஆதலால் இங்குள்ள பிரம்மா கோயில் சிறப்புடையதாகக் கருதப்படுகிறது. இங்கு நான்கு முகத்தோடு கூடிய பிரம்மாவின் சிலை ஒன்று இருக்கிறது. ஒருபுறம் காயத்ரியும், ஒருபுறம் சாவித்திரியும் இருக்கிறனர். கோயில் கோபுரத்திற்கு அருகில் ஜனகாதி முனிவரது சிலைகள் இருக்கின்றன. புஷ்கரத்தில் யக்ஞ குண்டத்திற்கு அருகே அகத்தியர் ஆசிரமம் இருக்கிறது. இந்த இடத்தில்தான் ராமலட்சுமணர்கள் தீர்த்தமாடினார்கள் என்கின்றனர். அகலிகை சாபவிமோசனமும் இங்குதான் நிகழ்ந்திருக்க வேண்டும். புஷ்கரத்தில் எல்லோருமே நல்ல ஸைவர்கள். புலால் உண்பவர்களைக் காண்பது அரிது. அந்த நகரத்தின் எல்லையில் எந்த மிருகத்தையும் கொல்லுதல் கூடாது என்பது அனுஷ்டிக்கப்படும் சட்டம். இன்னும் தேவகுருவாகிய பிரஹஸ்பதி பிரம்மாவை நோக்கித் தவம் புரிந்து தனக்கு புஷ்கரத்தில் கிரகாதிபத்யம் வேண்டியிருக்கிறான். அந்த வரம் கொடுக்கப்படுகிறது. ஆதலால் குரு வந்து பன்னிரண்டு ராசிகளிலும் தங்கும்போது ஒரு பெரிய மேளாவே நடக்கிறது அங்கே. இதுதான் புஷ்கரத்தில் பன்னிரண்டு வருஷங்களுக்கு ஒரு தரம் நிகழும் பெரிய விழா, ஆம் கும்பகோணத்தில் நடக்கும் மகாமகத்தைப் போல.

இத்தலத்தில் சிவபெருமானுக்கும் ஒரு கோயில் இருக்கிறது. அங்குள்ள சிவபெருமானை அடமடேஸ்வரன் என்று அழைக்கின்றனர். இன்னும் இங்கு விஷ்ணுவிற்கு மூன்று கோயில்கள் இருக்கின்றன. அவைகளில் இரண்டு புராதனமானவை, ஒன்று சமீப காலத்தில் கட்டப்பட்டது. புராதனமான கோயில் ஒன்றில் ரங்கநாதன் இருக்கிறார். இன்னொன்றில் வராகமூர்த்தி மூலவராக நிற்கிறார். ஸ்ரீதேவியும் பூதேவியும் பக்கத்தில் இருக்கின்றனர்.

இங்குள்ள வராகர் தமிழ் நாட்டில் ஸ்ரீமுஷ்ணத்தில் உற்றவர் போல கம்பீரமான தோற்றம் உடையவர் அல்ல. பழைய கோயிலை ஔரங்கசீப் இடித்து மட்டமாக்கியிருக்கிறார். பின்னர் நான்கு சிகரங்களோடு கூடிய கோயிலை ராணாபிரதாபனின் பாட்டனார் மகாராணா கங்கா கட்டிமுடித்தார் என்று வரலாறு கூறுகிறது.

இத்தலத்தில் தமிழர்களாகிய நமக்கு ஓர் அதிசயம் காத்து நிற்கிறது. ஒரு கோயில் வாயிலுள் நுழைந்து உள்ளே சென்றதும் நான் அதிசயத்து விட்டேன். காரணம், அக்கோயில் ராஜகோபுரம். நம் தமிழ் நாட்டுக்கோபுரம் போலவே இருந்ததுதான். கோயிலுள் சென்றாலும் கட்டிடக்கலை எல்லாம் நம் நாட்டுப்பாணிதான். இதை எல்லாம் விட அங்குள்ள பட்டாச்சாரியார்கள், எல்லாம் தமிழ் பேசுவதுதான் இன்னும் அதிசயம். தமிழ் நாட்டில் இக்கோயிலைக் கட்டி இங்கு இரவுக்கிரவே தூக்கிக் கொண்டு வந்து வைத்துவிட்டார்களா என்று எண்ணத் தோன்றும். விசாரித்தால், மணிராம் என்று ஒரு ஸேட் இருந்திருக்கிறார். அவர் தீராத நோய்வாய்ப்பட்டிருந்த போது தமிழ் நாட்டு வைஷ்ணவப் பெரியார் ஒருவர் அவரது நோயைத் தீர்த்திருக்கிறார். ஷேட்ஜியோ தன் செல்வம் முழுவதையுமே அவரது காலடியில் கொட்டியிருக்கிறார். ஆனால் அவர் அதில் பைசா கூட தனக்கென எடுக்காது, அந்த ஷேட்ஜியைக் கொண்டே ரங்கநாதருக்கு ஒரு கோயிலைக் கட்டச் சொல்லியிருக்கிறார். தமிழ் நாட்டிலிருந்து சிற்பிகள் சென்றிருக்கிறார்கள். கோயில் 52 லட்சம் ரூபாயில் 1919-ல் கட்டி முடிந்திருக்கிறது. அகோபிலத்திலிருந்தே லட்சுமி நரசிம்மனை எழப்பண்ணிக் கொண்டு வந்து இங்கு இருத்தியிருக்கிறார்கள். கருவறையிலே மூலமூர்த்தியான ஸ்ரீ வைகுண்டநாதர் பூதேவி ஸ்ரீதேவி சமேதராக இருந்த திருக்கோலத்தில் இருக்கிறார். இன்னும் ராமர், தேசிகர், உடையவர், மகாலட்சுமி ஆண்டாள் எல்லோரும் தனித்தனி சந்நிதியிலே இருக்கிறார்கள். இன்னும் சொல்லப் போனால் புஷ்கரத்தில்

உள்ள கோயில்களில் எல்லாம் இந்தக் கோயிலில்தான் பக்தர் கூட்டம் அதிகம். இதனை அப்பக்கத்தில் உள்ள வர்கள் எல்லாம் ரங்க்ஜி கோயில் என்றுதான் அழைக் கிறார்கள். இதே ஷேட்ஜி பிருந்தாவனத்திலும், ஹௌரா விலும் இதே போன்று இன்னும் இரண்டு கோயில்களைக் கட்டி முடித்திருக்கிறார். அங்கு செல்லும்போது அவற்றை மறவாது பார்த்துக் கொள்ளலாம். வழுதி நாட்டிடை வளவன் நாடு உற்றது போன்று சோழவந்தான் இருக்கிறது என்று பாடினார் ஒரு புலவர். ஆம் ராஜபுதனத்தில் ஒரு தமிழ் நாடு உருவாகியிருக்கிறது. இது எல்லாம் தேசிய ஒருமைப்பாட்டை உருவாக்கும் முயற்சிதானே என்று தமிழன் பெருமைப்படலாம்.

# 40. ஜெய்ப்பூர் கல்கி காமந்திர்



ஹவாய் மஹால்

கவிச்சக்கரவர்த்தி கம்பன் காவிரிக்கரையில் இருந்து கொண்டே கோலநாட்டின் தலைநகரான அயோத்தியை யும் ஜனகமகாராஜனது தலைநகரான மிதிலையையும் இன்னும் கடல்சூழ் நித்திலத்தீவான இலங்கை நகரையும் கற்பனையில் கண்டு வர்ணித்திருக்கிறான். அவனது கற்ப னையில் அயோத்தி லட்சிய ராஜ்யமாக உருவெடுத்தருக் கிறது. அதைப்போலவே மிதிலை லட்சிய தபோவனமாக

உருப்பெற்றிருக்கிறது. ஆனால் இலங்கைதான் அவனுடைய லட்சிய சுவர்க்கமாக இருந்திருக்கிறது. அங்கு களிக்கின்றவர்களைத் தவிர கவல்கின்றவர் ஒருவரையும் கம்பனால் காணமுடியவில்லை. அவனது வர்ணனையில் இலங்கையில் உள்ள மாடமாளிகைகள் எல்லாம் ஒளிவீசுகின்றன. 'மாடம் அடங்கலும் கற்பகம், மனை எலாம்



ஜகத் சிரோமணி கோயில்

கனகம்' என்றெல்லாம் சொன்னவனே மேலும், அங்குள்ள மாளிகைகள் எப்படி, எதனால் ஆக்கப்பட்டிருக்க வேண்டும் என்று எண்ணி எண்ணிப்பார்த்து கடைசியில் முடியாமல் கையை விரித்து விடுகிறான்.

பொன்கொண்டு இழைத்த
மணியைக் கொண்டுபொதிந்த
மின்கொண்டு அமைத்த
வெயிலைக்கொண்டு சமைத்த
என்கொண்டு இயற்றிய
எனத் தெரிகிலாத
வன்கொண்டல்விட்டு
மதிமுட்டுவன மாடம்

என்றே அவரால் பாடமுடிந்திருக்கிறது. ராஜஸ்தானின் தலைநகரான ஜெய்ப்பூர் என்னும் வண்ணநகரம் சென்று, அங்குள்ள மாடமாளிகைகள், அரண்மனைகளைப் பார்த்தோமானால் இந்த இலங்கை வர்ணனைதான் ஞாபகத்திற்கு வரும். உண்மையிலேயே பெரிய ராஜாக்கள் தங்கியிருந்த இடம் ராஜஸ்தான். அன்று 22 ராஜாக்கள் தனித்தனி ராஜ்யங்களாக அமைத்து ஆண்டு வந்திருக் கிறார்கள். அந்த சமஸ்தானங்கள் அனைத்தையும் ஒன் றாய்ச் சேர்த்து ராஜஸ்தான் என்று ஒரு பெரிய மாநிலத் தையே உருவாக்கிய பெருமை சர்தார் பட்டேலையே சாரும். அந்த மாநிலத்தின் தலைநகர்தான் ஜெய்ப்பூர், தலைநகராயிருக்கத் தகுதியுடைய பெரிய நகரம் அது. அங்குள்ள அகலம் அகலமான வீடுகளையும் வானுற ஓங்கி வளர்ந்திருக்கும் சிவப்பு வர்ணக்கட்டிடங்களையும் பார்த் தால், அது இந்தியாவின் எழில் வண்ணங்களை எல்லாம் திரட்டி அமைத்த ஒரு சிறந்த வண்ண நகராகவே தோன்றும். அந்த வண்ணநகரத்தைக் காணவே இன்று செல்கின்றோம் நாம் ஜெய்ப்பூருக்கு.

ஜெய்ப்பூர் செல்ல அகமதாபாத் டில்லி ரயிலில் செல்ல வேண்டும். அப்படிச் சென்றால் ஜெய்ப்பூர் ஸ்டேஷ னிலேயே இறங்கலாம். இல்லை, சென்னையிலிருந்து செல் பவர்கள் என்றால், ஆக்ரா போய் அங்கிருந்து ரயில் மாறியும் செல்லலாம். காரிலேயே வடநாட்டு யாத்திரை

செய்பவர்கள் என்றால் பம்பாய் அகமதாபாத், ஆஜ்மீர் வழியாகவும் ஜெய்ப்பூர் சென்று சேரலாம். மிகவும் வசதியான பயணம் விண்வெளிப் பயணம்தான். டில்லியிலிருந்து விமானம் மூலம் சென்று திரும்புவதே வசதியானது. எப்படிச் சென்றாலும் ஜெய்ப்பூரைச் சென்று சேர்ந்ததும் நாம் முதல் பார்த்துப்பிரமிப்பது அதன் விசாலமான தெருக்களே. பிரதான வீதிகள் எல்லாம் 100 அடி அகலம் என்றால் பார்த்துக் கொள்ளுங்களேன். இந்த நகரத்தை மூன்று பக்கங்களிலும் மலைத்தொடர்கள் சூழ்ந்திருக்கின்றன. இந்தப் பாதுகாப்பு அரணைத் தவிர நகரத்தைச் சுற்றி ஒரு பெரிய மதிலும் கட்டப்பட்டிருக்கிறது. மதில் சுவர் 20 அடி உயரமும் 9 அடி கனமும் உடையது என்றால் அதைக்கட்ட எவ்வளவு செலவாகியிருக்கும் என்று கணக்கிட்டுக் கொள்ளலாம் தானே? இந்த மதில் சுவர்களில் எட்டு வாயில்கள் அமைத்திருக்கிறார்கள். இவைகளில் முக்கியமானவை மூன்று வாயில்களே. கிழக்கு வாயிலை சூரஜ்போல், மேற்கு வாயிலை சாந்த்போல், வடக்கு வாயிலை, துருவபோல் என்றும் கூறுகிறார்கள். போல் என்றால் வாயில் என்று அர்த்தமாம், ரயிலில் வந்தாலும் ஆஜ்மீரிலிருந்து காரிலே வந்தாலும் மேற்கு வாயிலான சாந்த்போல் வழியாகத்தான் நகருக்குள் நுழையவேண்டும். இந்த வாயில்களை நல்ல தமிழிலேயே சொல்ல விரும்பினால் சூரியன் வாயில், சந்திரன் வாயில் துருவவாயில் என்றே கூறலாம். அந்நகரை அமைத்தவர் ராஜாஜெய்சிங், அவர் கட்சுவா ராஜபுத்திர வம்சத்தை சேர்ந்தவர். அந்த மன்னர்கள் இருந்து ஆண்டுள்ள இடம் தான் அம்பர் கோட்டை. அங்குள்ள கோட்டை கொத்தளங்கள் போதிய பாதுகாப்பு உடையவை அல்ல என்று கண்டு ஜெய்சிங், இந்த நகரை நிர்மாணித்தார் என்று சரித்திர ஏடுகள் பேசுகின்றன. அவர் வான சாஸ்திர வல்லுநர். அதனாலேயே சூரிய, சந்திர, துருவநட்சத்திரம் முதலிய பெயர்களையே தான் அமைத்த நகரத்தின் பிரதான வாயிலுக்கு இட்டிருக்கிறார். வானசாஸ்திர மேதைகளும் சிற்ப சாஸ்திர

மேதைகளும் கூடியிருந்து பதினெட்டாம் நூற்றாண்டின் முற்பகுதியில் இந்நகரை அமைத்திருக்கிறார்கள். உலகில் உள்ள பெரிய நகர அமைப்புகள் பற்றிய படங்களை எல்லாம் வருவித்து ஆராய்ந்தாலும் இந்திய சிற்பக்கலைத் திறனுக்கும், பண்பாட்டிற்கும், மாறுபடாத வகையிலே இந்நகர் அமைக்கப்பட்டிருக்கிறது. வீதிகள் எல்லாம் கிழமேலாகவும், தென்வடலாகவும் ஓடும். இங்குள்ள மாடங்கள் எல்லாம் பக்கத்தில் உள்ள மலையிலிருந்து கிடைக்கும் ஒருவகை ரோஜாவர்ணச் செம்மண்ணால் பூசப் பட்டிருப்பதால் முழுவதும் ரோஜா நிறத்திலேயே காட்சி அளிக்கும்.

இனி இந்நகரைச் சுற்றிப் பார்க்கக் கிளம்பினால் முதன் முதல் நாம் சென்று காண வேண்டியது அங்குள்ள அரண்மனையைத்தான். அது நகரின் வடபுறத்தில் சதுரம் சதுரமாக அமைந்த வீடுகளுக்கு நடுவே கோட்டைக்கு உள்ளே இருக்கிறது. அரண்மனை வெளிமுற்றத்திற்கு செல்வதற்கு யாதொரு அனுமதியும் தேவையில்லை. அரண்மனைக்குச் செல்வதற்கு அதிகாரிகளிடம் அனுமதி பெற வேண்டும். அனுமதி கிடைப்பதும் எளிதானதில்லை. அரண்மனையில், காண வேண்டியவை முபாரக்மஹால், எல்லோருக்குமே மகாராஜா தரிசனம் தரும் திவானி ஆம், அதிமுக்கியஸ்தர்களுக்குள் கலந்து பேசும் திவானிகாஸ், தர்பார் மண்டபம், சித்ரகூடம், முதலியவைகளே. அரண்மனை ஓர் அழகான கட்டிடம். அங்குள்ள சித்ர கூடத்தில் ராஜபுத்திர மன்னர்கள், வீரர்கள் படங்கள் எல்லாம் பெரிய பெரிய அளவில் எழுதி மாட்டப்பட்டிருக் கின்றன. ராதா கிருஷ்ணன் நடனமும், நாகமலை சித்திரங் களும் மிக மிக அழகானவை. அங்குள்ள புத்தக சாலையில் பாரசீக மொழியில் எழுதப்பட்ட மகாபாரதம் ராஜ்நாமா என்ற பெயருடன் இருக்கிறது. ஜெய்சிங் மன்னர் எழுதிய வானசாஸ்திரங்களும் உண்டு. இன்னும் ரேக கணிதம் என்னும் ஜியாமட்டிரியும் அராபிய மொழியில் இருக்

கிறது. அரண்மனையில் காணவேண்டிய மற்றொரு இடம் சந்திரமஹால். அது ஒரு ஏழுமாடிக் கட்டிடம். அதன் மேல் மாடியில் ஏறி நின்றால், நகர் முழுவதையுமே ஒரு நோட்டம் விடலாம். அரண்மனையை விட்டு வெளியே வந்ததும், நாம் காணவேண்டியது ஐந்தர் மந்திர் என்னும் வான ஆராய்ச்சி நிலையம். அதனை யந்த்ரம் என அழைக்கின்றனர் பொதுமக்கள். வான ஆராய்ச்சியில் மிகவும் ஈடுபட்டிருந்த மன்னர் ஜெய்சிங் இதனைக் கட்டியிருக்கிறார். காலத்தை அளக்கும் கருவிகள், சூரிய சந்திரன் முதலிய கிரஹங்களை கணக்கிடும் முறை எல்லாம் கட்டிடங்கள் மூலமாகவே இங்கு தெரிவிக்கப்படுகிறது. டில்லி, மந்த்ரா, உஜ்ஜயினி, வாரணாசி முதலிய இடங்களிலும் இதைப்போல வான நிலைய ஆராய்ச்சி கூடங்களை ஜெய்சிங் மகாராஜாவே நிர்மாணித்திருக்கிறார்.

அரண்மனைச் சுற்றுப் புறத்திலேயே இன்னும் இரண்டு கட்டிடங்கள், ஒன்று சீஷ்மஹால் மற்றொன்று ஹவாய் மஹால், சீஷ்மஹால் முழுவதும் சிறு சிறு கண்ணாடிகள் பதிக்கப்பட்டிருக்கிறது. அங்குள்ள பிரதான அறையில் நின்றுகொண்டு கதவுகளை அடைத்துவிட்டு, ஒரேயொரு நெருப்புக் குச்சியை மட்டும் கிழித்துப் பார்த்தால் அறை முழுதும் ஜகஜ்ஜோதியாம் ஒரே நட்சத்திர மண்டலம் போல் காணும். பெரிய வீதியை ஒட்டியிருக்கும் ஹவாய் மஹால் ஒரு பெரிய கட்டிடம். ஒற்றைச்சுவரை அழகாக அடுக்கடுக்காய்க் கட்டி அதில் உள்ள சிறு சிறு துவாரங்கள் மூலம் காற்று அரண்மனைப் பகுதிக்கு வந்து அந்தப் பகுதியையே குளு குளு என்று வைத்திருக்கும் என்கிறார்கள். மனிதன் அறிவினால் சாதித்த ஓர் அற்புத சாதனை.

ஜெய்ப்பூர் நகரத்தை ஒட்டிய பிரதேசங்களில் நாம் காண வேண்டியது இன்னும் இரண்டு இடங்கள். ஒன்று கெய்த்தோ என்றும் அரசர்களின் சமாதிகள் இருக்கும் இடம். மற்றொன்று காலவமகரிஷி இருந்து பூஜித்த கால்டா என்பது, கெய்த்தோ ஊருக்கு வெளிப்

புறத்தில் இருக்கிறது. அங்கு பலப்பல சமாதிகள் சத்ரி என்று அழைக்கின்றனர். எல்லாம் வெள்ளைச் சலவைக்கற்களால் எழுப்பப்பட்ட அழகான மண்டபங்கள். ஜெய்ப்பூரை உருவாக்கிய ராஜாஜெய்சிங்கின் சத்ரிதான் சிறந்த சிற்பவேலைப்பாடு உடையதாய் இருக்கிறது. அழகான டோம் ஒன்றும் அதனை அணிசெய்கிறது. அங்குள்ள தூண்களில் எல்லாம் அழகான பெண்கள் நடனக் கோலத்தில் நிற்கிறார்கள். ராஸலீலா முழுவதையுமே சித்தரித்திருக்கிறார்கள். மொத்தம் அங்கிருப்பது 13 சத்ரிகள். அடிப்பாகங்கள் சிவப்பு சலவைக்கல்லால் கட்டப்பட்டு, மேல்பாகத்தை வெள்ளை சலவைக்கல்லால் அலங்கரித்திருக்கின்றனர். கால்டா ஜெய்ப்பூருக்கு கிழக்கே உள்ள மலைச்சரிவில் இருக்கிறது. அங்கு சூரியனுக்கு ஒரு கோயில் கட்டியிருக்கிறார். காலவரிஷியிலிந்து தவம் செய்த இடம் என்கின்றார்கள்.

என்ன ஜெய்ப்பூரில் சூரியனை தவிர வேறு தெய்வங்களுக்கு கோயில்களே இல்லையா என்றுதானே கேட்கிறீர்கள். மற்ற தலங்களில் கண்டதுபோல் பெரிய கோயிலாக ஒன்றுகூட இல்லை என்றாலும் சில கோயில்கள் ஆங்காங்கே சிதறிக் கிடக்கின்றன- அவைகளில் முக்கியமானவை, ஆறு. சந்த்பால் என்ற பகுதியிலே அனுமன் கோயில் ஒன்று இருக்கிறது. இதனை சந்த்பால் காபாலாஜி என்று மக்கள் போற்றி வணங்குகிறார்கள். இதற்குப் பக்கத்திலேயே பாலனந்தாஜி காமந்திர் என்று ஒரு கோயில். இது ஒரு விஷ்ணு கோயில். மகாராஜா ஜெய்சிங்கின் குருவான பாலாதாஸ் பெயரில் அமைக்கப்பட்டது என்பது வரலாறு. இன்னும் விநாயகருக்கு ஒரு பெரிய கோயில், கத்தார் கேட் பக்கம் இருக்கிறது. இதை கணேஷ் கோயில் என்கிறார்கள். இன்னும் கிரிதர்ஜி ஒன்றும், கோவிந்த்தேவ்ஜி கோயில் ஒன்றும் கண்ணனுக்கு என்றே கட்டப்பட்டு கண்ணன் வடிவங்கள் பிரதிஷ்டை செய்யப்பட்டிருக்கின்றன. இதையெல்லாம் விட அதிசயம்,

தசாவதாரங்களில் இன்னும் பகவான் எடுக்காத அவதார மாகிய கல்கிக்கும் ஒரு கோயில் கட்டியிருக்கிறார்கள், இதை கல்கிகாமந்திர் என்கின்றனர். இக்கோயில் கட்டியிருக்கும் இடத்தில் ராஜாஜெய்சிங்கு அஸ்வமேதயாகம் நடத்தினாராம். அதன் ஞாபகார்த்தமாக வெள்ளை சலவைக் கல்லில் குதிரை ஒன்று செய்து வைத்திருக்கின்றனர். ஆம் கல்கியாக பகவான் அவதரிக்கும்போது, குதிரை மேல் ஆரோகணித்துக் கொண்டுதானே வருவார். ஆதலால் இது நம் நாட்டிற்கே புதிதான கோயில். பிரதான கோயிலாக இல்லாவிட்டாலும் கூட.

இன்னும் ஜெய்ப்பூரின் பிரதான நகரைவிட்டு சுற்றுப் புறங்களில் காண வேண்டியவை எவ்வளவோ உண்டு. என்றாலும் ஜெய்ப்பூர் வந்திருக்கின்றோமே இங்குதான் அந்த அம்பர் மாளிகை இருக்கிறது என்று படித்திருக்கிறோம். அது எங்கே இருக்கிறது என்று தெரிந்து கொள்ள வேண்டாமா என்று துடிப்போம். அதைப் பற்றி விசாரித்தால் அது, டில்லிப்போகும் சாலையில் ஏழுமைல் போனால்தான் பார்க்கலாம் என்பார்கள். சரி என்று காரை அந்தச் சாலையில் திருப்பி அம்பர் நோக்கிச் செல்ல வேண்டியதுதான். அங்குள்ள அம்பர் கோயிலும் அரண்மனையும் ஒரு மலை மீது இருப்பதைப் பார்ப்போம். காரில் வந்து இருந்தால் காரை ரோட்டில் நிறுத்திவிட்டு நாலு பர்லாங்கு தூரம் நடந்தே செல்லலாம். இல்லை பத்து ரூபாய் கட்டணம் கட்டிவிட்டு காரையே மலைமீது ஏற்றிக்கொண்டு செல்லலாம். இதையெல்லாம் விட கம்பீரமான முறை ஒன்று உண்டு. மலையடிவாரத்தில் யானைகள் நிற்கும் அதன் பேரில் அம்பாரிகளும் இருக்கும். ஆளுக்கு எட்டு ரூபாய் என்று நாலுபேர் சேர்ந்து அம்பாரியில் ஏறிக்கொண்டு மலைமேல் ஏறலாம். கொஞ்சம் தாராளமாகப் பணத்தை வீசினால் யானைமீது அம்பாரியில் ஏற்றி மேளத்தாளத்துடனேயே அழைத்துச் செல்வர். இந்த மலைமீது உள்ள கோட்டைக்குள்ளேயேதான்

பிரபலமான அம்பர் அரண்மனை இருக்கிறது. இங்குதான் ஜெய்சிங்கின் முன்னோர்களாக கச்சவாஸ் என்பவர்கள் ஆண்டிருக்கிறார்கள். அம்பர் என்பது சிவனுடைய மூர்த்தங்களில் ஒன்றான அம்பிகேஷ்வர் பெயராலேயே ஏற்பட்டது என்பர். இல்லை அயோத்தி மன்னனான அம்பரீஷன் அமைத்த காரணம்தான் அம்பர் எனப்பெயர் பெற்றது என்பர். ஆறு நூறு ஆண்டுகாலம் ஜெய்சிங்கின் முன்னோர்கள் இங்கிருந்து ராஜ்யபாரம் செய்திருக்கின்றனர், கச்சவாஸ் அரசர்கள்—ராமனுடைய மகனான குசனது வம்சத்தார் என்பது வரலாறு. குசனே கச்சன் என்று மருவியிருந்திருக்கிறது போலும். அம்பர் அரண்மனை ராஜபுத்திர மன்னர்கள் கட்டிடக்கலையில் அடைந்திருந்த தேர்ச்சிக்கு ஒரு பெரிய எடுத்துக்காட்டு. 17-ம் நூற்றாண்டின் முற்பகுதியில் ராஜாமான்சிங் கட்ட ஆரம்பித்த இந்தக் கோட்டையும் அரண்மனையும் ஜெய்சிங்கின் காலத்தில்தான் கட்டி முடிக்கப்பட்டிருக்கிறது. ஒரு நூற்றாண்டாக நினைந்து நினைந்து கட்டிய கோட்டையும் மாளிகையும் அது. வளைந்து வளைந்து செல்லும் பாதையில் விதானம் அமைத்த வாயில்கள் இருக்கின்றன. இவைகளில் பிரதான வாயில் சிங்போல் என்பதாகும். அதைக் கடந்துதான் திவானி ஆம். இங்குதான் மன்னர் குடிகளுக்கு பேட்டி கொடுத்திருக்கிறார். இதையும் கடந்து சென்றால் ஒரு பெரிய காளி கோயிலில் வந்து நிற்போம். இது முழுக்க முழுக்க வெள்ளைச் சலவைக் கல்லால் கட்டப்பட்டிருக்கிறது. கோயில் வாயில் கதவுகள் எல்லாம் வெள்ளித் தகடு பொதிந்து மிக்க வேலைபாடுகளுடன் விளங்குகிறது. வாயிலின் இருபுறமும் இரண்டு பெரிய வாகை மரங்கள். தூரத்திலிருந்து பார்த்தால் இரண்டு பசிய மரங்களை வெட்டி எடுத்து வந்து நாட்டியிருக்கிறார்கள் என்று எண்ணுவோம். பக்கத்தில் சென்றால் அவ்வளவு பசுமையாகக் காணும்படி சலவைக் கல்லிலே செதுக்கி வண்ணம் தீட்டி வைத்திருக்கிறார்கள் என்று தெரியும். இந்தக் கோயிலில் கோயில் கொண்

டிருக்கும் அன்னை காளியை வணங்கிய பின் உள்ளே சென்றால் பெரிய பெரிய ஹால்களைப் பார்ப்போம். அங்கு உள்ள சுவர்களிலும் தூண்களிலும் விதானங்களில் பல வர்ணக் கண்ணாடிகள் பதித்து ஒரு புதிய சொப்பன புரியையே உருவாக்கியது போலிருக்கும். வெள்ளிக் கம்பிகள் கொண்டு இழைத்த சுவர்களும் விதானங்களும் கண் கொள்ளாக்காட்சியாக இருக்கும், திறந்த வெளி முற்றங்கள் பரந்து கிடக்கும். அதையெல்லாம் சுற்றிச் சுற்றி வந்தால் வழி தெரியாது மயங்குவோம். கடைசியில் ஒருவழியாக வழி கண்டுபிடித்துத்தான் திரும்ப வேண்டும்.

மலையைவிட்டு இறங்கி அடிவாரத்திற்கு வந்தால் இங்கும் சில கோயில்கள் உண்டு என்பர். அதில் பிரபல கோயில்தான் ஜகத்சிரோமணி கோயில். இங்கு வேணு கோபாலன் கோயில் கொண்டிருக்கிறான். படிகள் ஏறியே செல்லவேண்டும். வழியில் இரண்டு பெரிய கல் யானைகள் நம்மை வரவேற்று நிற்கும். பக்தமீரா கட்டிய கோயில் அதுஎன்று அங்குள்ளவர்கள் கூறுவார்கள். ஆனால் சரித்திர ஏடுகளைப் புரட்டினால் ராஜபீஹாரிமான் கட்டினார் என்பது தெரியவரும். ராஜாமான்சிங் தன் மைந்தன் ஜகத்சிங்கின் ஞாபகார்த்தமாகக் கட்டிய கோயில். ஆகையால் ஜகத்சிரோமணி கோயில். ஆகையால் ஜகத் சிரோமணி கோயில் என்று கூறப்படுகிறது என்றும் விளங்கும்.

இனி ஜெய்ப்பூரை விட்டுக் கிளம்பலாம். இங்கிருந்து டில்லி செல்லும் வழியில் 50 மைல் சென்றால் பிராட் என்ற ஊர் வந்து சேருவோம். அது என்னபிராட் என்று விசாரித் தால் அதுதான் பாரதத்தில் கூறப்படும் விராட நகரம். இங்குதான் பாண்டவர்கள் அஞ்ஞாதவாசம் செய்தார்கள் என்று அறிவோம். இங்கு வீடுகள் அதிகம் இல்லை. விராட நகரத்தின் சின்னம் ஒன்றுமே இல்லை. இங்கு தின்பதற்கு கிடைப்பது சீமை இலந்தைப்பழம் போன்ற பெரிய இலந்தைப் பழங்களே. அவைகளை

காயாகவே கடித்துத் தின்னலாம். சுவையாக இருக்கும். சரி, சரி, இந்த இலந்தைப் பழங்களை தின்றே பாண்டவர்கள் ஒரு வருஷத்தை இங்கு கழித்துவிட்டுப் போய்விட்டார்கள் போலிருக்கிறது. நம்மால் அப்படி அஞ்ஞாத வாசம் பண்ண இயலாது இங்கு. விரைவாக காரைச் செலுத்தி இருட்டுவதற்குள்ளேயே டில்லி சென்று சேருவோம். எவ்வளவுதான் விரைவாகச் சென்றாலும், நம் உள்ளம் மட்டும் ஜெய்ப்பூரிலேயே தங்கி நின்றுவிடும். 'ஊர்வந்து சேர்ந்தோம். ஆனால் உளம்வந்து சேரக்காணோம்' என்றே பாடத்தோன்றும். அத்தனை அழகுவாய்ந்த நகரம் ஜெய்ப்பூர்.

# 41. பழைய டில்லியில் ஸ்ரீதிகம்பர் கோயில்

முன்னைப் பழம் பொருட்கும்
முன்னைப் பழம் பொருளே
பின்னைப் புதுமைக்கும்
பேர்த்தும் அப்பெற்றியனே

என்று ; எல்லாம் வல்ல இறைவனைப் பாடுகிறார் மணி வாசகர். நாம் அப்படியே நம்நாட்டின் தலைநகரான டில்லியைப்பற்றியும் பாடலாம். அந்தப் பழைய இதிகாச காலத்திலேயே பெருமையுற்றிருந்த நகரம் அது. அதன் பின்னர் எப்படி எப்படி எல்லாமோ உருமாறி, இன்று திரும்பவும் புதுமை எல்லாம் நிறைந்த நகரமாக விளங்குகிறது அது. அதன் சரித்திரத்தில் எத்தனை ஏற்றங்கள், எத்தனை தாழ்வுகள், அத்தனைக்கும் ஈடுகொடுத்து அல்லவா அந்நகரம் அன்று முதல் இன்றுவரை தலைதூக்கி நிற்கிறது. பாரதத்தின் கதாநாயகர்களான பாண்டவர்கள், அஸ்தினாபுரத்தை ஒட்டி ஒரு புதிய நகரை சிருஷ்டி பண்ணி, அதனை இந்திரப்பிரஸ்தம் என்று அழைத்தனர். அங்கு வந்திருந்த கௌரவர்கள் அகௌரவப்படுத்தப் பட்டார்கள். அதனால்தான் தாயாதிச் சண்டை வலுத்தது. சூதிலே தோற்ற பஞ்சபாண்டவர்கள் நாட்டை விட்டுக் காட்டிற்குத் துரத்தப்பட்டார்கள் என்பது இதிகாச வரலாறு. அந்த பஞ்சபாண்டவர்கள் நிர்மாணித்த் இந்திரப்பிரஸ்தமே இந்த டில்லி மாநகரம் என்பது ஒரு வரலாறு. இதற்கு ஆதாரமாக நிற்பதுதான் புராணகிலா என்னும் பழைய கோட்டை. ஆனால் இந்த இடத்தில்தான் இந்திரப்பிரஸ்தம் இருந்தது என்பதற்கு யாதொரு ஆதாரமும் இல்லை தான். என்றாலும் புராணகிலா

என்பதிலிருந்தே அந்தப் பிரதேசத்தின் பழம்பெருமையை ஒருவாறு ஊகிக்கலாம் அல்லவா. சரி இந்த இந்திரப் பிரஸ்தம் எப்போது டில்லியாக மாறியது என்றும் அறுதி யிட்டுச் சொல்ல முடியவில்லை. தில்லி என்று வார்த்தைக்கு மனத்துக்கு இன்பம் அளிக்கும் இடம் என்று பொருளாம். பாண்டவர்கள் இருந்த இடம் என்று கேட்கும்போதே நமது மனம் குதூகலத்தால் துள்ளுகிறதே. ஆதலால் தில்லி என்ற பெயர் பொருத்தம்தான் என்று எண்ணுவோம். அந்தத் தில்லியே இன்று டில்லி என்று ஆங்கிலேயர் நாவில் தவழ்ந்து நம்மிடையேயும் வலுப்பெற்று நிற்கிறது. இந்த டில்லியைக் காணவே நாம் இன்று இங்கு வந்திருக் கின்றோம். டில்லிசலோ! என்று உங்களையெல்லாம் டில்லி நோக்கி ஆற்றுப்படுத்துகின்றேன் நானும்.

சென்னைக்கு வழிவாயிலே என்பர் நம் தமிழர். டில்லிக்கு வழி செல்லும் சிரமம் எனக்கு இல்லை. சென்னை சென்ட்ரல் ஸ்டேஷனில் கிராண்ட் டிரங்க் எக்ஸ்பிரஸ்ஸில் ஏறினால் கிட்டதட்ட 2200 கிலோ மீட்டர்களை 45 மணி நேரத்தில் கடந்து நேரே டில்லி நகர் சென்று சேரலாம். இப்படியே பம்பாயிலிருந்தும், கல்கத்தாவிலிருந்தும் டில்லி நோக்கி ரயில்கள் ஓடிய வண்ணமாகவே இருக்கின்றன. இன்னும் விரைவாகவே டில்லி செல்ல வேண்டும். என்றால் எல்லா ராஜ்யத்தின் தலைநகரிலிருந்தும்விமானம் மூலம் பறந்து வந்து சேரலாம். இத்தனை சிரமமும் இல் லாமல் நீங்களே மனோ வேகத்திலேயே நினைத்த மாத்திரத்தில், என்னோடு டில்லி வந்து சேர்ந்து விடு கிறீர்கள். டில்லியை அதே மனோ வேகத்தில் சுற்றி விட முடியாது தான். கொஞ்சம் ஆற அமர இருந்தே காண வேண்டும். குறைந்தது இரண்டு நாள் அவகாசமாவது வைத்துக் கொண்டு சுற்றுவோம். ஒரு நாளை பழைய டில்லிக்கு என்று ஒதுக்குவோம். மறு நாளை புதிய டில்லிக்கு என்று ஒதுக்குவோம். நாமோ பழம் பெருமை பாராட்டுகிறவர்கள். ஆதலால் முதலில் பழைய டில்லியையே சுற்றி வருவோம்.

டில்லி வந்து சேர்ந்ததும், நாம்சென்று காணவேண்டிய இடம் அண்ணல் காந்திஜி அமரர் ஆனபின் அவரது பூத உடலைத் தகனம் செய்த புண்ணிய பூமியையே தரிசிப் போம். அது தானே புது டில்லிக்கும் பழைய டில்லிக்கும் இடையே யமுனை நதிக் கரையிலே இருக்கிறது. அதைத் தானே ராஜ கட்டம் என்று புனிதமான பெயரால் அழைக் கின்றோம். அங்கு ஒரு பிருந்தாவனமே உருவாகியிருக் கின்றது. அங்கு இறங்கி காலில் உள்ள காலணிகளைக் களைந்து விட்டு அங்கு விற்கும் புஷ்பங்களை வாங்கிக் கொண்டு ராஜகட்டத்தை அணுகலாம்! காந்திஜியின் உடல் தகனமான மேடையில் மலர்களைத் தூவி வணங்கி அண்ணலுக்கு அஞ்சலி செலுத்தி விட்டு மீளலாம். அங்கிருந்து வடக்கு நோக்கி நான்கு பர்லாங்கு: நடந்தால், சரித்திரப் பிரசித்தி பெற்ற செங்கோட்டை, வந்து சேரு வோம். செங்கோட்டை மொகலாய மன்னன் ஷாஜஹா னால் கட்டப்பட்டது என்பது வரலாறு. 1638—ல் ஆரம் பித்து அதைக் கட்டிமுடிக்க 10 வருஷங்கள் ஆகியிருக் கின்றன. அக்கோட்டை 1100 அடி நீளமும் 550 அகலமும் உள்ள இடத்தில் ஒன்றரைமைல் விஸ்தீரணத்தில் பல கட்டிடங்களை உள்ளடக்கிக் கொண்டு கம்பீரமாக நிற்கிறது. அங்கு தான் சாதாரணமாக மக்களை மொகலாய மன்னர் சந்திக்கும் திவானி ஆமும், சிறப்பான வெளிநாட்டுத் தூதுவர்களைச் சந்திக்கும் திவானி காஸூம் இருக்கிறது, சிறந்த வேலைப்பாடுகளோடு கூடிய கட்டிடங்கள் அவை. அங்கு இன்னும் மும்தாஜ்மஹால், ரங்க்மஹால் முதலிய கட்டிடங்களும் இருக்கின்றன. திவானி ஆமீல் தான் பிரபலமான மயிலாசனம் இருந்திருக் கிறது, அதன் உத்தேசமான மதிப்பு பன்னிரண்டு லட்சம் பவுன் என்பர். அங்கேயே முத்துமசூதி ஒன்றும் இருக்கிறது. கலை அழகு நிரம்பிய கட்டிடம் அது. அத்தனையும் சுற்றிப் பார்த்துவிட்டு வெளியே வந்து தென்மேற்காக நடந்தால், பிரபலமான ஜூம்மா மசூதியண்டை வந்து சேருவோம். அங்குதான் முஸ்லிம் சகோதரர்கள் எல்லாம் பிரார்த்

தனை செய்யக் கூடுகின்றனர். பல்லாயிரக்கணக்கான மக்கள் கூடி இருந்து பிரார்த்தனை செய்யும் காட்சி கண் கொள்ளாக் காட்சியாகும். இம்மசூதிதான் உலகிலுள்ள மசூதிகளில் எல்லாம் பெரியது என்பர். இதை அக்காலத்தில் 10 லட்சம் ரூபாய் செலவில் கட்டியிருக்கிறார்கள். மசூதிக்கு முன்புறம்தான் ராம்லீலா மைதானம் என்ற பெரிய மைதானம் இருக்கிறது. பெரிய பெரிய கூட்டங்கள் அங்குதான் கூடுகின்றன சுதந்திர தினவிழாவையும், குடியரசு தினவிழாவையும் செங்கோட்டையில் கொடியேற்றிக் கொண்டாடும்போது. டில்லி மக்கள் அனைவரும் திரண்டு நிற்பதற்கு ஏற்ற மைதானமே அது. அத்தோடு ராமநவமி காலத்தில் ராவணன் முதலிய அரக்கர்களை பொம்மைகளாகச்செய்து அங்கு வைத்துத்தான் தீயிட்டுக் கொளுத்தி விழாக் கொண்டாடுவார்களாம்.

ஜும்மா மசூதிக்கு வடபுறம் கொஞ்சம் நடந்து சென்றால், பழைய டில்லியில் பிரபலமான சாந்தினி சௌக் என்னும் பெரிய தீவுக்கு வந்து சேருவோம். இந்த வீதியில் தான் ஷாஜஹான், ஔரங்கசீப் முதலிய முகலாய மன்னர்கள் கோலாகலமாக பவனி வந்திருக்கிறார்கள். சாந்தினி சௌக் என்றால் நிலவொளி வீசும் வீதி என்று பொருள். வீதியின் அகலம் 150 அடி. அதன் மேற்குக் கோடியில் பேத்பூரி மசூதியும் கீழ்க்கோடியில் ஒரு பிரபலமான சமணக் கோயிலும் இருக்கிறது. இந்தக் கோயிலுக்குச் செல்லும் வழியில்தான் சிஸ்கஞ்சு குருத்துவாரா இருக்கிறது. அது சீக்கியர்களுக்குப் புனிதமான இடம். அங்குள்ள ஆலமரத்தின் அடியில்தான் சீக்கியர்களின் ஒன்பதாவது குருதேவரான குருதேஜ் பஹதூர்சிங் என்பவர் மொகலாய மன்னன் ஔரங்கசீப்பால் கொலை செய்யப்பட்டிருக்கிறார். டில்லியில் இன்று சீக்கியர்கள் சென்று வணங்கும் பிரதான கோயில் இந்தக் குருத்துவாராதான். அழகிய விமானத்தோடு கூடிய பெரிய கட்டிடம் அது. அங்கு ஒவ்வொரு நவம்பர் மாதத்திலும் குருநானக்கின் பிறந்த

தினவிழாவும் குருதேஜ் பஹதூர் அமரரான தினமும் சிறப்பாகக் கொண்டாடப்படுகிறது.

இந்தக் குருத்துவாரா எல்லாவற்றையும் கடந்துதான் சமணர்கள் கோயிலான ஸ்ரீ திகம்பர் கோயிலுக்கு வர வேண்டும். டில்லியில் சமணக் கோயில்கள் முப்பத்தைந் திற்கு மேல் இருந்தாலும் இதுதான் அவர்களது பிரதான கோயில். சிறப்பான கட்டிடக்கலைக்கு எடுத்துக் காட்டாக இக்கோயில் விளங்காவிட்டாலும், அதனுடைய கிழக்கு வாயிலும், பொன்போர்த்த ஸ்தூபிகளும் மிக மிகஅழகாயி ருக்கின்றன. அங்குள்ளபிரதானகோயிலில்கோயில் கொண் டிருப்பவர் பார்சவநாதர். அவரே மகாவீரருக்கு முந்திய தீர்த்தங்கரர் என்பர். இக்கோயிலுக்குள் பல சிறு கோயில் கள் இருந்தாலும் சிறப்பான கோயில்,எட்டாவது தீர்த்தங் கரர் என்று கருதப்படும் சந்திரபிரபுவின் கோயில்தான் முக்கியமானது. இக்கோயிலில் உள்ள கல்வெட்டிலிருந்து இக் கோயில் 1526—ல் கட்டப்பட்டது என்று அறிகிறோம். இங்கு தான பறவைகளின் ஆஸ்பத்திரி ஒன்று நடத்தப்பட்டு வருகிறது. எவ்வுயிர்க்கும் அன்பாயிரு என்று சமண சித்தாந்தத்தைச் செயல்களில் காட்டக்கூடிய வகையில் ஆயிரக்கணக்கான பறவைகள் இங்கு சிகிச்சைக்கு வரு கின்றன. தினசரி ஆயிரத்துக்கு மேற்பட்ட பறவைகளுக்கு இங்கு சிகிச்சை செய்யப்படுகின்றன. உடல் நலம் பெற்ற பறவைகள் விடுதலை பெற்று பறந்து செல்வது அழகான காட்சி. உலகிலேயே பறவை ஆஸ்பத்திரி ஒன்று இவ்வளவு சிறப்பாக வேறு இடங்களில் நடக்கவில்லை. என்கின்றனர். இக் கோயிலில் நடக்கும் பெரிய திருவிழா தசலட்சமி விழா தான். டில்லித் தலைநகரிலே நடக்கும் பெரிய திருவிழாக் களில் இதுவும் ஒன்று. பல தரப்பட்ட படை எடுப்புகளுக்கும் இடிபாடுகளுக்கும் இடையில் நானூறு வருஷங்களாக இங்கு பூசை ஒழுங்காக நடக்கிறது என்றால் அது சிறப்பானது தானே.

இந்த வட்டாரத்திலே சமீப காலத்தில் எடுக்கப்பட்ட நரசிம்மர் ஆலயம் ஒன்றும் உண்டு. சாந்தினி சௌக்கில் பல திறப்பட்ட கடைகளும் உண்டு. டில்லி மிட்டாய்கள் என்று பிரபலமான மிட்டாய்களைக் ருசிபார்க்க வேண்டுமானால் மேற்கு நோக்கி நடந்து கண்டேவாலா கடைக்கு வந்து சேர வேண்டும். அங்குதான் சர்க்கரையைக் கொண்டு என்ன என்ன பலகாரம் செய்யலாமோ அத்தனையும் செய்து வைத்திருக்கிறார்கள். நூறுக்கு மேற்பட்ட வகையில் அங்கு பலகாரங்கள் உண்டு. எதை வாங்குவது, எதை வாங்காமற் விடுவது என்று புரியாமல் திணறி விடுவோம். பல்பெரும் சமயம் சொல்லும் பொருளும் போல் பரந்து நிற்கிறான் இறைவன் என்பான் கவிச்சக்கரவர்த்தி கம்பன். அதே போல் சாக்கரைப் பல்வேறு வடிவில் மிட்டாய்களாக உருவெடுத்திருக்கும் இங்கே.

இந்த சாந்தினி சௌக் பிரதேசத்திற்கும் மேற்கு பக்கத்தில் தான் கரோல்பாக் என்னும் பகுதியிருக்கிறது. டில்லி வாழ் தமிழ் மக்கள் எல்லாம் இங்குதான் வசிக்கின்றனர். எப்படி பம்பாயில் மாதுங்கா பகுதியிருக்கிறதோ அப்படியே டில்லியில் கரோல்பாக் இருக்கிறது. அங்குள்ள தமிழ் அன்பர்களைக் கண்டு அளவளாவிவிட்டு, அங்குள்ள தென்னிந்திய ஹோட்டல் ஒன்றுக்குச் சென்றால், சாம்பார் ரஸத்துடன் நம் நாட்டுச் சாப்பாடு கிடைக்கும். பழைய டில்லியில் நிரம்பக் சுற்றி விட்டோம். டில்லி சர்வகலா சாலை, மலேரியா ஆராய்ச்சிக்கூடம் எல்லாம் செல்வதென்றால் நமக்கு அலுப்புத் தட்டி விடும். ஆதலால் தமிழர் வசிக்கும் இந்த கரோல்பாக் பகுதியிலேயே இன்று தங்கி, நாளை புதுடில்லியினைப் பார்க்கப் புறப்படுவோம்.

# 42. புதுடில்லியில் பிர்லாமந்திர்



டெல்லி : பிர்லா மந்திர்

'பழையன கழிதலும், புதியன புகுதலும் வழுவல காலவகையினானே' என்றார் தமிழ் மொழிக்கு இலக்கணம் வகுத்த பவணந்திமுனிவர். இந்த நியதி இலக்கணத்திற்கு மாத்திரம் அல்ல நகரநிர்மாணத்திற்குமே ஒத்தது தான் என்னும் வகையில் நமது நாட்டின் தலைநகரான டில்லி பழைய டில்லியாகவும் புதிய டில்லியாகவும், உருப் பெற்றிருக்கிறது. ஆம், பழைமையைப் பூராவும் கழித்து

விட்டு புதுமை உருப்பெறவில்லை. அங்கே பழைமையும் புதுமையும் கைகோத்தே நடமாடுகின்றன அங்கே. புதுமை யும் பழைமையும் மாத்திரமா இணைகிறது. அங்கே கிழக்கும் மேற்குமே இணைகிறது. கட்டிடக்கலையானாலும் தத்துவ விசாரணையானாலும், உணவு, உடை, இசை, நாடகம் முதலிய எல்லாத் துறைகளிலுமே இந்த இணைப்பைப் பார்க்கின்றோம் நாம். இன்னும் வேகமாக ஓடும் மோட்டார் காரோடு நத்தைவேகத்தில் ஊர்ந்து செல்லும் கட்டைவண்டிகளும் ஓடும் அங்கே. குளிர்சாதனஅறைகளை உடைய பெரிய பெரிய ஹோட்டல்கள் ஒருபுறம், என்றால் தெருக்களிலே உள்ள பிளாட்பாரங்களிலும் கடைநடக்கும். பெரிய பெரிய மாடிக்கட்டிடங்கள் நிறைந்த வீதிகளிலே ஓலைக்குடிசைகளுக்கும் குறைவிருக்காது. பலதிறப்பட்ட நடன அரங்குகள் ஒருபுறம் இருந்தால், தெருக்களில் கிராமிய நடனங்கள் ஆடும் பெண்களும் இசைவாணவர் களுக்கும் குறைவிருக்காது. இப்படிப்பழைமையும் புதுமை யும், மேற்கும் கிழக்கும் கைகோத்து நடமாடுவதே இன்றைய டில்லி. இந்த டில்லியின் ஒரு பகுதியான பழைய டில்லியைத்தான் சென்றவாரம் சுற்றிவந்து விட்டோம். இன்று புது டில்லிப்பகுதிக்குப்போய் வருவோமா?

டில்லியின் சரித்திரத்தில் முஸ்லீம் ஆட்சிக்குப் பின் தான் விளக்கம் கிடைக்கிறது என்றாலும் பதினோராம் நூற்றாண்டிலிருந்தே அதன் சரித்திரச் சின்னங்கள் ஆங்காங்கே தென்படவும் செய்கின்றன. கி.பி. 1050—ல் அனங்கபால் என்ற மன்னன் கட்டிய ராஜ்குந்த் நகரத்தில் அடையாளமாக இன்றிருப்பது பாழடைந்த ஒருகுளமும், சில இடிந்த கட்டிடங்களும், சூரியனுக்கு ஒரு கோயிலும் தான். இந்த அனங்கபாலுக்குப்பின்தான் முகம்மது கோரி படை எடுத்திருக்கிறான். அவனுக்குப்பின் வந்த ஆட்சிக்கு அடையாளமாக குதுப்மினார் எழுந்து நிற்கிறது. இது கூடச்சரியில்லை. இந்தக் குதுப்மினார் கோபுரத்தை 'தன் காதல்மனைவி சம்யுக்தை யமுனையைத் தரிசிப்பதற்காக பிருதிவிராஜனே கட்டிவைத்தான் என்றும் ஒரு கர்ணபரம்

பரைக் கதை உண்டு. பல்வகை படைஎடுப்புக்கெல்லாம் ஆளாகி நின்ற டில்லி மொகலாய மன்னர்கள் காலத்தில் தான் சீரும் சிறப்பும் பெற்றிருக்கிறது. பின்னர் வெள்ளைக் காரர் ஆட்சியில், நாட்டின் தலைநகராம் கல்கத்தாவிற்கு மாற்றப்பட்டதன் காரணமாக டில்லி பொலிவிழந்திருக் கிறது. திரும்பவும் 1911-ல் தலைநகராம் டில்லிக்கு மாற்றப்பட்ட பின்பே புது டில்லி உருவாக ஆரம் பித்திருக்கிறது. இன்றோ புது டில்லிதான் நமது நாட்டின் பிரதான ஆட்சி பீடமாக விளங்குகிறது. ஆதலால் முதல் நாள் நாம் தங்கியிருந்த கரோல்பாக்கி லிருந்து தென் கிழக்காக வந்து புது டில்லிப் பகுதிகளைப் பார்க்கலாம். விறு விறு என்று பெரிய ராஜ வீதிகளைக் கடந்து, நம் நாட்டின் தலை விதியை நிர்ணயிக்கும் பார்லிமெண்ட் கட்டிடத்திற்கே முதலில் போகலாம். 1921—ல் இக் கட்டிடம் கட்ட அஸ்திவாரம் இடப்பட்டு 1927—ல் தான் கட்டி முடிக்கப்பட்டிருக்கிறது. வட்ட வடிவமான பிரம்மாண்டமான கட்டிடம் அது. அதன் சுற்றளவு அரை மைல் தூரம். கட்டிடத்தின் மத்திய டோமின் குறுக்களவு நூறு அடி, லண்டன் செயின்ட் பால் சர்ச்சின் டோம் போன்று பெரியது. இதன் மாடியைத் தாங்கி நிற்பவை 144—தூண்கள். ஒவ்வொன்றும் 27 அடி உயரம் ஓங்கி நின்று கட்டிடத்திற்கு அழகு தருகிறது. அக் கட்டிடத்தில் காரியாலயங்களுக்கு என ஒதுக்கிய இடம் போக மக்கள் சபையும் ராஜ்யசபையும் கூடுவதற்காக மூன்று பெரிய ஹால்கள் உண்டு. உள்ளேயுள்ள முற்றத்தில் விக்கிரமாதித்தன் சிலை ஒன்றும் நிறுவப்பட்டிருக்கும். மக்கள் சபை நடக்கும்போது அனுமதி பெற்றே உள்ளே நுழையவேண்டும். கட்டிடத்தை சுற்றிப்பார்ப்பதற்கு அதிகாரிகள் அனுமதி பெறவேண்டும்.

பார்லிமெண்ட் கட்டிடத்திலிருந்து தெற்கு நோக்கி நடந்தால் கூப்பிடு தூரத்திலேயே அரசாங்கக் காரியாலயங் கள் இருக்கின்றன. இவை இரண்டும் பெரிய கட்டிடங்களாக

இருக்கும். வடக்குப் பகுதி தெற்குப்பகுதி என்று கூறுவர், உள்ளே நுழைவதற்கு அனுமதி வேண்டாம் என்றாலும் அங்குள்ளவர்கள், எங்கு உள்ளார்கள் என்பதை அறிய துணை வேண்டும் உள்ளே சென்று விட்டால் வெளியே வருகின்ற வழியே தெரியாது. வளைந்து வளைந்து எத்தனையோ படிக்கட்டுகளும் வராந்தாக்களும், இங்கு அதிக நேரம் செலவழித்து வீண்பொழுது போக்க வேண்டாம். நாம் ஏதோ பெர்மிட்டோ ராஜ்யசலுகையோ தேடி வந்தவர்கள் அல்லவே.

இந்த சர்க்கார் காரியாலயங்களுக்கு இடையே செல்லும் ராஜவீதியில் மேற்கு நோக்கிச்சென்றால் ராஷ்டிரபதி பவன் வந்து சேருவோம். பிரம்மாண்டமான கட்டிடம் அது. அங்கு தானே பிரிட்டிஷ் சாம்ராஜ்ய பிரதிநிதியான வைஸ்ராய் அங்கு தங்கியிருந்திருக்கிறார். அங்கு நமது ராஷ்டிரபதி குடியரசுத் தலைவர் இன்று தங்கியிருக்கிறார். அங்கு நுழையவும் அனுமதி பெற வேண்டும். பற்பல ஹால்களைக் கடந்து ராஷ்டிரபதி பிரபலஸ்தர்களுக்குப் பேட்டி கொடுக்கும் மண்டபத்திற்கு வந்து சேருவோம். தரையெல்லாம் மெத்தென்ற கம்பளங்கள். அங்கெல்லாம் பெரிய பெரிய படங்கள் தங்கமுலாம் பூசிய சோப்'ப்பாக்கள், அங்கெல்லாம் நிற்கவே நம் கால்கள் கூசும். கட்டிடத்திற்கு பின் பக்கம் உள்ள தோட்டம்தான் மொகல் கார்டன்ஸ் என்னும் பெரிய பூங்கா, அங்கு சென்றால் அதுதான் பூலோக சுவர்க்கமோ என்று தோன்றும். அதைவிட்டு வெளியே வரவே மனம்இராது. இன்னும் கலை அழகில் ஈடுபட்டவர்கள் என்றால் அங்குள்ள பொருட்காட்சி சாலையிலும்நுழைந்து பலபொருட்களைக் காணலாம்.

ராஷ்டிரபதி பவனிலிருந்து கிழக்கு நோக்கிச் செல்லும் ராஜவீதியில் நடந்தால், இந்தியா கேட் என்னும் இடத்திற்கு வரலாம். இந்த ராஜவீதியில்தான் சுதந்திரதின அணிவகுப்பு நடக்கும். அதைக் காணவே இந்திய மக்கள்

அனைவரும் திரண்டு எழுவர். அந்த வீதியில் நடக்கும் போது நமக்கு ராஜநடைபோட வரும். அங்கிருந்து வடமேற்காக நகர்ந்தால் புதுடில்லியின் பிரதான வியா பார ஸ்தலமான கான்னாட் பிளேஸ் என்னும் இடத்திற்கு வந்து சேருவோம். அங்கு விலைக்குக்கிடைக்காத சாமான் களே இராது. பணம்மட்டும் நிறைய இருந்தால் எந்தப் பொருளையும் வாங்கலாம்.

என்ன இப்படியே கட்டிடம், கடைகள் என்று இழுத்து அடித்துக்கொண்டு இருக்கிறீர்களே கோயிலே கிடையாதா என்று தானே கேட்கிறீர்கள்? புதுடில்லியில் பிரதான கோயிலான லட்சுமி நாராயணன் கோயிலுக்கே நடக்க லாம். கான்னாட் பிளேஸ் என்னும் வியாபாரத் தலத்திற்கு நேர்மேற்கே ஒருமைல் சென்றால் லட்சுமி நாராயணன் கோயிலுக்கு வந்து சேரலாம். டில்லியில் லட்சுமி நாராயணன் கோயில் என்றால் யாருக்கும் தெரியாது. பிர்லா மந்திர் என்று சொன்னால் தான் தெரியும். காரணம் இக்கோயிலைக் கட்டிய பெருமகன் சுகல் கிசோர் பிர்லா என்பவரே. அவரது பெயராலேயே கோயில் வழங்குகிறது. கோயில் ஒரிஸ்ஸா என்னும் கலிங்கப் பிரதேசத்தில் உள்ள கோயிலைப் போல் கட்டப்பட்டிருக்கிறது. பிரதான கோயிலுக்கு மூன்று சிகரங்கள், தமிழ் நாட்டுக் கோயில்களைப் போல் மாடத்தின் பேரிலே தான் கட்டப்பட்டிருக்கிறது. பல படிகள் ஏறியே கோயிலுக்குச் செல்லவேண்டும். இக் கோயில் முழுவதும் சிவந்த கற்களாலும், வெள்ளைச் சலவைக் கற்களாலும் கட்டப்பட்டவை. கோயில் சுவர் களில் எல்லாம் வேதம், உபநிஷதம், கீதை முதலிய நூல்களில் இருந்து வாக்கியங்கள் எழுதி வைக்கப்பட் டிருக்கும். இங்குள்ள பிரதான கோயிலில் லட்சுமி சமேதனாக நாராயணன் சலவைக்கல் வடிவில் நின்று கொண்டிருக்கிறார். சிறந்த சிற்பவடிவம் அல்ல, பட்டு உடுத்தி பணிபூண்டு நிற்பார். கோயில் வாயிலில் ஒரு

பக்கம் அனுமனும், மறுபக்கம் விநாயகனும் நிற்பர். இந்த லட்சுமி நாராயணன் கோயிலுக்கு வடபுறத்தில் காளிக்கும், இடப்பக்கத்தில் சிவனுக்கும் தனித்தனி சந்நிதிகள். இவர்களை எல்லாம் வலம் வந்து பின்புறம் உள்ள திறந்த வெளிக்குச் சென்றால் அதை ஒரு பூங்காவாக அமைத்திருக்கிறார்கள். அங்கே கீதா போதகனான கண்ணன் இருப்பான். அங்குள்ள புலிக்குகை தடாகம் எல்லாம் கடந்து சென்றால் மேற்கு வாயிலை அடைவோம். அந்த வாயிலைத் தமிழ் நாட்டுக்கோபுரம் ஒன்றும் அழகு செய்யும். இனி தென்பக்கம் திரும்பினால் அங்கு அசோகன், விக்கிரமாதித்தன், பிரிதிவிராஜ் எல்லாம் சிலை உருவில் காட்சி கொடுப்பர். இன்னும் இரண்டு யானைகளும் தும்பிக்கையை உயர்த்திக் கொண்டு சிலை உருவில் நிற்கும். அதற்கும் தென்புறம்தான் புத்தர் பெருமானுக்கு ஒரு கோயில். அதன் சிகரம் புத்தகயையில் உள்ள சிகரம் போலவே இருக்கும். அங்குள்ள சுவர்களில் எல்லாம் தம்ம பதத்திலிருந்து வாக்கியங்கள் பொறிக்கப் பட்டிருக்கும். பிரார்த்தனை செய்வதற்கு உரிய பெரிய பிராத்தனைக் கூடமும் இருக்கும். பிரதான கோயிலுக்கு வடபுறம் தான் கீதாமந்திரும் தர்மசாலையும் இருக்கும். தர்மசாலையில் டில்லி செல்லும் அன்பர்கள் மூன்று நாட்கள் இலவசமாகவே தங்கலாம். ஆனால் இடம் கிடைப்பது தான் கஷ்டம். கீதாமந்திரிலே எந்நேரமும் பாராயணமும், பஜனையும் நடக்கும். நாமும் சென்று அமைதியாக இருந்து பஜனையில் கலந்து கொள்ளலாம். இந்த பிர்லாமந்திரில் எல்லாம் சலவைக்கல்லில்தான் தெய்வத் திரு உருவங்கள் அமைக்கப்பட்டிருக்கின்றன. கோயிலுக்குச் சென்று ஒரு மணி நேரம் தங்கியிருந்து திரும்பும்போது கோயிலுக்குச் சென்று திரும்புவது போல் இராது. தமிழ் நாட்டுக் கோயில்களில் உள்ள சாந்நித்யம் இராது. ஏதோ உல்லாசமாகப் பொழுது போக்க ஒரு பங்களாவிற்குச் சென்று வந்த உணர்ச்சியே இருக்கும் என்றாலும், சைவம், வைஷ்ணவம் சாக்தம், பௌத்தம் முதலிய எல்லா சமயங்களும் இணைந்

திருக்கும், இத்தலத்தினைப் பார்க்கும் போது தேசிய ஒருமைப்பாட்டை உருவாக்கச் சமயமும் கலையும் தான் உதவும் என்ற எண்ணம் வலுப்பெறும். எல்லா மதத்தினரும் இணைந்து அங்கு பிரார்த்தனை செய்கிறார்களே.

ஒன்று சொல்ல மறந்து விட்டேன் கான்னாட் பிளேசுக்குத் தென்புறம் தான் ஐந்தர்மந்தர் என்ற விஞ்ஞானக் கூடம் இருக்கிறது. இதைத்தான் ஜெய்ப்பூர் மகாராஜா ஜெய்சிங் என்பவர் 1710—ல் கட்டினார் என்பர். முன்னரே தெரிந்திருக்கின்றோம், வானசாஸ்திர விற்பன்னரான ஜெய்சிங் மகாராஜா ஜெய்ப்பூரிலும் உஜ்ஜயினிலும் காசியிலும், மதுராவிலும் இத்தகைய விஞ்ஞானக் கூடங்களைக் கட்டினார் என்பதாக இங்கு பற்பல யந்திரங்கள், எல்லாம் செங்கல்லால் கட்டப்பட்டவை சாம்ராட் யந்திரம், ஜெய் பிரகாஷ், ராம் யந்திரம், மிர்ஸா யந்திரம், நியாத் சக்கா, முதலியவை எல்லாம் கண்டு வான சாஸ்திர நிபுணர்கள் வியந்து நிற்க வேண்டும், காலத்தை அளந்து காட்டும் கருவிகள் அவை என்பதற்கு மேல் சாதாரண அறிவுபடைத்த நமக்கு என்ன தெரியும். இதற்கும் பக்கத்திலே தான் அகில இந்திய வானொலி நிலையம் இருக்கிறது. அந்த நிலையத்தின் முகப்பில் சலவைக்கல் வடிவில் மீரா தம்புரா ஏந்திப் பாடிக் கொண்டிருப்பாள். இங்கிருந்து ஒரு மைல் தூரம் கிழக்கே நடந்தால் ராமர் கோயிலைக் காணலாம், என்றார்கள். அதன் படியே நடந்து சென்றேன். அங்கு நான் கண்டது ராமரை அல்ல. பிரம்மாண்டமான வடிவில் ஓர் அனுமார் கோயிலைத்தான் அக்கோயிலின் கோபுரத்திலே ஒரு சிறு மாடக் குழியில் இரண்டு சின்னஞ்சிறு பொம்மைகள். அவைகளே ராமர் சீதை என்கின்றனர். காவிரிக் கரையிலுள்ள கோயில்களில் சர்வாங்க சுந்தரனான ராமனைக் கண்ட கண்களுக்கு என்ன ஏமாற்றம் இந்த ராமன்வடிவிலே!

இவ்வளவுதான் புதுடில்லியில் பார்க்க வேண்டியது, என்று நான் சொன்னால் என் பேரன் கேட்கிறான், 'என்ன தாத்தா டில்லி என்ற உடனேயே பள்ளிப் பிள்ளைகளாகிய

எங்கள் கண்முன் வருவது குதுப்மினார்தானே? அதை நீங்கள் காட்டவே இல்லையே? என்று. குதுப்மினார் புது டில்லிக்கும் தெற்கே ஏழுமைல் தூரத்தில் இருக்கிறது. டாக்சி வைத்துக் கொண்டுதான் செல்லவேண்டும். செல்லும் வழியில் ஜப்தார்ஜங் பிரோஜ் ஷா முதலியோர் மசூயையும் போத்திகிமஜ்ஜித், பீகம்பூர் மஜ்ஜித் முதலிய வைகளையும் காணலாம். தெற்குக் கோடியில்தான் குதுப் மினார் என்னும் கோபுரம், 238-அடி உயர்ந்திருக்கிறது. தஞ்சை பெருவுடையாரது விமானம் 216-அடிதான் என்று தெரியும். அதைவிடவும் உயரமானது இது. இதனை வெளியில் நின்று பார்த்தாலே மிக்க கம்பீரத்தோடு காட்சி அளிக்கும். ஐந்து தட்டுக்களை உடையது அந்த கோபுரம். கோபுரத்திற்குள்ளேயே நல்ல படிக்கட்டுகள் கட்டி வைத்திருக்கிறார்கள். 379 படிகள் கடந்து சென்றால் தான் அக்கோபுரத்தின் உச்சிக்கு ஏறமுடியும். ஏறுவது சிரமமே. ஆனால் ஏறிவிட்டால் டில்லி நகர் முழுவதையும் அங்கிருந்து நோட்டம் விடலாம். இதன் பக்கத்திலே அசோகர் கட்டியதாகக் கருதப்படும் இரும்புத்தூண் இருக் கிறது. இத்தனை நூற்றாண்டுகள் கழிந்தும் வழவழ என்று இருக்கிறது. இன்னும் இந்தப் பிரதேசத்தில் அல்டாமிஷின் சமாதியும், அலாய்தர்வாஸாவும், அலாய் மினாரும் இருக் கிறது. இவைகளில் எல்லாம் நமக்கு அக்கறை இராது. குதுப்மினார் இருக்கும் பிரதேசத்திலேயே ஜாக் மாயா கோயில் ஒன்று இருக்கிறது. இதனை பஞ்சப் பாண்டவர் களில் மூத்தவரான யுதிஷ்டிரரே கட்டினார் என்று கதை. கண்ணனின் சகோதரியான ஜாக்மாயா தேவிக்கு என்று அமைந்த கோயில். நானூறு சதுர அடி விஸ்தீரணத்தில் இருக்கும். இக்கோயிலில் பிரகாரத்தில் சின்னஞ்சிறு கோயில்கள் பல இருக்கும். க்ஷேத்திராடனம் புறப்பட்ட நாம் ஜாக்மாயா தேவியையும் வணங்கியே திரும்பலாம் தானே.

# 43. சண்டிகரில் சண்டி

'பழையன கழிதலும் புதியன புகுதலும் வழுவல கால வகையினானே என்பது ஒரு இலக்கணச் சூத்திரம். இலக்கியம், கலை என்பதில் எல்லாம் ஒரு மரபு உண்டு. அம்மரபுக்கு விரோதமாக எழுதுவதோ பேசுவதோ, சித்திரிப்பதோ எல்லாம் மக்களால் போற்றப்படமாட்டாது என்றாலும், இந்த மரபையும் மீறி காலத்திற்கு ஏற்ற வகையில் இலக்கியச் சொற்களை எல்லாம் ஒதுக்கிவிட்டு, மக்கள் நாவில் நின்று நடமாடும் சொற்களை வைத்தே சிறந்த இலக்கியங்களைப் படைக்க முடியும் என்று அமரகவி பாரதி காட்டிவிடவில்லையா? அதே போலக் கட்டிடக் கலையிலும் தமிழகத்தில் பல்லவர்பாணி, சோழர்பாணி, நாயக்கர் பாணி என்று பலதரப்பட்ட பாணிகள் இருப்பது தெரியும், அடிப்படை மரபுக்கு முரண் இல்லாத வகையில் காலத்துக்கு ஏற்ற முறையில் பாணிகளை உருவாக்கும் திறம் மக்களிடையே, கலைஞர்களிடையே என்றுமே இருந்து வந்திருக்கின்றது.

இந்த இருபதாம் நூற்றாண்டின் பிற்பகுதி சுதந்திர யுகமாக இருக்கிறது. பல வருஷங்களாக ஆங்கில ஆட்சியின் கீழ் அடிமை நாடாக இருந்த நமது பாரதம், சுதந்திரம் பெற்றது. இன்னும் ஆசிய ஆப்பிரிக்கா நாடுகள் பல தங்கள் தங்கள் அடிமைத் தளைகளை உதறிவிட்டு சுதந்திர நாடாக இயங்கத் துவங்கியிருக்கிறது. 'எங்கும் சுதந்திரம் என்பதே பேச்சு' என்ற முழக்கமே எங்கும் கேட்கிறது. பேச்சு சுதந்திரம், எழுத்து சுதந்திரம், தனி மனிதனின் சுதந்திரம் என்றெல்லாம் சுதந்திர உணர்ச்சியோடு மக்கள் வாழ்கின்றனர். கலை உலகில் இந்த சுதந்திர மறுமலர்ச்சியைப் பார்க்கின்றோம். கட்டிடக்

கலையிலும் நகர நிர்மாணித்திலுமே ஒரு புரட்சியை ஏற்படுத்தியிருக்கிறார்கள். குறுகிய வீதிகள் மறைந்து, அகன்று பரந்த வீதிகள் தோன்றியிருக்கின்றன. வாயில்களுக்கு மேலேயுள்ள கதவங்கள் மறைந்திருக்கின்றன. சன்னல்களைச் சுற்றி தகடுகள் அமைத்து அதன் மூலம் சூரிய ஒளியையே உடைத்து கொஞ்சம் கொஞ்சமாக அதன் ஒளிவர வகை செய்திருக்கிறார்கள். நிரம்பச் சொல்வானேன்? கட்டிடங்களின் மாடிகளுக்கு ஏறப் படிக்கட்டுகள் இல்லாமல் பாதையை ஒரு ஸ்லோப்' கொடுத்து அமைத்து சிறிதும் சிரமம் இல்லாமல் மாடி ஏறவகை செய்திருக்கிறார்கள். இப்படி எல்லாம் எங்கு ஐயா நடந்திருக்கிறது என்றுதானே கேட்கிறீர்கள். அப்படி பழைய மரபுகளை ஒதுக்கி, புதியதொரு சுதந்திர மரபை உருவாக்கிக் கட்டிய கட்டிடங்களையும், நகர அமைப்பையும் கொண்டது இன்றைய பஞ்சாபின் தலைநகரமான சண்டிகர் என்னும் பட்டணம். அந்த சண்டிகரை நோக்கியே செல்கிறோம் நாம் இன்று. ''பழைய மரபு என்று பிணைப்படாமல், சுதந்திர இந்தியாவின் சின்னமாக அமைந்த நகரம் இது'' என்று நமது பாரதப்பிரதமர் நேருஜீ அவர்கள் ஒரே வாக்கியத்தில் இந்த நகர நிர்மாணத்தை புகழ்ந்திருக்கிறார்கள். சண்டிகர் செல்ல நான் வழி சொல்ல வேண்டியதில்லை. ஒரு பெரிய ராஜ்யத்தின் தலைநகருக்கு வழி நான் சொல்லியா தெரிய வேண்டும். டில்லியிலிருந்து சிம்லா செல்லும் வழியில் அம்பாலாவிற்கும் கால்காவிற்கும் இடையில் இருக்கிறது டில்லியிலிருந்து ரயிலில் போகலாம். விமானம் மூலமாகவும் போகலாம். ரோடு வழியே காரில் போகிறவர்கள் என்றால் அம்பாலாகால்கா பெருவழிப் பாதையிலிருந்து பிரிந்து செல்லும் அம்பாலா ரூபர் ரோட்டில் நான்கு மைல் செல்ல வேண்டும். சண்டிகரிலிருந்து அம்பாலா, பாடியாலா, சிம்லா முதலிய முக்கியமான நகரங்களை இணைக்க நல்ல ரோடுகள் போட்டிருக்கிறார்கள். இந்தியா பாகிஸ்தான் பிரிவினை ஏற்பட்ட போது பாகிஸ்தான் எல்லையில் இருந்த மக்கள் பலர்

இந்தியாவை நோக்கி ஓடி வந்தனர். இந்த அகதிகளுக்கு வாழ இடம் கொடுக்க வேண்டியிருந்தது. அத்தோடு பஞ்சாபில் பழைய தலை நகரான லாகூர் பாகிஸ்தானுக்கு போய் விட்டதன் காரணமாக இந்தியாவுடன் இணைந்து நின்ற பஞ்சாப் பகுதிக்கு ஒரு தலை நகரை நிர்மாணிக்க வேண்டிய அவசியமும் இருந்தது. அப்போது தான் இப் பொழுது சண்டிகர் என்னும் தலைநகர் அமைந்திருக்கும் இடத்தை, ஆம் 15 சதுர மைல் பிரதேசத்தை தேர்ந்து எடுத்தனர் அரசாங்கத்தார். சண்டிகரை அடுத்த ரூபர் என்னும் இடத்தில் புதைபொருள் ஆராய்ச்சி நடத்திய போது அந்த மகஞ்சதாரோ, ஹரப்பா நகரங்களைப் போல் ஒரு பெரிய நகரமே புதைந்து போயிருக்கிறது என்றும் தெரிந்தது. ஆம் ஐயாயிரம் வருஷங்களுக் முன் சிந்துவெளி நாகரிகம் பரவியிருந்த இடத்தில் இந்த சண்டிகர் நகரம் என்னும் புதிய தலைநகரம் நிர்மாணிக்கப்பட்டது என்றால் அது சரித்திரப் பிரசித்தி உடையது தானே! இந்தப் பிரதேசத்திற்கு சண்டிகர் என்று பெயர் அமைப் பானேன் என்று தானே கேட்கிறீர்கள். ஆம். வடநாட்டின்! பிரதான தேவதை காளி என்பதை அறிவோம். காளி கட்டம் தானே இன்றைய கல்கத்தா. இந்தக் காளியையே சாமுண்டி, சண்டி சியாமளா என்ற பல பெயரில் வழி பட்டு வந்திருக்கிறார்கள். சண்டிகரை அடுத்த ஒரு சிறு மலைத் தொடரில் சண்டி தேவிக்கு ஒரு கோயில் அமைத்து வழிபட்டிருக்கிறார்கள் மக்கள். அந்த சண்டிதேவியின் அருள்நிழலில் அமைக்கப்பட்ட நகரம் ஆனதால் 'சண்டிகர்' என்ற பெயரோடு அந்த நகரம் நிர்மாணிக்கப்பட்டிருக் கிறது.

சண்டிகர் சென்றதும் நாம் முதலில் அதிசயித்து நிற்பது அதன் அகலமான வீதிகளைப் பார்த்தே. அந்த நகரில் ஏழு விதமான வீதிகள் இருக்கின்றன. இதில் சிறப் பானது விரைவாகச் செல்லும் கார்களுக்கு என்று மைக்கப்பட்டிருக்கும் பெரிய வீதிகளே. இந்தப்

பெரு வீதிகளிலே தான் டவுன் பஸ்ஸும் போகிறது. பிரயாணிகள் அதிகநேரம் காத்து நிற்காதவகையில் அடுத்தடுத்து பஸ்கள் ஓடிக்கொண்டிருக்கும் மெதுவாகச் செல்லும் வண்டிகளுக்கு என்று தனிப்பாதை, சைக்கிளில் செல்பவர்களுக்கு என்று ஒதுக்கப்பட்ட பாதைகளும் பாதசாரிகளுக்கு என்று ஒதுக்கப்பட்ட பாதைகளும் உண்டு. புதிதாக அமைக்கும் நகரத்தின் பாதை அமைப்பு மனித உடலில் ஓடும் ரத்தக் குழாய்கள் போன்றவை. ஆகவே அவைகளின் அமைப்பிலும் அவைகளைப் பாதுகாப்பதிலும் மிக்க கவனம் செலுத்தப்பட வேண்டும். அந்த அக்கறை இந்த நகரத்தில் காட்டப்படுகிறது.

இனி இங்குள்ள கட்டிடங்கள், மக்கள் குடியிருக்கும் வீடுகள், சர்க்கார் காரியாலயங்கள், மக்கள் பொழுது போக்காக அமைந்த உத்தியான வனங்கள், சினிமாக் கொட்டகைகள், இன்னும் பல்பண்டம் வாங்க அமைந்த கடைத்தெருக்கள் என்று பற்பல வகையான கட்டிடங்கள். இங்குள்ள சர்க்கார் உத்தியோகத்தில் உள்ளவர்களுக்கு எல்லாம் கட்டடம் கட்டிக் கொடுத்திருக்கிறார்கள். சர்க்கார் சேவகனாக வேலை பார்க்கும் ஒவ்வொரு சப்ராசிக்கும் தனித்தனி வீடு என்றால் அதிகம் சொல்வானேன். வீடுகள் என்றால் ஓலைக்கூரை குடிசைகளா? இல்லை. எல்லாம் நல்ல சிமெண்ட்டு காரைக்கட்டிடங்கள். காற்றோட்டமுள்ள அறைகள்-வராந்தாக்கள், சமையல் கூடம், குளிக்கும் அறை, நவீன வசதியோடு கூடிய கக்கூசுகள், எல்லாம் மின்சார விளக்கு வசதிகளுடன் என்று அமைத்திருக்கிறார்கள். இந்த வீடுகளைப் பார்க்கும் போது நமது சர்க்கார் பெரிதும் பேசுகின்ற ஜனநாயக சோஷியலிசம் எப்படி உருவாகிக் கொண்டிருக்கிறது என்பது தெரியும்.

**எல்லாரும் எல்லாப்**
**பெருஞ் செல்வமும் எய்தலாலே**
**இல்லாரும் இல்லை உடையார்களும்**
**இல்லைமாதோ.**

என்று கவிச்சக்கரவர்த்தி கம்பன் அன்று பாடினானே அவன் கண்ட ராமராஜ்ஜியத்தைப் பற்றி அதுதான் இப்படி உருவாகிக் கொண்டிருக்கிறதோ என்று தோன்றும்.

இன்னும் ஹைகோர்ட், சட்டசபைக் கட்டிடம், செக்ரடேரியட் என்னும் சர்க்கார் காரியாலயம் எல்லாம் இரும்பும் சிமெண்ட்டும் கொண்டு செய்த அற்புத சாதனைகள். இவைகளில் சன்னல் அமைந்திருக்கும் அழகே தனி. அவற்றையே 'ஸன்ப்ரேக்கர்ஸ்' என்ற புதிய பாணி என்கின்றனர். இன்னும் சில கட்டிடங்களில் சுவர் களில் குண்டுக்கற்களை அப்படி அப்படியே வைத்துக்கட்டி அதன்பேரில் பூச்சு இல்லாமலும் விட்டிருக்கிறார்கள். அது கொஞ்சம் கரடு முரடான வேலைதான் என்றாலும் பார்ப் பதற்கு அழகாகவே இருக்கிறது. எதையும் அழகு செய்தல் கூடும் என்று காட்டும் திறன் இக்கட்டிடக் கலை நிபுணர் களிடம் இருக்கிறது.

என்ன பாதைகளையும் கட்டிடங்களையும் பற்றியே சொல்லிக் கொண்டிருக்கிறீரே இங்கே கோயில்கள் ஒன்றுமே கிடையாதா என்று கேட்கிறீர்களா. நகரத்தின் மத்தியில் மருந்துக்கு கூட ஒரு கோயிலைக்காணோம். ஆல மரத்தடி விநாயகரோ இல்லை, அரசமரத்தடிப் பிள்ளையாரோ அங்கு எழுந்தருளவில்லை தான். என் றாலும், ஊருக்கு வடமேற்காக உயர்ந்திருக்கும் ஒரு சிறு குன்றின் மேல் நான் முன்னரே சொன்ன 'சண்டி' என்னும் மகாகாளிக்கு ஒரு கோயில் இருக்கிறது. கோயில் எண் கோணவடிவத்தில் சிறிய அளவில் இருக்கிறது. கோயிலை ஒரு சிகரம் அழகு செய்கிறது. அந்தச் சிகரத்தைச் சுற்றி பல சிகரங்கள் அமைந்திருப்பதுபோல ஒரு தோற்றம். கோயிலுக்குள் கருத்த அன்னையாம் காளி இருக்கிறாள். வீரம் மிகுந்த பாஞ்சால தேசத்து மக்கள் வணங்கும் காளி காண்பதற்கு பயங்கரியாகவும் இல்லை, அலங்காரியாகவும் இல்லை. சுற்றிலும் புதர் மண்டிக்கிடக்கிறது. இது புதிய நகர நிர்மாணிகளால் கட்டப்பட்டதில்லே. முன்னரே

கட்டப்பட்ட சிறிய கோயில். இங்கு வருவார் போவாரும், அதிகம் இல்லை. இன்றைய பஞ்சாபின் தலைநகருக்கு பெயர் கொடுத்த பெருமை தவிர அதற்கு வேறு பெருமை இருப்பதாகத் தெரியவில்லை.

இங்கிருந்து கால்கா செல்லும் பாதையில் பதின்மூன்று மைல் வடக்கு நோக்கிச் சென்றால் நாம் பிஞ்சோர் தோட்டம் என்னும் இடத்திற்கு வந்து சேருவோம். இத் தோட்டம் முகலாய மன்னர்களால் அமைக்கப்பட்ட ஒன்றாம். இத்தோட்டத்தை ஆதர்சமாக வைத்தே ராஷ்டிரபதி பவனில் உள்ள 'மொகல் கார்டன்ஸ்' அமைக்கப் பட்டதென்கின்றனர். கண்கவர் வனப்புடைய தோட்டம் அது. எங்கு பார்த்தாலும் பசுமை. மலர்களோ பூத்துக் குலுங்கி லாகூரோ, அல்லது காஷ்மீரோ சென்று அங்குள்ள ஷாலிமார் குல்மார்க் தோட்டங்கள் முதலியவைகளைக் காணும் வாய்ப்பு இல்லாதவர்கள், இத்தோட்டத்தைப் பார்த்து திருப்தி அடையலாம். சிற்றுண்டி உடன் எடுத்து சென்றிருந்தால் அங்குள்ள அழகான சூழ்நிலையில் அவற்றை அருந்தி ஆனந்திக்கலாம். இங்கிருந்து பத்துப்பதினைந்து மைல் தொலைவிலேதான் கால்கா என்னும் இடம் இருக்கிறது. அதுவரை சாதாரண ரயிலில் சென்று அதன் பின் 56 மைல்கள் மலைமீது செல்லும் ரயிலிலோ அல்லது காரிலோ சிம்லா என்னும் மலைவாசஸ்தலம் செல்ல வேண்டும். கால்கா என்ற பெயரிலிருந்தே தெரிந்திருக்கும். அதுவும் ஒரு காளியின் தலம்தான் என்று. ஆம் அங்கு ஒரு சிறு காளிகோயில் உண்டு. காளிகா என்பதே கால்கா என்று வழங்குகிறது. வேறு சிறப்பாகக் கூற ஒன்றும் கிடையாது.

# 44. குருக்ஷேத்திரத்தில் கண்ணன்

வட நாட்டில் பிரசித்தமான நதிகள் கங்கையும் யமுனையும் தான். அவை இரண்டும் கலக்கின்ற பிரயாகையிலே சரஸ்வதி நதியும் கலக்கிறது, என்பர்; ஆனால் இந்த சரஸ்வதி நதியை அங்கு நாம் காண்ப தில்லை. இந்த சரஸ்வதி நதி டில்லிக்கு மேற்கே நூறு மைல் தூரத்தில் ஓடிக்கொண்டிருக்கிறது. இந்த சரஸ்வதி நதிக்கரையில் தான் முனிபுங்கவர் இருந்து வேதங்களை ஓதியிருக்கிறார்கள். பிரம்மாவும் தேவர்களும் சேர்ந்து யாகங்கள் செய்திருக்கிறார்கள். வசிஷ்டரும் விஸ்வா மித்திரரும் இருந்து தவம் செய்து முக்தி பெற்றிருக் கிறார்கள். பாண்டவர்களும் கௌரவர்களும் போரிட்டிருக் கிறார்கள். பகவான் கண்ணன் அர்சுனனுக்கு கீதோபதேசம் செய்திருக்கிறான். வேதவியாசர் இருந்து பாரதக்கதை எழுதியிருக்கிறார். குரு என்னும் அரசன் அங்கிருந்து ஆண்டிருக்கிறார். மனு இருந்து நீதி சாஸ்திரம் எழுதி யிருக்கிறான். இத்தனை புராணப் பிரசித்திக்கு உடைய இடத்திலே பின்னர் சரித்திர காலத்திலேயும் பல பல போர்கள் நடந்திருக்கிறது. இந்த மன்னர் பலர் தங்கள் மகுடங்களை இழந்திருக்கிறார்கள். முஸ்லீம் மன்னர்கள் சிங்காதனத்தைத் துறந்திருக்கிறார்கள். மராத்தியர்களும், சீக்கியர்கள் தங்கள் வலியிழந்திருகிறார்கள். இப்படி ரத்தம் சிந்திச் சிந்தியே சிவந் கிடக்கும் இடம் தான் குரு க்ஷேத்திரம், குருக்ஷேத்திரம் என்ற உடனேயே நம் கண்முன் வருவது பாரதப் போர்தான். அதன் பின்னும் பல பல போர்கள் நடந்த இடம் தான் அது இது காரணமாகவே குருக்ஷேத்திரம் என்ற சொல்லிற்கே போர்க்களம் என்ற பொருள் வழங்க ஆரம்பித்துவிட்டது. நாம் இன்று அந்த குருக்ஷேத்திரத்திற்கே செல்கிறோம். நாம் செல்வது

போர்க்களத்திற்கே செல்கிறோம். நாம் செல்வது போர்க் களத்திற்கு அல்ல. நாம்தான் யாரோடும் பகை கொள்ள லம் என்று கம்பன் வகுத்த வழியில் செல்பவர்கள் ஆயிற்றே! நாம் செல்வது கண்ணன் கீதோபதேசத்தைக் கேட்கவே. குருக்ஷேத்திரம் போரில் பார்த்தனுக்கு சாரதி யாய் அமைந்து தேரோட்டுகின்றான் கண்ணன். போர்க் களத்தில் பிதாமகர் பீஷ்மர் போன்ற உறவினர்களையும் எதிரிகளாய் கண்டவுடனே பார்த்தன், இவர்களை எல்லாம் கொன்று குவித்து நாம் பெறப்போகும் பலன் என்ன என்று மயங்கி வில் கையினின்று தரையில் வீழ அலமறுகிறான். அவனது சோர்வைக் கண்ட கண்ணன், தருமத்தைச் செய்யக் கலங்காதே. உனக்கென்று ஒன்றும் இல்லை. எல்லாவற்றையும் முடித்து வைப்பவன் நானே''—என்று உபதேசிக்கிறான்.

மாயை என்று ஒருத்தி தன்பால்
மனம் என்னும் மைந்தன் தோன்றித்
தூய நல்லறிவன் தன்னைத்
தோற்றம் இன்றாக்கி வைத்தான்
தாயொடு தந்தை, மக்கள்
தாரம் என்று இவர்பால் வைத்த
நேயமும், அவன் தனாலே
நிகழ்ந்த ஓர் நினவுகண்டாய்

என்றும்,

என்னை நீ புகலக் கேண்மோ!
எங்கும் ஆய் ''யாவும் ஆகி
மன்னியபொருளும்'' யானே
மறைக்கு எலாம் முடிவும் யானே.

என்றும் உரைக்கிறான் கண்ணன் என்பார் வில்லிபுத்தூரார். ஆதலால் நாமும் அந்த கீதோபதேசத்தின்படியே எல்லாச் செயல்களையும் கிருஷ்ணார்ப்பணம் ஆக்குவதற்கு உரிய உள்ளத்திடத்தோடேயே குருக்ஷேத்திரத்திற்கு செல்ல லாம் தானே. செல்வோமா?

குருக்ஷேத்திரம் செல்ல டில்லியிலிருந்து அம்பாலா நோக்கிச் செல்லும் ரயிலில் ஏறவேண்டும். டில்லியிலிருந்து கிட்டத்தட்ட நூறு மைல் சென்றதும் குருக்ஷேத்திரம் ஜங்ஷன் ஸ்டேஷனில் இறங்க வேண்டும். காரிலேயே செல்வதானால் டில்லியிலிருந்து வடமேற்காக நூறு மைல் செல்லவேண்டும். வடநாட்டில் உள்ள ரோடுகளில் செல்ல அகலமாகவும் நன்றாகவும் போடப்பட்டிருக்கும்ரோடு இது ஒன்றுதான். போகிற வழியிலே பானிபட் என்று ஒரு இடம் வரும். இந்தப் பெயரைக் கேட்டவுடனேயே இங்கு நடந்த போர்களைப்பற்றி நாம் பள்ளியில் படித்த சரித்திரம் எல்லாம் ஞாபகத்திற்கு வரும். அப்படிப் போர்ச் சிந்தனைகளிலேயே மனதைச் சுழலவிட்டுக்கொண்டு மேலும் சென்றால் உலகப்போர்களில் எல்லாம் பெரிய பாரதப்போர் நடந்த குருக்ஷேத்திரப்போர்களத்திற்கே வந்து விடுவோம்,

பாண்டவர்கள் காலத்தில் குருக்ஷேத்திரம் எப்படி இருந்ததோ? ஆனால் இன்று பொலிவு இழந்து ஒரே பொட்டலாகத்தான் இருக்கிறது. அக்காலத்தில் இருநூறு சதுரமைல் விஸ்தீரணமுள்ளதாய் சரஸ்வதி நதிக்கும் யமுனை நதிக்கும் இடையில் பல பல ஊர்களும், ஊர்களில் கோயில்களும் நிறைந்ததாய் இருந்தது என்று வாமன புராணம் கூறுகிறது. ஆதியில் இந்தப் பிரதேசத்தை உத்தரவேதி என்றே அழைத்திருக்கின்றனர். அதன் பின் குருமகாராஜன் இந்த இடத்தில்தனது சாம்ராஜ்ஜியத்தை நிறுவியிருக்கிறான். இந்த பிரதேசத்தை ஒரு சிறந்த இறையருள் நிறைந்த கேந்திரமாக அமைக்க முயன்றிருக்கிறான். அதற்காக சிவனது ஊர்தியான நந்தியையும் யமனது வாகனமாகிய எருமைக் கடாவையுமே இரவலாக வாங்கி அவைகளை ஏரில் பூட்டி அங்குள்ள நிலத்தை உழுது பண்படுத்த முனைந்திருக்கிறான். அங்கு அவனைச் சந்தித்த விஷ்ணு, "இங்கு எதையப்பா விதைக்கப்போகிறாய்?" என்று கேட்டதற்கு, சத்தியம், தருமம், தவம், அன்பு, யோகம், முதலிய

பொருட்களை விதைக்கப்போகிறேன் என்றிருக்கிறான். விஷ்ணு விரும்பியபடியே தன் உடலையே துண்டு துண்டாக வெட்டி அவைகளையே விதையாக விதைக்க அனுமதித்து இருக்கிறான். அவனது தியாகத்தை மதித்த பரந்தாமனும் அந்த இடம் அவன் பேராலேயே வழங்கவும், அந்த இடத்தில் வந்து இறப்பவர்களுக்கு எல்லாம் முத்தி அருளவும் இசைந்திருக்கிறான். அதனால்தான் என்னவோ கௌரவரும் பாண்டவரும் இந்த இடத்தைத் தங்கள் போர்க்களமாக அமைத்திருக்கின்றனர். இங்கு செல்லும் நாமும் நம் உயிரையே விட்டு முத்திப்பேறு பெறலாம் என்றால் அந்தப் பொல்லாத யமன் நம்மை அணுகவும் அஞ்சி ஒதுங்கிவிடுகின்றானே. ஆதலால் நாம் முத்தியை மறந்து அங்குள்ள இடங்களைச் சுற்றிப் பார்க்கப் புறப்படலாம். குருக்ஷேத்திர பூமியை முழுவதும் சுற்றிவர நம்மால் இயலாது. அத்தனை தூரம் அது பரந்து கிடக்கிறது. அங்கு ஏழு வனங்கள், ஏழு நதிகள், ஏழு சரோவரங்கள், ஏழு கூபங்கள் எல்லாம் இருந்திருக்கின்றன. அன்று அவற்றில் எவை எவை எல்லாம் இன்று எஞ்சி நிற்கின்றன என்று கூற இயலாது என்றாலும், நாம் குருக்ஷேத்திரம் ரயில்வே ஸ்டேஷனைக் கடந்து ஒரு மைல் சென்றதும், தானேஸ்வர் என்ற பிரதேசத்தை அடைவோம். அதுதான் நாம் முதலில் செல்லவேண்டிய இடம். அங்குதானே பிரம்மசரஸ் என்ற பெரிய குளம் இருக்கிறது. இதுதான் குருக்ஷேத்திரத்தில் உள்ள பெரிய குளம். ஆதியில் இது 60 சதுரமைல் விஸ்தீரணமுடையதாக இருந்திருக்கிறது. இன்று 1442–அடி நீளமும் 700 அடி அகலமும் உள்ளதாய் இருக்கிறது. இன்று இக்குளத்திற்கு கீழ்கரையிலும் வடகரையிலும் படிக்கட்டுகள் இருக்கின்றன. வடகரையில் நிறைய மரங்கள் நிற்கின்றன. இக்குளத்தில் உள்ளே சில தீவுகள் இருக்கின்றன. அவைகளில் கோயில்களும் இருக்கின்றன. இந்த பிரம்மசரசை ஒட்டியே ஒரு சிறிய குளமும் இருக்கிறது. அதனை சன்னிஹித் குளம் என்கின்றனர். இது ஒரு சிறிய குளமே 1500 அடி நீளமும் 300 அடி அகலமும் உடையதாய் இருக்கும். இக்குளக்கரை

களிலேதான் சூரிய கிரஹண காலத்தில் மக்கள் திரளாகக் கூடுகின்றனர். அது ஒரு பெரிய மேளாவாகவே நடக்குமாம். இக்குளங்களுக்குக் கொஞ்சம் மேற்கேயுள்ள சமவெளியில் தான் லட்சுமி நாராயணன் கோயில் இருக்கிறது. அது டில்லியில் பிர்லா மந்திர் போலவே இருக்கிறது. சமீப காலத்தில்தான் கட்டப்பட்டிருக்கவேண்டும். இங்குள்ள பிரதான சந்நிதியில்தான் கண்ணன் பார்த்தனுக்கு கீதை உபதேசம் செய்யும் காட்சி பளிங்குச் சிலைவடிவில் அமைக்கப்பட்டிருக்கிறது. பக்கத்தில் உள்ள சின்னக் கண்ணன் நல்ல அழகான வடிவம். இந்த வட்டாரத்திலேயே சந்திர தீர்த்தம், பாதாளகங்கை முதலியவற்றோடு ஒரு காளி கோயிலும் இருக்கிறது.

இதையெல்லாம் பார்த்துவிட்டோம் என்று ஊர் திரும்ப முடியாது. கண்ணன் கீதை உபதேசம் செய்த இடம் இது அல்ல, அது இங்கிருந்து தெற்கே நாலுமைல் தொலைவில் இருக்கிறது என்பர். சரி என்று காரைத் திருப்பி அந்த இடத்திற்கும் செல்லவேண்டியதுதான். அங்கும் ஒரு பெரிய குளம் இருக்கிறது. அதனையே ஜோதிசரஸ் என்கின்றனர். அக்குளக்கரையிலே ஒரு பெரிய ஆலமரம். 'அதைச்சுற்றி ஒரு பீடம் எல்லாம் இருக்கிறது. அந்த ஆலமரத் தடியில் கீதை உபதேசம் நடந்தது என்கின்றனர். அப்படியானால் அந்த ஆலமரம் அந்த இடத்தில் 5000 வருஷங்களுக்கு மேலாக நின்றிருக்க வேண்டும். இடை இடையே இந்த மரம் வாடிவாடிப் பின்னரும் தழைத்திருக்கிறது என்கின்றனர். அதுதான் கீதோபதேசம் நடந்த இடம் என்பதைக் குறிக்க ஒரு சிறிய தேரும் அந்தத் தேரில் கண்ணன் பார்த்தன் பொம்மைகளும் வைத்திருக்கின்றனர். பக்கத்திலேயே ஒரு சிவன் கோயிலும் இருக்கிறது. அக்கோயிலை ஐம்பது வருஷங்களுக்குமுன் காஷ்மீர் மகாராஜா கட்டிவைத்தாராம். இன்றும் தர்பங்கா மகாராஜா முதலியோர் இங்கு பல சிறு கட்டிடங்கள் கட்டி வைத்திருக்கின்றனர். அங்கு ஒரு கீதாமந்திரும் இருக்கிறது.

அங்கு ஒரு சுவாமிஜி இருக்கிறார். அவரையே சத்தியானந்த சரஸ்வதி கீததாயி என்று மக்கள் போற்றி வணங்குகின்றனர். அங்கு ஒவ்வொரு வருஷமும் மகாமகத்தில் கீதாஜயந்தி உத்சவம் நடக்கிறதாம். பதினெட்டு நாட்கள் நடக்கும் இந்த உத்சவத்திற்கு நாட்டின் பலபாகங்களில் இருந்தும் மக்கள் வந்து கூடுகின்றனர்.

தானேஷ்வர், ஜோதிசரஸ் மாத்திரம்தான் குருக்ஷேத்திரம் என்றில்லை இந்த வட்டாரத்தில் இன்னும் பல மைல்கள் விஸ்தீரணம் சேர்ந்ததே குருக்ஷேத்திரம் என்பர். இன்னும் இங்கு பார்க்கவேண்டிய இடங்கள் உண்டு. பிரித்வி ஈஸ்வரர் மகாதேவ் கோயில் பிரபலமானது. ஆதியில் இதை பிருகு மகாராஜா கட்டினார் என்றும் பின்னர் அதனை முஸ்லீம்கள் இடித்து விட்டனர் என்றும், திரும்பவும் மராத்தியர்கள் கட்டிவைத்திருக்கிறார்கள் என்றும் பின்னர் அதனை முஸ்லீம்கள் இடித்து விட்டனர் என்றும், திரும்பவும் மராத்தியர்கள் கட்டிவைத்திருக்கிறார்கள் என்றும் சொல்கிறார்கள். சரஸ்வதி நதிக்கரையிலே சரஸ்வதி தேவிக்கும் ஒரு சிறு கோயில் இருக்கிறது. கார்த்திகேயனுக்கும் ஒரு கோயில் இருக்கிறது இந்த கார்த்திகேயன் நம்நாட்டு முருகனே என்றாலும், இந்த வட்டாரத்தில் எல்லாம் பிரம்மச்சாரியாகவே நிற்கிறான். ஆதலால். இங்கு பெண்களை அந்தக்கோயிலுக்குள் அனுமதிப்பதில்லை. அங்கு வரும் யாத்திரீகர்கள் சிந்தூரத்தை நிவேதித்து அணிந்து கொள்கின்றனர். இந்தக் கோயில்களோடு சதுர்முகமகாதேவர் கோயில் என்றும் ஒரு கோயில் இருக்கிறது. அங்குள்ள சிவலிங்கம் நான்கு முகங்களோடு கூடியதாயிருக்கிறது.

இன்னும் இந்தக் குருக்ஷேத்திரப் பகுதியில் எண்ணிறந்த தீர்த்தக்கட்டங்கள் இருக்கின்றன. நாமோ பிரம்ம சரஸ்ஸிலும், ஜோதி சரஸ்ஸிலும் மூழ்கி புண்ணியத்தை முன்னமேயே ஏராளமாக சம்பாதித்துக்கொண்டோம். ஆதலால் ஒவ்வொரு தீர்த்தக் கட்டத்திலும் மூழ்கி எழுந்து

வருவது என்பது இயலாத காரியம். அவசியம் என்று கருதினால் ஒவ்வொரு தீர்த்தக்கட்டத்திலும் தீர்த்தத்தை அள்ளி தலையில் புரோதித்துக்கொண்டு திருப்தி யடையலாம்

குருக்ஷேத்திரம் ஒரு ருத்ர பூமியே, என்றாலும் கீதா உபதேசம் நடத்த கண்ணன் தேர்ந்து எடுத்த இடம் என்ப தால் எவ்வளவோ புனிதமானதாக கருதப்படுகிறது. முஸ்லீம்களுக்கு காபாவும், கிறிஸ்தவர்களுக்கு ஜெருசல மும் எவ்வளவு புனிதமான இடமோ அவ்வளவு புனிதம் உடையதாகவே இந்த குருக்ஷேத்திரம் கருதப்படுகிறது. ஆதலால் ஒரு நடை இத்தலத்திற்குச் செல்லாவிட்டால் நமது தல யாத்திரை பூரணம் அடைந்ததாகக் கருதப்பட மாட்டாது.

# 45. அமிர்தசரஸில் தங்கக்கோயில்



அமிர்தசரஸில் தங்கக்கோயில்

நம் நாட்டில் அன்று பாற்கடல் ஒன்று இருந்திருக்கிறது. அக்கடலைக் கடைய முற்பட்டிருக்கின்றனர் தேவர்கள், அது அவர்களால் மட்டும் முடிகிறகாரியமாக இல்லை. ஆதலால் அசுரர்களையும் உடன் சேர்த்திருக்

கின்றனர். மேருமலையையே மத்தாக நட்டு வாசுகியையே கயிறாகக் கொண்டு அக்கடலைக்கடைந்திருக்கின்றனர். கடலுள் மேரு தாழ்ந்துபோக கூர்மவடிவில் பரந்தாமனே வந்து தன் முதுகில் தாங்கியிருக்கிறான், மத்தாகிய மேரு மலையை. அப்படிக்கடைந்த பாற்கடலிலிருந்துதான் திருமகள் எழுந்திருக்கிறாள். கடைசியில் அமுதம் பிறந்திருக்கிறது. பரந்தாமனே மோகினிவடிவில் வந்து அசுரர்களை ஏமாற்றிவிட்டு தேவர்களுக்கே அமுதம் முழுவதையும் கொடுத்திருக்கிறான். அதனால் அவர்கள் அமரர் ஆகியிருக்கின்றனர். என்பது புராணக்கதை. மணிவாசகப் பெருமான் இறைவனையே ஓர் அமுதப் பெருங்கடல் என்கின்றார். நம் புலன்கள் ஆரவந்து என்னை ஆட்கொண்டு உள்ளே புகுந்து மாலமுதப் பெருங்கடல் சிவன்' என்றே திருவாசகத்தில் கூறுகிறார். இந்த அமுதப்பெருங்கடல் நம் கட்புலனால் காணும் வகையிலும், நாமெல்லாம் குடைந்து ஆடும் வகையிலும் அமைந்திருக்கிறது, நமது நாட்டிலே என்று சொன்னால் நீங்கள் நம்ப மறுப்பீர்கள். ஆனால் நானே நேரே உங்களை அந்த அமுதக்கடல் இருக்கும் இடத்திற்கு அழைத்துச் செல்லப்போகிறேன். என்ன வருகிறீர்களா?

டில்லிக்கு மேற்கே முன்னூறு மைல் தூரத்தில் பஞ்சாப் ராஜ்யத்தில் இருக்கிறது இந்த அமுதக்கடல், அதனைத்தான் அமிர்தசரஸ் என்று அழைக்கின்றனர் மக்கள். இது சீக்கியரின் புண்ணியத்தலங்களில் முதன்மையானது. பாகிஸ்தான் எல்லையிலிருந்து கிழக்கே பதினாறு மைல் தூரத்தில்தான் இருக்கிறது. டில்லியிலிருந்து ஃபிராண்டியர் மெயிலில் ஏறினால் அமிர்தசரஸிலே சென்று இறங்கலாம். இல்லை டில்லியிலிருந்து அம்பாலா லூதியானா, ஜலந்தர், லாகூர் வழியாகவும் 'ஜம்' என்று காரில் சென்று அமிர்தசரஸ் சேரலாம்.

அமிர்தசரஸ்ஸை சென்று சேருமுன்பே அந்த பஞ்சாப் ராஜ்ஜியத்தில் பிரதான குடிகளாக இருக்கும் சீக்கியரைப்

பற்றியும் கொஞ்சம் தெரிந்து கொள்ளலாம். டில்லியிலே நாம் சீக்கிய சகோதரர்கள் பலரை சந்தித்திருப்போம். கருகரு என்று தாடிவளர்த்து தலைப்பாகையுடன் சிங்கம் போல் கம்பீரமாக நடக்கும் இந்த சீக்கியர்களை கண்டு வியந்திருப்போம். எனக்கு ஓர் ஆசை அந்தத் தலைப் பாகைக்குள் என்ன இருக்கிறது என்று அறிய ஒரு சீக்கிய நண்பரை மிகவும் தாஜாப்பண்ணி அவர் தலைப்பாகையை அவிழ்த்துக்காட்டச் சொன்னேன். அதில் இருந்தவை என்ன தெரியுமா? ஒரு சீப்பு, ஒரு கத்தி.(கிர்பான் என்று பெயர்) நீண்டகேசம், இவைதவிர கையில் ஒரு வளையும் அரையில் ஒரு கச்சமும் அணிந்திருப்பர். சீப்பு தூய்மையை யும் கிர்பான் ஆன்ம சக்தியையும் கேசம் தியாகத்தையும் குறிக்கிறதாம். கைவலை நேர்மையையும் கச்சம் புளனடக் கத்தையும் குறிக்குமாம். இத்தனையும் நிறைந்த ஒரு நல்வாழ்வு வாழ்வதற்காகவே சீக்கிய மதத்தை குருநானக் என்பவர் துவக்கியிருக்கிறார். இந்து மதத்தினை ஒரு பிரிவாகவே இந்த சீக்கிய மதம் வளர்ந்திருக்கிறது. குருநானக் 15-ம் நூற்றாண்டில் பிற்பகுதியிலே பிறந்து வாழ்ந்தவர். காசியிலிருந்து மக்காவரைக்கும் காஷ்மீரத்தி லிருந்து இலங்கைவரைக்கும் பிரயாணம் பண்ணியிருக் கிறார். சாதி சமய வேறுபாடுகள் பொருளற்றவை என்றும் எல்லோருக்கும் ஈசன் ஒருவனே. அவனை வாயினால் பாடி, மனதினால் சிந்தித்து அவனருள் பெற்று அவனை அடை வதே மனிதப்பிறவியின் பயன் என்றுதான் அவர் உபதேசித் தார். இத்தகைய மதம் ஒன்றையே நானக்குக்குப்பின் வந்த சீக்கிய குருமார் ஒன்பது பேர் வளர்த்திருக்கின்றனர். வட நாட்டில் நடந்த இந்து முஸ்லீம் போர்களில் எல்லாம் சீக்கியர்கள் அஞ்சாது போர் புரிந்திருக்கிக்கின்றனர். இவர்கள் முஸ்லீம்களோடு தீராப்பகையுடையவர்கள் என்ற எண்ணம் வலுத்துவிட்டது, அதில் முழு உண்மை இல்லாவிட்டாலும் கூட ஆங்கிலேயரோடு பல போர்கள் நடத்தியிருக்கின்றனர். சில போர்களில் வெற்றி கண்டிருக் கினறனர். இந்த சீக்கியர் நல்ல போர்வீரர்களாகவே

வாழ்ந்திருக்கின்றனர். அதனால் இவர்கள் நிறைந்துள்ள பாஞ்சாலம். வீரம் விளைகின்ற நாடு என்று மக்கள் கருதி யிருக்கின்றனர். அதனால்தான்.

வீரத்திலே சிந்து தீரத்திலே — போரில்
வீறிட்டு எழுந்திடும் நாட்டினர் யாம்
பாரதத்திலே புகழ் ஏற்றிச் சிறந்திடும்
பாஞ்சால நாட்டிற்கு ஈடுமுண்டோ.

என்று ஒரு பஞ்சாபிப் பெண் பாடுவதாக தமிழ்க் கவிஞர் ஒருவர் பாடி மகிழ்கிறார். அந்த சீக்கியர்களின் முக்கிய மான நகரம்தான் அமிர்தசரஸ். அந்த அமிர்தசரஸிலே தான் அவர்களது பிரதான கோயில், தங்கக் கோயிலாக மிளிர்கிறது. அந்தக் தங்கக் கோயிலைக் காணவே நாம் அமிர்தசரஸிற்கு செல்கிறோம் இன்று.

சீக்கிய மதக் குருக்களில் நான்காவது குரு ராமதாஸர். அவரை மொகலாய மன்னர் அக்பர் மிகவும் மதித்தார். அந்த அக்பர் சக்ரவர்த்தி ராமதாஸருக்கு அளித்த நிலத் திலேதான் 1577—ல் இந்த நகரை நிர்மாணித்தார் ராமதாஸர். ராமதாஸர் நிர்மாணித்த நகரம் ஆனதால் முதலில் ராம்தாஸ்பூர் என்றே அழைக்கப்பட்டது. இந்த ராமதாஸர்தான் அமிர்தக்கடல் என்னும் அமிர்தசரஸை உருவாக்கினார். இந்த ராமதாஸருடைய புதல்வர் அர்ச்சுனர், அவர்தான் இந்த சரஸின் மத்தியில் ஓர் ஆலயத்தைக் கட்டினார். அதற்கு செப்புத்தகடு வேய்ந்து அதற்குத் தங்க மெருகிட்டார். இன்னும் சொல்லப் போனால் ஹஸரத் ஷேக்மியான் என்ற முகம்மதிய குரு ஒருவரே இக் கோயிலுக்கு அஸ்திவாரம் போட்டுக் கொடுத் திருக்கிறார். இப்படி சீக்கியரும் முகம்மதியரும் ஒன்று சேர்ந்து உருவாக்கிய கோயிலே தங்கக்கோயில். கோயிலைச் சுற்றி சீக்கியர்கள் குடியேறி அதை ஒரு பெரிய நகரமாகஆக்கியிருக்கிறார்கள்.

இந்தத் தங்கக் கோயில் இன்று அமிர்தசரஸ் நகரத்தின் நடுநாயகமாக விளங்குகிறது. அது கிட்டதட்ட 480 சதுர அடி விஸ்தீரணமுடையது. அதைச் சுற்றியிருக்கும் கரையில் நான்கு பக்கங்களிலும் சலவைக்கல் படிகள் கட்டப்பட்டிருக்கின்றன. ஏரியின் நடுவில் உள்ள கோயிலுக்குச் செல்லக் கரையிலிருந்து பாலம் கட்டப்பட்டிருக்கிறது. அது 200 அடி நீளம் இருக்கிறது. கோயிலைச் சுற்றி ஒரு பிரகார வீதி இருக்கிறது. பாதை எல்லாம் நல்ல சலவைக்கல் பதிக்கப்பட்டிருக்கிறது. கோயில் மூன்று அடுக்குகளோடு கூடியது. நல்ல சதுர வடிவில் அமைந்த கோயிலுக்கு மேல் மணிக்கூண்டு என்னும் விமானம் கம்பீரமாக உயர்ந்திருக்கும். கோயில் வாயிலை வெள்ளிக் கதவுகள் அலங்கரிக்கும் விதானம் பொன் தகடு போர்த்தப்பட்டு பளபள என்றிருக்கும். மேல் மாடியில் தான் குருபீடம் இருக்கிறது. கோயிலை தர்பார் சாஹிப், ஹர்மந்திர் என்று அழைப்பவர்களே குருபீடத்தை சீஷ்மஹால் என்று அழைக்கின்றனர். கோயிலின் அடித்தளத்தில் தான் சீக்கியர்களின் வேத புத்தகமான 'ஆதிகிரந்தம்' வைக்கப்பட்டிருக்கும். பூசை புனற்காரியங்கள் எல்லாம் இந்த கிரந்தத்திற்கு தான். கோயிலுக்குள் எல்லா மதத்தவரும் செல்லலாம், என்றாலும் சில நியதிகள் உண்டு. முதலில் காலில் காலணிகள் அணிந்து செல்லக்கூடாது. தலையை சுற்றி ஒரு துணி கட்டியிருக்க வேண்டும். வெறுந் தலையுடன் செல்லக் கூடாது. பீடி சுருட்டுகளை கோயில் பக்கத்தில் பிடிக்கக் கூடாது. உள்ளே செல்லும் அனைவரும் ஆதிகிரந்தத்திற்கு தலை தாழ்த்தி வணக்கம் செலுத்துதல் வேண்டும். விரும்பினால் அங்கிருந்து கிரந்தத்தை பாராயணம் பண்ணுபவர்களுடன் சேர்ந்து பாராயணம் பண்ணலாம். தொழுகை இங்கு நடப்பது போலவே முதல் மாடியிலும் நடக்கும். தரை எல்லாம் சலவைக்கற்கள். சுவர்கள் எல்லாம் எனாமல் வேலை செய்யப்பட்டிருக்கும். இந்தக் கோயில் அமைப்பில் செலவிடப்பட்டிருக்கும் தங்கம் உலகத்திலேயே வேறு எந்தக் கோயிலுக்கும் செலவிடப்பட

வில்லை என்கின்றனர். மொத்தத்தில் தங்கக் கோயில் ஓர் அழகான கோயில், விசேஷமான சிற்பவடிவங்கள் இல்லாமலேயே, இங்கு நடக்கும் விழாக்கள் எல்லாம் சீக்கிய குருக்களின் பிறந்த நாள் விழாக்கள் தான். ஒவ்வொரு நாளும் கோயிலைச் சுற்றி விளக்குகள் ஏற்றி அலங்கரிக்கிறார்கள். கோயில் தீபாலங்காரத்துடன் அமிர்தசரஸில் பிரதிபலிக்கும் போது அது கண் கொள்ளாக் காட்சியாக இருக்கும். விழாக்காலங்களில் தீபலங்காரங்கள் பிரமாதப் படும் என்கின்றனர். வாண வேடிக்கைகளுக்கும் குறைவிருக்காதாம்.

அமிர்தமரஸினை சுற்றியிருக்கும் கட்டிடங்களை 'பங்கா' என்று அழைக்கின்றனர். இந்த நகரம் பல இடி பாடுகளுக்கும் உள்ளாகியிருக்கிறது. 18ம்-நூற்றாண்டின் பிற்பகுதியில் அகமத்ஷா துராணி என்பவன் இந்த நகரை அழித்திருக்கிறான். என்றாலும் சில வருஷங்களில் திரும்பவும் புதுபிக்கப்பட்டிருக்கிறது. அத்துடன் ரஞ்சித் என்பவன் 1802-ம் வருஷமே தங்கக் கோயிலின் விதானத்திற்கு பொன் வேய்ந்திருக்கிறான். தில்லை சிற்றம்பலத்தில் பொன் வேய்ந்து, 'பொன் வேய்ந்த பராந்தகன்' என்று பெயர் பெற்ற சோழமன்னரை போலவே ரஞ்சித் சிங்கும் விளங்கியிருக்கிறார்.

அமிர்தசரஸில் நாம் காணவேண்டியவைகள் இன்னும் சில உண்டு. அகர்லதக்த் என்னும் கட்டிடம் ஒன்று. அங்கு தான் சீக்கியமத சம்பந்தமான தர்க்கங்கள் நடக்குமாம். இன்னொரு இடம் பாபா அடல் என்பது. சீக்கிய குருக்களில் ஒருவரான ஹர்கோவிந்தரின் புதல்வரான பாபா அடல்ராய் என்பவர் சீக்கிய மதம் நிலைத்து நிற்க தன் உயிரையே கொடுத்திருக்கிறார். அவரை அடக்கம் செய்த இடத்திலே ஒன்பது மாடங்கள் கொண்ட கட்டிடம் ஒன்றைக்கட்டி அதனை பாபா அடல் என்று அழைத்திருக்கின்றனர். எண்கோண வடிவத்தில் 150 அடி உயரத்தில் கட்டப்பட்ட அழகிய கட்டிடம் அது. எல்லாம் சலவைக்

கல்லால் ஆனவை. பொன் தகடுகளுக்கும் குறைவில்லை. இந்த பாபா அடலும் ஒரு குருத்துவாரமாகவே கருதப்பட்டு அங்கு ஆதிகிரந்தம் வைத்து வணங்கப்படுகிறது.

இத்தனையும் பார்த்து விட்டோம் என்றாலும் உடனே திரும்ப முடியாது. இங்குதான் நமது சுதந்திரப் போராட்டத்தில் முக்கியமான நிலைக்களனாக அமைந்த ஜாலியன் வாலாபாக் இருக்கிறது. ஜாலியன் வாலாபாக் என்ற உடனேயே, அன்று 1919-ம் வருஷத்தில் அந்த இடத்தில் கூடிய இந்திய மக்களைத்தானே ஜெனரல் டயர் என்பவன் ஆயிரக்கணக்கில் சுட்டு வீழ்த்தியிருக்கிறான். அதற்கு மேலும் ஏன் சுடவில்லை என்று கேட்டதற்கு குண்டுகள் இல்லாததாகாரணம்தான் என்று திமிராகவே சொல்லியிருக்கிறான். அதன்பின் எண்ண முடியாத பல இன்னல்களுக்கு மக்களை ஆளாக்கியிருக்கிறான். அந்த ஜாலியன்வாலாபாக்படுகொலை தான் மக்கள் சுதந்திர உணர்ச்சியைத் தட்டி எழுப்பியிருக்கிறது, சுதந்திரப் போரில் வெற்றி நடைபோட்டு மக்கள் நடக்கவும் உதவியிருக்கிறது. அங்குள்ள கட்டிடங்கள் கூடங்களில் எல்லாம் குண்டுபாய்ந்த அடையாளம் இன்னும் தெரிகிறது. நம் நாடு சுதந்திரம் பெற்றபின் அந்த ஜாலியன் வாலாபாக்கில் கொழுந்து விட்டு எரியும் அனல்போல் சின்னம் ஒன்றையும் எழுப்பியிருக்கிறார்.

> நாட்டில் எங்கும் சுதந்திர
> வாஞ்சையை நாட்டினாய் கனல் மூட்டினாய்

என்று பாரதியார் பாடினாரே அந்த பாட்டிற்கேற்ப அமைந்த ஞாபகச்சின்னம் போல் இருக்கிறது. அங்கு உயிர்நீத்த வீரமக்களுக்கு கண்ணீர்சிந்தி வணக்கம் செலுத்திவிட்டு அமிர்தசரஸிருந்து விடைபெற்றுத் திரும்பலாம்.

# 46. ஸ்ரீநகர் மார்த்தாண்டர்

தேன்படிமலரது, செங்கண்
வெங்கைம்மா
தான் படிகின்றது
தெளிவு சான்றது
மீன்படிமேகமும் படிந்து
வீங்குநீர்
வான்படிந்து உலகிடைக்
கிடந்த மாண்பது.

என்று கவிச்சக்கரவர்த்தி கம்பன் கிஷ்கிந்தையை அடுத்த பம்பைப் பொய்கையை வர்ணிக்கிறான். வர்ணனையை வளர்த்துக்கொண்டே சென்று,

கற்பகம் அனைய அக்
கவிஞர் நாட்டிய
சொல்பொருளாம் எனத்
தோன்றல் சான்றது.

என்றெல்லாம் பேசுகிறான். இந்த கம்பன் காஷ்மீரத்துக்குச் சென்று அங்கு இயற்கை அன்னை எத்தனை பொலிவுடன் விளங்குகின்றாள் என்று மட்டும் கண்டிருப்பானானால் அவற்றை எப்படி எப்படி எல்லாம் வர்ணித்திருப்பான். ஒரு வேளை கம்பனுக்குமே சொல்ல அரிதாக அந்த எழில் இருந்திருக்குமோ என்னவோ! அத்தகைய இயற்கை எழில் நிறைந்த பிரதேசம்தான் காஷ்மீர். உலகில் மிக்க அழகுடையவை என்று கருதப்படும் பொழில்களும் பொய்கைகளும் இங்குதான் இருக்கின்றன. மலைகளும் மரங்களும், சோலைகளும் பூங்காக்களும், காடுகளும் கனித் தோட்டங்களும் பெரிய ஆறுகளும் தடாகங்களுமாக

இயற்கை அன்னை தன் மேனி அழகு முழுவதையும் வெளிப் படுத்தும் ஒரு அழகுப்பெட்டகம் அந்த நாடு. நிலமகளின் மலர் முகத்தைக் அங்கே தான் நாம் காண்கின்றோம். அங்கேதான் அவள் புன்னகை பூத்து, எழில் நிறைந்த பருவ மகளாய், இன்பப் பேரொளிபரப்பி களி நடம்புரிந்து கொண்டு நிற்கிறாள். அதனால்தானே மக்கள் எல்லாம் உல்லாசமாய்ச் சில நாட்களைக் கழிக்க அங்கு ஓடுகின்றனர். உலகில் உள்ள இளங்காதலர்கள் தங்கள் தேன்நிலவு காலத்தை கழிக்க இதைவிட ஒரு சிறந்த இடத்தைத் தேர்ந்து எடுத்தல் இயலாது. நாம் எல்லாம் இறை அருளை நாடிச் செல்லும் யாத்ரீகர்கள் என்றாலும், நாமும் இயற்கை அன்னையை வழிபட அங்கு சென்று வரலாம் தானே. ஆகவேதான் நான் உங்களை அந்தத்தொலை தூரத்தில் உள்ள காஷ்மீருக்கும்அதன் தலைநகராக விளங்கும் ஸ்ரீநகருக்கும் அழைத்துச் செல்ல விழைகின்றேன் இன்று.

காஷ்மீரம் செல்ல முதலில் டில்லியிலிருந்து பதான் கோட் என்னும் இடத்திற்கு ரயிலில் செல்லலாம். பதான் கோட்டிலிருந்து ஸ்ரீநகருக்கு காரில் செல்லலாம். பஸ்ஸிலும் செல்லலாம். ஆனால் அப்படிச் செல்வதற்கு ஒன்றரை நாள் செல்லும். வழியில் பானிபால் என்ற இடத்தில் ஒரு இரவைக் கழிக்க வேண்டியிருக்கும். கிட்டதட்ட பத்தாயிரம் அடிக்கு மேல் உள்ள பிரதேசம் ஆனதால் தாங்க முடியாத குளிர் இருக்கும். அதற்கு எல்லாம் ஏற்ற கம்பளி உடைகளுடனேதான் செல்ல வேண்டும். பதான் கோட்டிலிருந்து விமானம் மூலமாகவும் பிரயாணம் செய்து விரைவில் ஸ்ரீநகர் சேரலாம். நல்ல வசதி உடையவர்கள் என்றால் டில்லியிலிருந்து நேரேயே ஆகாய விமானம் மூலமாக பறந்து ஸ்ரீநகர் செல்லலாம். ஸ்ரீநகர் செல்ல முனைபவர்கள் வசதியுடையவர்களாகத்தான் இருக்க வேண்டும். என்ன புறப்படுவோமா ஆகாய விமானத்தின் மூலமாகவே.

காஷ்மீரம் உருவான கதையே ரஸமானது. ஆதியில் இங்கு ஒரு பெரிய ஏரி இருந்திருக்கிறது. அந்த ஏரியின்

அழகைக்கண்டு கைலாசபதியின் மனைவியான பார்வதியே இங்கு வந்து இந்த ஏரியில் படகோட்டிக் கொண்டு உல்லாச மாய் இருந்திருக்கிறாள். அந்த ஏரியிலே ஓர் அசுரன் பாம் புருவில் இருந்து நச்சுக்காற்றை வீசிக் கொண்டிருந்திருக் கிறான். கல் எறிந்து பார்வதி தேவி அந்த அசுரனைக் கொன்றிருக்கிறாள். பின்னர் ஏரியைத் தூர்த்து அதை ஒரு பெரிய பூங்காவாகவே அமைத்திருக்கிறார் ஒரு முனிவர். அந்த ஏரி இருந்த இடமே இன்றைய காஷ்மீர். அங்கு அசுரனை மாய்த்த இடம் தான் ஹரிபர்வதம். சரித்திர ஏடு களில் கிறிஸ்துபிறப்பதற்கு மூவாயிரம்வருஷங்களுக்குமுன்பு ராஜநாராயணன் என்னும் அரசன் காஷ்மீர நகரத்தை உருவாக்கினான் என்று கூறப்படுகிறது. ராஜதரங்கினி என்ற ஒரு நூல் இதனை விரிவாகக் கூறுகிறது. நகருக்கு மத்தியில்தான் மொகலாய மன்னர்கள் அமைத்த ஷாலிமார் தோட்டம் வனப்பு மிக்கதாய் இருக்கிறது.

ஸ்ரீநகரில் எங்கு தங்குவது என்ற பிரச்சினை கிடை யாது. அங்குள்ள ஆறுகளில் மிதக்கும் படகுகள் எல்லாமே சிறு சிறு வீடுகள் தான். அந்த போட் ஹவுஸ், ஒன்றையே ஏற்பாடு பண்ணிக் கொண்டு தங்கலாம். அந்த வீடுகளில் வசதியான அறைகள் எல்லாம் உள்ளதாய் இருக்கும். அந்த வீடுகளில் மிதந்து கொண்டே உல்லாசப் பிரயாணமும் போய் வரலாம். இல்லை ஆற்றில் மிதக்க அஞ்சினால் அங்குள்ள ஹோட்டல்களிலும் தங்கலாம். காஷ்மீரின் தலை நகரில் இருந்து கொண்டே குல்மார்க், பால்காம், சோனா மார்க் முதலிய இடங்களுக்கும் சென்று இயற்கை எழிலை யும் மனிதன் தன் அறிவாற்றலால் செய்து அமைத்திருக்கும் பூங்காக்களையும் கண்டு திரும்பலாம். காஷ்மீரத்து நாடோடிப் பாடல்களை கேட்டு மகிழலாம். கைத் தொழிலில் சிறந்திருக்கும் பல சாமான்களையும் வாங்கலாம். ஆனால் நாம் வந்தது இதற்காக அல்லவே. ஆதலால் அங்குள்ள கோயில்களையும் கலைக்கூடங் களையும் காண விரையலாம்.

ஆதியில் காஷ்மீர் மக்கள் இந்துக்களாகவே இருந்திருக்கின்றனர். பின்னர் அசோகர்காலத்தில்தான் புத்தமதம் அங்கு பரவியிருக்கிறது. புத்தமதம் அங்கு பரவிய காலத்தில் அசோகரே காஷ்மீரத்துக்கு வந்தார் என்பது வரலாறு. வடநாட்டு முஸ்லீம் ஆதிக்கத்தில் வந்தபோது இந்து மதமும் பௌத்தமும் மறைந்து மக்கள் முஸ்லீம்களாகியிருக்கின்றனர். ஆதலால் இன்று இங்கே இந்த மூன்று மதச் சின்னங்களும் காணப்படுகின்றன. ஆனால் எல்லாமே சிதைந்த நிலையில் தான் காணப்படுகின்றன. இவைகளில் நாம் முதலில் காணவேண்டியது தாக்தி சுலைமான் என்ற ஸ்தூபிதான். அது ஸ்ரீநகரை அடுத்துள்ள மலைச்சரிவில் இருக்கிறது. அதற்குச் செல்லும்படிகள் வளைந்து வளைந்து செல்கின்றன. ஆயிரம் அடிக்குமேல் ஏறித்தான் அந்த ஸ்தூபிக்குச் செல்ல வேண்டும். ஒரு பெரிய மேடை மீது கட்டப்பட்டிருக்கிறது. அங்கிருந்தே ஸ்ரீநகரின் அழகை எல்லாம் காணலாம். இந்த ஸ்தூபிக்கு பக்கத்திலேயே அசோகர் கட்டியதாகக் கருதப்படுகின்ற பழங்கோயில் ஒன்றும் இருக்கிறது. இது முழுவதும் இடிந்துபோய் இருக்கிறது. இடிந்த பகுதி கொஞ்சமே.

ஸ்ரீநகருக்கு இருபத்து நான்கு மைல் தொலைவில் உள்ள இஸ்லாமாபாத் என்னும் ஊருக்கருகில் பல கோயில்கள் இருக்கின்றன. எல்லாமே சிதைந்து போய்விட்டன. லிடார்ப்பள்ளத்தாக்கில்தான் காஷ்மீரத்தின் சிறந்த கோயிலான மார்த்தாண்டர் கோயில் இருக்கிறது. அக்கோயில் கட்டப்பட்டுள்ள இடம் மிகவும் ரமணீயமாக இருக்கிறது. அழகான பசும்புல் சரிவில் வானுற ஓங்கி வளர்ந்த மரங்களுக்கு இடையில் இக்கோயில் உருவாகியிருக்கிறது. கோயிலுக்கு பின்புறத்தில் காணப்படும் அந்த வெண்பனிச் சிகரங்கள் காண்பவர் கண்களுக்கு பெருவிருந்து அளிக்கின்றன. கோயிலின் பெயரிலிருந்தே அது சூரிய நாராயணன் கோயில் என்று தெரிந்துக் கொள்ளலாம். கோயிலை ஒட்டிய பிரதேசத்தில் பொழில்களும், தடாகங்

களும் அருவிநீர்சுனைகளும் இருக்கின்றன. கோயில் அர்த்த மண்டபம் மகாமண்டபம் முதலியவற்றோடு விளங்குகிறது. ஆனால் கருவறை மட்டும் மொட்டையாய் நிற்கிறது. கோயில் எல்லாம் 79 அடி உயரமே உள்ள சிறிய கோயில் தான். அங்கு 230 அடி நீளமும் 140 அடி அகலமும் உள்ள ஒரு பெரிய மண்டபம் இருக்கிறது. அங்குதான் அற்புதமான வேலைபாடுகளோடு கூடிய எண்பத்தி நான்கு தூண்கள் நிற்கின்றன. இவ்வளவு இருந்தும் இக்கோயிலுக்கு மேற்கூரையும் இல்லை கருவறையில் மூர்த்தமும் இல்லை. உலகமெல்லாம் ஒளிபரப்பும் சூரியனைப் பிடித்து ஒரு கருவறைக்குள்ளே அடைத்து வைத்து விடமுடியுமா என்ன? ஆதியில் இக்கோயிலில் மார்த்தாண்டரது சிலை இருந்தது, பின்னர் முஸ்லீம் படையெடுப்பில் கோயில் இடிக்கப்பட்டது என்றும் கூறுகின்றனர். கோயில் எட்டாம் நூற்றாண்டில் லலிதாதித்யன் என்னும் அரசனால் கட்டப்பட்டது என்று சரித்திரம் பேசுகிறது. ஆனால் கொஞ்சம் துருவி ஆராய்ந்தால் லலிதாதித்தியனுக்கும் முன்னால் இப்பகுதியை ஆண்ட ராமர்தித்தியன் மனைவிதான் இக்கோயில் கட்ட அங்குரார்ப்பணம் செய்தாள். என்றும், அவள் ஆரம்பித்த பணியை பின்னால் லலிதாதித்யன் நிறைவேற்றி வைத்திருக்கிறான் என்றும் தெரிவோம். சூரியனுக்கு அடுத்தபடியாக காஷ்மீர் மக்கள் நாக வணக்கம் செய்து வாழ்ந்திருக்கிறார்கள் என்று அறிகிறோம். தமிழ் நாட்டின் சந்நிதிகளில் எல்லாம் அரசும் வேம்பும் இணைந்து நின்று அதன் அடியில் நாகப்பிரதிஷ்டை செய்திருப்பதை நாம் அறிவோம். அதே போலத்தான் காஷ்மீர மக்களும் நாகப் பிரதிஷ்டை செய்து வணங்கியிருக்கிறார்கள். ஆனால் நம் நாட்டு நாகங்களுக்கு இடையில் இருக்கும் பிள்ளையாரை அங்கு காணோம்.

முஸ்லீம்களுடைய தக்திசுலைமான் ஸ்தூபியைப் பார்த்தோம். இந்துக்களுடைய மார்த்தாண்டர் கோயிலையும் பார்த்து விட்டோம். புத்தர்களுக்கு என்று கோயில்

இல்லையா என்றுதானே கேட்கிறீர்கள். நிறைய இருக்கிறது. புத்தமதம் அசோகர் காலத்தில் அங்கு வேர் ஊன்றியது என்று முன்னமேயே சொல்லியிருக்கிறேன். ஆகவே புத்த விஹாரங்களும் சைத்தியங்களும் பல அங்கே தோன்றியிருக்கின்றன. ஆனால் அவற்றில் பெரும்பாலானவை இன்று மண்மூடிப்போய் விட்டன. சில இடிந்தும் போயிருக்கின்றன. என்றாலும், இத்தனை இடிபாடுகளுக்கும் மிஞ்சி இன்று இருப்பது கும்பா என்னும் புத்த விஹாரம்தான். அதுவும் ஒரு உயரமான மலைச் சரிவிலேயே கட்டப்பட்டிருக்கிறது. அதன் தாழ்வாரச் சுவர்களிலும் மற்ற இடங்களிலும் அஜந்தாவில் உள்ள சித்திரங்கள் பல தீட்டப்பட்டிருக்கின்றன. மிருகங்களும், பறவைகளும், செடி கொடிகளும், புஷ்பங்களும், மனிதர்கள், தேவர்கள், நாகர்கள் முதலிய சித்திரங்களும் வரைந்திருக்கின்றனர். அதில் ஒரு சித்திரம் நம் கவனத்தைக் கவர்வதாக இருக்கும். மரத்தின் மேல் ஒரு காகம், அது ஒரு கனியைப்பறித்து கீழே நிற்கும் யானையின் முதுகில் ஆரோகணித்து இருக்கும் முயலிடம் கொடுக்கிறது. முயலோ அந்தக் கனியை யானையிடம் கொடுக்கிறது. யானையும் அக்கனியை வாங்கி தன் பக்கத்தில் நிற்கும் மனிதனிடம் கொடுக்கிறது. எவ்வளவு தன்னலத் தியாகம் இந்த பறவைகளுக்கும் மிருகங்களுக்கும். மேலும், மனிதன் மிருகங்களையும், பறவைகளையும்எல்லாம் இப்படி பரஸ்பரம் அன்புகாட்டி வாழக் கற்றுக் கொள்வதுதானே புத்தர் காட்டிய அஹிம்சா நெறி. இந்த நெறியை விளக்கும் அரிய சித்திரத்தை நான் வேறெங்கும் காணவில்லை. அந்த கும்பா என்னும் விஹாரத்தில் புத்தர் சிலை இருக்கிறது. வேறுபல தேவர்கள் சிலைகளும் இருக்கின்றன. கோயிலுள்ளே 'தானிக்' என்னும் பட்டுக்கொடி கொண்டு அழகு செய்திருக்கின்றார்கள். பௌத்த சந்நியாசிகளும் அங்கே இருக்கிறார்கள். அவர்கள் 'ஓம் மணிபத்தே ஓம், என்றும் எப்போதும் மந்திரம் ஓதிக்கொண்டே இருக்கின்றார்கள். இக்கோயிலைச் சுற்றி சமசதுரமாக அமைத்த பீடங்களும் சமாதிகளும் இருக்கின்றன.

ஸ்ரீநகரிலிருந்து ஜீலம் நதிக்கரை வழியாக ஆறுமைல் நடந்தால் ஒரு சிறிய கோயிலைக் காணலாம். ஒரு சதுரமான பீடத்தில் நான்கு மூலையிலும் தூண்கள் நிறுத்தப்பட்டிருக்கின்றன. கட்டிடத்தின் முகப்பு முக்கோணவடிவில் இருக்கின்றது. அதற்கு மேல் பிரமிட் வடிவில் இரண்டு கூரைகளும் இருக்கின்றன. இக்கோயில் ஓர் அருவிக் கரையில் அக்ரோட் மரங்கள் நிறைந்த சோலையில் இருக்கிறது. கோயில் முழுவதும் கருங்கல்லாலேயே கட்டப்பட்டிருக்கிறது. உள்ளே உள்ள கருவறை எட்டடிச் சதுரம்தான். நான்கு பக்கமும் வாயில்கள் இருக்கின்றன. இக்கோயில் 15-ம் நூற்றாண்டில் கட்டப்பட்டிருக்க வேண்டும் என்பர். இக்கோயிலும் சூரிய நாராயணர் கோயிலே. பெயருக்கேற்ப சூரிய கிரணங்கள் நான்கு புறமும் விழுவதுபோல் அமைக்கப்பட்டிருக்கிறது. சூரியனைத்தவிர பிரம்மா, விஷ்ணு, ருத்திரன், துர்க்கை முதலியவர்களது சிற்பவடிவங்களும் இருக்கின்றன.

இக்கோயில்களை எல்லாம் தூக்கி அடிக்கும் வகையில் தான் அமர்நாத்துக் குகையில் பனிக்கட்டியால் ஆன லிங்கத் திருவுரு இருக்கிறது. ஆனால் அமர்நாத் யாத்திரை எளிதான ஒன்று அல்ல. அதற்கு அடுத்தவாரம் செல்வோம் என்ற எண்ணத்துடனேயே காஷ்மீரத்துத் தலைநகர் ஸ்ரீநகரிலிருந்து விடைபெறலாம்.

# 47. அமரநாதத்து ஈசன்



அமரநாதத்து ஈசன்

'தென்னாடுடைய சிவனே போற்றி
எந்நாட்டவர்க்கும் இறைவா போற்றி'

என்று மணிவாசகர் முழங்குகிறார். அந்த முழக்கத்தையே இன்று நாமும் பல பல கூட்டங்களில் கேட்கிறோம். தென்னாடுடைய சிவன், என்பதால் இந்த சிவ வழிபாடு தென்னாட்டில் தான் தோன்றியிருக்க வேண்டும் என்பதே பல சைவப்பெருமக்களின் சித்தாந்தம். அதற்கேற்ப சிவலிங்க வழிபாடும் பொங்கழல் உருவனான அண்ணா மலையிலேயே எழுந்திருக்கிறது. அதன் பின்னரே நாடு முழுவதும் சோதிர்லிங்கங்கள் தோன்றியிருக்கின்றன என்று

ஆராய்ச்சியாளர் கூறுகின்றனர் ஆனால் இத்தனை வாதமும் அடிபட்டுப் போகிறது. அமர்நாதரைக் காணும் போது. அழல்உருவனாக மட்டும் இல்லை. அவன் ஐஸ்உருவனுமாக அல்லவா இருக்கிறான் என்று அறிகிறோம் நாம். எல்லாம் வல்ல இறைவன் பஞ்சபூதங்களின் வடிவில் இருக்கிறான் என்பதை அறிவோம். அட்டமூர்த்தி எப்படி எல்லாம் கோலம் கொள்கிறான் என்பதைத்தான் நமது அப்பர் பெருமானும்

இரு நிலனாய்த் தீயாகி நீரும் ஆகி
இயமானனாய் எறியும் காற்றும் ஆகி
அருநிலைய திங்களாய், ஞாயிறு ஆகி
ஆகாசமாய் அட்டமூர்த்தியாகி

அவன் இலங்குகிறான் என்பதைத்தான் பாடியிருக்கிறாரே. தமிழ் நாட்டில் பஞ்சபூதத் தலங்கள் உண்டு. திருவாரூரில் மண்ணுருவிலும் திருவண்ணாமலையில் அனல் உருவிலும் திருவானைக்காவில் நீர் உருவிலும், திருக்காளத்தியில் காற்று உருவிலும் தில்லையில் ஆகாய வடிவிலும் இறைவன் இருந்து அருள்புரிகிறான் என்பதை முன்னரே தெரிந்திருக்கிறோம் என்றாலும், திருவானைக்காவில் ஆனைக்கா அண்ணலாக இருப்பவன் சிலை உருவில்தானே இருக்கிறான் என்று காண்போம். அவன் கருவறையில் எப்போதும் நீர் ஊறிக்கொண்டே இருப்பதால் மட்டுமே அவனை முழுக்க முழுக்க நீர் உருவினன் என்று கூறுவதற்கில்லை. முழுவதும் நீர் உருவிலே நிற்கும் இறைவனைக் காண நாம் அமர்நாதம் தான் செல்லவேண்டும். யாத்திரை கொஞ்சம் கஷ்டமான யாத்திரைதான் என்றாலும், தொடர்ந்து வருகிறீர்கள். செல்வோமா இன்று அமர்நாதத்தை நோக்கி.

இமயத்தின் சிகரத்திலே கயிலாயம், கேதாரநாதம், பத்ரிநாதம், பசுபதிநாதம் அமர்நாதம் என்னும் ஐந்து க்ஷேத்திரங்கள் இருக்கின்றன. இவைகளில் பத்ரிநாதம்

ஒன்றே நாராயணனுக்கு அமைந்தது. மற்றவை நான்கும் சிவக்ஷேத்திரங்களே. இன்னும் கைலாயம் திபேத்திலும், பசுபதிநாதம் நேப்பாளத்திலும் இருக்கின்றன. மற்றவை மூன்றும் நம் இந்திய நாட்டின் எல்லைக்குள்ளேயே இருக்கின்றன. இச்க்ஷேத்திரங்களை எல்லாம் தரிசிக்கும் வாய்ப்பு எல்லோருக்கும் கிட்டுவதில்லை. ஏதோ பூர்வ புண்யவசத்தில் உடல் வலியும், உள்ளத்தில் தெம்பும் கையில் நிறையப்பணமும் கருத்தில் நிறைய ஆர்வமும் உடையவர்களுக்கே இந்த க்ஷேத்திராடனம் கொடுத்து வைத்திருக்கும். இன்னும் நாம் நினைக்கிறபோது இந்த க்ஷேத்திரத்தில் உள்ள இறைவனைச் சென்று காணமுடியாது. ஆண்டில் ஆறுமாதகாலம் நல்ல உறை பனிக்குள்ளேயே மூர்த்தியும் கோயிலும் புதைந்து இடக்கும், பனி உருகும் காலமாகிய வேனிற்காலத்தில்தான் சென்று காணுதல் கூடும். அதிலும் அமரநாதம் செல்வதற்கு ஆகஸ்ட் மாதமே வசதியான காலமாகும்.

காஷ்மீரம் செல்வதற்கு உரிய வழியை முன்னரே சொல்லியிருக்கிறேன். டில்லியிலிருந்து பதான் கோட் சென்று பஸ்ஸிலோ காரிலோ இல்லை, ஆகாயவிமானத்தின் மூலமாகவோ செல்லலாம். இல்லையென்றால் டில்லியிலிருந்து விமானம் மூலமாக நேரேயே ஸ்ரீநகர் சென்று சேரலாம். அதன்பின் ஸ்ரீநகரிலிருந்து அறுபது மைல் தூரத்தில் உள்ள பால்காம் செல்ல வேண்டும். பால்காம் செல்வதற்கு அன்று ரோடு கிடையாதாம். ஆனால் இன்று நல்ல ரோடு போட்டிருக்கிறார்கள். வசதியான பஸ்களும் விடுகிறார்கள் ஆதலால் பால்காமிற்கு எளிதாகச் சென்று சேர்ந்து விடலாம். ரோடு போடுவதற்கு முன் இந்த அறுபது மைலையும் நடந்தே கடந்து செல்ல பத்து நாள் ஆகுமாம். பால்காமிலிருந்து நாலு நாள் பயணம்தான், அமரநாதம். ஆனால் நாலு நாளும் நடந்தேதான் செல்ல வேண்டும். விரும்பினால் குதிரைகள் பல்லக்குகள் டோலிகள் மேல் ஏறியும் செல்லலாம். பால்காமிற்கும்

அமரநாத்திற்குமே இடையில் உள்ள வழி எல்லாம் முப்பது மைல் தூரமே. என்றாலும், மூன்று நான்கு இடங்களில் தங்கியே பயணம் செய்ய வேண்டியிருக்கிறது. பால்காமி லிருந்து செல்லும் வழி லிட்டாநாலா என்னும் ஆற்றை ஒட்டியே செல்கிறது. வழிஎல்லாம் பைன் மரங்கள் ஊடே எல்லாம் வழி வளைந்தும் சுற்றியுமே செல்லும். இங்கெல் லாம் ஆறுகள் குதித்துக்கொண்டும், கொக்கரித்துக் கொண்டும் பாறைகளின் வழியே ஓடும். பால்காமிலிருந்து க்ஷேநாக் நதிக்கரை வழியாகவே செல்கிறது பாதை. ஒன்பது மைல் நடக்க ஒருநாள் ஆகிவிடும். ஆதலால் அன்றிரவு சந்தன் வாசி என்ற இடத்தில் தங்கி இரவை கழிக்க வேண்டும் வசதிகளை எல்லாம் காஷ்மீர் சர்க்கார் மிகவும் சிறப்பாகச் செய்திருக்கிறார்கள். எங்கு பார்த் தாலும் சோலைகளும் மலர் வனங்களுமாக இங்கே இயற்கை அழகு கொஞ்சும்.

மறுநாள் காலையில் செங்குத்தான மலைமீது ஏற வேண்டும். பாதை வளைந்து வளைந்து தான் செல்லும். ஒருவர்பின் ஒருவராகவே வழி நடக்கவேண்டும். வழி யெல்லாம் மலர்ச்செடிகள்தான். பறவைகள் கூட வாழ முடியாத குளிர். இப்படி எட்டு மைல் நடந்தபின் சேஷநாக் என்ற இடம் வந்து சேருவோம். அங்கு ஒருநாள் இரவைக் கழிக்கவேண்டும்.

அங்கு வௌஜான் என்ற பெயரோடு அழகான தடாகம் ஒன்று இருக்கிறது. மிக்க அழகான இடம். இதையும் கடந்து மேல் செல்லும்போதுதான் முக்கால்மைல் தூரம் மலையுச்சியில் செங்குத்தாய் ஏற வேண்டும். அங்கு எல்லாம் குதிரையையோ டோலியோ வராது. ஒவ்வொருவரும் தங்கள் தங்கள் கால்களாலேயே நடந்து கடக்கவேண்டும். திருப்பதிமலை ஏறுகிறபோது முழங்கால் முறிச்சான் பகுதியை எல்லாம் நாம் கடந்திருக் கிறோம். இங்கு ஏற்றம் முழுங்காலை மட்டும் முறிக்காது உடலையே முறித்து விடும். வழியெல்லாம் முட்புதர்கள்

வேறே. ஆனால் கஷ்டப்பட்டு ஏறிய பின் மனதில் ஏற்படுகின்ற மகிழ்ச்சி இருக்கிறதே அது சொல்லித் தெரிவதன்று. இனிநாம் சென்றுசேர்வது வாட்ஜகான் என்னும் இடம். இது கடல் மட்டத்திற்கு மேல் 11500 அடி. அப்போது அங்கு குளிர் எப்படி இருக்கும் என்று சொல்லவா வேண்டும். இங்கிருந்து பாதை இறங்கிச்செல்லும். அந்த வழியில் ஐந்து நீர் ஊற்றுப் பெருக்கெடுத்து ஓடும். அந்த இடத்தையே பஞ்சதரணி என்கிறார்கள். அங்கு ஒரு நாள் இரவைக் கழித்தபின், யாத்ரீகர் கூட்டம் எல்லாம் அமரநாத் குகையை நோக்கிச் செல்லும் வழியில் உள்ள ஆறுகளில் எல்லாம் பனி உறைந்து யாத்திரீகர்கள் நடந்து செல்ல உதவும் காலில் எல்லாம் வைக்கோல் பிரிகளைச் சுற்றிக் கொண்டே நடக்க வேண்டியிருக்கும். பஞ்சதரணியாறு கிழக்கிலிருந்து மேற்கு நோக்கி ஓடுகிறது. அந்த ஆற்றில் வடபுறத்தில் ஒரு செங்குத்தான மலை. அதற்கும் வடபுறத்திலேதான் அமராவதி நதி. இந்த மலையையும், ஆற்றையும் கடந்துதான் அமரநாத் குகைகளுக்குச் செல்ல வேண்டும். ஆற்றுக்கு கிழக்கே ஒருமைல் தூரத்தில் ஆற்றின் வடகரையில் உள்ள குகையில் அமரநாதர் தரிசனம் தருகிறார்.

கடைசியில் எத்தனையோ சிரமப்பட்டாலும் அமரநாத் வந்து, சேர்ந்து விட்டோம். வழியெல்லாம் 'அமரநாத் கீ ஜெய்' என்று பக்தர்கள் முழுங்கிய முழக்கத்தில் நாமும் கலந்து கொண்டுதான் வழிப்பயணத்தின் துன்பங்களை எல்லாம் மறந்திருக்கலாம். அமரநாத் குகை பெரிய குகை தான். 150 அடி நீளமும், 150 அடி அகலமும் 150 அடி உயரமும் உள்ள குகை. அது நூற்றுக்கணக்கான மக்கள் உள்ளே நிற்க வசதியாக இருக்கிறது. அதன் மேற்கூரையிலிருந்து குகையின் பின்பாகத்தில் உள்ள பாறையின் நடுவில் அமைந்து விளங்கும் சிவலிங்கத்தின்மீது தண்ணீர் கொட்டிக்கொண்டே இருக்கிறது. அந்தச் சிவலிங்கம்தான் அமரநாதர். அவர் முழுக்க முழுக்க பனிக்கட்டி உருவினர்

இந்த அமரநாதர் எப்போதும் இருப்பவர் இல்லை. ஒவ்வொருமாதமும் அமாவாசை அன்று உருப்பெற ஆரம்பிப்பார். நாளும் வளர்வார். பௌர்ணமியன்று பூரணப் பொலிவோடு நல்லகாத்திரமான சிவலிங்கவடிவில் தோன்றுவார். மறுநாள் முதல் வடிவம் சிறிது சிறிதாய் குறையத்தொடங்கும். அமாவாசைக்கு முந்திய தினம் தேய்ந்து மறைந்து விடுவார். கடவுள் உருவம் அருவம் அருவுருவம் உடையவர் என்று சைவசித்தாந்தம் சொல்கிறதே, அதற்கேற்ப அருவமாக இருக்கும் அவர், உருவம் பெறுவதும் அருவுருவமாக தோன்றுவது விந்தையிலும் விந்தையே'. ஆகஸ்ட் மாதத்து பௌர்ணமிதான் அமரநாதரைச் சென்று தரிசிக்க நல்ல காலம்.

அமரநாதர் தரிசனத்தோடு நமக்கு அவர் தரும் காட்சி நிறைபெறவில்லை. பறவைகளே வாழ இயலாத அந்த உறை பனியுடைய குளிர் பிரதேசத்தில் இரண்டு புறாக்கள் வாழுகின்றன. பூரணப்பொலிவுடன் அமரநாதர் உருப்பெற்றதும் இரண்டு புறாக்கள் பறந்து வந்து அக்குகையிலே காட்சித் தரும். அப்போது அன்று திருவையாற்றிலே அப்பர் கண்ட கைலாயக்காட்சி நமக்கு ஞாபகம் வரும்.

ஏரிப் பிறைக்கண்ணியானை
    ஏந்திழை யாளொடும் பாடி
முரித்த விலயங்கள் இட்டு
    முகமலர்ந்து ஆடாவருவேன்
அரித் தொழுகும் வெள்ளருவி
    ஐயாறு அடைகின்ற போது
வரிக்குயில் பேடையோடாடி
    வைகிவருவன கண்டேன்.
கண்டேன் அவர் திருப்பாதம்
    கண்டறியாதன கண்டேன்.

என்று நம்மை மறந்து நாம் பாடினால் அதிசயம் இல்லைதான்.

இந்த அமரநாதரை தரிசிக்க இந்துக்கள் மட்டும்தான் வருகிறார்கள். என்றில்லை. புத்தர்கள் வருகிறார்கள். முஸ்லீம்கள் வருகிறார்கள். அறுநூறு ஆண்டுகளுக்கு முன் காஷ்மீரை ஆண்ட ஜைன உலாப்தீன் என்னும் மகம்மதிய அரசன் அக்குகைக்கு வந்த அமரநாதரை தரிசனம் செய்து திரும்பியிருக்கிறான் என்பது வரலாறு. உண்மைதான், தென்னுடைய சிவன் இந்த அமரநாதத்திலே எந்நாட்டவர்க்கும், இறைவனாக அல்லவா விளங்குகிறான். அத்தகைய அருள்கோலத்தை சுயம்புலிங்க வடிவினிலே காணும் பேறு என்ன எளிதானதா, நேரிலே சென்று காண வாய்ப்பில்லாதவர்கள் எல்லாம் 428-ஆம் பக்கத்தில் உள்ள படத்தில் காணும் திருவுருவையாவது கண்டு மகிழட்டும். ஆம், 'அமரநாத்கி ஜெய்!' என்று இங்கிருந்தே எழுப்பும் குரல் அவன் காதுகளுக்கு எட்டாது போய்விடுமா என்ன?.

# 48. சிம்லாவில் சியாமளாதேவி

மகாகவி பாரதியார் சக்தி உபாசகராக இருந்திருக்கிறார். அவர்தான் கண்ட அன்னையாம் அலைமகள். மலைமகள், கலைமகளது வடிவழகை எல்லாம் பற் பல பாக்களில் வர்ணித்திருக்கிறார். அவர் கண்ட காளியை;

பின்னோர் இரவினிலே—கரும்
பெண்மை அழகு ஒன்று
வந்தது கண்முன்பு
கன்னிவடிவம் என்றே
களிகொண்டு
சற்றே அருகிற் சென்று!
பார்க்கையிலே
அன்னை வடிவமடா !
அவள் ஆதிபராசக்தி தேவியடா !

என்று மிகுந்த உற்சாகத்தோடு பாடியிருக்கிறார். தமிழ் நாட்டில் உள்ள காளிவடிவங்கள் அத்தனை அழகான வடிவங்களாகக் காணப்படுவதில்லை. மதுரையில் உள்ள ஊர்த்துவதாண்டவமூர்த்தியோடு போட்டியிட்டு நடமாடும் காளி ஒருத்தியே சிறப்பான வடிவமாக இருக்க பார்க்கின்றோம். வடநாட்டில் 'சாக்தம்' பரவியிருக்கிறதே. காளிவழிபாடும் சிறந்திருக்கிறதே—ஆதலால் அழகிய காளிவடிவை அங்கு காணலாம் என்றே எண்ணினேன். காளிகட்டம் என்றும் இன்றைய கல்கத்தாவிற்கே பெயர் கொடுத்த காளிகோயிலுக்கே சென்றேன். அங்குள்ள காளியோ நாக்கை வெளியில் தள்ளிக்கொண்டு மிகவும் பயங்கர வடிவிலேயே காட்சிதருகிறாள். மலர்மாலைக் குவியல்களுக்குள் அவள் புதைந்து கிடந்தாலும், அமைதி

யாகக் கிடக்கும் சிவன் பேரிலேயே நின்று ஆடிக் கொண்டிருக்கிறாள் அவள் என்பர். சண்டிகரில் உள்ள சண்டியும், கால்காவில் உள்ள காளியும் அழகானவர்கள் இல்லை. ஆதலால் என் யாத்திரையில், சிறந்த மலைவாசஸ்தலமான சிம்லா சென்றதும் அங்குள்ள சியாமளாவின் கோயிலுக்குச் சென்றேன். சியாமளா என்றால் கருத்த நிறமுடைய காளி என்று தானே பொருள்: இன்னும் சொல்லப் போனால் சியாமளா என்ற பெயர் தானே சிதைந்து சிம்லா என்று பெயர் பெற்றிருக்கிறது. அந்தச் சியாமளா தேவியோ ஓர் அடி உயரமே உள்ள ஒரு சிறிய வடிவினள். கேலிக்கூத்தான வடிவம் என்று கூட சொல்லத் தோன்றுகிறது. அந்த வடிவினைப் பார்த்து. அன்னை வடிவமடா அவள் ஆதிபராசக்தி! தேவியடா என்று பாரதியாரோடு சேர்ந்து நம்மால் உற்சாகமாக பாடமுடியாது. என்றாலும் இமயதின் சிகரத்திலே சிறந்ததொரு நகரான சிம்லாவில் இருக்கும் சியாமளியைப் பார்க்காவிட்டால் நமது யாத்திரை பூரணம் அடைந்ததாக ஆகாதே! ஆதலால் இன்று உங்களை எல்லாம் அந்த மலை வாசஸ்தலமாகிய சிம்லாவிற்கே அழைத்துச் செல்ல விரும்புகிறேன். என்ன வருகிறீர்களா?

சிம்லா செல்வதற்கு வழி முதலில் டில்லியிலிருந்து ரயிலில் புறப்பட வேண்டும். இரவு 10 மணிக்கு டில்லியில் ரயில் ஏறினால் காலை 6 மணிக்கு கால்கா ஸ்டேஷன் வந்துசேருவோம். அதன் பின் ஒரு பிரச்சினை. மேலே செல்ல வேண்டிய பயணத்தை ரயிலிலேயே தொடர்வதா இல்லை, டாக்சியை வைத்துக் கொண்டு ரோடு வழியே செல்வதா என்று. கிட்டத்தட்ட அறுபது மைல் ரோட்டில் செல்லவேண்டும். வழியோ வளைந்து வளைந்து மலைமீது ஏறிக்கொண்டிருக்கும். அத்தகைய பயணத்தில் வயிற்றைக் குமட்டி வாந்தி எடுக்க வரும். இதற்கெல்லாம் தயார் என்பவர்கள் டாக்சியில் ரோடு வழியே செல்லலாம். சுமார் பத்து பதினோரு மணிக்கு எல்லாம் சிம்லா சென்று

சேர்ந்து விடலாம். வசதியாக பஸ்ஸிலும் பிரயாணம் செய்யலாம். எல்லாம் நமக்கு ஒத்துவராது. காலதாமதம் ஆனாலும், பரவாயில்லை கொஞ்சம் வசதியாகவே செல்வோம் என்று தோன்றினால் பேசாமல் மலைமேல் செல்லும் சின்ன ரயிலிலேயே ஏறி உட்கார்ந்து கொள்ளலாம். அது ஆமை வேகத்தில் நகர்ந்து வளைந்து வளைந்து ஊர்ந்து சென்றாலும் பயணம் வசதியாக இருக்கும். பல இடங்களில் மலையைக் குடைந்து அமைத்திருக்கிறார்கள். கணவாய்கள் வழியாகச் செல்லும். அழகான இயற்கை காட்சிகளும் தென்படும். இடைவழியில் உள்ள பரோக் ஸ்டேஷனில் நல்ல கரம் சாயாவும் கிடைக்கும். அதைக் குடித்து கொஞ்சம் தெம்பு பெற்று மேலும் தொடர்ந்து பிரயாணம் செய்தால் கிட்டத்தட்ட மத்தியானம் இரண்டு மணிக்கு சிம்லா ஸ்டேஷன் வந்து சேருவோம்.

ஸ்டேஷனில் இறங்கியதும் எங்கே செல்வது என்பது பிரச்சினை. கொஞ்சம் வசதியானவர்கள் என்றால் பெரிய ஹோட்டல்களுக்கே செல்லலாம். இல்லை என்றால் ஸ்டேஷனிலிருந்து முந்நூறு அடி தள்ளியிருக்கும் பிரதேசத்திற்குச் சென்றால் சவுத் இண்டியன் கிளப் என்று ஒரு கட்டிடம் இருக்கும். ரயில்வே உத்தியோகத்தில் இருந்த தென்னிந்தியர்களால்—ஆம் முக்கியமாகத் தமிழர்களால் கட்டப்பட்ட கட்டிடம் அது. அங்கு அனுமதிபெற்றுத் தங்கலாம். ஒன்று சொல்ல மறந்து விட்டேனே. சிம்லாவில் டாக்சிகளோ டோங்காவோ கிடையாது. எல்லோரும் நடராஜாக்களாக மாற வேண்டியதுதான். ஆட்கள் இழுக்கும் ரிக்ஷாக்கள் உண்டு. முன்னே இருந்து இரண்டு பேர் இழுப்பர் பின்னே இருந்து இரண்டு பேர் தள்ளுவர். கூலியும் அதிகம் கேட்பர். சாமான்களை தூக்குவதற்கு மட்டும் கூலிகள் உண்டு. அவர்கள் முதுகில் எவ்வளவு சாமான்கள் வேண்டுமானாலும் ஏற்றலாம். அத்தனையையும் சுமந்துக்கொண்டு அநாயாசமாக மலைமேலே ஏறுவர் அவர்கள். நமக்கோ அவர்களோடு நம் உடலைச்

சுமந்து கொண்டு ஏறுவதே சிரமமாக இருக்கும். கொஞ்சம் நின்று நின்று ஒரு மைல் தூரம் ஏறிக் கடந்தால் மால் என்ற பகுதிக்கு வந்து சேருவோம். அதிலிருந்து கூப்பிடு தூரத்திலேயே கிராண்ட்ஹோட்டல்இருக்கிறது. மற்றைய ஹோட்டல்களும் உண்டு. இந்த ஹோட்டல்களில் எல்லாம் சாப்பாடு ஆங்கில மோஸ்தரில்தான் காய்கறிகளை வேக வைத்து அப்படியே தட்டில் கொண்டு வந்து வைத்து விடுவார்கள். உப்பையும் மிளகையும் தூவித்தூவி சாப்பிட வேண்டியதுதான். மாலின் கீழ்க்கோடியில் ஒரு மலையாளி மதராஸி ஹோட்டல் வைத்திருக்கிறார் அங்கு சென்றால் தான் இட்லி சாம்பார், தோசை வடை, எல்லாம் கிடைக்கும். அதிலும் திருப்தி இல்லாவிட்டால் முருங்கைக் காய் சாம்பார் சாப்பிட ஸவுத் இண்டியன் கிளப்பிற்கே போகவேண்டியதுதான்.

சிம்லாவில் குளிர் அதிகம். கடல் மட்டத்திற்கு 7000 அடிக்குமேல் உள்ள பிரதேசம் அல்லவா. அதுவும் வடக்கே ஒதுங்கிய இடம். ஊட்டி குளிர் எல்லாம் சிம்லாகுளிருக்கு உறைபோடக்காணாது. என்றாலும், பகலில் மாலில் சுற்றுவது நாகரீகமாக இராது. மாலையில் நாலுமணிக்கு வெளிக்கிளம்பினால் மாலின் மேற்கு ஓரத்திற்கு வந்து சேரலாம். அந்த இடத்தை 'ஸ்காண்டல்பாயிண்ட்' என்று கூறுகின்றார்கள். அதாவது வம்பளப்போர் கூடும் இடம் என்றுதான் பொருள். அதன் பக்கத்தில்தான் பாஞ்சால சிங்கம் லஜபதிராயின் சிலை அமைத்து வைத்திருக்கின்றனர். இது காரணமாக பழைய 'ஸ்காண்டல் பாயிண்ட்' என்ற பெயர் மாறி இன்று 'லஜபதி ஸ்கொயர்' என்ற பெயர் வழங்குகிறது. இங்கிருந்து கிழக்கு நோக்கியோ மேற்கு நோக்கியோ 'வாக்' பண்ணப்புறப்படலாம். மாலை வேளையில் உல்லன் சட்டை அணிந்து நாலுமைல் போய் வந்தால் உடம்புக்குத் தெம்பாயிருக்கும். உண்ணும் உணவும். ஜீரணிக்கும். வடக்கேயுள்ள கிடுகிடு பள்ளத்தாக்கில்தான் அன்னன்டேல், கிளென் என்ற அழகான இடங்கள் இருக்கின்றன. இயற்கை

யின் வனப்பெல்லாம் திரண்டிருக்கும் இடங்கள் அவை. இங்கெல்லாம் மாலையில் 'வாக்'போவதைவிட காலையிலே புறப்பட்டு நண்பர்களுடன் சென்று அங்கு 'பிக்னிக்' வைத்துக்கொள்வது நல்லது.

என்ன, மால், அன்னன்டேல், கிளென் என்று சிம்லாவில் உள்ள இடங்களை வர்ணித்துக் கொண்டிருக்கிறீரே சியாமளா தேவி கோயிலுக்குப்போக வேண்டாமா என்று தானே கேட்கிறீர்கள். அக்கோயில் சிம்லாவிற்குத் தெற்கே மூன்று மைல் தூரத்தில் உள்ள தாரா தேவி என்ற மலைச் சிகரத்தில் இருக்கிறது. அதற்கு நடந்துதானே போக வேண்டும். ஒரு நாள் மாலையை இதற்கென்று ஒதுக்கி நடக்கலாம் போகிற வழியில்தான் ராஷ்டிரபதிபவன் இருக்கிறது. பழைய வைஸ்ராய்கள் மிக மிக அழகாக வைத்திருக்கிறார்கள். இன்று எல்லாம் மூடிக்கிடக்கிறது. அனுமதி பெற்று உள்ளே நுழைந்து பார்க்கலாம். கட்டிடம் அவ்வளவு சிறப்பான கட்டிடம் அல்ல. அதற்கும் மேற்கே இரண்டு மைல் தூரம் சென்று மலை ஏறினால் தாரா தேவி சிகரத்தை அடையலாம். அங்குதான் ஒரு சிறு கோயில் சதுரமான ஓர் இடத்தில் ஓட்டுக்கூரை வேய்ந்து ஒருசிறு கோயில் கட்டியிருக்கிறார்கள். ஒரே ஒரு அறை. அதுதான் கர்ப்பகிரஹம். அதுதான் அர்த்த மண்டபம், அதுவே மகாமண்டபமும் கூட. இங்கே ஓர் அடி உயரத்தில் ஒரு சிறு கருத்த சிலை. முகத்தைத்தவிர மற்ற பகுதிகள் மூடியிருப்பார்கள். அதுதான் சியாமளாதேவி. என்ன ஏமாற்றம்? இமயத்தின் சிகரத்தில் உலகெலாம் காக்கின்ற அன்னை காளிக்கு அத்தனை சிறிய கோயிலா? ஒரு ராஜராஜன் மட்டும் அங்கு சென்றிருந்தால் பெருவுடையாருக்கு அமைத்த பெரிய கோயிலைப் போல் ஒரு பெரிய கோயிலை இந்தப் பிரகதீஸ்வரிக்கு அமையாது இருந்திருப்பானா? அதற்கும் கொடுத்து வைத்திருக்க வேண்டாமா? இந்தத் தாராதேவி சியாமளியை வணங்கிவிட்டு நமது இருப்பிடத்திற்குத் திரும்பும்போது, கிராண்ட் ஹோட்டலுக்கு மேல் புறம், சிம்லாவில்உள்ள வங்காள வியாபாரிகள் 'காளிபாலி'

என்று ஒரு சிறிய கோயிலைக் கட்டியிருக்கின்றனர். இங்கு, கட்டிடம் எல்லாம் சலவைக்கல்லில்தான். எப்போதும் பஜனையும் பூசையும் நடக்கும். இங்கு செல்வோர் தொகையே அதிகம். சொல்லப் போனால் சியாமளியைத் தேடிப்போவோர்களே கிடையாதுதான்.

இவ்வளவுதான் சிம்லாவில் பார்க்க வேண்டியது. ஊர் திரும்ப வேண்டியதுதானா என்று தானே கேட்கின்றீர்கள்? இல்லை இன்னும் ஒரு கோயிலுக்கு அழைத்துச் செல்ல விரும்புகின்றேன். இது ஜக்கோ மலை என்னும் பகுதியில் இருக்கிறது. சிம்லாவை விட ஆயிரம் அடி உயரத்தில் இருக்கிறது. சுமார் ஒன்றரை மைல் ஏறிச்செல்ல வேண்டும். பாதையும் அவ்வளவு நன்றாய் இராது. கொஞ்சம் சிரமப் பட்டுத்தான் ஏறவேண்டும். அங்கு ஒரு பெரிய கோயில் ராமருக்கு. அக்கோயிலில் பிரதான தெய்வமாக விளங்குகிறவர் ஆஞ்சநேயர்தான். அதற்கு ஏற்றாற்போல் அங்கு நமது கிஷ்கிந்தா வாசிகள் ஆதிக்கம்தான் கோயிலைச் சுற்றி எண்ணிறந்த குரங்குகள். ஆதலால் போகும் போதே கொஞ்சம் கடலை, பழம் எல்லாம் வாங்கிச் செல்ல வேண்டும். கோயிலுள் நுழைந்து அங்குள்ள ஆஞ்சநேயரையும் அவர் நிழலில் வதியும் ராமரையும் வணங்கித் திரும்பலாம். மலை ஏறிய சிரமத்திற்கு ராமதரிசனம் கிடைக்கிறதே அது போதாதா?

சிம்லா உல்லாசமாய்ப் பொழுதுபோக்க ஒரு சிறந்த இடம். அதுவும் ஜனவரி பிப்ரவரி மாதங்களில் அங்கு பனி மழை பெய்யும். சிகரங்கள் எல்லாம் உருக்கிய வெள்ளியால் மூடப்பெற்றிருக்கும். ஏன் வீட்டுக்கூரைகள், மரங்கள் எல்லாம் பனியால் மூடப்பெற்றிருக்கும். பனிக்கட்டிகள் உறைந்து கிடக்கும் வழியாக நடந்து செல்வதே மிக்க மகிழ்ச்சி தரும். ஆஸ்த்மா முதலிய நோயுள்ளவர்கள் அந்தத் திசை நோக்கியே தலைவைத்தல் கூடாது. உடலில் வலிவும், உள்ளத்தில் தெம்பும் எல்லாவற்றிற்கும் மேலாக பையில் நிறையபணமும் உள்ளவர்கள் சென்று காண வேண்டிய இடம் அது. உங்களுக்கு இவையெல்லாம் இருக்கிறது. சரிதானே.

# 49. ஹரித்துவாரத்தில் கங்காதேவி



கங்கா தேவி கோயில்

கங்காத்வாரத்திற்கு
மிஞ்சின தீர்த்தம் இல்லை
கைலாயத்திற்கு மிஞ்சின
மலையில்லை

*2738—28*

**வாசுதேவனுக்கு மிஞ்சின**
**கடவுள் இல்லை!**
**கங்கைக்கு மிஞ்சின**
**நதியில்லை**

என்பது ஸ்காந்த புராணம் கூறும் சித்தாந்தம். இதில் கங்காத்துவாரம் என்பது எங்கேயிருக்கிறது என்பது கேள்வி, அது கங்கை நதிபாயும் இடத்திலேதான் இருக்கவேண்டும். அதுவும் இரண்டு மலைகளுக்கு இடையே பாய்ந்து பெருகும் இடத்திலேதான் கங்காத்துவாரம் இருக்க வேண்டும். ஆதலால் கங்கையும், கங்காத்துவாரமும் சேர்ந்திருக்கிற இடம் ஒன்று இருக்கவேண்டும். கங்காத்துவாரத்தைப் பற்றித் தெரிந்து கொள்ளுமுன் கங்கையைப்பற்றி நாம் தெரிந்துக் கொள்ள வேண்டாமா? கங்கை என்று நினைத்தவுடனேயே கம்பன் பாடிய கங்கை என்னும் கடவுள் திருநதி என்றஅடி ஞாபகத்திற்கு வராமல் போகாது. இன்னும்

**அண்டம் மூடு அறுத்து**
**அந்தரத்து இழிந்து**
**அங்கு அவனியான்**
**அலமரப் பெருகும்**
**மண்டு மாமணி**
**நீர்க்கங்கை**

என்று திருமங்கை ஆழ்வாரும்பாடி இருக்கிறாரே. இப்படி அந்தரத்திழிந்து அவனியான் அலமரப் பெருகும் கங்கையைக் காசியிலோ கல்கத்தாவிலோ கண்டால் இயலாது. அந்த கங்கையைக் காண்பதற்கு கங்காத் துவாரத்திற்கே செல்ல வேண்டியதுதான் இல்லை. அதற்கும் மேலே மலை ஏறிச் செல்ல வேண்டியதுதான். இமயமலையின் ஒரு சிறு தொடர் சிவலிக் என்னும் மலை, அந்த மலையில் உள்ள ஒரு பிளவுக்கிடையே ஓடி வருகிறது கங்கை. அந்த இடத்தையே காங்காத்துவாரம் என்று ஸ்காந்தபுராணம் கூறி இருக்கிறது. கங்காத்துவாரம் என்றால் என்ன இடம் என்று

வேண்டுமானால் புராணம் படித்த பெரியவர்களுக்கு தெரியலாம். ஆனால் இன்று அது ஹரித்துவார் என்ற பெயரில் தான் விளங்குகிறது. இதில் கூட ஒரு சங்கடம். அது கைலாயத்திற்கு வழிகாட்டும் வாயில் அதனை ஹரித்துவார் என்று சொல்லவேண்டும் என்பர் சைவப்பெரு மக்கள். இல்லை அது பத்ரிநாராயணன் இருக்கும் வைகுண்டத்திற்குசெல்லும் வாயிலாக இருக்கிறது. ஆதலால் ஹரித்துவார் என்றுதான் சொல்ல வேண்டும் என்பர் ஸ்ரீவைஷ்ணவர்கள். நமக்கோ சைவ, வைஷ்ணவ வேற்றுமைகள் கிடையாது. ஆதலால் நாம் நமது ஆங்கிலேய நண்பர்களுடன் சேர்ந்து நடுநிலையில் நின்று ஹரித்துவார் என்றே சொல்லி வருவோம். அந்த ஹரித்துவார் என்னும் கங்காத்துவாரத்திற்கே செல்கின்றோம் நாம் இன்று.

ஹரித்துவார் செல்லநாம் டில்லியிலிருந்து ரயிலில் புறப்படலாம். டேராடூன் செல்லும் ரயிலில் ஏறிச்சென்றால் ஹரித்துவார் ஸ்டேஷனிலேயே இறங்கலாம். இல்லை காரிலும் செல்லலாம், பஸ்ஸிலும் செல்லலாம். ஹரித்துவாரை நெருங்கும்போது நல்ல வயல்வெளிகள் தெரியும் பார்த்தால். அவையெல்லாம் தமிழ் நாட்டைப்போலவே இருக்கும். அங்குதான் உயர்தரமான பாசுமதி அரிசி விளைகிறது என்கின்றனர். ரயில்வே ஸ்டேஷனிலிருந்து ஒரு மைல் தூரத்தில்தான் கங்கையில் உள்ள ஸ்நான கட்டமான ஹரிகீபைரி என்னும் இடம் இருக்கிறது. அதனை நோக்கி நடந்தும் செல்லலாம் இல்லை டோங்கா வைத்துக் கொண்டும் செல்லலாம். செல்லும் வழியில் நாலு வீதிகள் பிரியும் நாற்சந்தியில் ஒரு தண்ணீர் தொட்டியிருக்கிறது. அதன் நடுவில் சிவபெருமானது பளிங்குக்கற்சிலை ஒன்றிருக்கிறது. இவர் சடாமகுடதாரியாக பத்மாசனத்தில் இருக்கிறார். இவருக்கு ஆறு திருக்கரங்கள் இருக்கின்றன. இரண்டு கைகளில் உருத்திராட்சமாலை இருக்கிறது. தொடையின் மீது வைத்திருக்கும் இரண்டு கைகளில் இரண்டு கலசங்கள் இருக்கின்றன. மற்ற இரண்டு கைகளிலும் கலசம் ஏந்தி அதன் மூலம் தனக்கே கங்காபிஷேகம் செய்த வண்ணமாக

இருக்கிறார். இன்றைய சிற்பி அமைத்த வடிவம்தான் என்றாலும் அழகாக இருக்கிறது. இவனையே மிருத்ஞ்யுசயன் என்கின்றனர். மரணமிலாப் பெருவாழ்வு வாழ சிவபெருமானும் கங்காபிஷேகம் செய்துக்கொள்ள வேண்டியிருக்கிறது. இனிநாம் ஹரிகீபைரி என்ற இடத்திற்கே போகலாம். இதுதானே இங்கே முக்கியமான ஸ்நான கட்டம். இக்கட்டம் நன்றாய் அகலமாய் கிட்டத்தட்ட நாற்பது படிகள் கொண்டதாகக்கட்டப்பட்டிருக்கிறது. கிரகணம், கும்பமேளாக்காலங்களில் எண்ணிறந்த பக்தர்கள் இந்த இடத்தில் நீராட வருவார்களாம். அப்போது பலர் இடிபட்டு மிதிபட்டு மாண்டுவிடுவார்களாம். அதனால் நெருக்கமாக இருந்த இந்த ஸ்நானகட்டத்தை விரிவுபடுத்தி நிறையப் படிகட்டுகள் கட்டி வைத்திருக்கிறார்கள். இங்கு கங்கை இரண்டு பிரிவாக ஒடுகிறது. இரண்டிற்கும் மத்தியில் தீவு போல ஓர் இடம் அமைத்து அதில் ஒரு மணிக்கூண்டையும் கட்டியிருக்கிறார்கள். சாதாரணகாலத்தில் இங்கு கங்கை இரண்டு பிரிவாக ஒடுகிறது. இரண்டிற்கும் மத்தியில் தீவு போல இரு இடம். அதில் ஒரு மணிக்கூண்டையும் கட்டியிருக்கிறார்கள். சாதாரண காலத்தில் இங்கு கங்கையில் ஆழம் அதிகம் இராது. ஆதலால் நன்றாக இறங்கி நீராடலாம். நடுத்திட்டுக்கும் போய் வரலாம். கங்கையில் பிரவாகம் வரும் போது கொஞ்சம் ஜாக்கிரதையாகவே இருக்கவேண்டும். இந்த ஸ்நான கட்டத்தில்தான் கங்காத்வார ஆலயம் இருக்கிறது. அது பெரிய கோயிலும் அல்ல. உள்ளே இருக்கும் கங்கை அம்மனும் ஏதோ ஒரு பெரிய பொம்மைபோல இருக்கிறதே தவிர வேறு அழகுடையதாக இல்லை. இந்தக் கட்டத்தில் ஒரு கல்லில் இரண்டு பழங்கள் போல் செதுக்கப் பட்டிருக்கிறது. அதனையே விஷ்ணு பாதம் என்கின்றனர். திரிவிக்கிரமனாக பெருமாள் ஓங்கி உலகளந்து நின்றபோது, பிரம்மா கங்காஜலம் கொண்டே அவரது திருவடிகளைக் கழுவியிருக்கிறார். அப்படி கங்கை நீராடிய விஷ்ணு பாதமாக அங்கே நிலைத்திருக்கிறது. கங்கையில் நீராடி,

கங்கையம்மனையும் தரிசித்து விஷ்ணுபாதத்தில் விழுந்து வணங்கி எழுந்தால் நமது பழவினைகள் எல்லாம் கழன்றோடிப் போய்விடும் என்பது நம்பிக்கை. இந்த இடத்தையே பிரம்ம குண்டம் என்று அழைக்கின்றனர். இங்குதான் ஒவ்வொரு மாலையும் பெண்கள் அகல் விளக்கு களில் தீபம் ஏற்றி அவைகளைக் கங்கையில் மிதக்கவிட்டு வழிபாடு செய்கின்றனர். இனி நாம் இங்குள்ள மற்ற ஸ்நான கட்டங்களையும் கோயில்களையும் காணப்புறப் படலாம்.

இங்கு கங்கையின் தென்கரையில் சுபாஷ் கட்டம் என்று ஒரு இடம் இருக்கிறது. அங்கு நேதாஜி சுபாஷ் சந்திரபோஸ் சிலை ஒன்று அமைத்து வைத்திருக்கின்றனர். அதை ஒட்டிய இடத்தில்தான் அங்குள்ள சேவா சமிதிக்கட்டிடம் இருக்கிறது. இதை ஒட்டியே கௌகட், குஷாவர்த்த கட்டம் இருக்கிறது. குஷாவர்த்த கட்டத்தில்தான் தத்தாத்ரேயர் ஆயிரம் வருஷங்கள் தவம் இருந்தார் என்பார்கள். அங்குதான் பிதுர்க்களை நினைத்து கங்கையில் பிண்டமிடுகின்றனர். இன்னும் ஸ்ராவண்நாத் கட்டம், ராமகட்டம், விஷ்ணு கட்டம், பிர்லா கட்டம் கணேஷ் கட்டம் என்று பல கட்டங்கள் இருக்கின்றன.

ஹரிகிபைரி என்னும் இடத்திலிருந்து முக்கால் மைல் வடக்கே சென்றால் அங்கு பீமகுண்டம் இருக்கிறது. இது பஞ்சபாண்டவர்களில் ஒருவனான பீமனது குதிரை தன் குளம்பால் உதைத்த இடத்தில் ஏற்பட்ட குண்டம் என் கின்றனர். இன்னும் மூன்றுமைல் வடக்கு நோக்கி நடந்தால் சப்தசரோவரம் இருக்கிறது. அன்று வானிலிருந்து பாய்ந்து பெருகிய கங்கையை தன் ஜடாமகுடத்தில் மடக்கி பின் பகீரதன் வேண்டிக்கொண்டபடி ஏழு கூறாகப் பெருக விட்டார் சிவபெருமான் என்பது புராணக்கதை. அப்படி கங்கை ஏழுகூறாக பெருகி ஓடிய இடமே சப்தசரோவரம். அங்கு இருந்துதான் பல முனிவர்கள் தவம் செய்திருக் கின்றனர் என்று கூறுகின்றனர். அதற்கேற்றாற் போல

இந்த சப்தசரோவரத்தை அடுத்த இடத்திலேயே சப்த ரிஷிகள் ஆசிரம் என்னும் பெயரோடு ஒரு ஆசிரமும் அமைத்து வைத்திருக்கிறார்கள். அதை ஒட்டி சிவபெருமான் கோயிலும் கட்டியிருக்கிறார்கள். இன்னும் கங்கையிலிருந்து வடியும் கால்வாய்களைப் பிரிக்கும் ஹெட் வொர்க்ஸ் இங்குதான் கட்டப்பட்டிருக்கிறது.

என்ன, கட்டங்களாகவே வர்ணித்துக் கொண்டிருக்கிறீரே. இங்கு கோயில்களே கிடையாதா என்றுதானே கேட்கிறீர்கள். 'ஹரித்துவார்' என்ற பெயரை பழைய புராணங்களில் காணோம். அப்போதெல்லாம் இதனை மாயாபுரி என்றுதானே வழங்கியிருக்கிறார்கள். அப்படி மாயாபுரி என்று வழங்கிய பெயருக்கேற்ப மாயாதேவியின் பெயரால் ஒரு கோயிலை கட்டி இருக்கின்றனர். இன்னும் ஹரித்துவார் அடுத்திருக்கும் நீலபருவதம் என்னும் இடத்தில் சண்டிதேவிக்கு ஏழு கோயில்கள் இருக்கின்றன. இது ஹரிகிபைரியிலிருந்து நாலுமைல் தூரத்தில் இருக்கிறது. அதிகாலையிலேயே புறப்பட்டால்தான் மலை ஏறச் சவுகரியமாக இருக்கும். அத்துடன் அங்கு செல்லும் யாத்ரீகர்கள் குடிப்பதற்குத் தண்ணீர் கூடவே எடுத்துச் செல்ல வேண்டும். மலையில் குடிப்பதற்குத் தண்ணீர் கிடையாது. ஹர்த்துவாருக்கு வடபுறம் 'நீண்டு உயர்ந்திருக்கும் சிவலீக் மலையில் மானசாதேவிக்கு ஒரு கோயில் இருக்கிறது. மானசாதேவி என்பவள் சிவபெருமானின் மகள் என்கின்றனர். நமது புராணங்களில் இப்படி ஒரு மகள் சிவபெருமானுக்கு உண்டு என்றும் அவளை மானசாதேவி என்று அழைத்தார்கள் என்றும் நாம் படித்ததில்லை. அந்த மானசாதேவி வரசித்தி உடைய தெய்வம். வேண்டுவோர் வேண்டுவன எல்லாம் தருபவள். காலையிலும் மாலையிலும் அங்கு பூசை நடக்கிறது. முக்கால்மைல் தூரம்தான் என்றாலும் மலை ஏறுவது சிரமமாக இருக்கும். சிரமத்திற்கு ஏற்ற பலன் கிடைக்கும் என்பதால் ஏறிப் பார்த்து வணக்கம் செலுத்திவிட்டே திரும்பலாம்.

இன்னும் ஒரே ஒரு இடத்தைக்காணாது திரும்பினால் நாம் ஹரித்துவாரத்தைப் பூரணமாகப் பார்த்தவர்கள் ஆக மாட்டோம். ஹரிகிபைரிக்குத் தெற்கே மூன்று மைல் தொலைவில் கங்கையில் கங்கல் என்று ஓர் இடம் இருக்கிறது. இந்த இடத்தில்தான் சிவபெருமானின் மாமனாரான தக்ஷன் இருந்து அரசு புரிந்திருக்கிறன். தன் மருமகன் தன்னை மதிக்கவில்லை என்பதற்காக, ஒரு யாகம் நடத்தி அதற்குத் தன் மகளான தாக்ஷாயணியையும், மருமகன் சிவபெருமானையும் அழைக்காமல் அலட்சியப்படுத்தியிருக்கிறான். என்ன இருந்தாலும் பெண்ணிற்கு பிறந்த வீட்டு, தந்தைப்பாசம் இல்லாமல் இருக்குமா?|தாக்ஷாயணி மட்டும் புறப்பட்டு யாக சாலைக்கு வந்திருக்கிறாள். தன்னை அவமானப்படுத்திய தந்தை நடத்திய யாக குண்டத்திலேயே விழுந்து உயிர் துறந்திருக்கிறாள். அவளது உடலை எடுத்து தோளில் போட்டுக் கொண்டுதான் சுடலையில் ஆடியிருக்கிறார் சிவபெருமான். இதுவே அந்த இடம் என்கின்றனர்- அங்கு இன்று தக்ஷேஸ்வரர் மகாதேவ் என்னும் சிவனுக்கு ஒரு கோயில் இருப்பதுடன் சதி கட்டம் என்றும் ஓர் இடம் இருக்கிறது. அத்தகைய புராணப் பிரசித்தி பெற்ற இடமே கங்கல். இத்தனையும் பார்த்து விட்டு, எத்தனை ஸ்நான கட்டங்களில் நீராட |முடியுமோ அத்தனை கட்டங்களிலும் நீராடிவிட்டு ஹரனை நோக்கியோ ஹரியை நோக்கியோ ஹரித்துவார் வழியாகப் பயணம் கட்டலாம்.

# 50. ரிஷிகேசத்து ரகுநாத்ஜி



ரிஷிகேசம்

இராமர், இலக்குமணர், சீதை மூவரும் அயோத்தியை விட்டு காடுநோக்கிப் புறப்படுகிறார்கள். கங்கையை குகனது படகில் ஏறிக்கடந்து சித்திரகூடத்தை நோக்கி நடக்கிறபோது யமுனை குறுக்கிடுகிறது. யமுனையிலோ அப்போது பெருவெள்ளமே ஓடிக்கொண்டிருக்கிறது. யமுனைக்கரையியிலே குகனைப்போல ஒருவன் படகு வைத்து காத்துக் கொண்டிருக்கவில்லை. நதியைக் கடப்பது எப்படி என்று இராமன் சிந்தித்துக் கொண் டிருக்கும்போது இலக்குவன் விறு விறு என்று காரியத்தில் முனைந்து விட்டான். அங்கு மண்டிக் கிடந்த மூங்கில்

புதர்களிலிருந்து மூங்கில்கள் ஐந்தாறை வெட்டினான். அவைகளை மாணைக் கொடியினால் கட்டினான். ஓர் அழகான தெப்பம் அமைந்துவிட்டது. அதில் சீதையையும் ராமனையும் ஏற்றி, அந்தத் தெப்பத்தை தள்ளிக்கொண்டு நீந்தியே அக்கரை கொண்டு சேர்த்துவிட்டான் இலக்குவன். இதனை அழகாகக் கூறுகிறார் கவிச்சக்கரவர்த்தி கம்பர்;

வாங்கு வேய்ங்கழை துணித்தனன்
மாணையின் கொடியால்
ஓங்குதெப்பம் ஒன்று அமைத்து
அதன் உம்பரில் உலம்போல்
வீங்குதோள் அண்ணல் தேவியோடு
இனிது வீற்றிருப்ப
நீங்கினான் அந்த நெடுநதி
இருகையால் நீந்தி.

என்பது கம்பனது பாடல். என்ன அதிசய சாதனை, என்று அந்தப் பாட்டைப் படித்து வியந்து கொண்டிருக்கிறோம். ஆனால் இதைவிட ஒரு அரிய சாதனையையே அல்லவா இந்த இலக்குவன் செய்திருக்கிறான். வானில் இருந்த கங்கையைக் கடுந்தவம் புரிந்து பூமிக்குக் கொண்டு வருகிறான் பகீரதன். தவம்புரிந்து உயர்ந்த மாமுனி கொணர்ந்த கங்கை என்றே கங்கை பாராட்டப் பெறுகிறது. அந்தக் கங்கை பூமியில் இறங்கிய உடனே மிக வேகத்தோடே பாய்ந்து பெருகி இருக்கிறது. இந்த இடத்திலே கங்கையை கடக்க வெறும் தெப்பமோ தோணியோ பயன்பட்டிருக்க முடியாது. ஒரு பாலமே கட்டத்தான் வேண்டும். எதற்கும் சளைக்காத இலக்குவன் அப்படியே ஒரு பாலம் கட்டியிருக்கிறான். ஆற்றின் பிரவாகம் செல்லும் பகுதியிலே கால் நாட்டவோ, காங்கிரீட் போட்டு திண்டுகள் கட்டவோ முடியாது என்பதையும் கண்டிருக்கிறான். ஆற்றின் இருகரையிலும் தான் சுவர் எழுப்ப முடியும். அப்படி எழுப்பிய சுவரின் ஆதரவிலே ஒரு பாலம் ஆம் தொங்குபாலம்தான் அமைக்க

முடியும். அப்படியே ஊஞ்சல் போல் ஆடும் தொங்கு பாலம் ஒன்றையே கட்டிமுடித்திருக்கிறான். என்னையா? இத்தனையும் உடன் இருந்து பார்த்தவர் போலச் சொல்கிறீரே அப்படியானால் அந்தப் பாலம் எங்கே இருக்கிறது என்றுதானே கேட்கிறீர்கள். இருக்கிறதே, இன்றுவரை லட்சுமண்ஜுலா என்ற பெயரோடு. லட்சுமண் ஜுலா என்றால் லட்சுமணனால் கட்டப்பட்ட தொட்டில் போன்ற தொங்குபாலம் என்றுதான் பொருள். அந்த லட்சுமண் ஜுலாதான் ஹரித்துவாருக்கு வடக்கே பதினோரு மைல் தூரத்தில் கங்கை மலையிலிருந்து பூமிக்கு இறங்கிவரும் இடத்தில் இருக்கிறது. அதற்கு மூன்று மைலுக்குத் தெற்கே, ஆம் ஹரித்துவாருக்கு பதினான்கு மைலுக்கு வடக்கே இருக்கிறது, ரிஷிகேசம் என்னும் தலம். அந்த ரிஷிகேசத்திற்கும், லட்சுமண்ஜுலாவிற்குமே செல்கிறோம் நாம் இன்று.

ரிஷிகேசம் செல்வதற்கு டில்லியிலிருந்து டேராடூன் செல்லும் ரயிலில் ஏறவேண்டும். ராய்வாலா என்ற ஸ்டேஷனில் வண்டி மாறவேண்டும். அதைவிட சௌவுகரியமானது ஹரித்துவார் ஸ்டேஷனிலேயே இறங்கி அங்கிருந்து ரிஷிகேசம் செல்லும் ரோட்டில் வண்டி ஒன்றில் வசதியாகச் செல்லலாம். ஹரித்துவாரத்திலிருந்து செல்லும் பஸ்களிலும் செல்லலாம். காரிலேயே செல்வதானால் ரிசிகேசம்வரை மட்டுமல்ல, லட்சுமண் ஜுலாவரையே சௌவுக்கியமாகச் செல்லலாம். கூடுமானவரை ரோட் நன்றாகவே இருக்கும். ரிஷிகேசம் செல்லும் வழியில் சாங் என்னும் ஆறு வேறே இருக்கிறது. அதில் தண்ணீர் குறைவாகவே ஓடிக் கொண்டிருக்கிறது. அதை கடக்க நல்லபாலம் ஒன்றும் கட்டியிருக்கிறார்கள். அந்த சாங் என்னும் ஆற்றின் தென்கரை வழியாகவே டேராடூன் செல்லும் ரயில் பாதையும் ரோட்டுப் பாதையும் செல்கிறது. நாம் நேரே, ரிஷிகேசம் ஸ்டேஷனிலிருந்து கிழக்கு நோக்கி இரண்டு மூன்று பர்லாங்கு நடந்தால்,

அங்குள்ள பிரபலமான திரிவேணி கட்டத்திற்கு வந்து சேருவோம். இது ஹரித்துவாரத்திலுள்ள பிரம்ம குண்டத்தைப் போல புனிதமான கட்டம் ஆனதால் கங்கை யமுனை சரஸ்வதி என்ற மூன்று நதிகளும் கூடு கின்றன என்பர். அதனாலேயே திரிவேணி கட்டம் எனப் பெயர் பெற்றிருக்கிறது. அங்கு கங்கைதான் பிரவகித்து ஓடுகிறது. அதில் வந்து கலக்கும் மற்றைய நதிகள் எல்லாம் சின்னஞ்சிறு ஓடைபோலவே இருக்கிறது. அங்கே ஒரு பழைய கோயில் இருக்கிறது. அதைப் பரத்ஜீ கோயில் என்கின்றனர். ஆம் நீதியின் நிலையமாக விளங்கிய பரதனுக்கு இந்தப் பாரத கண்டத்தில் பல கோயில்கள் இல்லை. நானறிந்த மட்டில் வடக்கே இந்தக் கோயிலும் தெற்கே கேரளத்தில் இருஞாலக்குடா என்னும் இடத்தில் ஒரு கோயிலும்தான் இருக்கிறது. பரதன் ரிஷிகேசத்தில் இருந்து தவம் செய்த இடத்தில் இந்தக் கோவில் கட்டப் பட்டிருக்கிறதாம். கோயிலும், அது இருக்கின்ற சூழ்நிலையும் ரமணீயமாக இருக்கிறது. சில மணிநேரம் அங்கே தங்கி இருந்து இளைப்பாறலாம். திரிவேணி கட்டத்திற்குத் தெற்கே முக்கால் மைல் தூரத்தில் முனிகிரெட்டி என்னும் ஓர் இடம் இருக்கிறது. அங்குதான் கங்கைக்கரையில் சிவானந்த மகரிஷியின் ஆஸ்ரமம் இருக்கிறது. அவர் நிர்மாணித்த வன சர்வகலா சாலையும், தெய்வநெறிக்கழகமும் அங்கிருந்து அறிவொளி பரப்பிக் கொண்டிருக்கின்றன. காலையும் மாலையும் பஜனைகள் நடக்கின்றன. மேல்நாட்டுப் பெண்களும் ஆண்களும் ஆன்மிகத்துறையில் ஈடுபட இங்கு வந்து தவம் கிடக்கின்றனர். அங்குள்ள ஆசிரமத்தில் எப்போதும் சாப்பாடு போட்டுக்கொண்டே இருக்கிறார்கள். வடநாட்டு யாத்திரையில் ரொட்டியையும், சாயாவையும் சாப்பிட்டுக் கொண்டிருக்கும் நமக்கு இங்கு நல்ல அரிசிச் சாதமும் சாம்பாரும், நெய்யும் தாராளமாகக்கிடைக்கிறது, என்றால் அங்கு தங்கி, ஒரு வேளையாவது உணவு அருந்தாமல் திரும்பமுடியுமா? நான் போனபோது சுவாமிஜியவர்கள்

இருந்தார்கள். என்னைத் திருநெல்வேலிக்காரன் என்று அறிந்தபோது, பூர்வாசிரமத்தில் திருநெல்வேலிக்காரராக இருந்த அவர்களுக்கு என் பேரில் அளவிலாத அன்பு ஏற்பட்டு விட்டது. சொல்லப்போனால் அன்று உலகைச் சமன் செய்ய அகத்தியரை சிவபெருமான் தென்திசைநோக்கி பொதிகைமலைக்கு அனுப்பினான் என்பது வரலாறு. இன்று நாமோ தென்திசையிலிருந்து இமயம் நோக்கி ஒரு ஜோதியை அனுப்பி வைத்திருக்கிறோம். இன்று சுவாமிஜீ அமரர் ஆகிவிட்டார்கள். அவர்கள் ஏற்றிய அமரதீபம் அங்கு சுடர் விட்டு பிரகாசித்துக் கொண்டிருக்கிறது. இந்த முனிகிரெட்டி என்னும் இடத்தில் படகில் ஏறி கங்கையை கடந்து அக்கரை செல்லலாம். அங்குதான் கீதாபவனம், ஸ்வர்க்க ஆசிரமம், பரமார்த்த நிகேதான் என்னும் இடங்கள் எல்லாம் இருக்கின்றன. அப்படிப் படகில் ஏறிக் கொண்டு கங்கையைக் கடக்கும்போது 'ஜிஸ்தேஷ் மே கங்காபேதி ஹை' என்று பாடிக் கொண்டே செல்லலாம். அது ஒரு புதிய அனுபவமாகவே இருக்கும். இல்லை இந்தப் படகுப்பயணம் எல்லாம் வேண்டாம் என்றால் சரேல் என்று ரோட்டிற்கு வந்து வடக்கு நோக்கி மூன்றுமைல் செல்ல வேண்டும். ரிஷிகேசத்திற்கு வடக்கே ஒருமைல் தூரத்தில் வழியை அடைத்து ஒரு கம்பைப் போட்டிருப்பார்கள். மே, ஜூன், ஜூலை மாதங்களில்தான் அந்தக் கம்பை எடுத்து வைப்பார்கள். பத்ரிநாத், கேதார்நாத் செல்லும் பாதை இங்கிருந்துதானே துவங்குகிறது. இங்கிருந்து பஸ் புறப்படும். அங்கெல்லாம் செல்லுவதற்குரிய காலம் மே, ஜூன் மாதங்கள்தாம். நான் போனது மே மாதம் ஆதலால் நேரே லட்சுமன் ஜூலா வரை காரிலேயே போகமுடிந்தது. லட்சுமன் ஜூலா என்னும் தொங்கு பாலத்திற்கு மேற்கே ஒருபர்லாங்கு தூரத்தில் காரை நிறுத்திவிட்டு நடந்துதான் செல்லவேண்டும்.

லட்சுமண் ஜூலா என்னும் தொங்கு பாலத்தைப் பார்த்தால் அதிசயத்து நிற்போம். அத்தனை அழகாக

அந்தப் பாலம் கட்டப்பட்டிருக்கிறது இப்போதிருக்கிற பாலத்தை அந்த இதிகாச காலத்து இலக்குவன் கட்டியிருத்தல் இயலாது. இத்தனை இரும்பு. கம்பிகளுக்கு எல்லாம் அவன் எங்கு போவான்? அவன் மூங்கிலாலும் மாணைக் கொடியாலும் கட்டி முடித்திருந்ததையே, தற்காலத்திய இஞ்சினியர்கள் அழகாக அவர்கள் கைத்திறன் எல்லாம் காட்டிக் கட்டியிருக்க வேண்டும். கொஞ்சமும் அஞ்சாமல் அந்த பாலத்தில் மேல் நடந்து கங்கையைக் கடக்கலாம். பாலத்தைக் கடந்து அக்கரை சென்றதும் அங்கு எத்தனையோ சிறு சிறு கட்டடங்கள், அங்கெல்லாம் தனிமையை நாடி ஓடிய தபோதனர்கள் இருக்கிறார்கள். இந்த கட்டிடங்களுக்கு இடையேதான் ஒரு சிறிய கோயில். அது ரகுநாத்ஜி கோயில் என்பர். எப்போது பரதன் வந்து தவம் செய்துவிட்டானோ, எப்போது லட்சுமணன் ஒரு பாலம் அமைத்து விட்டானோ, அந்த இடத்தைவிட ரகுநாதனான ராமர் வந்து கோயில் கொள்வதற்கு வேறு ஏதாவது தூண்டுதல் வேண்டுமா என்ன? ரகுநாதன் சின்னஞ்சிறிய வடிவினரே. சர்வ அங்க சுந்தரன். அல்லையாண்டமைந்த அழகன் அவன் என்றெல்லாம் நாம் அவனை காவியம் மூலம் அறிந்திருப்போம். அவ்வளவு அழகனாக இந்த ரகுநாதன் இருக்கமாட்டான். இனி நாம் கங்கையின் அந்தக் கரையிலேயே நடக்கலாம். கிட்டத்தட்ட ஒருமைல் தெற்கு நோக்கி நடந்தால் அங்கு தான் கீதாபவனம் ஸ்வர்க்க ஆசிரமம். பரமார்த்த நிகேதன் முதலிய கட்டிடங்களைப் பார்க்கலாம். இவைகளில் கீதாபவனம் பெரியது. மற்றவை எல்லாம் சின்னக் கட்டிடங்களே. எப்போதுமே இரைச்சல் செய்து கொண்டிருக்கும் மனித சமுதாயத்தை விட்டு ஓடி, தனித்திருந்து பிரார்த்தனை செய்ய விரும்பும் அன்பர்கள் இங்கு ஒரு மாதகாலம் தங்கியிருந்து அமைதி என்றால் என்ன என்று தெரிந்துக் கொள்ளலாம். அதற்கெல்லாம் நமக்கு அவகாசம் ஏது, மேலும் அந்த பாக்கியம் எல்லாம் கொடுத்து

வைத்திருக்க வேண்டாமா? ஆதலால் வந்த வழியிலேயே திரும்பிவிடலாம்.

ரிஷிகேசத்திலிருந்து மேற்கே முப்பது மைல் தூரத்திலேதான் டேராடூன் என்ற பெரிய பட்டணம் இருக்கிறது. அங்குதான் உலகப்புகழ் பெற்ற வன ஆராய்ச்சிக் கழகம் இருக்கிறது. மிலிட்டரி கல்லூரி இருக்கிறது. இந்தியப் படங்கள் வரையும் சர்க்கார் சர்வே ஆபீசின் தலைமைக் காரியாலயமும் இருக்கிறது. இன்னும் இந்த டேராடூனிலிருந்து இருபது மைல் தூரத்தில் முசோரி என்னும் மலைவாசஸ்தலமும் இருக்கிறது. உடலில் தெம்பும், பையில் பணமும், நிறைய அவகாசமும் உள்ளவர்கள் இங்கெல்லாம் சென்று வரலாம்.





சீரங்கப்பட்டண கோயில்



சோமநாதபுரத்து கேசவன்

## ஆசிரியரின் பிற நூல்கள்

1. பிள்ளைவாள்
2. தமிழறிஞர் முதலியார்
3. ரசிகமணி டி. கே. சி.
4. கம்பன் சுயசரிதம்
5. அமர காதலர்
6. தென்றல் தந்த கவிதை
7. கலைஞன் கண்ட கடவுள்
8. கல்லும் சொல்லாதோ கவி
9. வேங்கடம் முதல் குமரி வரை
   நான்கு பாகங்கள்
10. பிள்ளையார் பட்டிப் பிள்ளையார்
11. மதுரை மீனாட்சி
12. கம்பன் கண்ட இராமன்
13. மூவர் கண்ட முருகன்
14. ஆறுமுகமான பொருள்
15. இந்தியக் கலைச் செல்வம்
16. பட்டி மண்டபப் பேருரைகள்

